இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற முதலாம் கருத்தரங்கம்

# ஆய்வுக்கோவை

1969

1


பதிப்பாசிரியர்

முனைவர் சிலம்பு நா. செல்வராசு

முனைவர் இரா. அறவேந்தன்





உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற முதலாம் கருத்தரங்க

# ஆய்வுக்கோவை 1969

## தொகுதி ஒன்று

நிகழ்ந்த இடம்
மதுரைப் பல்கலைக்கழகத்தின் சார்பாகத் தியாகராசர் கல்லூரி
மதுரை

பதிப்பாசிரியர்
**சிலம்பு நா. செல்வராசு**
**இரா. அறவேந்தன்**




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**
டி.டி.டி.ஐ. (அஞ்சல்), தரமணி, சென்னை - 600 113

## BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title | : AAYVUKKOVAI - 1969 - Vol. 1 |
| Subject | : Articles of Tamilology |
| Editor | : Chilambu Naa. Selvaraj, R. Aravendan |
| Publisher | : International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Adyar, Chennai - 600 113 |
| Copy Right | : All India University Tamil Teachers Association |
| Publication No | : 363 |
| Language | : Tamil |
| Date of Publication | : 2000 |
| Edition | : First |
| Paper Used | : 18.6 T.N.P.L. Super Printing |
| Size of the Book | : 21 x 14 cms |
| No. of Copies | : 1000 |
| No. of Pages | : xvi + 296 |
| Price | : Rs. 70/- |
| Printing | : United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Luz, Mylapore, Chennai - 600 004<br>✆: 4684693, 4661807 |

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**
**இயக்குநர்**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை - 600 113**

## ஓர் இலக்கிய வரலாற்றின் வரலாற்று நிகழ்வுகள்

இருபதாம் நூற்றாண்டு ஆராய்ச்சி வரலாற்றில் இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்திற்கெனத் தனித்த இடம் ஒன்று உண்டு. கடந்த முப்பதாண்டுகளில் இம்மன்றம் நிகழ்த்திய சாதனைகள் தமிழ் ஆராய்ச்சி வரலாற்றில் ஒரு புதுப்பாதையைச் சமைத்துள்ளன.

இந்தியாவெங்கும் பரந்துள்ள தமிழ்ப் பேராசிரியர்கள் ஆண்டு தோறும் ஒன்று கூடுவதும் ஆய்வுக்கட்டுரைகள் அளித்து விவாதிப்பதும் அக்கட்டுரைகள் அதுபோதே நூலாக்கம் பெற்றிருப்பதும் குறிக்கத்தக்க செயற்பாடுகள். இச்செயற்பாடுகள் தொடர்ந்து முப்பது ஆண்டுகளாய் நடைபெற்று வருவது மிகப் பெரும் சாதனையாகும்.

முப்பது ஆண்டுகளாய் ஒரு பெரும் தலைமுறையினர் உருவாகி உள்ளனர்; உருவாக்கப்பட்டுள்ளனர். பேரா.தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், பேரா. வ.சுப. மாணிக்கம் முதலான முதுபெரும் பேரா சிரியர்கள் பங்குகொண்ட இக்கருத்தரங்குகள் அடுத்தடுத்து அவர்தம் மாணவர்களாலும் அவர்தம் வழித்தோன்றல்களாலும் வழிவழி நிகழ்த்தப்பெற்று வருவதும் இமயச் சாதனையாக மகிழத்தக்கதாகும்.

இந்தக் கருத்தரங்க வரிசையில் மன்றத்தின் முப்பதாம் மாநாட்டுக் கருத்தரங்கை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் கடந்த 21,22,23-05.99 ஆகிய மூன்று நாள்களில் நிகழ்த்தியது. இக்கருத்தரங்கை ஒட்டி மன்றத்தின் அறக்கட்டளைப் பொழிவுகள் அடங்கிய **'ஆளும் தமிழ்'** என்ற நூலையும், கடந்த முப்பதாண்டுகளில் வெளிவந்த ஆய்வுக் கோவைகளில் இடம் பெற்ற கட்டுரைகளில் முப்பது அடங்கிய **'பொருள் புதிது'** என்ற நூலையும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டது.

இந்த நூல் வரிசையில் தற்போது முதலாம் கருத்தரங்க ஆய்வுக் கோவைகளையும், இரண்டாம் கருத்தரங்க ஆய்வுக்கோவைகளையும் நிறுவனம் வெளியிடுகின்றது.

1969-இல் இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் முதல் மாநாட்டுக் கருத்தரங்கு மதுரைப் பல்கலைக் கழகத்தின் சார்பில்

மதுரையில் நிகழ்ந்தது. மன்றத்தின் இரண்டாம் மாநாட்டுக் கருத்தரங்கு 1970-இல் திருச்சியில் நிகழ்ந்தது. இவ்விரண்டு கருத்தரங்கக் கட்டுரைகளும் உருளச்சுச் செய்யப்பட்டு அப்போது பேராளர்களுக்குத் தரப்பட்டிருந்தன.

அதற்கு அடுத்தடுத்து நிகழ்ந்த கருத்தரங்கக் கட்டுரைகள் ஆய்வுக் கோவைகளாக அச்சாக்கம் பெற்று வெளிவந்தன.

முப்பது ஆண்டுகள் கழித்து முதலிரு கருத்தரங்கக் கட்டுரைகளும் இப்பொழுது வெளிவருகின்றன. முதுபெரும் பேராசிரியப் பெருமக்கள் பலர் எழுதிய கட்டுரைகள் இக்கோவைகளில் இடம் பெற்றிருப்பது சிறப்பிற்குரியது. இந்நூல்களை வெளியிடுவதில் நிறுவனம் மகிழ்ச்சி கொள்கிறது.

உருளச்சுச் செய்யப்பட்ட முதலாம் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்பினைப் **பேராசிரியர் ச.வே. சுப்பிரமணியம்** அவர்களிடம் இருந்து பெற்று இதுவரை பாதுகாத்து வைத்துத் தந்துதவிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகர் **திருமதி இரா. பார்வதி** அவர்களுக்கும், இரண்டாம் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுதிகளைத் தந்துதவிய **பேராசிரியர் இளவரசு** அவர்களுக்கும் நன்றிகள். முதல் இரண்டாம் கருத்தரங்கக் கட்டுரைகளை அச்சிடுவதற்கு வாய்ப்பளித்த இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் செயற்குழுவிற்கும் மன்றத்தின் தலைவர் **பேராசிரியர் தமிழண்ணல்** அவர்களுக்கும் செயலர் பொருளர் **பேராசிரியர் க.ப. அறவாணன்** அவர்களுக்கும் நன்றி.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் **முனைவர் மு. தமிழ்க்குடிமகன்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு. **சு. இராமகிருட்டிணன், இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்நூல் வெளிவர உறுதுணையாக இருந்த உழைப்பதில் சலிக்காத, **முனைவர் சிலம்பு நா. செல்வராசு,** (புதுச்சேரி) அவர்களுக்கும், உடன் பதிப்பு பணி ஆற்றிய **முனைவர் இரா. அறவேந்தன்** அவர்களுக்கும், கவினுற அச்சிட்டுத் தந்த சென்னை யுனைடட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் நன்றி.

**ச.சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்

**முனைவர் க.ப. அறவாணன்**
துணைவேந்தர்
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்
திருநெல்வேலி - 627 012

செயலர் & பொருளர்
இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்
திருநெல்வேலி - 627 012

## அற்றைத் திங்கள்
## அத்தமிழ் நிலவில்......

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் ஆராய்ச்சியின் வரலாற்று உருவாக்கத்தில் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் தலைமையான இடத்தைப் பெறுகின்றது. மன்ற ஆய்வுக்கோவைகளில் இடம் பெற்றுள்ள ஏழாயிரத்திற்கும் மேற்பட்ட கட்டுரைகள் தமிழ் ஆராய்ச்சிக் களஞ்சியம் எனும் தகைமையைப் பெறுவன. முப்பதாண்டு மன்றத்தின் வரலாறு, மூத்த தமிழறிஞர் உள்ளிட்ட ஒரு பெரும் அறிஞர் தலைமுறையின் வரலாற்றோடு பின்னிப் பிணைந்துள்ளது.

சிறப்புமிக்க இந்த மன்றத்தின் வரலாறு இந்நூல்களின் வரவு மூலம் முழுமையை எய்துகின்றது. இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் தொடங்கப் பெற்ற 1969 ஆம் ஆண்டும் அதற்கடுத்த 1970 ஆம் ஆண்டும் ஆய்வுக்கோவைகள் வெளியிடப் பெறவில்லை. வெளியிடாத ஏக்கம் நிறைந்த குறைபாடு நீண்ட நாள்களாக அறிஞரிடையே இருந்து வந்தது. அந்த ஏக்கமும் குறையும் இந்நூல்களின் வரவோடு நிறைவு பெறுகின்றன.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் முப்பதாம் கருத்தரங்கு உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிகழ்ந்தபோது மன்றத்தின் முதலாம் கருத்தரங்கக் கட்டுரைகளையும் இரண்டாம் கருத்தரங்கக் கட்டுரைகளையும் ஆய்வுக்கோவைகளாக வெளியிட முடிவு செய்யப் பெற்றது.

முதலாம் இரண்டாம் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்புகள் கிடைப்பது அரிதான சூழலில் அவற்றைத் தேடும் பணி முடுக்கி விடப் பட்டது. முப்பதாண்டுக் கால இடைவெளி, அத்தொகுப்புகளைத் திரை

போட்டு மறைத்திருந்தது. நீண்ட தேடலுக்குப் பின்னர் இரு தொகுப்புகளும் கிடைத்தன.

1. முதலாண்டுக் கட்டுரைத் தொகுப்பு ''இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் - முதலாவது கருத்தரங்கு மாநாட்டுக் கட்டுரைகள் - மதுரையில் நடைபெற்றது'' - என்ற முன்பக்கக் குறிப்போடு கிடைத்தது. இக்கட்டுரைத் தொகுப்பு பேராசிரியர் **ச.வே. சுப்பிரமணியன்** அவர்களுக்கு உரியது. அவருடைய கைச்சாத்தும் அதன் கீழே 11.6.69 என்ற நாளும் குறிக்கப்பட்டுள்ளன. பின்னர் இத்தொகுப்பு 15.1.79 நாளிட்ட பேராசிரியரின் குறிப்பின் படி உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூல் நிலையத்திற்கு அன்பளிப்பாக அளிக்கப் பெற்றுள்ளது. இன்றைய நூலகர் திருமதி. இரா. பார்வதி அவர்களிடம் இருந்து இத் தொகுப்புப் பெறப்பட்டது.

2. இத்தொகுப்பில் எழுபத்து மூன்று கட்டுரைகள் இடம் பெற் றுள்ளன. எழுபத்து மூன்று கட்டுரைகளுள் திண்டுக்கல் ஜி.டி.என். கலைக் கல்லூரிக் கணிதப் பேராசிரியர் கோ. சண்முகசுந்தரம் அவர்களின் கட்டுரையில் மட்டும் பின்வரும் குறிப்புக் காணப்படுகிறது.

   ''மதுரைப் பல்கலைக் கழகச் சார்பில் நடைபெறும் இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் - முதல் கருத்தரங்கு மாநாடு - 01.06.69 ஞாயிற்றுக்கிழமை அறிவியல் பகுதி''

   ஏனைய கட்டுரைகளில் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தைப் பற்றிய குறிப்பு ஏதும் காணப்பெறவில்லை.

3. 1970 இல் திருச்சியில் நடைபெற்ற இரண்டாம் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்புப் பேராசிரியர் இரா. இளவரசு அவர்களிடமிருந்து பெறப்பட்டது. இலக்கியக் கட்டுரைகள், இலக்கணக் கட்டுரைகள் என இரண்டு தொகுதிகளாக இக்கட்டுரைகள் வெளிவந்துள்ளன, எல்லாக் கட்டுரைகளிலும் ''இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் இரண்டாம் கருத்தரங்க மாநாடு - திருச்சி - சூன் 1970'' - என்ற குறிப்பு இடம் பெற்றுள்ளது.

4. பி. சரசு அவர்களின் கட்டுரையில் மட்டும் சூன், 5, 6, 7 - 1970 என நாள்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இக்கட்டுரைத் தொகுப்புகளில் நூற்று மூன்று (103) கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

5. இரண்டு கருத்தரங்குகளிலும் படிக்கப்பெற்ற கட்டுரைகள் அனைத்தும் தொகுப்புருப் பெறவில்லை. கருத்தரங்கிற்கு முன்பே கட்டுரை எழுதி அனுப்பியோர் கட்டுரைகள் மட்டுமே உருளச்சுச்

செய்து தொகுப்பாக்கப் பெற்றுள்ளன. இவ்வாறு அனுப்பாதோர் கருத்தரங்கின் போது கட்டுரை படித்துச் சென்றனர். இவ்வாறு படித்தோர் கட்டுரைகளைத் தொகுக்கும் முயற்சி அப்போது மேற் கொள்ளப் பெறவில்லை.

6. தொகுப்புருவில் இடம் பெறாத கட்டுரைகளைத் தேடும் முயற்சியும் அண்மையில் மேற்கொள்ளப் பெற்றது. இத்தேடலில் கிடைத்ததே பேராசிரியர் சி. இலக்குவனாரின் 'திருவள்ளுவர் தமிழகத்தின் முதல் புரட்சியாளர்' - என்ற கட்டுரையாகும். இக்கட்டுரையைப் **பேராசிரியர் இரா. இளவரசு** கோவையிலிருந்து கொண்டு வந்தார்கள். இக்கட்டுரை இரண்டாம் கருத்தரங்க ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது.

7. எல்லாத் தொகுப்புகளிலும் கட்டுரைகள் பொருள் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டிருந்தன. தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள், காப்பியங்கள் என இவ்வகைப்பாடு அமைந்திருந்தது.

8. இரண்டாம் கருத்தரங்கக் கட்டுரைகளுள் மொழியியல், இலக்கணம் குறித்து எழுதப்பெற்ற கட்டுரைகள் தனியே தொகுக்கப் பெற்றிருந்தன.

9. இரண்டு கருத்தரங்குகளிலும் ஒருவரே ஒன்றுக்கு மேற்பட்ட இரண்டு கட்டுரைகளை வழங்கி உள்ளனர். அனைத்துக் கட்டுரைகளும் இவ் ஆய்வுக்கோவையில் இடம் பெற்றுள்ளன.

10. இரண்டு கருத்தரங்குகளில் அறிவியல் பகுதி அமைக்கப்பட்டுத் தமிழில் அறிவியல் செய்திகள் ஆராயப்பட்டுள்ளன. கணிதப் பேராசிரியர், உயிரியல் பேராசிரியர், இயற்பியல் பேராசிரியர், சமூகவியல் பேராசிரியர் முதலியோர் கட்டுரை வழங்கி இருப்பது குறிக்க வேண்டிய ஒன்றாகும்.

11. முதல் இரண்டாம் கருத்தரங்கக் கட்டுரைகளின் ஆய்வுப்பொருள் வகைப்பாடும் விகிதாச்சாரமும் வருமாறு :

| | 1969 | 1970 |
|---|---|---|
| சங்க இலக்கியம் | 21.9 % | 24.2 % |
| இலக்கணம், மொழி, மொழியியல், உரை | 21.9 % | 31 % |
| நீதி இலக்கியம் | 6.8 % | 4.8 % |
| காப்பியம் | 8.2 % | 14.5 % |

| | | |
|---|---|---|
| பக்தி, சமயம், புராணம், தத்துவம் | *6.8 %* | *7.9 %* |
| சிற்றிலக்கியம் | *1.36 %* | *0.97 %* |
| கல்வெட்டு | -- | *0.97 %* |
| நாட்டுப்புறவியல் | *4.1 %* | *0.97 %* |
| தற்காலக் கவிதை | *5.4 %* | *5.8 %* |
| சிறுகதை | *1.36 %* | *0.97 %* |
| குறுநாவல் | *1.36 %* | -- |
| நாடகம், கூத்து | *3.4 %* | *0.97 %* |
| வாழ்க்கை வரலாறு | *2.73 %* | *0.97 %* |
| மக்கள் தொடர்பு | *1.36 %* | *1.9 %* |
| பாடத்திட்டம், பயிற்றுமொழி, ஆராய்ச்சி | *3.4 %* | *1.9 %* |
| அறிவியல் | *5.4 %* | *1.9 %* |
| மானுடவியல் | *2.73 %* | *0.97 %* |

12. இந்தப் புள்ளிவிவரங்கள் முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் உள்ள தமிழ் ஆராய்ச்சியின் போக்குகளை வெளிப்படுத்துகின்றன.

13. இன்று மெலிந்து தேய்ந்திருக்கும் சங்க இலக்கிய ஆய்வு அன்று தலைமை இடத்தில் இருந்துள்ளது. அதுபோல் இன்று பேராதிக்கம் செலுத்தும் புதினம், சிறுகதை, நாட்டுப்புறவியல் ஆய்வுகள் அன்று மிக அருகியே காணப்படுகின்றன.

14. நீதி இலக்கியம் என்ற வகையில் திருக்குறள் மட்டுமே ஆராயப் பட்டுள்ளது. அதேபோல் சிறுகதை வகையில் புதுமைப்பித்தன் சிறுகதைகள் மட்டுமே ஆராயப்பட்டுள்ளன.

15. இலக்கணம், மொழியியல் வகைப்பாடு அன்று முதல் இன்றுவரை ஒரே சீராக இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

★ ★ ★ ★ ★

முதலாண்டுக் கருத்தரங்கக் கட்டுரைகள் இரண்டு தொகுதிகளாகவும் இரண்டாம் ஆண்டுக் கருத்தரங்கக் கட்டுரைகள் மூன்று தொகுதிகளாகவும் அச்சேற்றம் பெற்றுள்ளன.

இப்பொழுது கடைப்பிடிக்கப்படும் ஆய்வுக்கோவைப் பதிப்பு முறையாகிய ஆசிரியர் அகரவரிசை முறை மட்டும் இப்பதிப்பில் பின்பற்றப் பட்டுள்ளது. வரலாற்றுப்பதிவு என்பதால் கட்டுரைகளில் எவ்வகை மாற்றமும் செய்யப்பெறவில்லை. உள்ளவை உள்ளவாறே அச்சுருப் பெற்றுள்ளன. முதலிரு ஆண்டுகளில் பக்க வரையறை பின்பற்றப் பெற வில்லை. ஆதலின் இப்பதிப்பிலும் பக்க வரையறை மேற்கொள்ளப் பெற வில்லை.

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் இந்த ஆய்வுக்கோவைகளைத் தமது வெளியீடாக வெளியிட்டுள்ளது. வரலாற்றுச் சிறப்புமிக்க இப்பணியில் நிறுவனமும் நிறுவன இயக்குநர் **முனைவர் இராமர் இளங்கோவும்** பங்கேற்பதைப் பெருமையாக எண்ணவேண்டும். இயக்குநர் அவர்களுக்கு நெஞ்சம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மன்றத்தின் முப்பதாம் கருத்தரங்கம் சிறப்புற நிகழவும் இந்நூல்கள் அச்சேறவும் நிதிஉதவி வழங்க முழுமுதல் காரணராகத் திகழ்ந்த **மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் அவர்களுக்கும்** மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை **அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகனார் அவர்களுக்கும்** மன்றம் தனது நெஞ்சார்ந்த நன்றிகளைப் படையல் ஆக்குகின்றது.

இவ்விரு தொகுதிக் கட்டுரைகளை ஒழுங்குபடுத்திச் செப்பம் செய்து, மெய்ப்புத் திருத்திப் பதித்தவர்கள் நம் மன்றத் துணைச் செயலர் **முனைவர் சிலம்பு. நா. செல்வராசுவும்**, புதுக்கோட்டைக் கல்லூரி விரிவுரையாளர் **முனைவர் இரா. அறவேந்தனும்** ஆவர்.

முப்பதாண்டுகளுக்கு முன் தமிழியல் ஆய்வு, எவ்வண்ணம் இருந்தது என்பதனை இத் தொகுதிகள் விண்டு உரைக்கின்றன. தமிழ்க்கல்வி, முன்னைய நாள்களை விட, இன்றைய நாளில் விரிவடைந்திருக்கிறது. அகலம் கூடியிருக்கிறது. நிறைய பேர் தமிழ் பயிலுகிறார்கள்; நிறைய பேர், எம்.ஃபில், பி.எச்டி ஆய்வு நிகழ்த்துகிறார்கள். நூல்களும் நிறைய வருகின்றன என்றாலும் இன்னும் செய்ய வேண்டுவன நிரம்ப உள்ளன. தமிழை அருளியல் மொழியாக மட்டும் அன்றி, அரசியல் மொழியாக மட்டும் அன்றிப் பொருளியல் மொழியாக வளர்க்க வேண்டிய கடப்பாடு நமக்குள்ளது. மெய்யாகவே இன்று தமிழ் உலகமொழியாகி வருகிறது. ஆனால் அதற்குரிய குணங்கள் தமிழுக்கு இருந்தாலும், வளங்கள் பெருகியாக வேண்டும்.

நாம் அதற்காகக் கடும்முயற்சிகள், திட்டங்கள், செயற்பாடுகள் ஆகியவற்றை நிகழ்த்தியாக வேண்டும்.

**நிகழ்த்த விரும்புவோம்**

**நிகழ்த்த உழைத்திடுவோம்**

**நிகழ்த்தி வென்றிடுவோம்**

இக்கோவைகள் வெளிவரக் காரணமாக இருந்த அனைவர்க்கும் பாராட்டுகள்.

அன்புடன்

**க.ப. அறவாணன்**

செயலர் & பொருளர்

*09.08.1999*

நெல்லை

## உள்ளே... உள்ளே... உள்ளே...

சுப. அண்ணாமலை
தியாகராசர் கல்லூரி
மதுரை

# குறுந்தொகையின் காலம்

1958 அக்டோபர்த் திங்களில் வெளிவந்த ''தமிழ்ப் பண்பாடு'' - ஆங்கில இதழில் யாழ்ப்பாணம் செண்ட் பாட்ரிக் கல்லூரிக் கீழ்த்திசைக் கல்வித் துறைத் தலைவர், திரு.ஹெச்.எஸ். டேவிட் அவர்கள் குறுந்தொகை பற்றி எழுதிய கட்டுரை, ''இத்தொகை நூற்கள் உள்ள பெரும்பான்மைப் பாடல்கள் பிற தொகை நூற் பாடல்களினும் காலத்தால் முந்தியவை; அவையே தமிழிற் கிடைக்கும் பாடல்களுள் மிகப் பழைமையானவை; குறுந்தொகையே சங்கத் தொகை நூல்களுள் முதற்கண் தொகுக்கப் பட்டது'', என்று நிறுவ முற்படுகிறது. இங்ஙனம் நிறுவுதற்கு அது முன்னிறுத்தம் சான்றுகள் சிலவற்றின் வன்மை, மென்மை குறித்து மேலும் ஆராயவேண்டும் என்ற எழுந்த விருப்பத்தின் விளைவே இக்கட்டுரை.

முதற்கண், ''குறுந்தொகையில் மூவேந்தர் என்னும் தொகைக் குறிப்பு இல்லை; சோழர், பாண்டியர் பற்றித் தனித்தனி குறிப்பீடே உளது; சேரர் பற்றிக் குறிப்பே இல்லை.'' என்னும் சான்றைக் குறித்துக் காண்போம். அக்கட்டுரை இச்சான்றினை விரித்தெழுதும்போது, ''அசோகரின் பாறைக் கல்வெட்டுக்கள் சத்யபுத்ரர், கேரளபுத்ரர், உறிட மன்னர், சோடர், பாண்டியர் ஆகிய ஐந்து தென்னிந்திய மன்னர் பரம்பரைகளையே குறிக்கின்றன'', என்றும், ''மூவேந்தரின் அரசுகள் பின்னரே நிறுவப்பட்டன'', என்றும் கூறுகிறது. அசோகர் கல்வெட்டுக் களில் வரும் ''கேரளபுத்திரர்'' என்னும் தொடருக்கும், ''சேரலர்'' என்பதற்கும் உள்ள தொடர்பைச் சுட்டிக் காட்ட விழைகின்றேன். மேலும் குறுந்தொகைக்கு முற்பட்டது எனக் கட்டுரை ஆசிரியர் ஒப்புக்கொள்ளும் தொல்காப்பியம், மூவேந்தரைப் பற்றி ''வன்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு'' என்று கூறுவதை நோக்க, மூவேந்தர் என்னும் கருத்தும், மூவரசு அமைப்பும்

குறுந்தொகைக்குப் பிற் காலத்தனவல்ல என்பது புலப்படும். குறுந்தொகையில் சேரர் பற்றிய குறிப்பு இல்லை என்று கட்டுரை கூறுவது உண்மைக்குப் புறம்பானது. 34-ம் பாடலில் ''குட்டுவன் மாந்தை'' என்னும் குறிப்பு உள்ளது. முடிமன்னர்களைப் பற்றி ஒவ்வொரு குறிப்பே உள்ளது என்னும் கூற்று உண்மையே. அளவிற் குறைந்த வரிகளால் உரிப் பொருளை மட்டும் சிறந் தெடுத்துப் பாடுவனவாதலின் குறுந்தொகைப் பாடல்களிலும் வரலாற்றுக் குறிப்புக்கள் மிகுதியாகக் காணப்படவில்லை. இப்பாடல்களைப் பாடிய புலவர்கள் ஏனைய தொகை நூல்களில் முடி மன்னர்களை நேரிடையாகப் பாடியும் குறிப்பிட்டும் உள்ளார்கள். மொத்தம் 26 புலவர்கள் 24 முடிமன்னர்களை இவ்வகையில் குறித்துள்ளனர். வேளிர், கடை ஏழு வள்ளல் களைப்பற்றிய குறிப்புக்கள் வேறு. இப்புலவர்க்குள் குறிப்பிடத் தக்கவர்கள், அரிசில் கிழார், ஔவையார், கடியலூர் உருத்திரங் கண்ணனார், கபிலர், கோவூர்கிழார், நக்கீரர், பரணர், மாங்குடி மருதனார், மாமூலனார் ஆகியோர். ஆகவே ''முடிமன்னர் மூவர், குறுநிலத்தலைவர் பலர்'' என்னும் கருத்துக் குறுந்தொகைக் காலத்தில் வேரூன்றிய மெய்ம்மை என்பது பெறப்படும்.

அடுத்து, ''குறுந்தொகை வரிகளால் சிறப்புப் பெயர் பெற்றவர் நால்வர் பிற தொகை நூல்களுட் பாடியுள்ளனர். ஆனால் இதன் மறுதலை இல்லை'' என்னும் சான்றைப் பார்ப்போம். இதனை ஆராயும்போது பிறிதோர் உண்மையைப் புறக்கணிக்கக் கூடாது. அது குறுந்தொகைப் பாடல்களை இயற்றிய 203 புலவர்களுள் 73 பேர் பிற தொகை நூல்களிலும் பாடல்கள் இயற்றியுள்ளனர் என்பதாகும். அவர்களுள் 19 பேர் பிற தொகைகளில் மிகுதியாகவும் குறுந்தொகையில் குறைவாகவும் பாடல்கள் பாடியுள்ளனர். இவர்களின் காலத்தை அறிய முயலாமல், பிற தொகை வரிகளால் சிறப்புப் பெயர் பெற்ற புலவர்கள் குறுந்தொகையில் பாடாமை கொண்டே குறுந் தொகையின் பழமையைத் துணிய முயல்வது விரைந்த செயலாகும். குறுந்தொகை வரிகளால் சிறப்புப் பெயர் பெற்றவர் மற்றத் தொகைகளிலும் பாடியுள்ளனர் எனின், தொகுத்த காலத்தில், ஒருவர் பாடிய பாடல்களுள் குறுந்தொகைப் பாடல் வரியே சிறந்ததாகக் கருதி, அதனால் அவருக்குப் பெயரிட்டி ருக்கலாம். பிற தொகையால் சிறப்புப் பெயர் பெற்றவர், வரியளவாற் சிறிய பாடல்கள் பாடாமல் இருந்திருக்கக் கூடும்; அல்லது பாடியவை கிடைக்காம லிருந்திருக்கக் கூடும்.

அடுத்து, ''தொல்காப்பியம் கூறும் எழுத்துப் பற்றிய விதிகளை உறுதியாகக் கடைப்பிடிப்பதில் முன்னிற்பது குறுந் தொகையே'' என்னும் சான்றைக் காண்போம். இதனைக் கட்டுரை கீழ்க்கண்டவாறு விரித்துரைக்கும்.

''தொல்காப்பியர் மொழி முதலில் வாராதென விலக்கிய சகர உயிர் மெய்ம் முதற்சொல் குறுந்தொகையில் ஒன்றே உள்ளது. அதுவும் ஒருமுறையே வருகிறது; ''இருங்கூரை நின்ற உப்பெய் சகடம்'' (குறு;165:3). ஆனால் சகர உயிர்மெய்ம்முதற்சொற்கள் பரிபாடலில் மிகுதி. 'பத்துப்பாட்டில் இடைத்தரம். தொல் காப்பியர் மொழி முதலில் வாராதென விலக்கிய ஞகர உயிர் மெய்யை முதலாக உடைய சொல் ஒன்றே குறுந்தொகையில் உள்ளது. அது ''எல்லும் எல்லின்று ஞமலியும் இளைத்தன'' என்னும் வரியில் (குறு:179:2) உள்ளது.

''தொல்காப்பியர் விதித்தவாறு யாகார உயிர்மெய்ம்முதற் சொற்களே குறுந்தொகையில் உள்ளன. பிற தொகையில் இவ் விதிக்கு மாறாக, யகர, யூகார முதற் சொற்களும் வந்துள்ளன. ஆகவே தொல்காப்பியரின் விதிகளை மிகுதியும் மீறாமல் பின்பற்றும் குறுந்தொகை காலத்தால் பழைமையானது''.

குறுந்தொகையைப் பொறுத்த அளவில் இச்சான்று உண்மையே. ஆனால் பிற தொகைகளுடன் ஒப்பிட்டு அதன் காலத்தைத் தீர்மானிக்கும்போது, அதில் பாடியுள்ள புலவர்கள் ஏனைத் தொகைகளில் பாடிய பாடல்களையும் நோக்கவேண்டும்.

பெருங்குன்றூர்கிழார் குறுந்தொகையில் ஒரு பாடலும், நற்றிணையில் நான்கும், அகநானூற்றில் ஒன்றும், புறநானூற்றில் ஐந்தும், பதிற்றுப்பத்து ஒன்பதாம்பத்தும் பாடியுள்ளார். இவ் வொன்பதாம் பத்தின் நான்காம் பாடலில் ''மன்பதை சவட்டும் கூற்ற முன்ப'' என்னும் வரி உள்ளது. இதில் சகர உயிர் மெய்ம் முதற் சொல் வருவது காண்க. இப்பத்தின் இரண்டாம் பாடலில் 'சமம்' என்னும் மற்றோர் சொல் வருகிறது ''செல் சமம் தொலைந்த வினைநவில் யானை''. ஏழாம் பாடலில் 'சந்தம்' என்னும் பிறிதோர் சொல் உள்ளது. ''சந்தம் பூழிலோடு பொங்குநுரை சுமந்து''.

குறுந்தொகையில் பாடிய காக்கைபாடினியார் பதிற்றுப்பத்து ஆறாம் பத்தினையும் பாடியுள்ளார். அதன் இரண்டாம் பாடலில் 'சமம்' என்னும் சொல் உள்ளது. முதற் பாடலில் ''ஞரலும்'' என ஞகர உயிர்மெய்ம்முதற் சொல் வருகிறது.

குறுந்தொகையில் ஒரு பாடலே பாடிய தாயங்கண்ணனார் அகநானூற்றில் ஏழு பாடல்களும், நற்றிணையில் ஒன்றும், புறநானூற்றில் இரண்டும் பாடியுள்ளார். அவரது அகநானூற்றுப் பாடலில் யகர உயிர்மெய்ம்முதற் சொல் வருகிறது; ''யவனர் தந்த வினைமான்நன்கலம்'' (அகம்:149)

குறுந்தொகையில் பாடிய நக்கீரரும் தமது நெடுநல்வாடையில் ''யவனர் இயற்றிய வினைமாண் பாவை'' (101) என்பார்.

சகர உயிர்மெய்ம்முதற்சொற்கள் பரிபாடலில் மிகுதி என்பது உண்மையே. ஆனால் பிறதொகை நூல்களில் பாடிய புலவர்கள் அவற்றை மிகக் குறைந்த அளவிலேயே கையாண்டுள்ளனர். அவற்றுள் கால வேற்றுமை காணும் அளவு, சகர முதற் சொற்கள் வேறுபட்ட அளவில் வழங்கவில்லை. மேலும் சமம், சந்து, சவட்டு, சகடம், சன்பு, சமன் என்னும் சொற்களே இத் தொகைகளில் குறு வழக்காகக் காணப்படுபவை. ஞமலி, ஞமன், ஞரலுதல், ஞனம், ஞிமிறு என்னும் சொற்களே தொல்காப்பியர் விதிக்கு மாறாக இத்தொகை நூல்களில் ஒரோ வழி வருபவை.

குறுந்தொகைப் பாடல்கள் தொல்காப்பிய விதிகளை மற்றும் சில வகைகளில் மீறும் இடங்களும் உண்டு. அவற்றை நோக்கினால் கட்டுரை கூறும் அளவு அதற்குக் காலப் பழைமை தர இயலாது. மொழியியலின் படி புதுச் சொற்கள் எளிதாக வழக்கிற்கு வரினும், இடைச் சொற்களும், இலக்கணக் கூறுபாடுகளும் தம் பொருள் மாறி அல்லது விரிந்து வருவது அத்துணை எளிதன்று. அதற்குக் கால இடைவெளி மிகுதியும் வேண்டும்.

''ஒடு'' என்னும் இடைச்சொல் எண்ணுப் பொருளில் வரும் என்பது தொல்காப்பியம்.

''என்றும் எனவும் ஒடுவும் தோன்றி
ஒன்றுவழி உடைய எண்ணினுட் பிரிந்தே'' (தொல்:294)

ஆனால், குறுந்தொகையில் இவ்விடைச் சொல் இசைநிறைப் பொருளில் வருகிறது.

''விதைக்குறு வட்டி போதொடு பொதுள'' (155)

பவணந்தியார் தம் கால வழக்குப்பயிற்சி நோக்கி,

''ஒடுவும் தெய்யவும் இசைநிறை மொழியே'' என்று செய்த நுற்பாவிற்கு இக்குறுந்தொகைப் பாடலை மேற்கோளாக மயிலைநாதரும், சங்கரநமச்சிவாயரும் காட்டுகின்றனர்.

அடுத்து, தில் என்னும் இடைச் சொல் விழைவு, காலம், ஒழியிசை என்னும் முப்பொருளிலும் வரும். அவற்றுள் விழைவுப் பொருளில் வரும் ''தில்'' தன்மையிடத்திற்கு மட்டுமே உரியது என்பது தொல்காப்பியம்.

1) விழைவே காலம் ஒழியிசைக் கிளவி யென்று
அம் மூன்றென்ப தில்லைச் சொல்லே. (தொல்:253)

2) விழைவின் தில்லை தன்னிடத்தியலும் (தொல்:260)

குறுந்தொகைப் பாடல் ஒன்றில் விழைவுப் பொருள் தரும் தில் படர்க்கைக்குரியதாக வருகிறது.

''அறிகதில் அம்ம இவ்வூரே'' (14)

வியங்கோள் தன்மையிலும், முன்னிலையிலும் வாராதெனத் தொல்காப்பியர் விலக்கினார். ஆனால் குறுந்தொகையில்,

1) 'அகவன் மகளே பாடுக பாட்டே'' (23)

2) நீ ஆகியர் என் கணவனை யான் ஆகியர் நின் நெஞ்சு
நேர்பவளே (49)

என முன்னிலை, தன்மை இடங்களில் வியங்கோள் வருகிறது.

தொல்காப்பியர் மொழிமுதல் நகரத்திற்கு ஞகரம் போலியாகும் என்று சொல்லாதிருப்பவும், குறுந்தொகையில் நெகிழ்த்த - ஞெகிழ்த்த என்னும் இரு சொற்களையும் காண்கின்றோம்.

1) கோடீரிலங்குவளை நெகிழ்த்த (31)

2) நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த (252)

தொல்காப்பியத்தை இத்துணை மீறும் குறுந்தொகை ஏனைய தொகை நூல்களிலும் பழமை உடையது ஆவது எஞ்ஞனம்?

''தழையின்றி மகளிர் ஆடை பிறிதொன்றும் குறுந் தொகையில் பயின்று கூறப்படவில்லை'' என்பது கட்டுரை தரும் அடுத்த சான்று. தழைகளால் ஆகிய ஆடை மட்டுமே பெண்கள் அணிந்திருந்த காலப் பழைமையைக் குறுந்தொகை காட்டுகிறது என்பது கட்டுரையாளர் கூற்று. இக்கூற்றை நிறுவ அவரே ஐயமற்ற சான்றெனக் காட்டும் ''திருந்திழை அல்குற்குப் பெருந்தழை உதவி'' என்பதில் கூறப்படுமாறு திருந்திய இழைகளை அணியும் அளவு நாகரிக மேன்மை அடைந்திருந்த

பெண்கள் எவ்வாறு தழையாடை மட்டுமே அணிந்திருக்க முடியும் என்று கட்டுரையாளர் எண்ணிப் பார்த்தாரிலர். குறுந்தொகையில் இழை, பொன்இழை பற்றிய குறிப்புகள் இருபதிற்கும் மேற்பட்ட பாடல்களில் வருகின்றன. மகளிர்க்கு மட்டுமேயன்றித் தேருக்கும் இழை பூட்டியிருந்ததைக் குறுந்தொகையில் ஒரு பாட்டுக் குறிக்கிறது.

''இழை அணிந்தியல் வரும் கொடுஞ்சி நெடுந்தேர்'' (345)

குறுந்தொகை தழையாடையை ஓர் அணியாகவே குறிக் கின்றது. ''தழை யணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி''. (295) என்னும் வரியைக் காண்க. இவ்வரியைக் கொண்ட பாடல் தழையின் இயல்பை நன்கு விளக்குகிறது.

''உடுத்தும் தொடுத்தும் பூக்கும் செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயம்''

என்னும் இப்பாடல் வரிகள் தழை ஓர் ஆடையன்று, அணியே என்பதைத் தெளிவுறக் காட்டுகின்றன. ஆடைபோல உடுக்கப் படும்; அன்றி மாலையாகத் தொடுக்கப்படும்; அன்றி வளை போலப் பூணப்படும்; அன்றிக் காதணி போலச் செருகப்படும்; இவ்வாறு பலவகையில் பயன்படும் தழையணி என்பது காண்க. உடையாக உடுத்தப்பெறும் போது அஃது ஆடைமேல் ஆடையாக உடுத்தப்பெறும்.

குறுந்தொகையில் தழையாடை குறிக்கப்பெறுதலின் அது பழமையைக் காட்டும் எனின், பிற தொகை நூல்களும் தழையாடையைக் குறிப்பதால், குறுத்தொகை அவற்றிலும் பழையது எனக் கூறும் இடமில்லாமற் போகிறது. கட்டுரையாளர் தழையாடை உண்மைக்குக் காட்டும் குறுந்தொகைப் பாடலைப் பாடிய கூடலூர்கிழார், தமது மற்றொரு குறுந்தொகைப் பாடலில் ''கலிங்கம்'' எனப் பருத்தி நூலாடையைக் குறிப்பிடுகிறார்: ''கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ'' (167). கட்டுரையாளர் இவ்வரியை எடுத்துக் காட்டிக் ''கலிங்கம்'' என்னும் ஒரு சொல் மட்டுமே குறுந்தொகையுள், ஓரிடத்திலே வருகிறது; ஆதலின் தழையாடையே அக்காலத்தில் பெரு வழக்குடையது என்று குறிப்பிடுகிறார். இது தவறாகும். ஏனெனில், தினைப்புனங் களின் நடுவே பருத்தி பயிர் செய்யப்பட்டமையை மற்றொரு குறுந்தொகைப் பாடல் கூறும்: ''பரீஇ வித்திய ஏனல்'' (72) மரங்கள் நிரம்பித் தழைகட்குப் பஞ்சமில்லாத மலை நிலத்தில், தினைப்புனத்தில் பருத்தி பயிரிட்டமை, பருத்தி ஆடையின்

இன்றியமையாமை இருந்ததாலேயாம். பருத்தியாடைகளை வெளுத்துப் பசையிடும் வண்ணாத்தி பற்றியும் குறுந்தொகையில் குறிப்பு உள்ளது.

''நலத்தகைப் புலத்தி பசைதோய்த் தெடுத்துத்
தலைப்புடைப் போக்கித் தன் கயத்திட்ட
நீரிற் பிரியாப் பரூஉத் திரி'' (330)

இதுகொண்டு பருத்த பருத்தியாடைதான் குறுந்தொகைக் காலத்தில் இருந்தது என்பர் கட்டுரையாளர்.

குறுந்தொகையில் பாடிய ஈழத்துப் பூதன் தேவனார் நற்றிணையுள், 'நுண்துகில்' (366) என்று குறிப்பிடுகிறார். குறுந் தொகையுள் ஒரு பாடலும், பத்துப்பாட்டுள் இரு பாடல்களும் பாடிய கடியலூர் உருத்திரங்கண்ணனார், பட்டினப்பாலையில், ''பைந்தழை மா மகளிர்'' (91ம் வரி) என்று தழையாடை கூறி அம்மகளிர் பட்டும் துகிலும் அணிந்திருந்தமையை, ''பட்டு நீக்கித் துகிலுடுத்தும்'' (107) என்று குறிப்பிடுகிறார். எனவே நுண்ணிய நூலாடைகளும் பட்டாடைகளும், குறுந்தொகைக் காலத்தில் இருந்தமை தெளிவு.

இறுதியாக, ''குறுந்தொகை 75ம் பாடலில் குறிக்கப்படும் பாடலி, நந்தருக்குரியதாக மாமூலனாரால் அகம் 265-ல் குறிக்கப் படுவதே; மௌரியர் ஆட்சிக் காலமாயின் நந்தர்களை வென்ற அவர்களை விடுத்து, தோல்வியுற்ற நந்தர்களைச் செல்வத்திற் சிறந்தவராகக் குறுந்தொகைப் புலவர் குறித்திருக்க மாட்டார்; ஆதலின் மௌரியர் ஆட்சிக்கு வந்த கி.மு. 321-க்கு முன் குறுந்தொகை பாடப்பட்டது'' என்னும் சான்றைப் பார்ப்போம்.

குறுந்தொகைப் பாடல் பாடலியை நந்தர்க்குரியதாகக் குறிக்கவில்லை. அது மௌரியர்க்குரியதாக இருந்த காலத்திலும் அது பாடப் பெற்றிருக்கலாம் என்று கருத இடம் உண்டு. அகநானூறு 265-ல் நந்தரைக் குறிப்பிடும் மாமூலனார், அந்நூல் 251, 281-ஆம் பாடல்களில் மௌரியர் பகைநாடு வெல்லும் பான்மையையும் அவர்கள் தென்திசை நோக்கிப் படையெடுத்து வந்ததையும் குறிப்பிடுகின்றார்.

1) மாகெழுதானை வம்ப மொரியர் (251)

2) மொரியர் தென்திசை மாதிரம் முன்னிய வரவிற்கு (281)

ஆகவே குறுந்தொகையுள் வரும் பாடலி யாருக்கு உரியதாக அக்காலத்து இருந்தது என்று துணிய முடியாத நிலை உள்ளது.

நந்தர் காலத்தில்தான் குறுந்தொகை பாடப்பட்டது என்பதற்கு மொரியரைப் பாடும் மாமூலரின் பாடல் அதில் இருப்பது பெருந் தடையாகும். புறநானூறு 175-ல் மொரியரின் பெருவெற்றியைக் குறிக்கும் கள்ளில் ஆத்திரையனாரின் பாடலும் குறுந்தொகையில் உள்ள மற்றொரு தடையாகும். மாமூலனார் தம் காலத்துச் செய்தி களை அன்றி முற்பட்ட செய்திகளையும் தம் பாடல்களில் குறிக்கின்றார் என்பது அறியத்தக்கது.

இதுகாறும் குறுந்தொகை பிற தொகை நூல்களிலும் பழமை உடையது என்பதற்குக் காட்டப்பட்ட சான்றுகளில் மென்மை சுட்டப்பட்டது. இனி, அத்தொகைக்கண் உள்ள பாடல்களின் காலத்தைப் பற்றி ஒரு குறிப்புக் கூறலாம்.

அதில் பாடிய புலவர்கள் வேறு தொகைகளில் குறிப்பிட்டு, அல்லது நேரிடையாகப் பாடிய மன்னர்களை மையமாகக் கொண்டு நோக்கினால், கடைச்சங்கம் எனப் பல அறிஞர் ஒப்பிய கி.மு. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 2-ம் நூற்றாண்டு முடிய உள்ள காலத்தினுள், நான்கு காலப் பிரிவுகளில் குறுந்தொகைப் பாடல்கள் பாடப்பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது. பிற நூல்களில் பாடாத புலவர்களின் காலத்தை அறிய வழியில்லை.

முதற் காலப் பகுதியில் இருந்த புலவர்கள், அரிசில்கிழார், கபிலர், பரணர், பெருங்குன்றூர்கிழார், மோசி கிரனார், ஆதிமந்தியார், வெள்ளிவீதியார், ஔவையார், ஒருசிறைப் பெரியனார், அம்மூவனார், கதப்பிள்ளை, பேரி சாத்தனார், காக்கைபாடினியார் ஆகியோர்.

அடுத்த காலப் பகுதியில் இருந்த புலவர்கள், உறையூர் முது கண்ணன் சாத்தனார், ஆலத்தூர் கிழார், கோவூர்கிழார், இடைக் காடனார், தாயங்கண்ணனார், மதுரை அளக்கர் ஞாழலார் மகனார், ஐயூர் முடவனார், காரிக்கண்ணனார், நக்கீரர், மருதனிள நாகனார், கள்ளில் ஆத்திரயனார் ஆகியோர்.

மூன்றாம் காலப் பகுதியில் இருந்தவர்கள் மாங்குடி மருதனார், இடைக்குன்றூர் கிழார், கல்லாடனார், மாமூலனார் ஆகியோர். நான்காம் காலப் பகுதியில் இருந்தவர் சீத்தலைச் சாத்தனார்.

குறுந்தொகையில் மட்டும் பாடிய புலவர்களின் காலத்தை அறிய வழி இல்லை. எனினும் அவர்களும் கடைச் சங்க காலம் என்னும் வரையறைக்கு உட்பட்டவராகவே இருந்திருத்தல் வேண்டும். மேற்குறித்த நான்கு காலப் பகுதிகளைப் பற்றி விரிவாக அறிய மேலும் ஆய்வு நடத்தப்பட வேண்டும்.

கி. அரங்கன்
தில்லிப் பல்கலைக் கழகம்
தில்லி

# மொழியியலும் அதன் நோக்கமும்

நான் புதிதாக இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு புதுதில்லிப் புகைவண்டி நிலையத்தில் இறங்கினேன். கூலிக்காரன் ஒருவன் என்னிடம் ஓடிவந்து ஏதோ கூறினான். அவன் கூறியது எனக்குக் கொஞ்சம் கூட விளங்கவில்லை. அதேபோல் நான் கூறுவது ஒன்றும் அவனுக்கு விளங்கவில்லை. இருவருமே ஏதோ சில ஒலிகளை எழுப்பக் கற்றுக் கொண்டிருந்தும் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ள இயலவில்லை. இடையிலிருந்த நண்பர் ஒருவர் அவன் கூறியதை எனக்கு ஆங்கிலத்தில் கூறினார். பிறகு நான் ஆங்கிலத்தில் கூறியதை அவர் அவனுக்கு அவன் அறிந்த மொழியில் கூறினார். இப்பொழுது நாங்கள் ஒருவரின் தேவையை மற்றவர் புரிந்து கொண்டோம். அவன் என்னுடைய சாமான்களைக் காரில் கொண்டுவந்து வைத்துவிட்டு வேண்டிய பணத்தைப் பெற்றுக் கொண்டு திரும்பிவிட்டான்.

சிறு நிகழ்ச்சிதான்! கொஞ்ச நேரச் சிந்தனை இதை எளிதில் விளக்கிவிடும். எனக்கு இந்தி தெரியவில்லை; அவனுக்குத் தமிழும் தெரியாது; ஆங்கிலமும் தெரியாது. இடையில் இருந்த நண்பருக்கு ஆங்கிலமும் தெரியும், இந்தியும் தெரியும். ஆகையால் அவர் எங்களுக்கிடையே ஒரு பாலம்போல் அமைந்தார். இதுதான் ஒவ்வொரு சாதாரண மனிதனுக்கும் தோன்றுகிற விளக்கம். ஆனால் மொழியியலாளன் மட்டும் இவ்விளக்கத்தோடு நிற்பதில்லை. அவன் இதற்கு மேலேயும் ஒரு படி சென்று மொழியை ஆராய்கிறான். நாங்கள் இருவருமே ஒருசில ஒலிகளை எழுப்பக் கற்றுக் கொண்டிருக்கிறோம் என முன்பே குறிப்பிட்டிருக்கிறேன். இருப்பினும் செய்திப் போக்குவரத்து இல்லையே ஏன்? ஒருவனுக்கு ஒரு குறிப்பிட்ட மொழி தெரியும் என்று சொன்னால் அதன் பொருள் என்ன?

இவைகளுக்கு உரிய விடைகளைக் காண்பதுதான் மொழியியலின் நோக்கம்.

இந்திக்கென்று சில ஒலிகள் உண்டு. அவைகளை நான் ஒலிக்க முடியவில்லை. அதேபோல் தமிழுக்கென்று இருக்கின்ற சில ஒலிகளை அவனால் ஒலிக்க முடியவில்லை. இதுதானா எங்கள் கருத்துப் பரிமாற்றத்திற்குத் தடை? தமிழில் உள்ள ஒலிகளை எல்லாம் அவன் ஒலிக்கக் கற்றால் என்னோடு பேசிவிடுவானா? இக்கேள்விகளுக்கு 'முடியாது' என்ற எதிர் மறையான விடையைத்தான் நாம் தருவதற்குத் தயாராக இருக்கிறோம். ஒரு மொழியின் ஒலிகளைக் கற்பதால்மட்டும் நாம் அம்மொழியைக் கற்றவர்களாகிவிட மாட்டோம். அந்த ஒலிகள் சொற்களிலும் வாக்கியங்களிலும் தொடரும்பொழுது ஒரு ஒழுங்கு முறை இருக்கிறது. சான்றாக மரம் என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் 'ம' என்ற ஒலியும் 'ர' என்ற ஒலியும் 'ம்' என்ற ஒலியும் உள்ளன. இவைகள் ஒரு குறிப்பிட்ட முறையில் அமைந்திருக்கின்றன. இதை ★ரமம் என்று கூறினாலோ ★மம்ர என்று கூறினாலோ பொருள் விளங்காது. ஆகையால் சொற்களில் ஒலிகள் ஒரு குறிப்பிட்ட ஒழுங்கில் அமைந்துள்ளன என்பது தெளிவு. இதேபோல் மரம் என்ற சொல்லும் கள் என்ற பன்மை விகுதியும் சேரும் பொழுது 'ம்' என்ற ஒலி 'ங்' என்ற ஒலியாக மரம் என்ற சொல்லில் மாறுகிறது. இதை மொழியியலார்

(1) ம் ——— ங் | ——— க

என்று எழுதிக் காட்டுவர். இதைத்தான் புணர்ச்சி விதி என்று நம் இலக்கண நூலாரும், உருபொலியனியல் விதி (MORPHOPHONEMIC RULE) என்று இன்றைய மொழியியலாரும் கூறுகிறார்கள்![1] இவ்வாறு சொற்களோ உருபன்களோ ஒன்றிணையும் பொழுது ஏற்படும் மாற்றங்களையும் நாம் அறிய வேண்டியவர்களாக இருக்கிறோம். இப்பொது திரும்பவும் நாம் முன்பு எழுப்பிய வினாவை எழுப்புவோம்? ஒரு மொழியின் செய்திப் போக்குவரத்திற்கு இவைகள் போதுமா?

இத்துடன் நாம் வேறு புதிய செய்திகளையும் இணைத்தால் முடியும் என்பது போல் தோன்றுகிறது. ஒவ்வொரு பொருளுக்கும் உரிய சொற்களையும் அச்சொற்களை ஒலிக்கின்ற முறையையும் கற்றுக் கொண்டால் அம்மொழியை ஓரளவு நாம் புரிந்து கொள்ளலாம். சுருங்கக் கூறினால் ஒரு மொழியில் உள்ள

சொற்களையும் அவைகளின் பொருளையும் தெரிந்து கொண்டால் அம்மொழி நமக்குப் புரியலாம். இதுவும் ஒரு தவறான கருத்துதான். ஒரு மொழியில் உள்ள சொற்களை நாம் நினைவில் கொண்டு கூறுவதாலேயே நாம் அம்மொழியைக் கற்றவர்களாகி விட மாட்டோம். சான்றாக ஆங்கிலத்தை எடுத்துக் கொள்வோம். இம்மொழியில் சொல்லடுக்கு (WORD ORDER) முக்கியமான ஒன்றாகும். வாக்கியம் (2) லும் (3) லும் உள்ள சொற்கள் ஒன்றே, ஆனால் ஆங்கிலம் தெரிந்தவர்கள் அவைகளை, இரண்டுவிதமான முறையில் உணர்கிறார்கள்.

(2) Rame killed Ravana

(3) Ravana killed Rama

இவ்விரண்டு வாக்கியங்களிலும் உள்ள சொற்கள் ஒன்றாக இருப்பினும், அவைகள் வாங்கியங்களில் அமைந்து கிடக்கின்ற முறையால் இராமாயணமே தலைகீழாக மாறிவிடுகிறது. ஆனால் தமிழில் இவைகளுக்கு ஈடான வாக்கியங்களை எடுத்துக் கொண்டால் சொல்லடுக்கு அவ்வளவு முக்கியமானது அல்ல என்பது தெளிவாகும்.

(4) இராமன் இராவணனைக் கொன்றான்

(4எ) இராவணனை இராமன் கொன்றான்

வாக்கியம் (4) (4எ) ம் ஆங்கில வாக்கியம் (2)க்கு ஈடானதாகும்.

(5) இராவணன் இராமனைக் கொன்றான்

(5எ) இராமனை இராவணன் கொன்றான்

வாக்கியம் (5) ம் (5எ) ம் ஆங்கில வாக்கியம் (3) க்குச் சமமான தாகும். ஆகையால் சொல்லடுக்கு என்ற ஒன்று சில மொழிகளில் இலக்கணத் தன்மைக் கொண்டது. வேறு சில மொழிகளில் மொழி நடையைச் (STYLE) சார்ந்தது. செயப்படு பொருளின் உறவை உணர்ந்த நாம் 'ஐ' என்ற உருபைத் தமிழிலும் சொல்லடுக்கை ஆங்கிலத்திலும் பயன்படுத்துகிறோம். இலக்கணத்தில் இத்தொடர்பை ஆராய்கின்ற பகுதியைத்தான் நாம் தொடரியல் (SYNTAX) என்று கூறுகிறோம். நாம் இப் பொழுது இலக்கணம் என்பதை இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம். (1) ஒலியனியல் பகுதி (PHONOLOGICAL COMPONENT); (2) தொடரியல் பகுதி (SYNTACTIC COMPONENT). இத்துடன் வேறொரு பகுதியையும் இணைக்க வேண்டிய

வர்களாக நாம் இருக்கிறோம். இப்பகுதியைப் பொருளியல் பகுதி (SEMANTIC COMPONENT) என்று மாற்றி லக்கணத்தார் கூறுவார்கள். இங்கு நான் பொருளியல் பகுதியைப் பற்றி அதிகம் கூறப் போவதில்லை.

நாம் திரும்பவும் முன்பு எழுப்பிய வினாக்களுக்கு இது வரைக் கண்ட செய்திகளை ஒன்று திரட்டிக் காண்போம். ஒருவன் ஒரு மொழியைத் தெரிந்திருக்கிறான் என்று சொன்னால் அவனுக்கு அம்மொழியில் உள்ள ஒலிகளும் அவைகள் சொற்களில் அமைந்துள்ள ஒழுங்கும் தெரிந்திருக்க வேண்டும்; இத்துடன் அவன் அம்மொழியில் உள்ள ஆயிரக்கணக்கான சொற்களையும் அவைகளின் பொருளையும் அறிந்து இருக்க வேண்டும்; இச்சொற்கள் வாக்கியங்களில் அமைந்துள்ள முறையும் தெரிய வேண்டும். இப்பொழுது அவனுக்கு மொழி தெரியும் என்று ஒப்புக் கொள்ளலாமா? ஒரு மொழியின் தன்மைகளை விளக்குகின்ற இலக்கணம் இவைகளை மட்டும் கூறினால் போதுமா? ஒருவன் ஒரு மொழியை அறிந்திருக்கிறான் என்று அவன் அம்மொழியில் உள்ள சில வாக்கியங்களைக் கூறுவதால் மட்டும் ஒத்துக் கொள்வதில்லை. ஒரு மொழியில் எண்ணிறந்த (INFINITE) வாக்கியங்கள் உள்ளன. அவைகளை அவன் சமயம் வரும்பொழுது பயன்படுத்தத் தெரிந்திருக்க வேண்டும். அதுபோல் புதிய புதிய சூழலில் புதிய புதிய வாக்கியங்களைக் கேட்டால் புரிந்து கொள்ள வேண்டும்; அவனுக்குப் புதிய சூழலுக்குத் தக்கவாறு புதிய வாக்கியங்களைப் படைக்கவும் இயல வேண்டும்.[2] இலக்கணம் என்பதை நாம் இத்திறமையை விளக்கும் ஒரு கருவி என்று கூறலாம். ஒரு மொழியில் உள்ள எண்ணிறந்த வாக்கியங்களை உருவாக்கும் ஒரு சாதனம் (DEVICE). இது தான் உருவாக்குகின்ற வாக்கியங்களுக்கு அமைப்பு விளக்கமும் (STRUCTURAL DESCRIPTION) அளித்தல் வேண்டும்.[3] சில வாக்கியங்கள் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட பொருள்களைக் குறித்தாலும் அம்மொழியை அறிந்தவன் அதை எளிதில் குறிப்பிட்டுவிடுவான். ஆகையால் இலக்கணம் ஒரு குறிப்பிட்ட வாக்கியம் குழப்பமான பொருள் களைச் சுட்டினால் அவற்றை விளக்கக் கூடிய ஆற்றலைப் பெற்றிருக்க வேண்டும். சான்றாகக் கட்டன்கள் (CONSTRUC-TIONS) (6) யும் (7)யும் எடுத்துக் கொள்வோம்.

(6) தில்லை நடராசர் கல்லூரி

(7) New ladies hostel

கட்டன் (6)க்கு இரண்டு விதமான விளக்கம் அளிக்கலாம். முதலாவதாக இது வேறொரு ஊரில் உள்ள தில்லை நடராசர் கல்லூரி என்ற பொருளைக் கொடுக்கும்; இரண்டாவதாக இது தில்லையில் உள்ள நடராசர் கல்லூரி என்பதையும் குறிக்கும். இதேபோல் (7) புதிதாக வந்த பெண்கள் தங்கும் புதிய உணவு விடுதி என்பதையும் குறிக்கும்; பெண்கள் தங்கும் புதிய உணவு விடுதி என்பதையும் குறிக்கும். கிளைப்படம் (1-4) இவற்றை விளக்கும்.



1. தில்லை நடராசர் கல்லூரி



2. தில்லை நடராசர் கல்லூரி



3. New ladies hostel



4. New ladies hostel

ஆகையால் நாம் சொற்களை ஒன்று சேர்க்கின்ற முறையால் பொருள் வேறுபடுகின்ற நிலையை இக்கிளைப்படங்கள் நமக்கு நன்கு விளக்குகின்றன. சொல் அடுக்கு நிலையோடு அவைகளை ஒன்று சேர்க்கின்ற முறையும் முக்கியமான ஒன்றாக இலக்கணத்தில் அமைந்திருக்கிறது.

சில தொகைச் சொற்களை நாம் இம்முறையில் விளக்க முடியாது. இவைகள் புற அமைப்பில் (SURFACE STRUCTURE) ஒத்திருந்தாலும் ஒன்றுக்கொன்று தொடர்பற்ற இரண்டுவிதமான வாக்கியங்களிலிருந்து உருவாகி இருக்கும். இதை விளக்க நாம் நம்முடைய இலக்கணத்தார் குறிப்பிட்டுள்ள

(8) புலி கொல் யானை

என்ற தொடரைச் சான்றாகக் காண்போம்.[4] இதற்கு இரண்டு விதமான பொருள்கள் இருப்பதை நாம் எல்லாரும் அறிவோம்.

முதலாவதாக இது 'யானை புலியைக் கொன்றது' என்ற பொருளையும் இரண்டாவதாகப் 'புலி யானையைக் கொன்றது' என்ற பொருளையும் உணர்த்தும். இதை விளக்க நமக்கு மேலே கூறிய முறை கை கொடுக்காது. ஆகையால் இலக்கணம் இரண்டு வகையான வாக்கியங்களைத் தோற்றுவித்து (GENERATE) மாற்றிலக்கண விதிகள் மூலம் புலி கொல் யானை என்ற தொடரை வருவிக்க வேண்டும். இதை நாம் பின்வருமாறு விளக்கலாம்.

(9) புலி யானையைக் கொன்றது --- புலி கொல் யானை

(10) யானை புலியைக் கொன்றது --- புலி கொல் யானை

வாக்கியம் (9)ம் (10)ம் புலிகொல் யானை என்ற புற அமைப்பின் அக அமைப்பு (DEEP STRUCTURE) தொடரியலின் தொடரமைப்பு விதிகள் (PHRASE STRUCTURE RULES) அக அமைப்பைத் தோற்றுவிக்கும்; மாற்றிலக்கண விதிகள் (TRANSFORMATIONAL RULES) இவற்றினின்று புற அமைப்பை வருவிக்கும்.

மொழியியல் ஒரு மொழி தெரிந்தவனின் இத்திறமையை விளக்க வேண்டும். அவன் எப்படி மொழியில் உள்ள எண்ணிறந்த வாக்கியங்களை உருவாக்குகின்றானோ அதேபோல் இலக்கணமும் இவ்வெல்லா வாக்கியங்களையும் தோற்றுவிக்கின்ற ஆற்றலைப் பெற்றிருக்க வேண்டும். வாக்கியங்களில் அமைந்து கிடக்கிற பொருட் குழப்பங்களுக்குத் தெளிவான விளக்கமும் இலக்கணம் அளித்தல் வேண்டும். அம்மொழியில் உள்ள சொற்களிலும் வாக்கியங்களிலும் உள்ள ஒலி முறையைத் தெளிவாக்கலும் இதன் கடமை. சுருங்கக் கூறின் ஒலிகளுக்கும் (SOUNDS) பொருளுக்கும் (MEANINGS) உள்ள மரபு வழி உறவை (RELATION) பல்வேறு நிலைகளில் (LEVELS) விளக்க முற்படுவதுதான் மொழியியலின் நோக்கம்!

குறிப்புகள்

1. இதைக் குறித்த விளக்கத்திற்குக் கோதண்டராமனின் 'சந்தி' என்ற கட்டுரையைப் பார்க்கவும் (Pon.Kothandaraman "On Sandhi' mimeo. Annamalainagar, 1969)

2. இந்த ஆற்றல்தான் விலங்குகளின் செய்தி உணர்த்தும் கருவிகளில் இல்லை. இதுதான் மனிதனின் மொழியை விலங்குகளின் 'மொழி' யினின்று பிரிக்கிறது. மேலும் இது பற்றிய விளக்கத்திற்கு அரங்கனின் 'விலங்குகள் பேசுமா?'(தமிழ்ப்பொழில்; forthcoming) என்ற கட்டுரையைக் காண்க.

3. Chomsky, N."Current Issues in Linguistic theory" Mouton & Co., The Hague (1964) p.9.

4. See Dr. Agesthialingom"s' A Generative Grammar of Tamil' p.vii (Annamalainagar (1967) for detailed discussion and also his paper on "Structural Ambiguities in Tamil' appeared in Indian Linguisties, vol.26 (1965)

க. ஆறுமுகனார்
தில்லிப் பல்கலைக்கழகம்
தில்லி

## ஒருமை பன்மையின் உணர்வு நலங்கள்

அறிவு நிலை மொழி ஒன்று. உணர்வு நிலை மொழி மற்றொன்று. அறிவு நிலை மொழி இலக்கணத்திற்கு அடங்கி நிற்கும், உணர்வு நிலை மொழி இலக்கணத்தை அடக்கி ஆளும், இன்னின்ன சொற்கள் இவ்விவ்விடங்களில் இந்த இந்தவாறு நிலைபெற வேண்டும் என இலக்கணம் விதிக்கும் கட்டளையைத் தலை மேற்கொள்வது அறிவுநிலை மொழி. அக்கட்டளையை உதறித்தள்ளி உணர்வைப் பொழிவது உணர்வுநிலை மொழி.

சிதையை நேரில் கண்டேன் எனச் சொற்களின், நிலை மாறாமல் அறிவுக்குப் பொருத்தமாய் இலக்கணத் தூய்மையுடன் வருவது அறிவுநிலைமொழி. கண்டனென் கற்பினுக்கணியைக் கண்களால் எனச் சொற்களின் நிலை மாறி இலக்கண அறிவுக்குப் பொருந்தாது இலக்கிய உணர்வுகளைக் கொட்டுவது உணர்வு நிலை மொழி. முன்னது உள்ளதை உள்ளவாறு அறிவுடை மாந்தர் வழங்கும் உலக வழக்கு எனலாம். பின்னது உள்ளதை உணர்ந்த வாறு உணர்வுடைக் கவிஞர் வழங்கும் செய்யுள் வழக்கு எனலாம். பொதுவாக முன்னதை உரை நடை மொழி எனவும் பின்னதைக் கவிதை மொழி எனவும் கொள்ளலாம்போல் தோன்றுகின்றன.

உலக வழக்காகிய உரைநடை மொழியில் உயர்திணைச் சொல் உயர்திணை முடிபே பெறும். அஃறிணைச்சொல் அஃறிணை முடிபே எய்தும். ஆண்பாற் சொல் அப்பால் முடிபே கொள்ளும். பெண்பாற் சொல் பெண்பால் வினையே பெறும், இறந்தகாலச் சொல் இறந்தகால முடிபே எய்தும். எதிர் காலச் சொல் எதிர்கால முடிபே கொள்ளும். ஆயின் செய்யுள் வழக்காகிய கவிதை மொழியிலோ உயர்திணைப்பொருள் அஃறிணை முடிபும் பெறும். அஃறிணைப் பொருள்

உயர்த்திணை முடிபும் எய்தும். ஆண்பாற் சொல் பெண்பால் வினை கொண்டும் முடியும். பெண்பாற் சொல் ஆண்பால் வினை முடிபும் பெறும். இறந்த காலத்தால் முடியவேண்டியது எதிர் காலத்தால் முடியவும் பெறும். எதிர் காலத்தால் வரவேண்டியது இறந்த காலத்தாலும் வரும். இங்ஙனமெல்லாம் மாறுவதில்தான் கவிதையின் உயிராகிய உணர்வு நலம் திகழ்வதாகும். ஒருமை பன்மையாயும் பன்மை ஒருமையாயும் மாறி முடியும் கவிதை மொழியின் மயக்கத்தில் தான் எத்தனை எத்தனை உணர்வுகள் பொதிந் துள்ளன? ஒருமை பன்மை என்னும் இலக்கணப் பிறழ்வு பொழியும் இலக்கிய உணர்வுகளை ஆய்ந்து உவப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்னும் பழுத்த அருள் உணர்வால் ஒருமை பன்மை மயங்கும் இலக்கணப் பிறழ்வினை ஆற்றுப்படைக் கவிதைக்குரிய இலக்கிய அழகாக்கி வழங்குவார் தொல்காப்பியர். அருளுணர்வேயன்றி அன்புணர்வு பொழியும் ஒருமைபன்மை மயக்கமும் தமிழ்க் கவிதைகளில் உண்டு. பெருஞ்சாத்தனார் என்னும் புலவர் தேர்வண்மலையன் என்னும் வள்ளலைக் காண்டற்குத் தம் சுற்றத்துடன் செல்கின்றார். மலையனோ இரும்பொறையும் பெருநற்கிள்ளியும் பொருகின்ற போர்க்களத்தில் இருக்கின்றான். பகைவரும் புகழும் வண்ணம் மலையன் போர் செய்கின்றான். புலவர் அங்குச் சென்று அவனைக் காண்கின்றார். வென்றோரும் தோற்போரும் ஒருங்கு புகழும் அத் தேர்வண்மலையனை நோக்கிப் பேசுகின்றார், ''நின்னைக் காண வந்தேன்'' என்று ஒருமையால் தொடங்கும் அப்புலவர் பெருமான் அவ்வள்ளல் தரும் கள்ளையும் ஊனையும் ''உண்பேம்'' என்று பன்மையால் முடிக்கின்றார். ''வந்தேன் உண்பேம்'' என்று கூறிப் பன்மை ஒருமை பிறழ்ந்து வழுப்படுகின்றார்.

புலவர் தம் உரையில் தோன்றிய இப் பன்மை ஒருமை மயக்கம் இலக்கண உணர்விற்கு வழுவாயினும், இலக்கிய உணர்விற்கு இன்பம் நல்கி அமைவதாகும். பல வகை இடையூறுகள் நிறைந்த போர்க்களத்தில் சென்று அவ்வள்ளலைக் காண்டற்குத் தம்மை மட்டும் கொள்கின்றார் அப்புலவர் பெருமான். ஆனால் அவ் வள்ளல் தரும் ஊனையும் கள்ளையும் மாற்றி மாற்றி உண்ணும் உண்டல் தொழிற்குத் தம் சுற்றம் அனைத்தையும் சேர்த்துக்கொள்கின்றார் அவர். பிறர் நலம் கருதி வாழும் அப் புலவர் பெருந்தகை ''பந்திக்கு முந்தி படைக்கு

பிந்தி'' என்னும் தன்னலப் பழ மொழியைப் ''படைக்கு முந்தி பந்திக்குப் பிந்தி'' என மாற்றி அமைத்துக் கொள்கின்றார். தாம் மட்டும் வாழ்ந்தால் போதாது, தம் சுற்றமும் வாழ வேண்டும் என்னும் விரிந்த அன்புணர்வே அவர் உரையில் எழுந்த பன்மை ஒருமைப் பிறழ்ச்சியின் காரணமாக அமைந்து இலக்கிய இன்பம் நல்குதல் காணலாம்.

பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன
நெருப்புச்சினம் தணிந்த நிணம்தயங்கு கொழுங்குறை
பரூஉக்கண் மண்டையொடு ஊழ்மாறு பெயர
உண்கும் எந்தைநிற் காண்குவந் திசினே - புறநானூறு, 125.

என்னும் அவர்தம் பாடலில் காணும் பன்மை ஒருமைப் பிறழ்வில் ததும்பும் அன்புணர்வு பன்முறை பயின்று உயர்ந்து இன்புறுவதற்கு உரிய இலக்கிய நலமாகும்.

அன்பு அருள் ஆகிய உணர்ச்சிகளில் மட்டுமின்றி, தலைவன் தலைவியர்க்கிடையே நிகழும் காதல் உணர்விலும் இத்தகைய பன்மை ஒருமை மயக்கம் நிகழ்வதாகும். தலைவன் ஒருவன் தன் காதலியைப் பிரிந்து செல்லக் கருதுகிறான். தான் செல்லும் காட்டின் கொடுமைகளை எல்லாம் விரித்துக் கூறுகின்றான். அவன் செல்லும் வழி மழை என்பதே அறியாத பாலை. அப்பாலையின் வெம்மையால் வழிச் செல்வோர் உடல் சுருங்கி உள் வற்றி உலர்ச்சியால் வாடுவர். அங்ஙனம் வாடுகின்ற நாவிற்குத் தண்ணீர் பெறாத் தடுமாற்றத்தால் கண்ணீர் விட்டு வருந்துவர். அத்துன்பக் கண்ணீர் தண்ணீர் பெறாது உலரும் நாவின் மீது விழுந்து அவர்தம் வருத்தத்தைச் சிறிது போக்கும். இங்ஙனமெல்லாம் பாலையின் கொடுமை கூறி அவளை விட்டுப் பிரிய நினைத்தான் தலைவன்.

தலைவன் பிரியக் கருதும் குறிப்பைத் தலைவி உணர் கின்றாள். தலைவனைப் பிரிந்து தான் உயிர் வாழாத நிலையைத் தலைவன் அறிவான். அறிந்தும் பாலையின் கொடுமை கூறித் தன்னைப் பிரிந்து செல்லத் துணிதல் தக்கதன்று என்று தலைவி வருந்துகிறாள். வருந்தி அத் தலைவனிடம் கூறுகிறாள்.

உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரம்
கண்ணீர் நனைக்கும் கடுமைய காடென்றால்
என்னீர் அறியாதீர் போல இவைகூறின்
நின்னீர் அல்ல நெடுந்தகாய் - கலித்தொகை, 6.

என்பது தலைவியின் மொழி. ஈண்டுப் பன்மையும் ஒருமையும் மயங்குகின்றன. ''என் நிலைமைகளை அறியாதீர் போன்று இவைகளைப் பேசுகின்றீர்'' - என்று உயர்வுப் பன்மையால் தலைவன் மீது உள்ள நன்கு மதிப்புக் குறையாமல் கேட்கின்றாள். தலைவன் பிரிவில் தான் உயிர் வாழாமை அறிந்தும் அவன் தன்னை விட்டுப் போகக்கருதிய அவனது பண்பற்ற செயலை எண்ணிய அவளது உள்ளம் கொதிக்கின்றது. சினந்து பேசுகிறாள், ''இம் மொழிகள் உனது நற் பண்புகளுக்கு ஏற்றன அல்ல'' - 'நின்னீர் அல்ல' என்று வெகுளி பொங்க அவனை ஒருமையால் கழறுகின்றாள்.

தலைவனது நற் பண்புகளை நினைந்து அவளிடம் பேசத் தொடங்கியபோது நிகழ்ந்த தலைவியின் உள்ளத்துணர்வு வேறு; அந் நற் பண்புகளுக்கு இடையே தன்னை விட்டுப் பிரிந்து தனக்கு இறந்துபாடு எய்துவிக்கத் துணிந்த அவனது நீர்மையற்ற கொடுஞ்செயலை எண்ணியபோது நிகழ்ந்த அவளது உள்ளத் துணர்வு வேறு. தலைவியின் இவ்விருவேறுபட்ட காதல் உணர்வுகளே எடுத்துக் காட்டும் உணர்வுச் சித்திரம் இவ் ஒருமைபன்மை மயக்கம் எனலாம். இங்ஙனம் தலைவியின் உள்ளத்தை, உள்ளத்துணர்வை, அவ்வுணர்வு வேறுபாடுகளை உள்ளவாறு திறந்து காட்டும் இப்பன்மை ஒருமை மயக்கத்தை இலக்கண வழு என்று தள்ளார். காதலுணர்வுகளைக் கவினுறக் காட்டும் இலக்கிய நலம் என்று கொண்டு உணர்ந்து உவகையுறுவர் அறிஞர்.

காவியம் படைக்கும் கவிஞர்கள் தமது காவியத்தில் வரும் பாத்திரங்களின் உணர்ச்சியில் அழுந்திவிடுதல் இயல்பு. பிற மாந்தரின் நற் புண்புகளை எண்ணி அவர்மாட்டு அன்பு கொண்டு போற்றுதலும், அவர் தம் கொடுமைகளை நினைந்து வெகுளி மீதுர்ந்து தூற்றுதலும் ஆகிய இருவகை உணர்ச்சிகளையும் இலக்கியம் அல்லது காவியத்தில் உணர்ந்து இன்புறலாம். இவ் விருவகை உணர்ச்சி நிலைகளையும் காவியமாந்தர் மீது ஏற்றி அவர் கூற்றாகக் கவிஞர் காட்டுதலும் உண்டு. சிலபோது காவிய மாந்தர்பால் தாம் கொள்ளும் உவகையும் வெகுளியும் ஆகிய இவ்விருவகை உணர்ச்சிகளையும் பிறர் கூற்றாக அன்றித் தமது கூற்றாகவே காவியத்தில் அல்லது இலக்கியத்தில் கவிஞர் பொழிதலும் உண்டு.

திருவள்ளுவரது திருக்குறளில் ஓர் இராவணன் வருகிறான். கல்வியும், செல்வமும், அறிவும், ஆண்மையும் பிற பல

பேறுகளும் பெற்றவன் அவன். அவன் பெருமைகளைக் கண்டு வியந்து போற்றுகின்றார் வள்ளுவர். அவனை நன்கு மதித்துப் பாராட்டுகின்றார் அவர். அவனை அவன் என ஒருமையால் பேசுதல் அவனது பெருமைக்கு இழுக்கு என்று வள்ளுவர் தம் உள்ளம் கருதுகின்றது. உயர்வுப் பன்மை கொடுத்து அவனை ''அவர்'' என்று பெருமையாகப் பேசுகின்றார். எத்தனை பெருமைகளை உடையவர் அவர் என்று அவ்விராவணனைப் பாடுகின்றார்.

''எனைத்துணையர்''

என்பது அவ் இராவணப் பெருந்தகையை வள்ளுவப் பெருந்தகை நன்குமதித்துப் பாராட்டும் உவப்புரை ஆகும்.

பலப்பல பெருமைகளுக்கு இடையே ஒரு சிறுமையும் அவ் இராவணன்பால் காண்கின்றார் வள்ளுவர். மதியிடைத் தோன்றும் மருப்போன்று நின்று அப்பெரியோனது ஒளி பலவற்றையும் மறைத்துவிடுகின்றது அச்சிறுமை. அச்சிறுமைதான் பிறனில் விழையும் பேரிருள். அவனது பெருமைகளை எண்ணி அவனை உயர்வுப் பன்மையால் போற்றிய வள்ளுவர் நெஞ்சம் உடனே அவனது இச்சிறுமைப் பண்பினை நினைந்து வருந்துகின்றது. அப் பெரியோனது பெருமைகளைப் புகழ்ந்து, அவனது குணம் என்னும் குன்றேறி நின்று, உவகையுணர்வு பொங்கிய வள்ளுவர் மனத்தில் ஒரே கணத்தில் அவனது சிறுமை தோன்றி வெகுளியுணர்வு பொங்கி வழிகின்றது. அவ்வெகுளியை அக்கண நேரமும் அவரால் காத்துக் கொள்ளுதல் அறிதாகின்றது.

பெருமைகளை நினைந்து உவகை மீதுயர்ந்து ''எத்துணையர்'' என்று மதித்துப் போற்றிய வள்ளுவர், அவனது பிறனில் விழையும் சிறுமையை நினைந்து இகழ்ந்து தூற்று கின்றார். கல்வியும் செல்வமும், அறிவும் ஆண்மையும், பிற பல பண்புகளும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற அவனை ''எத்துணையர்'' என்று உயர்வுப் பன்மையால் போற்றியதை மறுத்து, அவன் எத்துணை கற்றும் அறியாதவன், தெரியாதவன், நன்மை திமைகளைத் தெளியாதவன் என்னும் பொருளில் ''தினைத் துனையும் தேரான்'' என இழிவு ஒருமையால் தூற்றுகின்றார்.

எனைத்துணையர் ஆயினும் என்னும் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல் - திருக்குறள்.

என்பது வள்ளுவர்தம் உள்ளத்தில் தோன்றிய உணர்வுகளைக் காட்டும் பாட்டோவியம் ஆகும்.

அப் பெரியோனது பண்புகளை நினைந்து வள்ளுவர் கொண்ட உவகையுணர்வு இக்குறட்பாவின் முதல் அடியிலும், அவனது தீமையை எண்ணி அவர் கொண்ட வெகுளியுணர்வு ஈற்றடியிலும் ததும்பி மயங்குகின்றன. இவ் உணர்வு மயக்கத்தைக் காட்டுவது இப்பாடலில் அமைந்துள்ள பன்மை ஒருமை மயக்கமே ஆகும். எனைத் துணையர் என்று உயர்வுப் பன்மையால் தொடங்கி, 'தேரான்' என இழிவு ஒருமையால் முடிந்து பன்மையும் ஒருமையும் ஒருங்கு மயங்குகின்றன இக்குறட்பாவில். இப்பன்மை ஒருமை மயக்கம் இலக்கண வழுவா? அன்று, அன்று. வள்ளுவரது உள்ளத்தை, அவ் உள்ளத்தில் தோன்றும் உவகையுணர்வை, அவ் உவகையுணர்வை மறுத்துப் பொங்கிய வெகுளியுணர்வை, அவ்உணர்வுகளின் மயக்கத்தைப் படம் பிடித்துக் காட்டுவது இப் பன்மை ஒருமை மயக்கம் அல்லவா? இலக்கியத்திற்கு உயிராகிய உணர்வுகளை எடுத்துக் காட்டும் இப்பன்மை ஒருமை மயக்கத்தை இலக்கிய அழகுகளில் மிகச் சிறந்த ஒன்றென மதித்துப் போற்ற வேண்டாமா?

கம்ப ராவணனது பெருமையும் சிறுமையும் பற்றித் தோன்றும் உவகையும் வெகுளியும் ஆகிய உணர்வுகளின் ஓவியம் பன்னீராயிரம் பாடல்கள் அடங்கின காவியப் படத்தில் கற்பனை முதலான பல வகை இலக்கிய வண்ணங்களால் தீட்டப் பெற்றுள்ளது. ஆயின் வள்ளுவ ராவணனது சிறுமையும் பெருமையும் பற்றி எழுந்த உவகையும் வெகுளியும் ஆகிய இரு வகை உணர்வுச் சித்திரம் அவரது ஈரடிக் குறள் என்றும் சிறிய படத்தில் பன்மை ஒருமை மயக்கம் என்னும் ஒரேவகை இலக்கியக் கலப்பு வண்ணத்தால் தீட்டப்பெற்றுள்ளதே! கம்பரது பன்னீராயிரம் பாடல்களின் கற்பனை அழகுகள் அனைத்தையும், வள்ளுவர் தம் சிறிய குறட்பா ஒன்றில் வரும் பன்மை ஒருமை மயக்கம் என்னும் பேரழகு, தன்னுள் அடக்கிச் செறித்துக் காட்டுதல் உணர்ந்து இன்புறுதற்கு உரியது.

சமுதாயத்தில் ஒரு சிலர் எய்தும் அவல நிலைகளைக் கண்டு உருகும் உள்ளம் பெற்றவர்கள் கவிஞர் பெருமக்கள். அவ் அவல நிலைகளை வாய் விட்டுக் கூறவும் அஞ்சுவர் அவர். மெய்ப் பொருள் நாயனாருக்கு நிகழ்ந்த கொலைக் கொடுமையை வாய்விட்டுச் சொல்லவும் அஞ்சுவார் சேக்கிழார் பெருமான். முத்தநாதன் செய்த அக்கொடுஞ்செயலைக் கூறவும் அஞ்சி ''தான் முன் நினைத்த அப்பரிசே செய்ய'' என்று பாடும் பாடற் பகுதி

அப்பெரும் புலவரின் இளகிய நெஞ்சினை எடுத்துக் காட்டுவதாகும்.

வள்ளுவப் பெருந்தகையும் இத்தகைய இளகிய நெஞ்சம் பெற்றவரே ஆவார். இரந்தும் உயிர் வாழும் மாந்தர் சிலரைச் சமுதாயத்தில் காண்கிறார் வள்ளுவர். ''வீடுதோறிரந்தும் பசியறாது அயரும் அவ்வெற்றரைக் கண்டு உளம் பதைக் கின்றார்'' அப்புலவர் பெருமான். இழிவு மிக்க இரத்தல் தொழிலை இன்பத் தொழிலாக்கிக் காட்டுகின்றார் அவர். இரவலன் தான் இரந்த பொருள்களைத் துன்பமின்றி வருமானால் அத்தகைய இரப்பு அவனுக்கு இன்பமே நல்குவதாகும்.

இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உறாஅ வரின் - திருக்குறள், 1052.

என்பது திருவள்ளுவர் கூறும் இரப்பின்பம். இத்திருக்குறளில் வரும் ''துன்பம்'' என்பது வடிவத்தால் ஒருமைச் சொல்லாகும். ஆயின் இச்சொல் ஈண்டுப் பன்மைப் பொருள் உணர்த்தி நிற்றல் அறிதற்குரியது.

இரவலனுக்கு நேரும் துன்பம் ஒன்றல்ல, இரண்டல்ல, மிகப்பலவாகும். நாட்டில் வாழ்வோர் பலராயினும் அவருள் இரப்போர்க்கு ஈந்து வாழ்வோர் மிகச்சிலரேயாவர். இரவலன் தான் இரக்கச் சென்ற ஊரில் ஈவோர் யாருளர் என்று அறிதலே ஒரு துன்பம். ஈவோரும் சிற்சில குறிப்பிட்ட காலத்தில் சென்றால்தான் உதவி புரிவர். குறிப்பிட்ட அக்காலத்தை இரப்போன் அறிந்து செல்லுதல் பிறிதொரு துன்பம். இங்ஙனம் காலமும் இடமும் நாடிச் சென்றாலும், கொடுத்தற்கு ஏற்ற நல்ல மன நிலை ஈவோருக்கு இல்லையாயின் பயனில்லை. ஆதலின் அவர்தம் குறிப்பறிதல் மற்றொரு பெருந்துன்பம். ஈவோர் நல்ல மனத்துடன் இருப்பினும் அவர் கருத்தைத் தன்பால் இரவலன் திருப்ப வேண்டும். அங்ஙனம் திருப்பி அவரைத் தன்வயப் படுத்துதல் இன்னொரு துன்பம். தன்வயப்படுத்திய பிறகும் அவர்தம் மனம் நெகிழும் இன்சொற்களையே நாடிச் சொல்லுதல் அதனினும் பெருந்துன்பம். இவற்றை எல்லாம் அரிதின் செய்து முடித்தாலும் அப்பெருமக்கள் இரவலர்க்கு எதுவும் கொடுக்க மறுத்தலும் உண்டு. அங்ஙனம் மறுத்துழி வரும் துன்பம், துன்பம் என்னும் உயரிய மலையின் உச்சியாகும்.

இரவலனுக்கு நேரும் துன்பங்கள் அனைத்தும் வள்ளுவர் நெஞ்சில் நிழலிடுகின்றன. அத்துன்பங்கள் அனைத்தையும்

வாய்விட்டுச் சொல்ல அவர்தம் இளகிய நெஞ்சம் அஞ்சுகின்றது. அவை அனைத்தையும் துன்பம் என்னும் ஒருமைச் சொல்லில் செறித்துக் குறிப்பால் உணர வைக்கிறார் அக்கவிஞர். அவர் தம் குறட்பாவில் உள்ள துன்பம் என்பது ஒருமைச் சொல்லாயினும் பலவகைத் துன்பங்களையும் அது தன்னுள் அடக்கிப் பன்மைப் பொருள் தந்து நிற்கின்றது. சொல்லால் ஒருமையாயும் பொருளால் பன்மையாயும் நிற்கும் இச் சொல் வழுவுடையதா? அன்று, அன்று. இரவலனது துன்பங்கள் பலவற்றையும் எடுத்துக்கூற அஞ்சும் வள்ளுவப் பெருந்தகையின் உள்ளத்து இரக்க உணர்வைத் தெள்ளிதின் காட்டும் இலக்கியப் பேரழகு இச்சொல்லில் அமைந்து கற்போர்க்கு இன்பம் தருகிறது. ஒருமையும் பன்மையுமாக நின்று இரட்டைப் பணி புரியும் இத்தகைய சொற்களைச் சாதியொருமை என அமைப்பர் இலக்கண வல்லார். இலக்கிய இலக்கணப் பெரும்புலமை வாய்ந்த பரிமேலழகர் இச் சொல்லின்கண் அமைந்து கிடக்கும் இவ் இலக்கிய நலத்தைப் புலப்படுத்தும் திறன் அறிந்து பாராட்டுதற்கு உரியதாகும்.

இங்ஙனம் ஒருமைபன்மைப் பிறழ்வு எனும் இம்மயக்கம் உலக வழக்கில் இலக்கண வழுவாகத் தோன்றினும் கவிதையினுள் அதற்குரிய உயிராகிய அன்பு, அருள், உவகை, வெகுளி, இரக்கம் முதலான உணர்வு நலங்களைப் பொழிந்து இலக்கிய இன்பம் பயத்தலைப் பன்முறை பயின்று உணர்ந்து உவகை உறலாம்.

இந்திராணி மணியன்
ஸ்ரீராம் பெருமாட்டி கல்லூரி
தில்லி – 24

# குறள் அறம்

மக்களாகப் பிறந்தவர்களில் இன்பத்தை விழையாதார் யாரும் இல்லை. தானும், தன்னைச் சேர்ந்தவர்களும், நலமாக வாழவேண்டும் என்பதே ஒவ்வொருவருடைய விருப்பமும். எனினும், எல்லோருடைய வாழ்விலும் துன்பத்தின் குறுக்கீடு இருக்கத்தான் செய்கிறது. குறுக்கிடும் துன்பமும் அனைவருடைய வாழ்விலும் ஒரே அளவினதாக இல்லை. இதன் காரணம் யாது?

மக்களாகப் படைத்துக்கொண்ட ஏற்றத்தாழ்வுகள் அன்றி, இயற்கையிலேயே சில ஏற்றத்தாழ்வுகள் அமைந்துள்ளன. பிறக்கும் பொழுது, கொண்டு வந்ததில்லை; இறக்கும்பொழுது கொண்டு போவதில்லை எனத் தத்துவம் பேசினாலும் மக்களிடையே பொருளவில் எண்ணற்ற வேறுபாடுகள் உள்ளன. காலமெல்லாம் உழைத்தும் கால் வயிற்றுக் கஞ்சியும் இன்றிக் கஷ்டப்படுகின்றனர் சிலர்; உழைக்காமலேயே உன்னத வாழ்வு வாழ்கின்றனர் சிலர். இது சமுதாய அமைப்பின் கோளாறுதான் என்று கூறினாலும் நோயும், பிணியுமாகச் சிலரும்; நோய் நொடியற்றுச் சிலரும், அறிவுடன் சிலரும், அறிவற்றுச் சிலரும், உருக்குலைந்து சிலரும், அழகு நிறைந்து சிலரும் வாழ்வதன் காரணம் யாது?

செல்வம் நிலையாமையாலும், யாக்கை நிலையாமையாலும் எண்ணிறந்த மக்கள் வாழ்வு சூறையாடப்படுவதன் காரணத்தை அறிந்தார் யாரும் இல்லை. நல்லதோர் இதயமும், நற்பண்புகளும் பெற்றவர் நாளும் நலிவுற்று வாழ்வதும், கல்நெஞ்சமும், கபட வாழ்வுமாக வாழ்பவர் நாளும் நலம் பெற வாழ்வதும் கண்கூடு. ஒழுக்கங்கெட்டவன் உயர்வாழ்வு அடைகிறான்; மற்றவர் உழைப்பை உறிஞ்சுபவன் உயர்ந்தவனாகிறான். வஞ்சிப்பவன் வணக்கத்துக்குரியவன் ஆகிறான்,

உழைப்பவன், நல்லுணர்வுடன் வாழ்பவன், வாழத் தெரியாதவனாகிறான்.

இதனைக்காணும் மக்கள் உள்ளம் குழம்புகிறது. நல்லதில் நம்பிக்கை குறைகிறது. நாமும் அவ்வாறு வாழ்ந்தால் என்ன என்ற உணர்வு தலை எடுக்கின்றது. இயற்கையில் காணும் இவ்வேற்றத் தாழ்வை எதிர்த்து வாழ்வின் வசதி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என நினைக் கின்றனர்; வாழவும் முற்படுகின்றனர்.

ஆனால், வாழ்வும் அதுவல்ல; வாழவேண்டிய முறையும் அதுவல்ல. உருவத்தால் மக்கள் வேறுபட்டுக்காணப்படுவதைப் போலவே உள்ளத்தாலும் அறிவுத் திறத்தாலும் வேறுபட்டு இருக்கின்றனர். பலரால் உணரமுடியாத வாழ்க்கைச் சட்டம், இயற்கை நியதி சிலருக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிந்து தெரிகின்றது. அவ்வாறு தெளிவுபெற்ற சிலர் மயங்கிக் கிடக்கும் மாந்தர்க்கு அவ்வுண்மைகளை எடுத்துரைத்தனர்.

வாழ்வில் காணும் ஏற்றத்தாழ்வுக்குக் காரணம் வினைப் பயன் என்றும் இப்பிறவியில் நல்வாழ்வு பெற முற்பிறவியில் அறம் செய்திருக்க வேண்டும் என்றும் இம்மையில் செய்யும் அறமே, மறுமையில் இன்பத்தை அளிக்கும் என்றும் கறினர். நூல்களெல்லாம் அறம், பொருள், இன்பம் பற்றியே பேசின. காலப்போக்கில் அறம் என்பது பிறருக்குச் செய்யும் பொருளுதவி தான் எனக்கொண்ட மக்கள் தங்களுடைய வாழ்க்கை நிலையை மாற்றிக் கொள்ளாமலேயே அறத்தை விலை கொடுத்து வாங்கிக் கொள்ள முற்பட்டனர். கோயில் கட்டுதலும், குளம் வெட்டுதலும், பாதை அமைத்தலும், பள்ளிக்கூடம் வைத்தலும் மட்டுமே அறச்செயல் என எண்ணினர்.

இதுவல்ல அறம். இவை எல்லாம் வெறும் ஆரவாரம் என உரக்க குரல் கொடுத்தார் வள்ளுவர். அவர் கொடுத்த விளக்கமும் வேறு; அவர் காட்டிய வழியும் வேறு.

அறநூலாகக் கற்று, கடை பிடிக்க விரும்புவோருக்குத் திருக்குறள் முழுமையுமே ஓர் ஒப்பற்ற அறநூலாகும். அதில் காணப்படும் ஒவ்வொரு குறளும் ஓர் அறச் சட்டமேயாகும். எனினும் அறத்தின் அடிப்படையை விளக்குவது போன்று சிற்சில இடங்களில் 'அறம்' எனும் சொல்லைக் கையாண்டு அழுத்தம் கொடுத்து விளக்குகிறார்.

முப்பாலாகப் பிரிக்கப்பட்டுள்ள திருக்குறளிலே பொருட் பால், காமத்துப்பாலைவிட அறத்துப்பாலில், அதிலும் இல்லற இயலில்தான் 'அறம்' எனும் சொல் பெருவாரியாகக் கையாளப் பட்டிருக்கின்றது.

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை'

என்று துவங்குகிறது இல்லற இயல். உற்றார் உறவினர், துறந்தார், துவ்வாதார், நண்பர் விருந்தினர் என அனைவர்க்கும் துணையாய் நின்று, பழி அஞ்சிப் பொருள் சேர்த்து, பகுத்துண்டு, வாழ்வாங்கு வாழும் இல்லாளனே அறளாளனாவான். துறவற இயலில் துறவறத்தைப் போற்றினாரே யாயினும் -

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன்.

என இல்வாழ்வின் சிறப்பைக் கேள்வி கேட்டு உயர்த்திக் காட்டுகிறார். அத்தகைய இல்வாழ்வை அன்பு, அறம் ஆகிய இரு தூண்களே தாங்கி நிற்கும்.

இல்லறம் இனிது நடக்கவும், பிற உயிர்கள் மேல் அருள் பிறக்கவும் காரணமாய் அமைவது அன்பே. அன்பே வாழ்வின் மையப்புள்ளி. அதனைச் சுற்றியே மற்ற பண்புகள் வளர்கின்றன. அன்பு அற்றுப்போகும் பொழுது தன்னலம் பெருகும்; அன்பு உள்ளத்தில் வேரூன்றியபின் பிற நலன்கள் தழைக்கும். அறச் செயல்கள் அனைத்திற்கும் அன்பே சார்பாகும்.

அன்பு நிறைந்த உள்ளத்தில் இருந்துதான் அறத்தோடியைந்த இன்சொல் பிறக்கும். பிறர்க்கு நல்லதை நாடிச் சொல்லச் சொல்லச் சொல்பவர் வாழ்வில் நன்மை சேரும். உள்ளத்தில் அன்பும் வாக்கில் இனிய சொல்லும் கொண்டவன் அடங்கிய தன்மை உடையவனாவான். அவனிடம் சினம் நெருங்காது; அறச்சார்பற்ற இன்னாச்சொல் இடம் பெறாது.

குறள் அறத்திலே, ஒழுக்கம், உயிராக ஓம்பப் படவேண்டிய ஒன்று. ஒழுக்கம் அற்றவன் உயர்ந்தவனாக முடியாது; மற்றவரும் அவனை, உயர்ந்தவராகக் கருதக் கூடாது. ஒழுக்கமே உயர்வு தரும். அறவாழ்வுக்கு வித்தாக அமைவதும் அதுவே. கல்விக்குப் பயன் அறிவு; அறிவுக்குப் பயன் ஒழுக்கம் என அமைய வேண்டும்.

அழுக்காறிலாத வாழ்வையே ஒருவன் ஒழுக்காறாகக் கொள்ளவேண்டும். பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை என்பது

வள்ளுவருக்கு உடன்பாடெனினும் பிறர் பொருளை விரும்பு வதையோ, பிறனாக்கம் கண்டு பொறாமைப் படுவதையோ வன்மையாகக் கண்டிக்கிறார். அறவழியில் தேடிய பொருளே ஆக்கம் தரும்.

அறவழி காட்டும் அருளாளர்கள் அவரவர் வாழும் காலத்திற்கும் நாட்டிற்கும் ஏற்பச் சில அறச்சட்டங்களை அமைக்க வேண்டி இருக்கின்றது. ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலை அற்றிருந்த அக்காலத்தில் பிறனில் 'விழையாமை' பற்றியும் வள்ளுவர் பேசவேண்டி இருந்தது. இல்லாளன் பிறன்மனை நோக்காத பேராண்மை உடையவனாக இருந்தால் தான் இல்லறம் சீரும் சிறப்புமாக அமையும் என்றார்.

வாய்மையும், பொறையுடைமையும் குறள் அறத்தில் தனி இடம் பெறுகின்றன. வாய்மைக்கு அவர் தரும் விளக்கமே புதுமையானது. நடந்ததையோ அறிந்ததையோ, உணர்ந்ததையோ கூறுவது வாய்மை அல்ல. 'வாய்மை எனப்படுவது யாதெனில் யாதொன்றும், தீமை இலாத சொலல்' என்கிறார். புரை தீர்ந்த நன்மை பிறர்க்குப் பயப்பதாயின் பொய்ம்மையும் வாய்மை யாகும் என்பது அவர் கருத்து. பிறர் நன்மையை நாடும் உள்ளமன்றோ குறளறத்தின் அடிப்படை! அதனால்தான் தீமைக்குத் தீமை தவற்றிற்குத் தண்டனை, என வாழும் உலகுக்குத் தீங்கு செய்தவனையும் மன்னித்து மறந்து வாழும் அறவழியைக் காட்டுகிறார்! ''வினைவிதைத்தவன் வினை அறுப்பான், இது அறச் சட்டம். ஆதலின் அவனைக் கண்டிக்கும், தண்டிக்கும் பொறுப்பை நீ ஏற்றுக்கொள்ள வேண்டாம். மாறாக அவனுக்கு அத்தகைய அழிவு ஏற்படுகிறதே என்பதற்காக வருந்து'' எனக் கூறுகிறார். தவறு செய்தார்க்கு அத்தவற்றையே திருப்பிச் செய்து, நிறைவு பெறுதல் குழந்தைக் குணம். அன்று பெறும் நிறைவு அல்ல, பொன்றும் துணையும் புகழுடைய வழியைக் காட்டுகிறது வள்ளுவர் உள்ளம். பயனில பேசித் திரிவோரையும், புறங்கூறுவோரையும் கண்டு கொதித் தெழுகிறார் வள்ளுவர். அறவழியில் ஒருவன் தன் உள்ளத்தைத் திருப்பவில்லை எனினும், இவை இரண்டையும் செய்யாமல் இருந்தால் அதுவே அவன் அறத்தைச் செய்ததற்கு ஈடாகும் என்கிறார். 'புறங்கூறிப்பொய்த்துயிர் வாழ்தலினும் சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும்'. முன்னே முகம் மலரப்பேசிப் பின்னே புறங்கூறுதல் மனிதத் தன்மை அன்று. வள்ளுவர் வாழ்தலைவிடச் சாதல் சிறந்தது எனக்கூறும் இடங்கள் மிகமிகக்

குறைவு. அவற்றில் இதுவும் ஒன்று. செயலால் செய்யும் அறங்களில் கொல்லாமையையும் ஈதலையும் தலைசிறந்த அறமாக்கிக் காட்டுகிறார். அறவினையாதெனில் கொல்லாமை என்கிறார். அறவாழ்வு வாழ விழைபவன் ஈதலைப் பேரறமாகக் கொள்ளவேண்டும். பொருளினால் வரும் ஏற்றத்தாழ்வைக் குறைக்கும் ஒரே வழி, வறியார்க்கு ஒன்று ஈதலே. மக்களாகப் பிறந்த அனைவரையும் அறச் செம்மல்களாக்க வழிவகுத்துக் காட்டிய வள்ளுவர் ஒரு சமுதாயத்தையே அறவழிப்படுத்த ஈகையையும் ஒப்புரவையும் காட்டினார். பிறர் உழைப்பைச் சுரண்டாமல் அறவழியில் பொருள் சேர்த்து, அதனையும் தனக்கும், தன்னைச் சேர்ந்தவர்க்கும் என்று உரிமையாக்காமல் பகுத்துக்கொடுத்து உண்டு மகிழும் சமுதாயமே உயர்ந்த சமுதாயமாகும்.

உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை என்பதையே தவத்தின் விளக்கமாக அமைத்த வள்ளுவர் கொல்லாமையைத் தலைசிறந்த அறமாக்கிக் காட்டியது பொருத்தமே. தன்னைப்போல் பிறர் என்ற நிலையைவிடத் தன்னைப் போல் பிற உயிரும் என்ற நிலை சிறந்தது.

அறன் வலியுறுத்தலில் 'மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்து அறன்' என அறத்தின் விளக்கமும், 'சிறப்பீனும், செல்வமும் ஈனும்', 'அறத்தினூங்கு ஆக்கமும் இல்லை, அதனை மறத்தலின் ஊங்கில்லை கேடு'', ''அறத்தாறு இது என வேண்டா, சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை'', ''அறத்தான் வருவதே இன்பம்,'' எனவும் அறத்தைச் செய்வதால் வரும் நன்மையும் அதனைச் செய்யாமையால் வரும் தீமையையும், ''ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே, செல்லும் வாய் எல்லாம் செயல்'' ''அன்றறிவாம் என்னாது அறம் செய்க'' என ... ... ... அறம் செய்யும் வழியையும் கூறி, ''செயற்பாலதோரும் அறனே ஒருவர்க்கு என்று அறத்தின் வலிமையை நிலை நாட்டி முடிக்கிறார்.

இவ்வாறு அறம் எனும் சொல் திருக்குறளில் அறச்செயல்கள் என்றும் இம்மை, மறுமை இன்பத்தைத் தருவது என்றும், அறக்கடவுள் என்றும் பொருள்பட்டு நிற்கின்றது. அறம் என்பது ஒருவர்க்கு ஒன்று ஈவது மட்டுமன்று வாழ்வில் மேற்கொள்ள வேண்டிய நற்செயல்கள் அனைத்துமே அறமாகும். அறம் இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தைத் தராமற்போனாலும் அறவாழ்வு வாழ்ந்தோம் என்ற மனநிறைவே ஒருவர்க்குப்

பேரின்பமாகும். நல்வழியில் செல்பவனுக்கு அறக்கடவுள் உதவி புரிவதில்லை எனினும் நல்லதைச் செய்து தீமை அடைந்தாலும், அதுவே சிறந்ததாகும்; தீயவழியில் செல்பவனுக்கு அறக்கடவுள் தண்டனை தரவில்லை எனினும், அவனுடைய மனச்சான்றே அவனைக் கொல்லும். ஆதலால் ஒருவன் மேற்கொள்ள வேண்டியது -- மனிதனாக வாழ விரும்பும் ஒவ்வொருவரும் -- ஏற்றுக்கொள்ள வேண்டியது அறவாழ்வே ஆகும். இதுவே குறள் அறம். குறள் அறத்தைக் கற்று, கற்றபடி நின்று வாழ்வைப் பண்பும், பயனும், உடையதாக ஆக்கிக் கொள்வதே ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய செயலாகும்.

திருமதி இரகுபதி சாமிநாதன்
டோக் பெருமாட்டி கல்லூரி
மதுரை – 2

# சங்க இலக்கியங்களில் மானுட உரிமைக் கோட்பாடுகள்

மனித சமுதாயத்தின் தேவைகளுள் அரசும் ஒன்று. ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்பட்ட மக்களை ஒரு சமுதாய நீதியால் பிணைத்து, அவர்களுடைய நலன்களைப் பேணிக் காப்பதே அரசின் நோக்கம். மனிதனுடைய சிந்தனைத் திறனாலும் பட்டுணர் வாலும் கண்டுணர்த்திய அரசு முறைகளுள், தலைசிறந்தது என்று மக்களால் போற்றப்பெறுவது மக்களாட்சி முறையே. தனி மனிதனுடைய சிந்தனைத் திறனையும், படைப்பாற்றலையும், துணிசெயல் வேட்கையையும் மதித்து வளர்த்து அவனும் சமுதாயமும் பயனடையுமாறு செய்வதுதான் இவ்வாட்சி முறையின் தலைமையான நோக்கம்.

குடியரசு முறைக்கு இலக்கணம் வகுத்த பண்டைய கிரேக்கப் பேரறிஞரும் கூடத் தங்கள் தேவைகளைக் காக்கவும், கூடிப் பேசவும், தங்களுடைய சார்பாளர்களைத் தேர்ந்தெடுத்து அரசு அமைக்கும் மக்களாட்சி முறைபற்றி எண்ணியதாகத் தோன்றவில்லை என மக்களாட்சி முறை கண்ட அறிஞர்களுள் ஒருவரான தாமஸ் ஜெபர்சன் கூறுகிறார். பழம்பெரு நாகரிக நாடுகளுள் ஒன்றான நம் தமிழகத்தில் பண்டு நிலவிய அரசு முறையும் அது போற்றிய மனித உரிமைகளும் எத்தகையன என்பது அச்சமுதாய நாகரிகத்தை அளக்கும் கருவிகளுள் ஒன்றாக அமையும்.

வழிவழி அரசு முறை பெற்ற முடியுடை மூவேந்தரும், அவருக்கு அவ்வப் போது படைத்துணை நல்கும் குறுநில மன்னரும் ஆண்டகாலம் சங்ககாலம். மக்கள் வாழ்வதற்கேற்ப, ''காடுகொன்று நாடாக்கியும் குளம் தொட்டு வளம் பெருக்கியும்'' மன்னர்கள் நாடாண்டதன் நோக்கம், அங்குதான் தம் வாழ்வின்

வெற்றியே அமைந்துள்ளது என்ற உண்மை உணர்வு பெற்று இருந்தமையே ஆகும்.

''மூத்தோர் மூத்தோர் கூற்றம்'' வாய்ப்படத் தாம் பெற்றது தானே இந்த அரசும் செல்வமும் எனக்கருதி மக்களை மதியாது வாழ்ந்த மன்னர்களைத் தமிழிலக்கியங்களில் காண்பதரிது

''நீர்உயர நெல் உயரும்
நெல் உயரக் குடியுயரும்
குடியுயரக் கோலுயரும்''

என்பது அவர்கள் கண்ட உண்மை. தமது கோலின் செம்மைக்கும் வளர்ச்சிக்கும் குடிமக்களுடைய வாழ்வும் வளமும் இன்றியமை யாதன என்பதை அன்றைய முடி மன்னர்கள் உணர்ந்திருந்தார்கள். பற்பல இடங்களில் அவ்வேந்தர்கள் கடமை உணர்ச்சியால் உந்தப்பெற்றுப் பொருள் பொதிந்த பாடல்களைப் பாடியுள்ளனர்.

பகைவர்கள் தம்மை எதிர்த்தபோது, படை வலிமையாலும், தோள் வலிமையாலும் அவர்களை வென்று மக்களுடைய உரிமையைக் காக்கத் தவறினால் தமக்கு இன்னின்ன இழுக்குகள் ஏற்படட்டும் என்று ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனும், தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியனும், சோழன் நலங்கிள்ளியும் வெஞ்சினம் கொண்டு வஞ்சினம் கூறிய உரைகள் அவர்களுடைய உள்ளப்பாங்கினை உள்ளபடி படம்படித்துக் காட்டுகின்றன.[1]

மக்கள் துயர்நீக்கும் தண்ணிழலாக விளங்க வேண்டிய தான், அவர்களுடைய அன்பையும், தன்மீது கொண்ட நம்பிக்கையையும் இழக்குமாறு செய்து ''குடி பழி தூற்றும் கோலேனாகுக'' எனவுரைத்த தலையானங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன், தன் ஆளுமைக்குட்பட்ட மக்கள் துயர் மிகவுற்றுத் தன்னைத் தூற்றட்டும் என்கிறான். மக்களுடைய நல்லெண்ணத் தையும் நம்பிக்கையையும் அன்பையும் அரசு பெறுவதற்கான துறைகளுள் சிறந்தது நீதித் துறை. அங்கே குறை வேண்டினோரும் முறை வேண்டினோரும் மன்னனை வாழ்த்தி மனநிறைவு பெறும் வகையில் அறம் நிலவ வேண்டும் என்பதை உணர்த்திருந்தான் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்.

''அறநிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறை திரிந்து
மெலிகோல் செய்தே னாகுக''[2]

என்று அவன் சூளுரைத்தான். உறையூரையாண்ட சோழரின் அறங்கூறு அவையும் இலக்கியப் புகழ் பெற்றது.

செல்வத்தாலும், செல்வாக்காலும், ஆணையுரிமை பெற்ற தாலும், வெற்றிச் செருக்காலும் மன்னர்கள் நெறிபிறழ நேரிடலாம். அவ்வேளைகளில் அவர்களுக்குச் செந்நெறிகாட்டிச் சீர்படுத்தும் திறனுடைய அறவோர் துணை வேண்டும். அவர்களுடைய அறமும் அன்பும் சான்ற அறிவுச்சூழலில் அரசு செம்மை பெறும் என்பதே அன்று கண்ட அரசு முறையாகும். அமைச்சர்களும், நண்பர்களும், பிற அறிஞர்களும் குறைகண்ட விடத்து இடித்துரைத்து மன்னரை நல்வழிப்படுத்திய செய்திகளைச் சங்கப்பாடல்களில் காணலாம்.

> ''இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
> கெடுப்பார் இலானும் கெடும்''[3]

என்றார் வள்ளுவர். நல்லோர் தொடர்பே வேந்தருக்குச் சிறந்த காவல் என்றும் அத்தகைய தொடர்பு இல்லாதவன் புறப்பகை யின்றியே அழிய நேரிடும் என்றும் கூறுவது, அரசர்க்குத் தம் நலத்தினும் தம் குடிமக்கள் நலமும் வாழ்வுமே பெரியது என்பதைத்தானே வலியுறுத்துகிறது!

மன்னனுடைய வெற்றிக்கான அடிப்படையுண்மையைப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனுக்கு மதுரை இளநாகனார் இனிது எடுத்துரைக்கின்றார். நால்வகைப் படையினைப் பெற்றவ னாயினும் ''அறநெறி முதற்றே அரசின் கொற்றம்,'' என்று கூறிய இளநாகனார்,

> ''அதனால், நமரெனக் கோல் கோடாது
> பிறர் எனக் குணங்கொள்ளாது
> ஞாயிறன்ன வெந்திற லாண்மையும்
> திங்களன்ன தண்பெருஞ் சாயலும்
> வானத்தன்ன வண்மையும் மூன்றும்
> உடையை யாகி யில்லோம் கையற
> நீடு வாழிய''[4]

என்று வாழ்த்துகிறார். அரசன் மக்களுடைய அன்றாட வாழ்வுக் கான அடிப்படைத் தேவைகளையும் பெற்றுத் தருவதுடன், அவர்களுடைய வளமான வாழ்வுக்கான மெல்லிய உணர்வு களையும், சிந்தனைத் திறனையும், செயல்களையும் மதித்து, எத்தகைய வேறுபாடுமின்றி அனைவரையும் ஒப்பவைத்து எண்ண வேண்டும். தம்மவர்க்கு ஒருபடித்தாகவும், பிறருக்கு

ஒருபடித்தாகவும் அறம் செய்வது எனும் ஒரு சாதாரண மனித இயல்பை வென்று இயற்கைப் பேராற்றல்களைப் போன்று அனைவரையும் ஒப்பவைத்து எண்ணுபவனே காவலனுக்குரிய கடமையைச் செய்தானாவான். இந்த மனத்தெளிவு, மன்னர்க்கு மட்டுமின்றி மக்களாட்சி நடைபெறும் நாடுகளுக்கும் பொது வாகும். உள்நாட்டில் நாளும் தோன்றும் பற்பல சிக்கல்களையும், பஞ்சம், பசி, பட்டினி, பிணி, உட்பகை முதலியவற்றையும், புறத்திலெழும் சிக்கல்களையும் திறனுடன் அழித்து ஒடுக்கி அறம் பேணுவதிலே வானத்து ஞாயிறு போன்ற ஒளியும், வெம்மையும், சமநோக்கும் உடையவனாக மன்னன் விளங்க வேண்டும். ஒளிக்குன்றாம் ஞாயிறு வெம்மை தருகின்றது எனினும் அதன் கதிர்பட்ட இடமெல்லாம் நல்லுயிர் தோன்றும்.

மனித அறிவால் எட்டிப்பிடிக்கவியலாத காலத் தொலைவிலே தோன்றி, எட்டா நெடுந்தொலை வானிலே தீராத இளமை காட்டி, உலகிற்கு உயிரும், உடலும், ஒளியும், அறிவுமாக நின்று விளங்கும் ஒளிஞாயிறுபோல, மக்களைக் காக்கும் காவலனும் அவர்களுக்கு உயிரும், உடலும், ஒளியும், அறிவுமாக நின்று காக்க வேண்டும். எங்கோ தலைநகரில் இருந்தாலும், அவனது ஆணை ஒளியானது, அவன் நாட்டுக் கடை கோடியிலிருக்கும் குடிமகனுக்கும் சென்று சேர வேண்டும்.

''நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே''[5] என்றதன் பொருள் யாது? சமுதாய அமைப்பின் செம்மையும், செழிப்பும், ஒழுக்கமும் உயர்வும் அங்கு வாழும் ஒவ்வொரு குடிமகனையும் உயர் ஒழுக்கமுடையவனாக உயர்த்த வேண்டும். அத்தகைய நலமிகு சமுதாயத்தை, ஒழுக்கமிகு சமுதாயத்தை, ஞாயிற்றின் தெளிவுமிகு சமுதாயத்தை அமைப்பதிலேதான் அவனது வெற்றி அமைந்து கிடக்கின்றது.

இன்னும் தமிழனுடைய அரசியல் சிந்தனை விரிகின்றது. ஓவியமும் சிற்பமும் ஒளிதரும் உயரடுக்கு மாளிகையில் அமைந்திருக்கும் அரசன் தலைமீது வெண்கொற்றக் குடை. ஏன்? வெயில் மறைக்க என்றால் வேடிக்கையன்றோ? பசியும், பகையும், வறுமையும், நோயும் வாட்ட வாடிவந்த தன் குடி மக்களுக்கு நிழல் தந்து வாட்டம் போக்கும் அவனுடைய கடமையுணர்வின் அழகுச் செம்மை நிலையைப் பறிக்கும் வெண்கொற்றக் குடை.

மாவேந்தர் பெறும் பெரும்போர் வெற்றியும், அந்நாட்டு உழவர்தம் கலப்பை ஆழ உழுது விளைவித்த நெல்லின் பயனே என்கிறார் வெள்ளைக்குடி நாகனார்.[6] சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பார்த்து, உழுதொழிலின் வெற்றியே போர்த் தொழிலின் வெற்றி என்றது, குடியின் வெற்றியில் தான் கோலின் வெற்றி அமைந்திருக்கிறது என்பதைத் தெளிவுறுத்துகிறது.

பகல் வெம்மை நீக்கித் தண்ணொளி பரப்பும் நீலவானத்து முழு நிலவுபோல, மக்களுடைய துயரைத் துடைப்பதிலே இனிமையும், எளிமையும், தண்மையும், அளியும் கொண்டு விளங்க வேண்டும். போர் செய்தும் ஆணைகாட்டியும், அரசிறை ஈட்டியும் அவன் பெற்ற பெரும் பொருளை ஈத்துவக்கும் இயல்பிலே வரம்பிலா வானத்துக்கு ஒப்பாக வாழ வேண்டும். மானுட உரிமைகளைப் பேணும் நல்லுணர்வே இப்படி யெல்லாம் ஆட்சிமுறை அமைய வேண்டும் என்ற சிந்தனையை வளர்த்தது.

குடியரசில், அரசு குற்றங்குறைகள் செய்ய நேரிடும்போது மக்கள் அதை எடுத்துக்காட்ட உரிமை பெற்றிருக்கிறார்கள். முடியரசிலும் வேந்தர் நெறி தவறி நடக்கும்போது அதனை எடுத்துக்காட்டி நெறிப்படுத்த அறிஞர்கள் முயன்றுள்ளனர் என்பதையும் சங்கப் பாடல்களின் வாயிலாகக் காணலாம்.

''மக்களிடமிருந்து அரசு இறை பெறுவதும், அரசுக்குரிய இறையை மக்கள் மனமுவந்து செலுத்துவதும் நாட்டு நலனுக்கும் உகந்தன. அரசிறை பெறுவதிலும், அதனைக் காத்தலிலும், வகுத்து நாட்டு நலனுக்காகப் பயன் படுத்துவதிலும் அரசுக்கு அறம் பிறழாத வல்லமை வேண்டும். முறையறிந்து தம்மைக் காக்கும் அரசின் திறனறிந்து மக்களும் இன்புறுவர்; நாடும் கோடி கோடியாகச் செல்வத்தைப் பெருக்கி நாளும் வளரும். ஆனால் தரமில்லாத கயவர் கூட்டத்துடன் சேர்ந்து, அறிவிழந்து மக்களுக்குத் தன்பாலிருக்கும் அன்பு கெடுமாறு பெரும் பொருளை விரும்பி அவர்களை வருத்திப் பெற்றானா யின், தனக்கும் மக்களுக்கும் பயனின்றி ''யானைபுக்க புலம் போல நாடு அழிந்து போகும்'' என்று பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடை நம்பிக்கு அறிவுறுத்தியுள்ளார்.[7] மக்களும் அரசும் தத்தம் கடமையினின்றும் பிறழாத நிலையில்தான் நாடு மேன்மையுறும். மக்களுடைய நல்லெண்ணத்தையும், அன்பை யும், ஆதரவையும் பெற்ற அரசுதான் வெற்றிபெற முடியும்.

முறையறியாது அரசு செய்வானாயின், நாளும் புறப் பகைக்கும் அகப் பகைக்கும் இடமாகித் துன்பச் சேற்றில் நாடு ஆழ்ந்துவிடும் என்று தனது கடமையை உணர்ந்து பேசுகிறான் தொண்டைமான் இளந்திரையன்.[8]

உயிரைக் காக்கும் நெல்லையும் நீரையும்விட அவற்றை இனிது பெற்றுத் தரும் தானே சமுதாயத்தை உயிராய் நின்று இயக்குகின்றான் என்பதை மன்னன் உணர வேண்டும் என்கிறார் மோசிகீரனார்.[9] மன்னன் உயிர் எனில் மக்கள் உடல். உடல் வளமே உயிரின் இயக்கம். ''உடலார் அழியின் உயிரார் அழிவர்[10].

நாடாயினும் சரி, காடாயினும் சரி, வளமிகு பள்ளத் தாக்காயினும் சரி, வளமற்ற மேட்டு நிலமாயினும் சரி, எங்கே இளமையும், நற்பண்பும், ஊக்கமும், மிக்க ஆடவர் உள்ளனரோ அங்கே ஒரு நிலம் நலமுடையதாகின்றது என்கிறார் ஔவையார்[11] மன்னனும் மக்களும் செம்மையுடையோராக இருத்தலே ஒருநாட்டிற்குப் பெருமை என்பதை இக்கருத்துத் தெளிவாக்கு கிறது.

உலகையாளும் வேந்தனுக்கும், இரவும்பகலும் ஓயாது விலங்குகளை வேட்டையாடித் திரியும் கல்லாத ஒருவனுக்கும் உணவும் உடையும் ஏனைய உணர்வுகளும் ஒக்கும். மனிதனுக்குரிய அடிப்படை உணர்வுகளிலும் தேவைகளிலும் எவ்வித வேறுபாடுமில்லை, எல்லோரும் மனிதரே என்ற எண்ணம்தான் மனிதனை மனிதன் மதித்து வாழ்வதற்குரிய அடிப்படையுணர்வாகும். இந்த உண்மையை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடுகின்றார்.

பிறர் உழைப்பையும் உழைப்பின் பயனையும் நேர் முகமாகவோ மறைமுகமாகவோ சிறுகச் சிறுகப் பறித்துண்ணும் இயல்பும், அதற்கேற்ற தன்னலமும், சூழ்ச்சியும், குறுகிய உள்ளமும் நிறைந்த கயவரை எலிக்கு ஒப்பிட்டு, வீணில் உண்டு களித்திருப்போரை நித்தனைசெய்யும் சோழன் நல்லுருத்திரன், உழைப்பும், ஊக்கமும் மானவுணர்வும் மிக்க புலிபோன்றோர் நட்பினை நாடுவதையும், அவனது பாடலில் காணும்[12] போது மானுட உரிமைக்கே ஓர் அறைகூவலாகிய சுரண்டலை வெறுக்கும் நல்லுணர்வுதானே புலப்படுகிறது! சுரண்டலற்ற சமுதாயத்தில் தான் மானுட உரிமைகள் நன்கு பேணப்படுகின்றன என அரசியலறிஞர்கள் கூறுகின்றனர்.

போர்க்காலத்தில் ஒற்றன் என ஐயுற்று, உறையூருட் புகுந்த இளந்தத்தன் என்ற புலவனைச் சோழன் நலங்கிள்ளியினிடமிருந்து விடுவிக்கவும், பெரும்பகை கொண்டு மலையமான் திருமுடிக்காரியோடு போரிட்டு வென்ற பின்னும் சினந்தணியாது, பால்மணம் மாறா அவன்றன் பச்சிளங் குழந்தைகளை யானைக்காலில் இட்டுக் கொல்லமுயன்ற சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனிடமிருந்து விடுவிக்கவும் கோவூர்கிழார் முயன்றதும், மனிதர் நோக மனிதர் பார்க்கும் வழக்கத்தைக் கடிந்த நல்லெண்ணத்தின் உந்துதல் தானே?[13]

அறிவுடையோன் வழி அரசு செல்லும் ஆதலால் எப்பாடுபட்டும் கற்றல் நன்று என்றான் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்.[14]

இவ்வாறு போரும் பகையும் மிகுந்துகிடந்த சங்க காலத்தில் மூவேந்தராட்சியில் - குடியரசுப் பண்புகள் பல போற்றப் பட்டன என்பதற்கு இன்னும் சான்றுகள் பல உள்ளன. மானுட உரிமைகள் பேணப் பெறவேண்டும் என்ற நல்லுணர்வே அரசராயினும் அஞ்சாது அவர்களைத் தெருட்டும் துணிவினைப் புலவோர்க் களித்தது.

மக்கள் தொகையும், வேலையில்லாத் திண்டாட்டமும், போரச்சமும் பெருகி வரும் இற்றைநாளில் ஆள்வோருக்கும், ஆளப்படுவோருக்கும், முதலாளிக்கும், தொழிலாளிக்கும், ஆசிரியருக்கும், மாணவருக்கும் இடையே நம்பிக்கையின்மையும் அச்சமும் தோன்றி உலக நலனையே ஆட்டி வைத்துக் கொண்டிருக்கக் கண்டு, மனித நல உரிமைகளைப் பேணும் உணர்வினை வளர்க்க ஐக்கிய நாடுகளின் சபை (U.N.O) மனித உரிமை நாள் '(Human Rights Day) கொண்டாடுகிறது. இந்த நிலையில் பழம்பெரும் நாகரிகம் படைத்தவர் என்று பெருமை கொள்ளும் நாம், அன்று மனிதனை மனிதன் மதித்து அவனுடைய உரிமைகளைப் பேண நாட்டம் கொண்டிருந்தோமா என்பதையும் சற்றே எண்ணிப்பார்ப்பது நல்லது தானே?

குறிப்புகள்

1. புறம் - 71,72,73.
2. புறம் - 71-79.
3. குறள் - 448.
4. புறம் - 55-11-17.

5. புறம் - 312.

6. புறம் - 35.

7. புறம் - 184

8. புறம் - 185

9. புறம் - 186

10. திருமந்திரம் - காயசித்தி உபாயம் - 724.

11. புறம் - 187.

12. புறம் - 190.

13. புறம் - 47,46.

14. புறம் - 183.

வை. இரத்தினசபாபதி
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்

# எழுத்துகளின் மாத்திரை

எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுப் பானாகும் - மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.

என்ற பாட்டு இலக்கணம் எத்தனை ஆற்றல் உடையது என்பதை எடுத்து இயம்புகிறது. இக்கருத்து மெல்ல மறைந்து இலக்கணம் என்ற எல்லையைக் கடந்து நிற்பதுகூட, ஒரு வகையில் புலமையின் வீறு என்று கணிக்கப் பெறும் நிலைமை மெல்லத் தலையெடுத்து வருவதை நாம் உணர முடிகிறது.

இலக்கணம் என்பது ஒரு தேவையற்ற வரையறை என்பதாக ஒரு பொதுக் கருத்து நிலவி வருவதாற்போலும் இலக்கண விளக்கங்களை அடிப்படையாகக் கொண்ட சிந்தனைகளும் செயற்பாடுகளும் வளர்ந்து வரக் காணேம். இதற்கு மூலமான காரணம் ஒன்று உண்டு. இலக்கணக் குறியீட்டுச் சொற்களும் (உயிர், மெய், வல்லினம் முதலியன), இலக்கண வரையறை களும் (உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே) போன்றவை கள் வாழ்வியற் குறியீட்டுச் சொற்களும் வாழ்வியல் வரையறை களுமே என்ற கருத்து உணரப் பெறவோ உணர்த்தப் பெறவோ இல்லாமற் போயிற்று. எள்ளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயைப் போல இலக்கியத்தினின்றும் எடுபடும் இலக்கணம் என்ற பொருளுரை தேறாப் பொய்யுரையாயிற்று. 'எழுத்தும் சொல்லும் வல்லாரைக் கண்டோம் பொருளிலக்கணம் வல்லாரைக் காணேம்' என்ற செய்தியைச் செவிமடுத்த பாண்டியன் 'எழுத்தும் சொல்லும் அறிதல் பொருளை அறிதற் கன்றோ?' என்ற கவன்ற நிலை - வரலாறு உண்மையாவதாக இருந்தால் - நக்கீரர் காலத்தேயே தோன்றிவிட்டது எனலாம்.

இலக்கணத்தின் நிலை படிப்படியாகத் தாழ்ந்து வருகிறது. இலக்கணம் என்பது வாழ்வியற் கட்டுக்கோப்பு என்று உணர்ந்த காலம் இலக்கணத்துக்கும் வாழ்வுக்கும் அமைந்த பொற்காலம். வாழ்வு வேறு, இலக்கணம் வேறு என உணரப்பெற்று இலக்கணம் வெறும் மொழியொடு தொடர்புடைய ஒன்றே எனப் பிரித்து அறியப்பெற்ற நிலை தோன்றிய போது இலக்கணம் ஒருபடி இறங்கியது. எழுத்தும் சொல்லும் ஆகிய இரண்டற்குரிய இலக்கணங்கள் வேறு, பொருளிலக்கணம் வேறு எனப் பிரிந்த நிலை இலக்கணம் இறங்கிய இரண்டாம் படி. இவ் விலக்கணம் பல படிநிலைகளில் இறங்கி இப்போது இலக்கண நூற்பாக்கள் எத்தகைய வரைமுறையை உணர்த்துகின்றன என்பவற்றைக் கூட உணரப்பெறாத நிலைமை இருக்கிறது.

ஒரு எடுத்துக் காட்டைக் கொண்டு இந்நிலைமையை உணரலாம். எழுத்தின் இலக்கணம் பன்னிரண்டு. அவற்றுள் ஆறாவது மாத்திரை. (அளவு). எழுத்துக்களை உச்சரிக்கும் முறை. இதனை மூன்று வகையாகக் கொள்ளலாம். (1) எழுத்துக்களை அவைகளுக்கு உரிய மாத்திரை அளவிலிருந்து உச்சரித்தல். (2) சில எழுத்துக்களைக் குறைந்த அளவில் உச்சரித்தல். (3) சில எழுத்துக்களை நீட்டி உச்சரித்தல். எழுத்துக்ளை முறையான மாத்திரை அளவில் உச்சரித்தல் பொது இலக்கணம். சில எழுத்துக்களின் மாத்திரைகளைக் குறைத்து உச்சரிக்கும்போது 'குறுக்கம்' என்ற இலக்கணம் பிறக்கிறது. சில எழுத்துக்களை நீட்டி உச்சரிக்கும் போது 'நெடுக்கம்' அல்லது 'அளபெடை' (அளபு-மாத்திரையை; எடை - எடுத்து, அதிகப்படுத்திக் கூறுதல்) என்ற இலக்கணம் பிறக்கிறது.

இனி, எழுத்துக்களின் மாத்திரையைக் குறைத்து உச்சரிக்கக் காரணம் யாது? மக்களின் முயற்சிக் குறைவு என்பது ஒரு காரணம், நாளுக்கு நாள் மொழியாற்றலையும் பேச்சாற்றலையும் வளர்த்துக் கொண்டு செல்லும் மக்களின் குற்றியலிகரத்தையும் முற்றிய நிலையில் உச்சரிக்க முடியாமற் போனது வியப்பிலும் வியப்பே. குற்றியலுகரத்துக்கு உரிய ஒரு எடுத்துக்காட்டை ஒருவரிடம் கொடுத்து உச்சரிக்கச் சொன்னால், அவர் இயற்கை யாக உச்சரிக்கும்போது முற்றியலுகர மாத்திரை கொடுத்தே உச்சரிப்பார். இனி ஐ, ஔ என்ற இரண்டு எழுத்துக்களுள் எங்கேயாவது இரண்டு மாத்திரையில் உச்சரிக்கப்படுமா? என்றால் தன்னைச் சுட்டும்போதும் அளபெடுக்கும் போதும்தான் இவ்விலக்கணங்கள் இன்று எத்தகைய கண்கொண்டு

காணப்பெறுகின்றன; உணரப் பெறுகின்றன; உணர்த்தப் பெறுகின்றன.

மொழியின் வளர்ச்சியானது பேச்சு வழக்கைத்தான் மிகுதியும் சார்ந்துள்ளது. பேசும்போது எழுகின்ற மொழி யாற்றலை, எழுதும் போது அப்படியே அமைத்துக் காட்ட இயலாது. பொருளும் ஒலி வடிவமும் வரி வடிவமும் இணைய வேண்டும் என்பதை உணர்த்த எழுந்த இலக்கணமே 'மாத்திரை'. இரண்டு ஒலி வடிவங்கள்; இரு வேறுபட்ட பொருள்கள்; சொல். ஒன்று அதாவது வரிவடிவம் ஒன்று. இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் செய்யும்போது இருவேறு பொருள்களை உணர்த்தும் இரு வேறு ஒலி வடிவங்களை அவர்கள் ஒரே வரிவடிவத்தில்தான் அமைக்க வேண்டும். ஆனால் உச்சரிப்பு முறையில் சிறிது வேறுபட உச்சரித்து, இருவேறு வகைப்பட்ட பொருளை உணர்த்திய பேச்சு முறையை எழுத்து முறைக்குக் கொண்டு வரும்போது சொல்லை ஒன்றாக வரிவடிவத்தை ஒன்றாக அமைத்து உச்சரிப்பு வேறுபாடுகளை வேறு அடையாளமிட்டுக் காட்ட வேண்டியதாயிற்று. பொருள் வேறுபாடு உண்டு என்பதை உச்சரிப்பினால் தெளிவுபடுத்திக் கொள்ளுக என அடையாளம் இட்டனர். குற்றியலிகரம், குற்றியலுகரம் இவ்வாறு அடையாள மிட்டு எழுதப் பெற்றன. சொல் ஒன்று, முழுமையான மாத்திரையில் ஒலித்தால் வேறு பொருள்; குறைத்து ஒலித்தால் வேறு பொருள். எடுத்துக்காட்டு; 'காது' என்பது ஒரு சொல். இவ்வரிவடிவத்துக்கு இரண்டு வேறுபட்ட ஒலிகள்; ஒலி வேறுபாடுகளுக்கேற்பப் பொருள் வேறுபாடும் உண்டு. 'காது' என்ற சொல்லை முழு உச்சரிப்பில் இதழ் குவித்து உச்சரித்தால் 'சொல்' என்ற வினைச்சொல். அதையே குறைத்து உச்சரித்தால் 'காது' என்னும் உறுப்பு; பெயர்ச்சொல்.

ஆங்கில மொழியில் இம்மாதிரியான ஒரு இலக்கணத்தைக் காட்டலாம். 'Advice' என்ற சொல் பெயர்ச் சொல்லாகவும் வரும்; வினைச் சொல்லாகவும் வரும். இரண்டு வேறுபட்ட ஒலிகள்; இரண்டு வேறுபட்ட பொருள்கள், வரிவடிவம் ஒன்றே. ஆனால் எழுத்தில் ஒரு மாற்றம் செய்து இவ்வொலி வேறுபாட்டையும் பொருள் வேறுபாட்டையும் உணர்த்துகிறார்கள். This is my advice என்ற வாக்கியத்தில் பெயர்ச் சொல்லாக வரும்போது 'C' என்ற வரிவடிவத்தையும் "He advised him' என்ற வாக்கியத்தில் வினைச் சொல்லாக வரும்போது 'S' என்ற வரிவடிவத்தையும் அமைக்கி றார்கள். இவ்விலக்கணம் கட்டாயப்படுத்தப்படுகிறது. தவறாக

எழுதினால் பிழையே. எப்படி உச்சரிக்க வேண்டும்? என்பதையே அவர்கள் கற்றுக் கொடுக்கிறார்கள்.

இத்தகைய வேறுபாட்டு முறையைத் தொல்காப்பியர் எழுத்ததிகார முதற் சூத்திரத்திலேயே அமைத்து,

'எழுத்தெனப்படுப
அகர முதல்
னகர இறுவாய் முப்பஃதென்ப
சார்ந்து வரல் மரபின் மூன்றலங்கடையே'

என்று நூற்பா யாத்தார். அடுத்த நூற்பாவுக்கு உரை எழுதப்புகுந்த நச்சினார்க்கினியர் 'இவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும் பொருள் வேற்றுமையும் பற்றி வேறோர் எழுத்தாக வேண்டினார்' எனத் தெளிவுறுத்தி எழுதியும் இவ்வரையறை இன்று உணரப்பெறாத வெற்றுவரிகளாக ஆகிவிட்டன.

எழுத்தின் மாத்திரையைக் குறைத்தும் நிறைத்தும் சொல்லும் இலக்கணங்கள் இவ்வாறாக, நீட்டிச் சொல்லும் இலக்கணம் எனப்பெறும் 'அளபெடை' எத்தகைய இழிநிலையில் உள்ளது என்பதை நினைக்கவும் முடியவில்லை.

அளபெடை ஏன் வருகிறது? செய்யுளில் ஓசை குறைந்தால். செய்யுளில் ஓசை ஏன் குறைய வேண்டும்? சரியான ஓசையுடைய சொற்களை அமைப்பதில்லை. சரியான ஓசையுடைய சொற்களை அமைக்கத் தெரியாதவன் புலவன் ஆகான். உடம்பின் வாளிப்புக்கேற்பவே சட்டை தைக்க வேண்டிய ஒருவன் குறைந்த அளவுடையதாகத் தைத்து விட்டு, கேட்டால், கொஞ்சம் இழுத்துவிட்டுக் கொள், சரியாகப் போய்விடும் என்பதை ஒத்துக்கொண்டு தைத்தவனை மிகத் திறமையான தையல்காரன் என்று சொல்லுவாரை யாம் காணோம். இந்த அடிப்படையில் மேலும் ஒன்று கூறலாம். சங்க இலக்கியங்களை யாத்த கவிஞர்களைவிட இக்காலக் கவிஞர்கள் சிறந்தவர்கள். ஏனெனில் ஓசை குறைந்த சொற்களைக் கையாண்டு பின் நீட்டி உச்சரித்துக் கொள் என்று கூறிய அளபெடைகளை மிகுந்த அளவில் கையாளுகிற சங்க இலக்கியப் புலவர்களைவிட, இக்காலக் கவிகளில் அளபெடைகளே வருவன இல்லையாகை யால் இக்காலக் கவிகளே உயர்ந்தவர்கள்.

செய்யுட்களில் தளை சிதையும் போது 'அளபெடை' வரும் எனில் முற்கால உரைநடைகளில் அளபெடை வருகின்றனவே அவைகள் எத்தகைய தளை அமைப்பைச் சரிசெய்ய வந்தன.

'ஆஅய் அண்டிரன்' என்பான் பெயரில் உள்ள 'ஆஅய்' இயற்கை அளபெடை என்று கூறப்படுகிறதே அது ஏன்? செய்யுட்களில் ஓசை குறைந்ததால் அளபெடை வரும் எனில் தளை சிதையா வழியும் வரும் இன்னிசையளபெடை ஏன் தோன்றியது.

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை'

இக்குறட்பாவில் இவ்வளபெடை இல்லையானால் தளை சிதையுமா?

தொல்காப்பியரும் நன்னூலாரும் மிக அழகாக இவ்வளபெடை இலக்கணத்தை அமைத்துள்ளார்கள்.

'குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத்து இம்பர் ஒத்த குற்றெழுத்தே'

என்றார் தொல்காப்பியர், பவனந்தியார்.

'இசை கெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில்
அளபு எழும்'

என்று கூறினார். இவ்விருவரும் செய்யுளில் ஓசை குறைந்தால் என்றோ தளை சிதைந்தால் என்றோ குறிப்பிடவில்லை. மொழியில் இசைகெடுதல் என்பதன் பொருள் என்ன? ஒலி வடிவத்திற்கும் பொருளுக்கும் இயைபு உண்டு. எழுத்து வடிவத்தில் வரும் ஒலியானது பொருளைக் குறிப்பதற்காக அமைந்த ஒலியோடு இசைதல் வேண்டும்.

பேராசிரியர் கோ. சுப்பிரமணியப்பிள்ளை ஒரு கதை கூறுவர். பிரபலமான வக்கீல் ஒருவர் சைவசமயத்திலிருந்து கிறித்தவ மதத்துக்கு மாறிவிட்டார். வேண்டியவர்கள் எல்லாரும் ஏன் மாறினீர்கள்? என்று கேட்டுக் கேட்டுத் தொல்லை கொடுத்தார்கள். அவர் நேரம் வீணாவதைத் தடுக்க ''நான் ஏன் கிறித்தவனாக மாறினேன்'' என்று ஒரு கட்டுரை எழுதி அச்சுப்போட்டு வருபவர்களின் பார்வைக்கு வைத்துவிட்டார். அதை எடுத்து ஒருவர் நான் ஏன் கிறித்தவனாக மாறினேன் (ஐயோ தவறிவிட்டேனே) என்ற குறிப்புப்பட இசை செய்து படித்தார். இங்கே வரிவடிவம் ஒன்று; இவ்வரிவடிவத்தின் இசை ஆசிரியர் கருதிய பொருளோடு இசையவில்லை. இங்கே வரிவடிவத்துக்கு இயற்கையாக அமையும் ஓசை பொருளை உணர்த்துவதற்குத் தேவையான ஒளி அளவோடு இயையவில்லை. இவ்விடங்களில் வரிவடிவத்தை மாற்றிப் பயனில்லை; வடிவம் ஒலியைச் சற்று

வேறுபடுத்திக் காட்ட வேண்டும் அவ்வளவே. எடுத்தல், படுத்தல் முதலிய ஓசை விகற்பங்கள் தோன்றியதன் கருத்து இதுவே.

இக்கால உரையாடல்களில் நாம் பல சமயங்களில் அளபெடை பேசுகிறோம். நாடக, சினிமா உரையாடல்களில் சில சொற்களின் ஓசையை நீட்டுவதற்கு அச்சொல்லின் வரிவடித்தை எழுதி, சிலபுள்ளிகளை வைத்து வருகிறோம். நீட்டி உச்சரித்தால் தான் நாம் பொருட்சுவையை உணரமுடியும்.

குறிஞ்சிக்கலி முதற்செய்யுளில் தலைவி தோழியைப் பார்த்துக் கூறுகிறாள், தொடக்கமே அளபெடைதான். 'சுடர்த்தொடீஇ கேளாய்' உன் மகிழ்ச்சிக்குக் காரணம் என்ன என்று கேட்ட தோழியை இவ்வாறு அளபெடையால் கூப்பிடு கிறாள். அணி உடம்பில் இருக்கிறது. உள்ளத்தில் தோன்றும் விருப்பு வெறுப்புக்களை அவ்வணி தெரிந்து கொள்வதில்லை. என் தோழியாகிய நீ என்னுடைய உறுப்பாக இருக்க வேண்டிய வள். ஆனால் நீயோ அணியைப் போல இருந்து என் மன நிலையைத் தெரியாதவளானால் என்ற உட்கிடையைச் 'சுடர்த்தொடீஇ' என்ற அளபெடையாற் கூறினார். வரி வடிவத் தைப் படிக்கும்போது இசையை நீட்டிப்படித்து அதனோடு இசையும் பொருளை அறிந்து சுவைப்பதற்காக அமைந்த அளபெடை இக்காலத்தே செய்யுளில் ஓசை குறைந் தால், தளை சிதைந்தால் அளபெடை வரும் என்று யாப்பிலக்கண விதியாக அமைந்துவிட்டதேயன்றி, இது ஒரு உள்ளார்ந்த குறிப்புப் பொருளோடு நம்மை இசைவிக்கும் ஒரு அடையாளம் என்று உணரும் நிலை இல்லாமலே போய்விட்டது, இவ்வாறே முற்கால இலக்கியங்களிற் காணப்பெறும் அளபெடைகளுக் கெல்லாம் உள்ளார்த்த நயப்பொருளை அவ்வளபெடையை இசைத்து இரண்டொருமுறை படித்தாலே நாம் பெற்றுவிடலாம்.

யாப்பிலக்கண அமைப்பை வைத்து விளக்கம் கூறி விட்டதால் அளபெடை எத்தகைய கருத்தை உணர்த்த எழுந்ததோ அக்கருத்தை அது அடியோடு இழந்துவிட்டது.

மேலே குறிப்பிடப்பெற்றவைகளால் எழுத்துக்கள் மாத்திரை குறைந்து உச்சரிக்கப் பெறுதலும், நீட்டி உச்சரிக்கப் பெறுதலும் பொருள் வேறுபாட்டை உணர்த்தவே. இவற்றை இளைஞர் உலகத்திற்கு இவ்விலக்கணங்களை இவ்வாறு உணர்த்தினார் யார்? உணராத காலத்து உணர்த்தப் புகுவது வேறான ஒன்றா? மாறான ஒன்றா? அன்றி வீணான ஒன்றா? அறிஞருலகம் சிந்திப்பதாகுக.

மா. இளையபெருமாள்
கேரளப் பல்கலைக்கழகம்
திருவனந்தபுரம்

# சங்க நூல்களில் இயரீற்றுச் சொற்கள்

பகுபத உறுப்புகளாகப் பிரிக்கப்பட்டுக் குறிப்பிட்ட இடை நிலையாலோ விகுதியாலோ காலம், இடம், பால் ஆகியன வற்றைத் திட்டவட்டமாகக் காட்டாது, சொற்றொடர் நிலையி லமையும் எழுவாய்க்கேற்பப் பாலிடங்களையும், சூழ்நிலைக் கேற்பக் காலத்தையும் உணர்த்தும் வினைச்சொற்களுள் ஒன்றாக இயரீற்றுச் சொல் காணப்படுகின்றது என்பது சங்க இலக்கியச் சான்றுகளிலிருந்து அறியப்படும் உண்மையாகும்.

சங்க இலக்கியத்தில் காணப்படும் 131 இயரீற்றுச் சொற்களில் வினையெச்ச அமைப்பில் வருவன 44. அவற்றில் பெரும்பான்மையும் செயற்கு அல்லது செய்தற்பொருட்டு என்னும் பொருள் உள்ளன. ஐங்குறுநூறு 215, நற்றிணை 89, 151 ஆகிய பாடல்களில் காணப்படும் செலீஇயர், செறீஇயர் ஆகிய சொற்களுக்கு முறையே சென்று, செறிவுற்று எனச் செய்தெ னெச்சப் பொருள் கொள்ளப்படுகின்றது. நற்றிணையில் படீஇயர் என்ற சொல் (82) பட்டதாக எனவும், உறீஇயர் என்ற சொல் (56) உறுதலின் எனவும் பொருளுரைக்கப்படுகின்றன. அலைஇயர் (அகம் 151), களைஇயர் (நற்.137), பெறீஇயர் (நற். 360) போன்ற சில சொற்கள் முறையே அலைக்கும்படி, போக்குமாறு, பெறும்வண்ணம் என்று பொருள் கூறப்படுகின்றன. இவை யெல்லாம் சிறுபான்மையாகையால்

''வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய''

என்பதில் அடங்கும்.

வியங்கோள் வினைமுற்றுக்களாக இயரீற்றுச் சொற்கள் 78 இடங்களில் காணப்படுகின்றன. அவை

ஆண்பால் வினை - 9

பெண்பால் வினை - 5

பலர்பால் வினை - 3

ஒன்றன் பால் வினை - 29

பலவின்பால்வினை - 4

முன்னிலையொருமை - 23

முன்னிலைப்பன்மை - 3

தன்மையொருமை - 2

என்ற நிலையில் அமைந்திருக்கின்றன. 78 சான்றுகளில் மூன்றில் ஒரு பகுதி தன்மை முன்னிலைவினைகளாக அமைகின்றன. இந்நிலையில் இவை

''அவற்றுள்
முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்
மன்னா தாகும் லியங்கோட் கிளவி''

என்ற தொல்காப்பிய நூற்பாவில் காணப்படும் ''அவ்விடத்தொடு சிறுபான்மை வருதல் கொள்க'' என்ற உரையாசிரியர்கள் கருத்திற்கும் அமையாது,

''கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பா லெங்கு மென்ப''

என்ற பிற்கால இலக்கணத்திற்குப் பொருத்தமாக விளங்குகின்றன.

இன்மை செப்பும் ''இல்'' என்னும் குறிப்புவினைப் பகுதியும் இவ்வீற்று வியங்கோட் சொல்லின் அடியாக அமைகின்றது என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். எடுத்துக்காட்டாக,

''பற்றல் இலியரோ'' (புறம் 6)

வயிறு மாசு இலீயர் அவன் ஈன்ற தாயே (பதி. 20)

ஆகியவை அமைகின்றன. ஆனால் ஆகிலியர் (புறம் 29), காணிலியர் (பதி. 44), மாறிலியர் (புறம். 388) ஆகியவற்றில் இல் எதிர்மறை காட்டும் இடைநிலையாகக் காணப்படுகின்றன. அறாஅலியர் (அகம் 40), இறாஅலியர் (பதி 40), தவா அலியர் (அகம் 338) ஆகியவற்றில் ஆஅல் என்பதும், சென்றாலியர் (பதி 55) என்பதில் ஆல் என்பதும் எதிர்மறை இடைநிலைகளாக அமைகின்றன.

''உணீஇயர் வேண்டும்'' (குறு. 27), கொடீஇயர் வேண்டும் (குறு 51) செலீஇயர் வேண்டும் (நற். 390, அகம் 326) ஆகிய நான்கு சான்றுகளிலுள்ள இயரீற்றுச் சொற்கள் முறையே உண்ணல், கொடுத்தல், செல்லல் என்ற தொழிற் பெயர்களாகப் பொருள்படுகின்றன.

எஞ்சியுள்ள ஐந்து இயரீற்றுச் சொற்கள் சிறப்பாகக் குறிப்பிடற்கு உரியன. திருமுருகாற்றுப்படையில் (168) பெறீஇயர் என்பதை வினையாலணையும் பெயராகக் கொண்டு நச்சினார்க்கினியர் பொருள் கொள்வது அவ்வாற்றுப்படையின் கால ஆராய்ச்சியில் இடம் பெறுகின்றது. ஆனால் இவ்வமைப்பி லுள்ள சொற்கள் வினைமுற்றாகப் பயன்படுத்தப்படுவதைப் புறநானூற்றிலும் குறுந்தொகையிலும் காண்கிறோம்.

''யாண்டு பலவாக நரையில வாகுதல்
யாங்கா கியரென''

என்ற புறநானூற்றில் ஆகியர் என்பதற்கு ஆயினீர் என்று பழைய உரையாசிரியர் பொருள் உரைக்கின்றார். இவ்வாறே குறுந் தொகையில், ''கண் இனிது படீஇயர்'' என்ற சொற்றொடர்க்கு (395) இனிமையாகக் கண்படுகின்றனர் என்று நிகழ் காலத்திலும், ''யாராகியரோ'' (குறு 40, 110) என்பதற்கு ஆவர் என்றும் பொருள் உரைக்கப்படுகின்றது.

இவற்றை யெல்லாம் ஒருங்கு எண்ணும்போது இயரீற்றுச் சொல் தனிநிலையில் காலத்தையோ இடம் பால்களையோ உணர்த்தாது, சொற்றொடர் நிலையில், சூழ்நிலைக்கேற்பப் பொருளமைந்து, வினையெச்சம், வியங்கோள்வினை, பலர்பால் வினைமுற்று, வினையாலணையும்பெயர், தொழிற்பெயர் என்ற வெவ்வேறு இலக்கண நிலைகளைப் பெறுகின்றது என்பது விளங்கும்.

எடுத்துக்காட்டு

*வியங்கோள்*

1. தந்தை வாழியர் (நற். 8)
2. மகள் காணியர் (பதி 44)
3. நங்கிளை உணீஇயர் (பதி 49)
4. செலியர் நின் வெகுளி (புறம் 6)
5. படீஇயர் என் கண்ணே (அகம் 142)

6. யான் ஆகியர் (குறு 49)

7. வாழியர் நீயே (அகம் 59)

8. எற்பட வருதியர் (குறிஞ்சிப்பாட்டு 39)

**வினையெச்சம்**

1. தன் வயிறு அலைஇயர் சென்மோ (அகம் 106)
2. தன் கடன் இறீஇய போகிய காதலர் (குறு 255)
3. மகளிர் தழை உடீஇயர் மரம் மிதித்த மாஅல் (அகம் 59)
4. பிணன் உணீஇயர் எருவை இழிய (பதி 36)
5. நும்முன் நல்வினை உணீஇயர் பெயர்ந்தனன் (புறம் 174)
6. சின்னீர் உணீஇயர் கையள் வருக (குறு 56)
7. பிடி உணீஇயர் களிறு யாஅம் ஒற்றி (அகம் 59)

**தொழிற்பெயர்**

1. பசலை உணீஇயர் வேண்டும் (குறு 27)
2. எந்தையும் கொடீஇயர் வேண்டும் (குறு 51)
3. விழவிற் செலீயர் வேண்டும் (நற். 390)

**பலர்பால் வினைமுற்று**

1. களையாராயினும் கண்ணினிது படீஇயர் (குறு 395)
2. யாயும் ஞாயும் யாராகியரோ (குறு40)

**வினையாலணையும் பெயர்**

1. ஒன்பதிற்றிரட்டி உயர் நிலை பெறீஇயர் (திருமுருகாற்றுப் படை 168)

கை. சி. இராசமாணிக்கம்
நிர்மலா மகளிர் கல்லூரி
கோயம்புத்தூர்

# இரட்டைக் காப்பியங்கள் - ஓர் ஒப்பு நோக்கு

தமிழிலக்கியத்தில் சேர முனிவன் இளங்கோவடிகளியற்றிய சிலப்பதிகாரமும், மதுரைக் கூலவாணிகன் சாத்தினியற்றிய மணிமேகலையும் இரட்டைக் காப்பியங்கள் எனப்படுகின்றன. இவையிரண்டும் ஐம்பெருங்காப்பியத்துளிடம் பெறுகின்றன. சிலப்பதிகாரம் முதற்காப்பியம் எனப்படும் சிறப்பினைப் பெற்றதெனின், மணிமேகலை முதற் சமய காப்பியம் எனும் பெயர்பெறும் தகுதியுடையது. இவையிரண்டும் சங்கமருவிய காலத் தெழுந்தவையென்றும் அது கி.பி. 2-ஆம் நூற்றாண்டளவு என்றும் கூறப்படுகிறது. மேலும் சிலப்பதிகாரப் பதிகம்.

''உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்
உரை சாலடிகள் அருள மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்'' சிலப். பதிகம் 87-89.

எனவும், மணிமேகலைப் பதிகம்

இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
மாவண் தமிழ்த்திற மணிமே கலைதுறவு
ஆறைம் பாட்டினுற் அறிய வைத்தனென்''

மணி. பதிகம்-95- 98

எனவும் கூறுகிறது. இக்கூற்று, எவ்வளவிற்குப் பொருந்தும் எனக் காண்போம்.

நூல்களுக்குப் பதிகம்பாடும் மரபு பிற்காலத்து எழுந்த தொன்று. தொல்காப்பியர் நவிலாத ஒன்று. செய்யுள் களனைத்திற்கும் வாழ்த்தியல் வகைகளான புறநிலை வாயுறை, செவியறிவுறூஉ, அவையடக்கியல் எனும் நான்களுள் ஒன்றே வேண்டப்படுவதெனத் தொல்காப்பியம் கூறுகிறது. எனவே

சிலப்பதிகாரப் பதிகம் பிற்காலத்தெவரோ ஒருவரால் இயற்றிச் சேர்க்கப்பட்ட தென்பதை அறிஞர் பலரும் ஒப்புக்கொள் கின்றனர். சோமசுந்தர பாரதியார் அவர்களும் ''மணிமேகலை சிலப்பதிகாரம் எனும் காவியப் பதிகங்களிரண்டும், மிகப் பிற்காலத்தில் ஒருவரே செய்து சேர்த்தனரெனும் உண்மை சிறிது சிந்திப்பார்க்கும் எளிதில் தேற்றமாகும்'' எனக் கூறியுள்ளார்.

இளங்கோ, சாத்தனார் ஆகிய இருவருமே பெரும் புரட்சிக் காரர்களாகத் தோன்றுகின்றனர். இளங்கோ வணிகர் குலமகளாகிய கண்ணகியைப் பேராற்றல் வாய்ந்தவளாகக் காட்டி, பத்தினிக் கடவுளாக வழிபடும் நிலையளவிற்குயர்த்தித் தன் காவியத் தலைவியாக அமைத்துள்ளார். சாத்தனாரோ சமூகத்தில் ஒதுக்கப் பட்டு, இழிந்தோராகக் கருதப்பட்ட கணிகையர் குலத்துப் பிறந்த மணிமேகலையைக் காவியத் தலைவியாக அமைத்து இளங்கோ வடிகளையும் ஒருபடி மிஞ்சிவிட்டார். பெண்ணுக்குத் தலைமை தரும் வகையில் இரு காப்பியங்களும் ஒத்துள்ளன. இதனை வ. சுப. மாணிக்கம் அவர்கள் ''இல்லறக் குடியிலே பிறந்த வணிகப்பெண் நாடறிய ஆற்றல் காட்டிச் சிலப்பதி காரத்தின் தலைவியாகின்றாள். இது ஓர் இலக்கியப் புரட்சி, பரத்தைத் தொழிலில் கன்றிய சித்திரா பதியின்பேத்தி மணி மேகலை காப்பியத்தின் தலைவி யாகின்றாள். இது முன்னையினும் பெரும் புரட்சியன்றோ'' எனக் கூறியுள்ளார்.

மாதவியுடனுறைந்த கோவலன் அவனின்றெடுத்த மகவுக்குக் கடல் கோட்பட்ட தன் முன்னோன் ஒருவனை அருளிக் காத்த மணிமேகலா தெய்வத்தின் பெயரையிடுதல் வேண்டு மென்றவன் கூறியதாக மாடலமறையவன் காவுந்தியிடம் அடைக்கலக் காதையில் கூறுகிறான்.

''துன்பம் நீங்கித் துயர்க்கட லொழிகென
விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்த
எங்குல தெய்வப் பெயரீங்கிடுகென' அடைக்-35-37.

எனும் வரிகளால் அதனை அறிகின்றோம். இக்கருத்து மணி மேகலையில், மணிமேகலையை மணி பல்லவத்தில் விட்டு உவவனம் வந்து சுதமதியைத் துயிலெழுப்பிய மணிமேகலா தெய்வத்தின் வாயிலாகத்

''திரையிரும் பௌவத்துத் தெய்வமொன்றுண்டெனக்
கோவலன் கூறியிக் கொடியிடை தன்னையென
நாமஞ் செய்த நன்னாள்'' மணிகாதை 7-33:35

எனும் கூற்றால் புலப்படுத்தப்படுகிறது. ஆனால் அத்தெய்வம் அன்று இரவே மாதவியின் கனவில் தோன்றிக்

''காமன் கையறக் கடுநவை யறுக்கும்
மாபெருந் தவக்கொடி ஈன்றனை'' மணி.காதை-7-36:37

என அவளிடம் கூறியதாகச் சுதமதியிடம் கூறும் குறிப்புச் சிலம்பில் யாண்டுமில்லை.

சேரன் செங்குட்டுவன் வடவரை வென்று வந்தமை குறித்தும், பத்தினித் தெய்வத்துக்குப் வடிமம் எடுத்துக் கடவுள் மங்கலம் செய்தமை குறித்தும் சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டம் பல காதைகளில் அழகுறச் செப்புகிறது. இந்நிகழ்ச்சி பற்றி மணிமேகலையில் சாத்தனார் வஞ்சிமாநகர் புக்க காதையில் ஒரு சில வரிகளில் சுருக்கமாக உணர்த்துகின்றார்.

சிலப்பதிகாரத்தில் அமைந்துள்ள பாத்திரங்களான மாதவி, மணிமேகலை, கண்ணகி, கோவலன் வயந்தமாலை, மாசாத்துவான் ஆகியோரைப் பற்றி மணிமேகலையிலும் படிக்கிறோம். இரு காப்பியங்களிலும் முப்பது காதைகளே உள்ளன. காவியத்தை முடிக்குமிடத்து இரண்டிலும் ஒற்றுமை காணப்படுகிறது. சிலம்பினிறுதியில் இளங்கோ தேவந்தி வாயிலாகத் தன் வரலாறுணர்ந்து மக்கள் வாழவேண்டிய நெறியிதுவெனப் பதினாறு வரிகளில் அறிவுரைகள் கூறுகிறார். இவ்வாறே மணிமேகலையிலும் இறுதியில் 'பவத்திறமறுகெனப் பாவைநோற்ற காதை'யில் அறவணவடிகள் உபதேசம் பலகூறி ''உன் மனத்திருள் நீங்குக'' என மணிமேகலைக்கு அறிவுறுத்து கிறார்.

பொதுவாக மணிமேகலையில் சிலப்பதிகாரக் கதை முழுவதையும் காணலாம். கோவலன் கண்ணகியின் பழம் பிறப்புச் செய்தியும் மணிமேகலையில் குறிப்பிடப்படுகிறது. சிலப்பதிகாரப் பகுதிகள் சில மாதவி கூற்றாகவும் சில மணிமேகலை கூற்றாகவும், சில கடவுட்கோலம் கொண்ட கண்ணகி கூற்றாகவும் சில ஆசிரியர் கூற்றாகவும் உணர்த்தப் படுவதை நோக்கச் சிலப்பதிகாரம் இயற்றப்பட்ட பின்னரே மணிமேகலை இயற்றப்பட்டிருக்கவேண்டும் என்பது தெளிவா கிறது. இங்ஙனம் இருகாப்பியங்களிலும் ஒத்த செய்திகள் பல இருப்பினும் பல முரணான கருத்துக்கள் படிப்போர் மனத்தை விட்டகலாது நின்று விடுகின்றன.

கோவலன் வெட்டுண்டிறக்க, மதுரையை எரித்த கண்ணகி கோவலனுடன் வானவூர்தியேறினள் எனக் கட்டுரைக் காதை கூறுகிறது. பின் மாதவி மணிமேகலை யாகியோர் துறவு கொள்ளுகின்றனர். பல ஆண்டுகட்குப் பின் செங்குட்டுவன் கண்ணகியைக் கடவுள் மங்கலம் செய்யும் விழா நடப்பதறிந்து தேவந்தி, காவற்பெண்டு, அடித்தோழி, மாதரிமகள் ஐயை ஆகியோர் வஞ்சி வருகின்றனர். அங்குக் கண்ணகி கோவலன் ஆகியோரின் இறந்துபட்ட தாயார் மீண்டும் வஞ்சியிற் பிறந்த செய்தியும் கூறப்படுகிறது. ஆனால் இங்கு எங்கும் புகார் அழிந்துபட்ட குறிப்பேயில்லை. சிலம்பில் முதலில் மங்கள வாழ்த்துப் பாடலில் இளங்கோ,

''பொதியி லாயினும் இமய மாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழிஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்
நடுக்கின்றி நிலைஇய தென்ப தல்லதை
ஒடுக்கங்கூறார் உயர்ந்தோறுண்மையின்''

சில-காதை 1,14,19.

எனும் வரிகளின் வாயிலாகப் புகாரின் நடுக்கின்றி நிலையிய தன்மையையும், ஒடுக்கமில்லியல்பையும், கூறியுள்ளார். பின் சிலம்பின் இறுதியிலும் வாழ்த்துரை காதையில்

''காவிரி நாடனைப் பாடுதும், பாடுதும்
பூவிரி கூந்தல்! புகார்''

'சோழன் புகார் நகரம் பாடேலோரம்மானை'

'காவலன் பூம்புகார் பாடேலோரம்மானை'

'கொற்றவன்தன் பூம்புகார் பாடேலோ ரம்மானை'
அம்மென்புகார் நகரம் பாடேலோ ரம்மானை'

'தீங்கரும்பு நல்லுலக் கையாகச் செழுமுத்தம்
பூங்காஞ்சி நிழலவைப்பர் புகார் மகளிர்''

எனப் பலபடப் புகழுகிறார். அதன் பெருமையையும் வளத்தையுமே கூறுகிறார். அழிவு பற்றி இயம்பவில்லை.

மணிமேகலையில் இதற்கு மாறாகப் புகார் நகரம் கடல்கோள்பட்டு அழிந்த செய்தியைக் காணுகிறோம். புகார் நகரைவிட்டுச்சென்ற மணிமேகலை புண்ணியராசனுடன் மணி பல்லவம் சென்றபோதே புகார் நகரம் கடல்கோட்பட்டதென்றும்

அறவண அடிகள், சுதமதி, மாதவி யாகியோர் வஞ்சிமாநகர் புக்கனர் என்னும் மணிபல்லவத்தின் காவல்தெய்வமாகிய தீவதிலகை மணிமேகலையிடம் கூறுகிறாள்.

''மடவரல் நல்லாய் நின்றன் மாநகர்
கடல்வயிறுபுக்கது'' (மணி-காதை-25-176-177)

''அருந்தவன் றன்னுடன் ஆயிழை தாயரும்
வருந்தாதேகி வஞ்சியுட்புக்கனர்'' (மணி-காதை-25-205-206)

எனும் அடிகள் இதை விளக்குகின்றன. இளங்கோ கூறச் சாத்தன் கேட்டுச் சாத்தன் கூற இளங்கோ கேட்டெழுதிய நூல்களில் இப்படியொரு முரணமைவது பொருந்துவதாகுமா?

சிலப்பதிகாரத்தால் கண்ணகியைப்பற்றி வேடர் விளம்பிய செய்தி கேட்டு ''நம் அகல் நாடடைந்த இப்பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்'' எனும் வேண்மாளின் விருப்பிற்கிணங்க இமயத்தில் கல்லெடுத்துப் படிமம் செய்து வஞ்சியில் கண்ணகிக்குக் கோயில் எடுத்தான் செங்குட்டுவன் என அறிகிறோம். இக்கருத்து நடுகற்காதையில் பரக்க விளக்கப் படுகிறது. இதனையே தேவேந்தியும்

''முடிமன்னர் மூவருங் காத்தோம்பும் தெய்வ
வடபே ரிமய மலையிற் பிறந்து
கடுவரற் கங்கை புனலாடிப் போந்த
தொடிவ ளைத் தோளி'' சிலம்பு காதை-29

என்று கண்ணகியைப் பற்றித் தன் அரற்றலில் குறிப்பிடுகிறாள்.

ஆனால் மணிமேகலையோ வேறு விதமாகக் கூறுகிறது. ஆபுத்திரனொடு மணிபல்லவம் சென்ற மணிமேகலை அங்கிருந்து வஞ்சிமா நகர் சென்று தன் தாய் தந்தை ஆகிய இருவர் படிமங்களையும் கண்டு தொழுததாக மணிமேகலை யியம்பு கிறது.

''அணியிழை அந்தரம் ஆறாய் எழுந்து
தணியாக் காதற்றாய் கண்ணகி யையும்
கொடைகெழு தாதை கோவலன் தன்னையும்
கடவுள் எழுதிய படிமங் காணிய'' மணி-காதை - 26-1-4

கோட்டம் புகுந்தனன் எனும் மணிமேகலை அடிகளால் கண்ணகிக்கு மட்டுமன்றிக் கோவலனுக்கும் சிலையெடுக்கப் பட்டிருந்ததாக அறிகிறோம். இளங்கோவடிகள்

திட்டவட்டமாய்க் கண்ணகிக்குப் படிமமெடுத்தது பற்றி மட்டுமே குறிப்பிடுகின்றார். கோவலன் கடவுட்கோலம் பற்றி எங்கும் குறிப்பிடவில்லை.

சிலப்பதிகாரம் கண்ணகி மதுரையை யெரியூட்டிய செயலை உடன்பட்டுச் சிறப்பித்தே கூறுகிறது. தண்டமிழாசான் சாத்தன் தாமறிந்த மதுரை நிகழ்ச்சிகளைக் கூறும்போது

''செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்
வஞ்சினம் சாற்றிய மாபெரும் பத்தினி
அஞ்சிலோதி அறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டதும்'' சில. காதை 25;73-77

என்று மதுரை எரிந்ததைச் சுட்டிக் கண்ணகியையும் மாபெரும் பத்தினி எனச் சிறப்பிக்கின்றார்.

ஆனால் மணிமேகலையோ கண்ணகி மதுரையை எரித்த செய்தியை உடன் படாதது போலப் பேசுகிறது. மணிமேகலை கண்ணகி கோட்டம் புக்கு வணங்கி, அவளொடு உரையாடுகை யில் அப்படிமத்தையே தன் செயலுக்கு வருந்திப் பேசுமாறு செய்கிறார் மணிமேகலைச் சாத்தனார். கண்ணகி தான் மதுரையை எரிக்குங்கால் மதுராபதித் தெய்வம் தோன்றி 'மதுரையின் மீது சீற்றம் கொள்ளற்க. இது நும் பழவினைப் பயனால் நேர்ந்ததெனச் செப்பியும் கேளாது, மதுரையை எரித்தமைக்கு அவளே வருந்திக் கூறுவதுபோல அமைத்துள்ளார்.

சீற்றங் கொண்டு செழுநகர் சிதைத்தேன் அடுசினப் பாவம்
எவ்வகையானு மெய்துத லொழியாது
உம்ப ரில்வழி இம்பரிற் பல பிறப்பு
யாங்கணும் இருவினை யுய்த்துமைப் போல
நீங்களும் பிறவிக் கடலிடை நீந்திப்
பிறந்து மிறந்து முழல்வோம். மணி-26.36:41

எனும் இவ்வடிகள் அதை உணர்த்துகின்றன. சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் செயலை உடன்பட்டு ''மாபெரும் பத்தினி'' என அவளைப் புகழ்ந்த் தண்டமிழ்ச் சாத்தன் மணிமேகலையில் அச்செயலை உடன்படாதெழுதுதல் ஒல்லுமோ?

மணிமேகலை துறவு பற்றிப் பேசுமிடங்களிலும் இரு நூல்களுக்கிடையே முரண்பாடுள்ளது. சிலம்பில் கோவலன் கண்ணகி ஆகியோரின் மதுரை நிகழ்ச்சிகளைக் கேட்டவுடனே,

தன் தாய் சித்திராபதியின் வற்புறுத்துதலையும் ஏற்காது. மணிமேகலையைத் துறவு பூணச் செய்கிறாள் மாதவி.

> ''மற்றதுகேட்டு மாதவி மடந்தை
> நற்றாய் தனக்கு நற்றிறம் படர்கேன்
> மணிமே கலையை வான்றுய ருழக்கும்
> கணிகையர் கோலங் காணா தொழிகெனக்
> கோதைத் தாமங் குழலொடு களைந்து
> போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்''
>
> சிலம்பு-காதை 27-103-108

என மாடலன் கங்கைக் கரையில் பாடி வீடிறங்கியிருந்த செங்குட்டுவனிடம் கூறுகின்றான். சேரன் கண்ணகியைக் கடவுள் மங்கலம் செய்வித்த போது அவண் வந்த தேவந்தி தான் அரற்றுங்கால் ''மணிமேகலை துறவுங்கேளாயோ தோழி'' என அரற்றினாள். செங்குட்டுவன் அவ்வாறு அவள் அரற்றுதற்குக் காரணம் வினவினான். அதற்குத் தேவந்தி சித்திராபதியின் தீ நினைவையும், மாதவியின் நற்செயலையும் உரைத்ததுடன், மணி மேகலையின் இளமையையும் சுட்டி இளம்பெண் துறவு கொண்டமையின் அரற்றியதாகச் சொல்லுகிறாள். எனவே சிலம்பின் கருத்துப்படி தேவந்தி அடித்தோழி, காவற்பெண்டு, ஐயை ஆகியோர் கண்ணகியின் கடவுள் மங்கலங்காண வந்த போதே மணிமேகலை துறவு பூண்டு விட்டாள் என அறிகிறோம்.

ஆனால் இந்திரவிழாவில் ஆடவருமாறு மாதவியின் தோழி வயந்தமாலை வாயிலாகச் சித்திராபதி அழைக்க மாதவி ''காவலன் பேரூர்க் கனையெரியூட்டிய மாபெரும் பத்தினி மகள் மணிமேகலையாதலின் அவளை அருந்தவத்திற்குட்படுத்துவன். அவள் தீத்தொழில் படராள்'' என உரைத்ததாக மணிமேகலைக் காப்பியம் கூறுகிறது. மணிமேகலையும் புகாரை விட்டு நீங்கிப் புண்ணியராசனுடன் மணிபல்லவம் வந்து பின் வஞ்சி புக்குப் பின்னர்க் காஞ்சியில் அறவண அடிகளைத் தலைப்பட்டுத் துறவேற்றாளெனத்

> ''தவத்திறம் பூண்டு தருமம் கேட்டுப்
> பவத்திற மறுகெனப் பாவை நோற்றனள்''
>
> மணி. காதை 30, 263-64

என மணிமேகலைக் காப்பியம் கூறுகிறது. எனவே சிலம்பு கண்ணகி கடவுள் மங்கலம் எய்து முன்பே மணிமேகலைத் துறவியாகிவிட்டாள் எனக் கூற மணிமேகலையோ கடவுள்

மங்கலம் எய்திய பல ஆண்டுகட்குப் பின்னரே அவள் துறவு பூண்டதாகக் கூறுகிறது. அதனால்தான் சாத்தன் வஞ்சி மாநகர் புக்க காதையில் மணிமேகலையைக் கண்ணகி ''நறைகமழ் கூந்தல் நங்கை'' என விளிக்கச் செய்கிறார் போலும்.

சிலப்பதிகாரத்தில் குட்டுவன் சோழ பாண்டியருடன் உடன்று போர் தொடுக்கும் சூழ்நிலை உருவாகும் போது மாடலன் அவனுக்கு நிலையாமையை உணர்த்தி ''அறக்கள வேள்வி செய்யாது மறக்கள வேள்வியை யாண்டும் செய்தனை வானவர் போற்றும் வழி நல்கும் அருமறை நவிலும் அரசர்க்குரிய பெருநல் வேள்வி நீ செயல் வேண்டும்'' என அறிவுறுத்துகிறான். இளங்கோ சமணராயினும், அவருக்கு வேள்வி உடன்பாடன்று எனினும் செங்குட்டுவன் வைதிக சமயத்தவனாகவே அவனுக்கு ஏற்பக் காழ்ப்பின்றி வேள்வி செய்யுமாறு மாடலன் வழியே வற்புறுத்துகின்றார், இவ்விடத்து மட்டுமின்றி ஆய்ச்சியர் குரவையில் கண்ணனைப் பற்றிப் பாடுமிடத்தும், வேட்டுவ வரியிற் கொற்றவையைப் பாடுமிடத்தும், குன்றக்குரவையில் முருகனை வுழிபடுமிடத்தும் அவ்வத் தெய்வத்தினிடம் ஈடுபாடு கொண்டவராக மாறிப்பாடும் அவர் திறம் யார்க்கு வரும்.

இந்தச் சமய ஒருமைப்பாட்டு நிலையை மணிமேகலையில் காண முடியவில்லையே. ஆபுத்திரன் வாயிலாய்ச் செய்தவை, வைதீக மதக்கோட்பாட்டை மறுத்துரைக்கின்றார். ஆபுத்திரன் வேள்வியைப் புலை சூழ்வேள்வி எனக் கூறுகிறான். தருமதத்தன் விசாகை வரலாற்றிலும் வைதீக மதக்கொள்கை விசாகையால் மறுக்கப்படுகிறது. மலர்வனம் புக்க காதையில் ஒரு களிமகன் கூற்றில் வைத்துச் சமணரை நகையாடுகிறார். ''குண்டிகையும் பிரம்பு முடையோன் - உண்ணா நோன்பினன், மண்ணாமேனியன், நாணமு மாடையும் நீத்தோன். கொழுமடற்றெங்கன் கள்ளில் கொலையுண்டோ உண்மின்'' எனச் சைனமுனிவனைக் களிமகன் கேலி செய்கிறான். பிறமதக் கோட்பாடுகள் யாவும் 'படிற்றுரை' என மணிமேகலா தெய்வம் நவிலும் இத்தகைய மதக் காழ்ப்பு மிக்க நிலையைக் காணும் பேறு சிலம்பின் தோற்றத்துக்கும் மணி மேகலைத் தோற்றத்தக்குமிடையே காலக்கழிவு ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதில் ஐயமின்று.

மணிமேகலையில் உள்ள பெயர்களில் பெரும்பான்மையா னவை வடமொழிப் பெயர்களே. மேலும் மணிமேகலைக் காப்பி யத்தில் வடமொழிக் கலப்பும் மிகுதியாக உள்ளது. வேறெந்த இலக்கி யத்திலும் இந்த அளவு வடமொழிக் கலப்பைக் காண்டற்கில்லை.

செங்குட்டுவனுடன் இருந்த சாத்தனைச் சிலம்பு ''தண்டமிழாசான் சாத்தன்'' எனக் கூறுகிறது. ஆனால் அவன் சங்கப் புலவனென்றோ, சீத்தலைச் சாத்தன் என்றோ குறிப்பிட வில்லை. ஆனால் மணிமேகலைப் பதிகம் அதை இயற்றிவன் 'கூலவாணிகன் சாத்தன்' எனக்கூறும் சிலப்பதிகாரப் பதிகம் ''மதுரைக் கூல வாணிகன் சாத்தன் கேட்டனன் எனச் செப்புகிறது. மதுரையைப் பலவாறாகப் புகழும் சிலப்பதிகாரம் மதுரையில் சங்கமிருந்ததென எங்கும் கூறாமையின் அது சங்கம் அழிந்த பின்பே தோன்றியிருக்க வேண்டும் என்பது அறிஞர் கொள்கை. எனவே அதற்குப் பின் தோன்றிய மணிமேகலையைச் சங்கப் புலவராகிய சீத்தலைச் சாத்தனார் இயற்றியிருக்க முடியாது.

தொகை நூல்களில் சுமார் பத்துப்பாடல்களைப் பாடிய சாத்தனார் 'சீத்தலைச் சாத்தனார்' எனப்படுகிறார். சிலம்புப் பதிகமும், மணிமேகலைப் பதிகமும் மணிமேகலை பாடியவரை மதுரைக் கூலவணிகன் சாத்தன் எனக் கூறுகின்றன. இவ்விருவரும் வேறு வேறானவர்கள் என்பது அறிஞர் பலர் கருத்தாகும். சீத்தலைச் சாத்தனார் குறிக்கப்படும் இடங்களிலெல்லாம் பலர் பால் ஈற்றுடனேயே குறிக்கப்படுகிறார். கூலவாணிகன் சாத்தன் தாம் குறிப்பிடப்படும் இடமெல்லாம் ஆண்பாலீறு பெற்றே (வணிகன் சாத்தன்) ஒருமையில் சுட்டப்படுகிறார். அவர்கள் வேறு வேறானவர்கள் என்பதை உணர்த்த இது ஒரு சான்றாகும்.

பிற்காலத்து இவ்விரண்டு சாத்தற்குரிய அடைமொழியை யும் ஒருவற்கே கூட்டி, இவ்விரு சாத்தரும் ஒருவரே எனப் பிழைபட எண்ணி ''மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்'' என எழுதத்தலைப்பட்டனர். இவ்வடையுள் மதுரை, சீத்தலை என்பன ஊர்ப்பெயர்கள். கூலவாணிகன் என்பது தொழில் சுட்டியது. இவ்வாறு ஒரு புலவர்க்கு இருஊர் புணர்த்திப் பெயரிடுதல் நம்மரபன்று. ஒரு பெயரொடு பல புலவரிருப்பின் ஊரை முன்கூட்டி அவரை வேறுபடுத்தல் மரபு. ஒரே ஊரில் இருவர் ஒரு பெயரொடு இருப்பின் அவரது தொழில்களைச் சுட்டி வேறுபடுத்துவது மரபு. ஆனால் ஒரு பெயருக்கே இரு ஊர் சுட்டித் தொழிலும் சுட்டிப் புணர்ப்பதும் மரபன்று. எனவேதான் இம்மரபு சீத்தலைச் சாத்தனாரையும் கூலவணிகன் சாத்தனையும் ஒருவர் எனப் பிழைபடக் கருதிய சிலரால் ஏற்பட்டதெனச் சாமி சிதம்பரனார் ச. சோ. பாரதியார் ஆகியோர் விளக்கிக் காட்டியுள்ளனர். எனவே சீத்தலைச் சாத்தனார் வேறு, கூல வாணிகன் சாத்தன் வேறு, கூலவாணிகன் சாத்தன் சிலப்பதிகார

காலத்துக்கும் பின் புகார் அழிந்தபின் தோன்றிப் பௌத்த மதப் பிரசாரத்திற்கே மணிமேகலையை எழுதினான் எனக் கூறுவதே பொருந்தும். எனவே இளங்கோ கேட்கச் சாத்தன் பாடினான் எனக் கூறுவதும் சாத்தன் கேட்க இளங்கோவடிகள் பாடினார் எனக் கூறும் பதிகக் கூற்றும் பொய்யுரையேயன்றிப் பொருளுரையன்று.

*வீ. இராசமாணிக்கம்*
பூ. சா. கோ. கலைக்கல்லூரி
கோயம்புத்தூர்

# தொல்காப்பியர் காலத்தில் சாதி முறை

தொல்காப்பியர் காலத்திலேயே தமிழகத்தில் சாதிப் பாகுபாடுகள், ஏற்றத் தாழ்வுகள் நிலவினவாவெனக் காண்பதுவே இக்கட்டுரையின் நோக்கம். நிலவினவென்பர் சிலர். இஃது ஆரியர் வருகைக்குப்பின் ஏற்பட்டதென்பர் சிலர். தொல்காப்பியர் காலத்தே மாந்தரிடையே ஏற்றத் தாழ்வுகள் இருந்தனவேயன்றிச் சாதிப் பாகுபாடுகள் இல்லையென்பர் ஒரு சிலர். இவர்கள் கூற்றினையீண்டு ஆய்வோம்.

தொல்காப்பியத்தில் காணப்பெறும் சில சொற்களுக்கும் மரபுகட்கும் உண்மைப்பொருள்கள் இவையென்பதை உறுதி செய்துவிட்டால் அதுவே சாலும். அவற்றுக்கு உரையாசிரியர்கள் கூறும் பொருளில் பொருந்துபவை, பொருந்தாதவை யிவை யெனத் தெளிதல் நன்று.

தொல்காப்பியத்தில் அந்தணர், பார்ப்பார், ஐயர், அரசர், வணிகர், வேளாண் மாந்தர், வைசியர், அடியோர், வினைவலர், கூத்தர், பாணர், விறலி, பொருநர், உயர்ந்தோர், இழிந்தோர், நால்வர் போன்ற சொற்களுக்கு உரிய பொருள்கள் இவையெனக் காண்டல்வேண்டும்.

நால்வரென்று சொற்குரிய பொருளை முதற்கண் காண்போம். நால் வேதங்களையும் நால் வருணங்களையும் உள்ளங்களில் ஆழமாகக் கொண்டிருந்த உரையாசிரியர்கள் நால்வரென்ற சொற்கு நால் வருணத்தினர் என்றே குறிப்பிட்டுள்ளனர். அங்ஙனம் கூறிய ஓரிடத்தைக் காண்போம்.

''பரத்தை வாயில் நால்வர்க்கு முரித்தே
நிலத்திரி பின்றென்மனார் புலவர் (தொல் - 1170)

'பரத்தையர் பிரிவின் காரணமாகத் தலைவியர்பால் வாயிலனுப்புதல் நால்வர்க்கு உரிது' என்பது பொருள். நால்வர் என்போர் யாவர்? ஏவல் கொள்ளும் நிலமக்கள், தலைமக்கள் ஆகிய இருவரும், அடியோர் வினைவலர் ஆகிய இருவரும் என இளவழகனார் குறிக்கிறார். இளம்பூரணர், நச்சினார்க்கினியர் இருவரும் நால்வருணத்தாரெனக் குறிக்கின்றனர். இதற்கு மேலும் விளக்கந் தரும் நச்சினார்க்கினியர் ''பரத்தைவாயில்'' என்பது 'குதிரைத் தேர்' போல நின்றது. இதனாற் பயன் அந்தணர்க்கு நால்வரும், அரசர்க்கு மூவரும், வணிகர்க்கு இருவருமாகிய தலைவியர் ஊடற்குரியவரென்பதூஉம், அவர்பால் தத்தந் தலைவர் ஊடறீர்த்தற்குரிய வாயில் விடுவரென்பதும் கூறியவாறாயிற்று'' எனக் கூறுகிறார்.

மேற்கூறிய விளக்கவுரையிலிருந்து, அந்தணர்க்கு நால் வருணத்திலும் அரசர்க்கு அந்தணர் நீங்க ஏனைய மூன்று வருணத்திலும், வணிகர்க்கு முன்னிருவர் நீங்க ஏனைய இரு வருணத்திலும், வேளாளர் தமக்குக் கீழொரு வருணமின்மையால் தம் வருணத்திலேயும் மணம்புரிந்து கொள்ளலாமென்பது பொருள். அஃதாவது அந்தணரென்போர் நால் வருணத்திலும் மணமுடிக்கு முரிமை பெற்றனர்; எனவே நால்வர் தலைவியர் ஊடற்குரியரெனக் குறிப்பிடுகின்றார். மற்றும் தங்காதற்றலை வியரை நோக்கி நீங்கிப் பரத்தையரை நாடியும் சென்றனர் என்பதையும் அறிகிறோம். இத்தகு ஒழுக்கமுடையவரை அந்தணரெனலாமா? ''அந்தணரென்போர் அறவோர் மற்றெவ் வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்'' என்ற குறள் பாடிய வள்ளுவன் தன்னை வுலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழகத்தில் இத்தகையோரை அந்தணரெனத் தொல்காப்பியர் குறிப்பிட்டிருப்பரா? தொல்காப்பியர், வள்ளுவர் இருவரும் இருவேறு பண்புடைய அந்தணரைக் குறிப்பிட்டிருக்க முடியாது. அஃதோடு

> ''நூலே கரகம் முக்கோன் மணையே
> யாயுங் காலை யந்தணர்க் குரிய'' *(மரபு 71)*

என்ற நூற்பாவால் சுட்டப்பெறும் அந்தணரும், அப்பரத்தையர் பிரியும் அந்தணரும் வேறுவேறானவர் என்பதை நன்குணர முடிகிறது. எனவே பரத்தையர் பிரியும் அந்தணர், நச்சினார்க்கினியரால் நுழைக்கப் பெற்ற ஆரிய அந்தணர் என்பது வெளிப்படை.

இரண்டாவதாக "ஒன்றி யுயர்ந்த பால தாணையின் ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப" (களவு - 2) என்ற நூற்பாவுக்கும் முரணாகிறது. ஒத்த கிழவனுங் கிழத்தியும் காண்பர் என்றால், அந்தணர்க்கு நால் வருணத்திலும், அரசர்க்கு மூன்று வருணத்திலும், வணிகர்க்கு இருவருணத்திலும் வேளாளர்க்குத் தம் வருணத்திலும் கிழத்தியரமைய ஊழ்வினை யியங்கு மென்றல்லவோ பொருள்படும். ஊழானது ஆண்டுக்காண்டு யுகத்திற்கு யுகம் மாறுபடக் கூடிய தொன்றோ? இருக்க முடியாதே. நச்சினார்க்கினியர் கூற்றுப்படித்தான் ஊழ் இயங்கு மெனின், இன்று மிகத் தாழ்ந்தவரும் அந்தணர் குலத்தாரை மணந்து வாழ்வதைக் காண்கின்றோமே. எனவே அவர் உரை பொருந்தாவுரை யென்பதை யறிகிறோம்.

மற்றும் அந்தணரென்ற இச் சொல் மரபியலில் 70, 72, 75 ஆகிய மூன்று நூற்பாக்களில் காணப்படுகிறது. ஆனால் அம்மூன்று மடங்கிய 15 நூற்பாக்களை (71-85) இடைச்செருகல் எனப் பண்டாரகர் நாவலர் ச.சோ. பாரதியார் அவர்களும், பண்டாரகர் சி. இலக்குவனார் அவர்கள், புலவர் க. வெள்ளை வாரணனார் அவர்கள் ஆகியோரும் கருதுகின்றனர். இளமை, ஆண்மை, பெண்மை முதலியன காரணமாக உயிரினங்கட்கு வழங்கும் மரபுப் பெயர்களைக் குறிப்பது மரபியலாகும். விலங்குகளின் ஆண், பெண், இளமைப் பெயர்களை 70-ஆவது நூற்பா வரை குறிப்பிட்டு, இடையே 71-85 வரை நால்வகை வருணத்தாரின் தொழில், இயல்பு, கருவிகள் கூறப்படுகின்றன. 86-இலிருந்து மீண்டும் பயிரினங்களின் வகைகளைப் பற்றிக் குறித்துச் செல்லுகிறது. அஃதோடு வைசியன், இழிந்தோர் என்ற சொற்கள் தொல்காப்பியரால் ஆளப்படாதவைகளாகும்.

அனைத்திற்கு மேலாக

"வேளாண் மாந்தர்க் குழுதூ ண்ணல்ல
தில்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி" (மரபு - 82)

என்ற நூற்பாவின் கருத்துத் தொல்காப்பியரின் கருத்திற்குப் பெரிதும் ஒவ்வாததொன்றாகும். ஏரினையே அறியாத ஆரியர் ஏற்கொண்டு உழுகின்ற வேளாண்மக்களைக் கடைசி வருணத் தாராகக் கருதினர். இந்நிலையில் வேளாண் மாந்தரை யிகழ்வது போலும் அமைந்துள்ள இந் நூற்பா தொல்காப்பியர் கருத்துக்கு மாறுபட்டதேயாம்.

இரண்டாவதாகப் பார்ப்பாரென்ற சொல்லைக் காண்போம். இச்சொல் பெரிதும் சிக்கல் நிறைந்ததும் ' குழப்பந்

தரக்கூடியதுமாக அமைந்துள்ளது. தொல்காப்பியத்தில் இச்சொல் ஆறு இடங்களில் காணப்படுகிறது.

''அறுவகைப் பட்ட பார்ப்பனக் பக்கமும்'' (புறத். 20)

''அன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய'' (கற்பு 36)

''தோழி தாயே பார்ப்பான் பாங்கன்'' (கற்பு 52)

''பார்ப்பான் முதலா'' (செய் 188)

''பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி'' (செய் 187)

''பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே'' (செய். 195)

இவற்றுள் 'அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம்' என்பதற்கு ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்' என அறுவகைத் தொழில்களையே இருபெரும் உரையாசிரியர்களும் புகன்றுள்ளனர். நாவலர் ச. சோ. பாரதியார் அவர்கள் ''இக்காலப் பார்ப்பார், எண்ணாயிரவர், மூவாயிரவர் வடமர், சோழியர் என வெவ்வேறு மரபின ராதல்போல முற்காலத் தமிழகத்தும் பார்ப்பார் மரபால் அறுவகை பிரிந்தவராதல் இயல்பு'' எனக்கூறி, அறுவகைத் தொழிலென்பது ஒவ்வாதெனத் தள்ளுகிறார். ஒவ்வாவெனத் தள்ளுதற்குரிய நிலையில் அவர்தரும் விளக்கங்கள் ஏற்றுக்கொள்ளுந் தகுதியிலேயே அமைந்துள்ளன.

பிறவிடங்களில் பார்ப்பாரென்று சொல் தலைவற்கு அறிவு புகட்டுபவனாகவும் களவு கற்பொழுக்கங்களில் பாங்கனாகவும் வாயிலாகவும் விளங்குகிறா னென்பதை யறிகிறோம். வேள்வியைப் பற்றி யாண்டுங் குறிப்பிடாத தொல்காப்பியர் அறுவகைப்பட்ட தொழிலைக் குறிப்பிட்டு அதில் வேட்டலையும் வேட்பித்தலையுங் கூறிவிருத்தல் இயலாது. எனவே நாவலர் அவர்கள் கூறுமாறுபோல, அறுவகை மரபுகளை யுடையவர் என்பதே பொருந்தும். இலக்கியங்களை நுணுகி ஆயும்போது பார்ப்பனர் பலவகைத் தன்மையுடையவர்களாக விளங்கினர் என்பதை யறியலாம்.

''ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும் (புறம் 9) என்ற அடியில் ''சிறிதும் தீங்கு செய்யாததாகிய ஆனினதியல்புடைய அந்தணர்'' எனப் பொருள் தரப்படுகிறது, இவ் வகையில் செந்தண்மை பூண்டு நிற்கும் பார்ப்பாரும், பார்ப்பன மகனே பார்ப்பனே மகனே படிம வுண்டிப் பார்ப்பன மகனே''

(குறுந்-156) எனக் கூறப்பெறும் பாங்கனாக வரும் பார்ப்பாரும் ஒருவராக இயலுமோ? புறநானூறு 305-ஆம் பாட்டில் வயலைப் பார்ப்பான் ஒருவன் பேசப் பெறுகிறான். அகநானூறு 24-ஆம் பாட்டில் வேள்வி செய்தலில்லா வேளாப் பார்ப்பான்' ஒருவனைக் காண்கிறோம். முத்தீயோம்பும் நான்மறையாளர் களாகிய பார்ப்பாரை பல்லிடத்துங் காணப்பெறுகிறோம். திருமந்திரத்தில் பேர் கொண்ட பார்ப்பான் ஒருவன் (519) குறிப்பிடப்பெறுகிறான். ஈண்டுப் 'பேர்கொண்ட பார்ப்பான்' என்பதற்கு வடநாட்டிலிருந்து வந்தேறிகளாகிய ஆரியர் தமிழகத்தே யிருந்த தமிழ்ப் பார்ப்பாரைப் போல வாழத் தொடங்கினர். எனவே அவர்கள் 'பேர்கொண்ட பார்ப்பார்'' என்று வேறுபடுத்திக் குறிக்கப்பட்டவரெனக் கழகப் புலவர் திரு. இராமனாத பிள்ளையவர்கள் உரை கண்டுள்ளார். ஔவை பாடிய புறப்பாடல் 367-இல் ''இரவலர்க் கருங்கலம் அருகாது வீசி'' யெனப் பொதுவாக இரவலரைக் குறித்தவர், ''ஏற்ற பார்ப்பார்க் ஈர்ங்கை நிறையப் பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து'' எனத் தனியே ஏற்று வாழும் பார்ப்பாரைக் குறிப்பிடுகின்றார். சில அடிகள் விட்டு ''ஒன்றுபுரிந் தடங்கிய இரு பிறப்பாளர் முத்தீ''யென அழலோம்பும் இரு பிறப்பாளராகிய பார்ப்பாரையுங் குறிப்பிடுகிறார். ஒரே பாட்டில் இவ்வாறு வேறுவேறாகக் குறிப்பிடலாம். அவ்விருவர்க்கு மிடையே வேறுபாடுண்டென் பதை யுணரலாம். சிலப்பதிகாரத்தில், புறஞ்சேரியிறுத்த காதையில்

''வரிநவில் கொள்கை மறைநூல் வழுக்கத்துப்
புரிநூல் மார்பர் உறைபதி சேர்ந்து''

என்ற ஈரடிகளில் வரிப்பாட்டைப் பயிலும் கொள்கையொடு பொருந்தி வேதநூற் கொள்கையினின்றும் வழுவுதலையுடைய பார்ப்பார் வதியும் பதி'' எனக் குறிப்பிடுதலால் கொள்கையால் அல்லாது வெறும் பிறப்பால் பார்ப்பனராய் வாழ்ந்து வந்தவர் என்பதைக் குறிப்பிடுகிறாள். கண்ணகி அங்கியங்கடவுட்கு ஆணை பிறப்பித்த ஞான்று'' பார்ப்பார், அறவோர், பசு, பத்தினிப் பெண்டிர்..... தீத்திறத்தோர் பக்கமே சேர்க'' எனக் குறிப்பிடுகிறாள். ஈண்டுக் குறிக்கப்பெற்ற பார்ப்பார், என்பது மறைநூல் வழக்கத்துப் பார்ப்பாரையும் சுட்டுமா? இங்ஙனம் பார்க்குங்கால், பார்ப்பார் பல நிலைகளில் பலவகைப் பட்டிருந்தனரெனக் காண்கின்றோம்.

உழவு, தொழில், வாணிகம், வரைவு, விச்சை, சிற்பம் என்ற அறுவகைத் தொழில்களையும் கற்றுத் தேர்ச்சி பெறுவோர்க்குத் தரப்படும் பட்டமே ''பார்ப்பார்'' என்பதாகு மென, திரு. அ. கிருஷ்ணசாமிப் பண்டிதர் அவர்கள் கூறுவது ஏலாததொன்றாம், இஃதேபோல், அரசர், வணிகர், வேளாளர் அறிவன் முதலிய சொற்களும் அவரவர்க்குத் தரப்படும் பட்டங்களே என்பர்.

மூன்றாவதாக ஐயர் என்ற சொல்லைக் காண்போம். இச்சொல்லின் அங்கங்குறித்து அனைவரும் அறிவர். வியப்பென்ற பொருள்தரும் 'ஐ' யென்னும் உரிச்சொல்லொடு 'அர்' விகுதி சேர்ந்தமைந்தது. அன்.அள். ஐ. என்னும் விகுதிகள் சேர ஐயன், ஐயள், ஐயை யென்ற சொற்கள் அமைகின்றன. சில விடங்களில் 'ஐ' தனித்து நின்றும் தலைவன் என்ற பொருடருவதை யறிகிறோம், ...முன் நில்லன் மின் தெவ்விர்'' (குறள் 771) ஐயை தலைவியைக் குறிக்கும். இளங்கோவடிகள் கவுந்தியடிகளைக் ''காவுந்தி ஐயையைக் கைதொழுதேத்தி'' எனக் குறிப்பிடுகிறார். மாதரியென்னும் இடைக்குல மடந்தைமகள் ஐயை அவாள்.

இவ்வையரென்ற சொல் தொல்காப்பியத்தில் ஈரிடங்களில் காணப்படுகின்றன. ஐயன், ஐயர் என்ற சொற்கள் சங்க விலக்கியங்களில் யாண்டும் அந்தணர் பார்ப்பார் என்ற பொருளில் அமையவே யில்லை. தந்தை தமையன் தலைவன் என்ற பொருளிலேயே ஆளப்பட்டிருத்தலை யறிகிறோம். இச் சொல்லுக்கும் நச்சினார்க்கினியர் அந்தணர், பார்ப்பார் என்று உரை கூறமுடியவில்லையெனவே ஆரிய இருடிகள், முனிவர் என்றும் பொருள் கூறிப்போந்தார். கடைக்கழகப் பாக்களிலேயே இச் சொற்கு அந்தணர், பார்ப்பாரென்ற பொருளில்லையெனின் தொல்காப்பியர் காலத்தில் எங்ஙனம் இருத்தற்கியலும்? எனவே பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் கரணம் யாத்தனரெனின் அவ்வூரிலுள்ள தலைமை சான்ற பெரியோர்களே யாத்தனரெனக் கோடலே பொருந்தும்.

ஆகவே அந்தணர், பார்ப்பார், ஐயர் என்ற சொற்கள் ஆரியர் தமிழகத்தில் அடிவைப்பதற்கு முன்னமே தமிழகத்தில் இருந்த சான்றோர்களையும், உயர்ந்தோர்களையும், தலைவர்களையும் குறித்து வழங்கிய சொற்களாம். ஆரியர் தமிழகம் புகுந்தபின் அச்சொற்களைத் தங்கட்காக்கிக்கொண்டு, தமிழ் கற்று, வேதங்களையும் ஓம்பி வந்தமையால், அவர்களை

நான்மறையந்தணர், என்றும் வேள்விப் பார்ப்பார் என்றும், கூறிக் கொண்டனர். இவர்களால் பாடப்பெற்ற பாக்களும், இவர்களைக் குறித்தெழுதப்பெற்ற பாக்களும் கடைக் கழகக் காலத்தில் காணப்பெறுதலின், படிப்போர்க்கு மயக்கம் ஏற்படுகிறது.

மற்றும், ஆவும் ஆனியற்பார்ப்பன மாக்களும் ''பார்ப்பார், அறவோர், பசு பத்தினிப் பெண்டிர்'', ''அந்தணர்ரென்போர் அறவோர்'' போன்ற தொடர்களில் அந்தணர், பார்ப்பார் ஆகிய சொற்கள் ஒரு சாதி (வருண) மக்களனைவரையும் குறித்திருக்கு மென எண்ணுதற்கு இடமளிக்கின்றதா என்று ஆழ்ந்து சிந்திப்போர்க்கு இராதென்றே தோன்றும்.

அடுத்துத் தீண்டப்படத் தகாதார் இருந்தனர் என்ற கூற்றைக் காண்போம். 'தமிழிலக்கிய சரிதத்தில் காவிய காலம்' என்ற நூலில் சமுதாயத்தில் பாணர்கள் மிகவும் கீழ்நிலையில் இருந்தனரென உயர்திரு. எஸ். வையாபுரிபிள்ளையவர்கள் குறிப்பிடுகிறார். இக்கூற்றைப் பண்டாரகர், திரு. க.மீனாட்சி சுந்தரன் அவர்கள் பல சான்றுகள் கொண்டு மறுத்துள்ளார் (26-10-63, தமிழாசிரியர் மாநாடு மலர் - சென்னை)

அவர் மறுத்துக் கூறிய காரணங்களுள் ஒன்று, ''பாணர்குடி'' உயர்குடிகளோடு ஒருங்குவைத்து எண்ணப் பெற்றுள்ளது'' என்பதாகும். அதற்குச் சான்றாக அவர்

''துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை''. (புறம் 335)

என்ற அடிகளைக் காட்டுவது அத்துணைப் பொருந்துவதா யில்லை. தொல்காப்பியர், ''கூத்தர், பாணர், விறலி, பொருநர் என்ற நால்வரையும் ஆற்றுப்படுத்தப்பெறும் மக்களாகக் குறிப்பிடுகிறார். இவர்கள் பரிசிலான் வாழும் வாழ்க்கையையே யுடையவர். இவருள் ஒருவராகக் கருதப்பெற்ற பாணரை; மாங்குடிகிழார் துடியன், பறையன், கடம்பன், என்பவரோடு இணைத்துப் பேசுவதேனெனக் காண்டல்வேண்டும்.

துடியனைத் ''துடியெறி புலையர்'' (புறம் 170, 287) இழிசினன் (புறம் 82) என்றும், பறையனை இழிபிறப்பாளன் என்றும் கூறுவதைப் படிக்குங்கால் வள்ளல்கள் அருகிய காலத்துத் தாழ்நிலையெய்திய பாணர்கள் துடியன், பறையன் ஆகியோரு டன் ஒருங்குவைத்து எண்ணப்பெற்றனரென்பதாகக் கொள்ள லாம். திருப்பாணாழ்வார் தீண்டப்படத்தகாதவர் குலம் என்பதை யாருமறிவர். இத்தகைய மூவருடன் சேர்த்தெண்ணப்பெற்ற

நிலையைப் ''பாணர் ஒரு குடியைச் சார்ந்தவர், நான்கு குடிகளுள் ஒரு குடியினராக ஒத்து எண்ணத்தக்க சிறப்புடையவரென்பது வெளிப்படை. எஞ்சிய குடிகளை விடத் தாழ்நிலையில், கீழ்ப்படியில் இருந்தவர்களாக இங்கும் எங்கும் குறிப்பில்லை'' என அவர் குறிப்பதும் பொருந்துவதாக இல்லை. ஆனால், பிற்காலத்தில், இருந்த நிலையை விடச் சற்று நன்னிலையில் இருந்திருக்கலாம்.

சிறுபாணாற்றுப்படையில், பரிசு பெற்ற பாணன் பெறாத பாணனை ஆற்றுப்படுத்துகின்றபோது, அவனைத்

''துனிகூ ரெவ்வமொடு துயராற்றுப் படுப்ப
முனிவிகந் திருந்த முதுவா யிரவல'' (சிறுபாண் - 39 -40)

என்று விளிக்கின்றான். கல்வியில் முதிர்ச்சியும் சொல்லில் வாய்மையுமுடையவன். ஆயினும் ஏன்? அவன் இரவலன். இவ்வீரடிகளும் கடைக்கழகப் பாணரை நன்கறிந்து கொள்ள இடமளிக்கின்றன. ''திரு வேறு தெள்ளிய ராதலும் வேறு'' அல்லவா? எனவே பாணர்களும் பிறரும், கல்வியிலும், தம்தொழிலிலும், சிறந்து விளங்கியும் வாழ்வில் வறுமையால் பீடிக்கப்பெற்றுத் தாழ்நிலையில் இருந்தனரென்பதை யறிகி றோம். ஆனால் இவர்கள் தீண்டத் தகாதவர் என்ற குறிப்பு யாண்டுமில்லை.

சங்க காலத்தே யெனினும் அதற்கு முந்திய தொல்காப்பியர் காலத்தே யெனினும் எல்லாருங் கல்வி கற்று, அறமுணர்ந்து நன்னெறியில் நின்று சமுதாயத்தில் உயர்நிலையில் விளங்கின ரெனல் இயலாது. எப்படி நோக்கினும் இக் காலத்தை நோக்கத் தொல்காப்பியர் காலம் பல துறைகளில் முன்னேற்ற மடையாத காலமென்பதில் தவறில்லை. அஃதோடு எல்லோரும் பட்டினங்களிலோ நகர்போலும் ஊர்களிலோதான் வாழ்ந்தன ரென்றும் கூறவியலாது. எத்துணையோ துறைகளில் முன்னேறிய இற்றை நாளிலும் பட்டினத்தாரும் நகர மாந்தரும் பெறும் பல்வகைப் பயன்கள் சிறூர் மக்கட்குக் கிடைப்பதில்லையே, இதனினுந் தாழ்நிலைதானே அன்றிருந்திருத்தல்வேண்டும்.

ஐந்திணை நிலங்கள் ஒவ்வொன்றுக்கும், நில மக்கள் தலைமக்கள், அடியோர், வினைவலர் என நால்வகை மக்களைத் தொல்காப்பியம் (அகத். 23, 24) குறிப்பிடுகிறது. அடியோர் குற்றேவல் செய்வோர் வினைவலர் ஏதேனும் ஒரு தொழிலைச் செய்வோர். இவ்விருவர்க்கும் அன்பின் ஐந்திணையொழுக்கம்

கூறப்படவில்லை. கைக்கிளையும் பெருந்திணையும் உண்டு. இவர்கள் சமுதாயத்தில் கல்வி கேள்விகளிற் சிறந்து தலை மக்களைப் போன்று ஒழுக்கத்தில் சிறந்திருக்க முடியாது. மலை, காடு, பாலை போன்றவிடங்களில் சிறுசிறு கூட்டமாகவும் அல்லது தலை மக்களால் ஏவப்படுந் தொழிலையும் செய்து கொண்டிருப்பவராகவும், வாழ்ந்த இவர்கள்பால் உயரிய ஒழுக்கத்தை யெப்படி யெதிர்பார்க்கமுடியும்?

''நடு நாள் யாமத்தும் பகலுந் துஞ்சான், கடுமாப்பார்க்குங் கல்லா வொருவற்கும்'' (புறம் 189) ''கட்டினிணக்கும் இழிசினன்'' (புறம் 82) ''சென்றாறு கவரும் அன்பிலாடவர்'' (புறம் 161) ஆடைக்குக் கஞ்சி தோய்த்துத் தெடுக்கும் வண்ணாத்தியாகிய புலைத்தி (புறம் 311, அகம் 34, குறுந் 330) சோற்று முடிச்சியைத் தன்னொரு தோளிலே தொங்கவிட்டுக் கொண்டு சென்று கிணற்றைத் தோண்டும் தொழில்புரியும் (அகம் 79) ஆகிய இத்தகைய மக்களையும் கடைக் கழகக் காலத்தில் காண்கிறோம். இவரன்றி இரவலராக எத்துணையோ பேர்களையும் காணமுடிகிறது. பாலைநிலத்தில் வழிப்பறி செய்வோரிடம் நல்லறத்தை யெதிர்பார்க்க முடியுமா? கிணறு வெட்டிப் பிழைப்போனிடம் பொருளாதாரத் தன்னிறைவைக் காணமுடியுமா?

''மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலின் புல்லினேன் (குறிஞ்சிக் கலி - 26)

எனக் கூறுபவனிடம் சிறந்தவொழுக்கத்தைக் காணமுடியுமா முடியாது. எனவே இத்தகைய பல்வேறு வகையான தன்மைகளில் மக்கள் வாழ்ந்தனர் தொல்காப்பியர் காலத் தமிழகத்தில் என்பதை யறிகிறோம். உயர்ந்தோர் வாழ்ந்தனர், தாழ்ந்தோர் வாழ்ந்தனர். கற்றோர் வாழ்ந்தனர்; கல்லாதாரும் வாழ்ந்தனர். இவர்களில் தொழிலால் உயர்வு தாழ்வு காணப் பெற்ற தன்மையை யறிகின்றோமே யன்றிப் பிறப்பால் உயர்வு தாழ்வு காணப் பெறவில்லை.

தொல்காப்பியர் வடசொற்கும் இலக்கணம் வகுக்கின்றமை யால், தமிழ்மொழிகற்றுத் தமிழ்ப் புலவராயமைந்த ஆரியரும் அந்தணர், பார்ப்பார் என்ற பெயரில் இங்கு வாழ்ந்தன ரென்பதையும் அறிகிறோம்.

பா. இராசாராம்
பூ. சா. கோ. கலைக் கல்லூரி
கோயம்புத்தூர்

# டி.என்.ஏ-யின் அமைப்பும் ஆற்றலும்

உலகிலுள்ள ஒவ்வொரு தாவரமும், பிராணியும் தத்தம் இனத்தை நிலைநிறுத்த இனப்பெருக்கம் செய்கின்றன. அவை தம் இனத்தையல்லாது மற்ற இனத்தை உண்டாக்க முடியாது. தன் சந்ததிகளைக் கூட மாற்றி அமைக்க முடியாது. ஆகவே இவ்வுலகிலுள்ள உயிர்களிடத்தே பண்புகளை நிலை நிறுத்தி அவற்றின் சந்ததிகளிடத்தும் அதை நிலைநாட்டி ஆட்சி செய்யும் பொருள் எது என்பது மனிதர் ஒவ்வொருவரின் மனத்திலும் தோன்றக் கூடிய கேள்வி.

அதற்கு, சென்ற நூற்றாண்டுக் கால உயிரியல் ஆராய்ச்சி களின் பலனாகப் பல உண்மைகள் புலப்படலாயின. உதாரணமாக் மனிதனை எடுத்துக் கொண்டால் அவன் பல கோடிக்கணக்கான 'ஸெல்' (Cell) களால் உருவானவன். அச் ''ஸெல்கள்'' இரண்டாகப் பிரிந்து எண்ணிக்கை அதிகமாகும் பொழுது அவன் வளருகிறான். அவன் இனப்பெருக்கம் செய்யும்போது ஆண் இன ஸெல் உண்டாகி, அது பெண் கருப்பையிலுள்ள 'முட்டை'யுடன் சேர்ந்து கருவை உண்டாக்கு கிறது. இது 10 மாதக் காலத்தில் சிசுவாகப் பிறக்கிறது. ஆகவே, இன்று நம்மிடமுள்ள பண்புகள் நமது மக்களுக்கு வருகின்றன. இது நம் உடலில் உண்டாகும் ஸெல்களால்தான் என்பதைத் தெளிவாக அறிகிறோம்.

இனி அந்த 'ஸெல்' லினுள் ஆராயுங்கால் அதன் நியூக்லியஸ் (Nucleus) இப்பண்புகள் அனைத்தும் தன்னுள் நிறுத்திச் சந்ததிகளுக்கு ஈவதைத் தெளிவாக அறிந்துள்ளோம். இந்த நியூக்லியஸின் பல நிலைகளை ஆராய்ந்தபோது, இதன் நுட்பங்களும் தெளிவாக விளங்கலாயின. முக்கியமாக ஒரு 'ஸெல்' இரண்டாகப் பிரியும்போது உட்கரு

'குரோமோசோம்'களை (Chromosomes) உண்டாக்குகின்றது. இக்குரோமோசோம்கள் தமக்குள் ஏற்படுத்திக் கொள்ளும் சரி சமமான பிரிவே ஸெல் இரண்டாகப் பிரிவுறப் பயன்படுகிறது. ஆக, இனப் பெருக்கத்தில் அடித்தளத்தில் குரோமோசோம்கள் தான் ஆட்டிப் படைக்கின்றன என்பதைச் சென்ற 20 ஆண்டு களாகத்தான் அறிவோம்.

இனித் தொடர்ந்து இக்குரோமோசோம்களை ஆராயுங்கால் அவை திரிபோன்று முறுக்கேறிய பொருளாக நுண்ணோக்கியில் (MICROSCOPE) காணப்படுகிறது. அவற்றில் மணிகள் கோத்தது போலப் பல தட்டுத்தட்டான பாகங்கள் தெளிவாகக் காணப்படு கின்றன. இவற்றை ஜீன்கள் (Genes) என்று சொல்லுகிறோம்.

இந்த ஜீன்களைத் துருவிக் காண வேண்டுமென்னும் அவாவில் அவற்றை 'எக்ஸ்' கதிர் ('X' Ray) ஆராய்ச்சி முறை களால் மேலும் ஆராய்ந்தனர். இதன் விளைவாக 'ஜீன்' ஒவ் வொன்றும் 'டி ஆக்ஸிரைபோ நியூக்லியிக் அமிலம்' (Deoxyribose Nucleic Acid - DNA) என்னும் இரசாயணப் பொருளால் ஆக்கப் பட்டிருப்பதை 1953-ஆம் ஆண்டில்தான் வாட்சன் (I.D. Watson) கிரிக் (F.H.C. Crick) வில்கின்ஸ் (M. H. F. Wilkins) என்னும் மூன்று ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்தனர்.

இந்த 'டி ஆக்ஸிரைபோ நியூக்லியிக் அமிலம்' (இனி இது டி. என். ஏ. எனக் குறிப்பிடப்படும்) எத்தகைய பொருள்? (2) அதன் அமைப்பு யாது? (3) ஸெல் பிரிவை அது எவ்வாறு நிகழ்த்துகிறது? (4) பண்புகளை அது எவ்வாறு நிலைபெறச் செய்வதுடன் சந்ததிகளுக்கும் கைவரச் செய்கிறது? என்பன பற்றி ஆராய்வோம்.

**டி, என். ஏ., எத்தகைய பொருள்**

டி. என். ஏ. எனப்படும் ஒரு வகை நியூக்லியிக் அமிலம் உயிர்களின் உடலிலுள்ள மூலக்கூறுகள் (Molecules) எல்லாவற்றை யும் விட மிகப் பெரியது. இது முறுக்கேறிய ஒரு நீண்ட நூல். ஏணியைப் போல் காட்சியளிக்கிறது. இந்த முறுக்கை அவிழ்த்து நோக்குங்கால் அது ஏணியாகக் காணப்படுகிறது. இது பலவகையான சிறு மூலக்கூறுகளின் தொகுப்பால் ஆக்கப் பட்டுள்ளது.

அவை முறையே: (அ) பாஸ்பாரிக் அமிலம் (Phosphoric Acid) (ஆ) டி. ஆக்ஸிரைபோஸ் (Deoxyribose) என்னும் சர்க்கரைப் பொருள் (இ) சைடோசைன் (Cytosine) தைமைன் (Thymine) எனப்படும் பிரிமிடீன்கள் (Pyrimidines) (ஈ) அடினைன் (Adenine)

குவனின் (Guanine) எனப்படும் ப்யூரின்கள் (Purines). இனி இவை ஒவ்வொன்றின் அமைப்பு பற்றியும் விளக்கமாக ஆராய்வோம்.

*டி.என்.ஏ-யின் அமைப்பு*

டி.என். ஏ. யில் உள்ள மூலக் கூறுகளில் மிகச் சிறியது பாஸ்பாரிக் அமிலம் இதில் ஒரு பாஸ்பரஸ் அணுவும் மூன்று ஹைட்ராக்ஸில் (OH) மூலக்கூறுகளும் ஒரு ஆக்ஸிஜன் அணுவும் அமைந்திருக்கின்றன.

*சர்க்கரைப் பொருள்*

டி ஆக்ஸிரைபோஸ் என்பது ஒருவகைச் சர்க்கரைப் பொருள். இதில் 5 கரி (Carbon) அணுக்கள் உள்ளன. இவற்றில் இரண்டாவது கரி அணுவில் ஒரு ஹைட்ரஜன் அணுமட்டும் சேர்ந்திருக்கும். இந்த டி ஆக்ஸிரை போஸ் சர்க்கரை மற்றப் பொருள்களுடன் சேரும்போதுதான் டி ஆக்ஸிரைபோஸ் நியூக்லியிக் அமிலத்தை உருவாக்குகிறது. இந்த டி. என். ஏ. செல்லின் நியூக்லியஸை அமைக்கின்றது.

*பிரிமிடீன்கள்*

அடுத்து டி. என். ஏ. யில் காணப்படும் பிரிமிடீன்கள் எவ்வாறு அமைந்து உள்ளன என்பதைப் பார்ப்போம். பிரிமிடீன் ஒரு வளைய வடிவில் அமைந்த மூலக்கூறு. இதில் நான்கு கரி அணுக்களும் இரண்டு நைட்ரஜன் அணுக்களும் உள்ளன.

இத்தகைய வளைய அமைப்பை அடிப்படையாகக் கொண்டு சைடோசைன், தைமைன் எனப்படும் இருவகைப் பிரிமிடீன்கள் அமைக்கப்படுகின்றன. இவை அடுத்துச் சொல்லப் படும் ப்யூரின்களுடன் சேர்ந்து ஏணியின் படிகளாகின்றன.

*ப்யூரின்கள்*

மேலே குறிப்பிட்ட இரு பிரிமிடீன்களுடன் ஜோடி சேரும் மூலக்கூறுகள் ப்யூரின்கள். இந்த ப்யூரின் இருவளையங்களால் அமைந்த ஒரு மூலக்கூறு. இதில் மொத்தமாக 5 கார்பன் அணுக்களும் நான்கு ஹைட்ரஜன் அணுக்களும் சேர்ந்து இரு வளைய அமைப்பை நிலை நிறுத்துகின்றன. இத்தகைய ப்யூரீன்கள் இரண்டு வகைப்படும். அவை முறையே அடினீன், குவனீன் எனப்படுகின்றன.

அவற்றிடையே அணுமாற்றம் சிறிதளவே உள்ளது. இவ்வாறு பாஸ்பாரிக் அமிலம், டி ஆக்ஸிரைபோஸ் சர்க்கரை,

அடினீன் ஆகியன சேர்ந்து ஒரு அடினீன் நியூக்லியோடைடு (Adenine Nueleotide) உண்டாகிறது. இது போலவே அடினீனுக்குப் பதிலாக குவனீன் சேர்ந்து குவனீன் நியூக்லியோடைடும், சைடோசைன் சேர்ந்து தைமைன் நீயூக்லியோடைடும் உண்டாகின்றன.

இந்த நான்கில் அடினீனும் தைமைனும் ஜோடி சேர்ந்து டி. என். ஏ. ஏணியின் ஒரு படியை அமைக்கின்றன. அடுத்து, குவனைனும் சைடோசைனும் சேர்ந்து மற்றொரு படியை அமைக்கின்றன. இவ்வாறு ஜோடியாகச் சேர்ந்த ப்யூரின்களும் பிரிமிடீன்களும் சேருமிடம் பலவீனமானது. இந்த இடத்தில்தான் அவைகளால் பிரிய முடியும். இவ்வாறு அமைந்த படிகளை ஏணியாக அமைக்க டி ஆக்கிரைபோஸ் சர்க்கரையும் பாஸ்பேட்டும் அடுத்தடுத்துத் தொடர்ச்சியாக டி.என்.ஏ. ஏணியின் இரு கால்களை அமைக்கின்றன.

இவ்வாறு அமைந்த டி.என்.ஏ. ஏணியின் ப்யூரின்களும் பிரிமிடீன்களும் ஜோடி சேர்ந்து அமையும் விதம் பல வகையான மாற்றங்களைக் கொண்டமையலாம். எப்படியாயினும் மேலே குறிப்பிட்ட நான்கு வகையான நியூக்லியோடைடுகளைக் கொண்டுதான் பலவகைப்பட்ட பிராணிகளிலும் தாவரங்களிலும் டி.என்.ஏ.யும் அதனின்று ஜீன்களும் அமைந்து குரோமோ சோம்களை அமைக்கின்றன. ஒரு குரோமோசோமில் சுமார் 20,000க்கும் மேற்பட்ட டி.என்.ஏ. நியூக்லியோடைடுகள் பொருந்தியுள்ளன.

### பண்புகளை நிலை நிறுத்தும் டி.என்.ஏ.

இவ்வாறு மேலே சொல்லிய வண்ணம் டி.என்.ஏ. ஸெல்லை ஆட்டிப் படைக்கும் உட்கருவை அமைக்கும் ஒவ் வொரு உயிரின் அடிப்படை அமைப்பும் மாறாமல் என்றும் நிலைநிறுத்திச் சந்ததிகளுக்கும் அதைக் கொடுத்துப் பணியாற்றி வருவதால்தான் மனிதனின் டி.என்.ஏ. அவன் சந்ததியையும் புறாவின் டி. என். ஏ. அதன் சந்ததியையும், குதிரையின் டி.என்.ஏ. குதிரைகளையும், தவளையின் டி.என்.ஏ. தவளைகளையும், சுரைக்காயின் டி.என்.ஏ. சுரைக்காய்களையும், அவரை அதன் பரம் பரையையும், தினை அதன் பரம்பரையையும் அமைக்கின்றன.

தினை விதைத்தவனுக்குத் தினையையும், சுரை விதைத்தவனுக்குச் சுரைக் கொடிகளையும், தவளை, பறவை குதிரை ஆகியவற்றிற்கு அதனதன் பரம்பரைக் குணங்களையும்

சிறிதும் அடிப்படையில் பிறழாது தொடர்ந்து பல கோடிக் கணக்கான ஆண்டுகளாக இந்த டி.என்.ஏ. என்னும் விந்தைப் பொருள் கொடுத்து வந்திருக்கிறது.

இன்று உங்கள் உடற் செல்களில் உட்கருவிலுள்ள டி.என். ஏக்கள் இத்தலைமுறையில் மட்டுமே உங்களுக்குக் கிடைத்து வந்திருக்கின்றன. இன்று உங்களிடமுள்ள டி.என்.ஏ. இயற்கை பல கோடிக்கணக்கான ஆண்டுகளாகச் சேகரித்து உங்களுக்கு அளித்த செல்வமாகும்.

*டி.என். ஏ-யும் அணுக்கதிர் வீச்சும்*

இவ்வாறு அணுக்களால் ஆக்கப்பட்ட டி.என்.ஏ. எல்லா அணுக்களைப் போன்றே செயலாற்றுகின்றது. அணுகுண்டு வெடித்துக் கதிர் வீச்சு ஏற்படும் போது நமது டி.என்.ஏ. க்கள். பெருமளவு பாதிக்கப்பட்டு நம் சந்ததிகளின் அமைப்பையே மாற்ற முடியும். சென்ற இரண்டாவது உலகப்போரில் ஜப்பானில் ஹிரோசிமா, நாகசாகியில் வெடித்த அணுக்குண்டால் மக்கள் கதிர் வீச்சுக்குள்ளாகி அது அவர்களின் சந்ததிகளைப் பாதித்துப் பல பெரும் குறைகளை ஏற்படுத்தியுள்ளன.

ஆகவே, உயிர்களின் அடிப்படையான டி.என். ஏயின் அமைப்பையே பாதித்து உயிரினங்களின் நாசத்திற்கு வழிகோலும் அணுகுண்டுகளை ஒழித்துக் கட்ட ஐக்கிய நாடுகள் முயல்வதில் வியப்பொன்றுமில்லை.

*பின்னுரை*

இதுவரை நீங்கள் படித்தது உயிரியலையும் (Biology) வேதியியலையும் (Chemistry) சார்ந்த அறிவியல் பகுதியாகும். இதனை உயிரி வேதியியல் (Biochemistry) என்கிறோம். இது போன்ற முக்கிய அடிப்படை ஆராய்ச்சிகள் எவ்வளவோ தற்காலத்தில் நிகழ்ந்திருக்கின்றன. இத்துறையை அறிய உயிரியலும், வேதியியலும் நன்கறிந்தவர்களால் மட்டும் முடியும். தொடர்ந்து சிறந்த ஆராய்ச்சிகளையும் நிகழ்த்த முடியும். இவ்வாராய்ச்சிகளின் பயன் நமக்கு இனிக் கைமேல் கிடைக்கும்.

சமீபத்தில் அறிஞர் ஹரிகோவிந் கரோனாவும் (Dr. HariGovind Karona) கூட இந்த D.N.A.-க்களைச் செயற்கை முறையில், வேதியியல் கூடங்களில் தோற்றுவித்து வெற்றி கண்டவராவர். அதற்கு அவர் நோபல் பரிசு பெற்றது உலகறியும்.

இத்தகைய புதிய கண்டுபிடிப்புகளை எல்லாம் நாம் எளிதாகத் தமிழில் எழுத முடியும். அவ்வப்போது வெளியாகும் நூதன புதிய ஆராய்ச்சிகளை நம் மொழியிலும் எழுதிக் கொண்டே இருக்கவும், இத்துறையில் ஆற்றல் மிகுந்தவர்கள் பணிபுரிய வாய்ப்புக்களும் இருக்க வேண்டும்.

ஆங்கிலம், ஜெர்மனி, பிரஞ்சு. ருஷ்யா, ஜப்பான் மொழிகளில் அன்றாடம் எத்தனையோ புதிய ஆராய்ச்சிகள் செய்யப்பட்டுக் கருத்துரைகள் பிரசுரமாகின்றன. இவற்றையும் நாம் தமிழில் எழுதி அறிய முடியும்.

இத்தகைய நுண்ணிய ஆராய்ச்சிகளைத் தமிழில் படைக்கும்போது மூல வார்த்தைகளை ஆங்காங்கே அப்படியே தமிழில் எழுதிவிடுகிறோம் (Translation). ஒரு சிலவற்றிற்குத் தமிழ் வார்த்தைகளிருப்பின் அவற்றைக் கையாளுகிறோம்.

உயிரியலைப் பற்றியும் வேதியியலைப் பற்றியும் அறியாதவர். மேலேயுள்ள கட்டுரை தமிழிலே எழுதியிருந்தும் கூடப் படிக்க ஆரம்பிக்கும்போது புரியாமலிருக்கும்; தொடர்ந்து படிக்க ஆவல் ஏற்படாது. ஆகவே இத்தகைய கட்டுரைகளுக்கு முன்னோடியாக அமைந்த அடிப்படை உயிரியல் வேதியியல் கருத்துக்களை அறிந்திருக்க வேண்டும்.

ஆகவே தமிழிலே நூதன அறிவியல் பகுதிகள் எழுதப்பட்டிருந்தாலும் அவற்றைப் படிக்கும் ஆற்றலை நாம் சிறுவயதிலிருந்தே பெருக்கிக் கொண்டு வர வேண்டும்.

நம்மிடையேயும், நம் மாணவர்களிடையேயும், 'தமிழில் தான் புத்தகங்களிருக்கின்றனவே! தமிழில் எத்தனைப் பக்கங்கள் வேண்டுமானாலும் நம்மால் எழுத முடியும். என்னும் இறுமாப்பு உள்ளவர்கள் இறுதியில் அறிவியல் சோதனைக் காலங்களில் தமிழ் அறிந்தும், கருத்துக்களை அறியாத நிலையில் தவிக்கின்றனர்.

இதுபோன்றே ஆங்கிலத்திலேயே இளமை முதல் பயின்று நம் மாணவர்கள் கல்லூரியிலும் ஆங்கிலத்தில் பயிலும்போது; அவர்களால் கருத்துக்களைத் தமிழில் பள்ளியில் பயின்று மாணவர்களை விட எளிதாக அறிய முடிந்தாலும் அறிந்து அவற்றை அவர்கள் அப்போதே மறக்கின்றனர். இறுதியில் தேர்வுகளில் பரிதாபமாகக் குறைந்த எண்களையே பெற்றுத் தோற்கின்றனர். ஆனால் பள்ளியில் தமிழில் பயின்றவர்கள் கல்லூரியில் பெருங் கஷ்டங்களிடையே ஆங்கிலத்தில்

பயின்றாலும் இவர்கள் முன் சொன்ன ஆங்கில 'மேதாவி'களை விடப் பெருமளவில் முதல் வகுப்பில் தேர்ச்சியுறு கின்றனர். இவர்களில் முன்னவரை முயலுடனும், பின்னவரை ஆமையுடனும் ஒப்பிட்டு முதல் படிவத்தில் நாம் எல்லோரும் படித்த முயல் ஆமை ஓட்டப் பந்தயத்தை நினைவு கூர்ந்து நகைக்கலாமல்லவா!

ஆகவே ஆங்கிலம் நன்கறிந்தவர் 'ஆங்கிலம் தானே' என்றும் தமிழறிந்தவர் தமிழில் தானே கூறுகிறோம் என்றும் அலட்சியமாக உறங்கி வழிந்தால் நாமும் நம் மொழியும் உறங்கும். 'தமிழ் வாழ்க' எனக் கோஷமிட்டு என்ன பயன்.

இதனால்தான் பாரதியாரும்

''கல்வியை விலை போட்டு வாங்கவா முடியும் - பாப்பா எனக்கூறிச் சீரியக்கருத்தைத் தெளிவாக நமக்கு விளக்குகிறார்.

ஆகவே தமிழில் பயிலும் போதும் அறிவியல் தன் நுணுக்கத்தைக் குறைத்துக் கொள்வதில்லை. நம் அறிவு பெறுக நாம் தான் உழைக்க வேண்டும், தமிழில் நுண்ணிய கருத்துக்களை அறிந்து அறிவுறுத்த வேண்டும்.

தமிழில் நாம் எல்லாவற்றையும் எழுத முடியும் என்பதைக் கண்டோம். ஆனால் 'தமிழில் தானே படிக்கிறோம், தமிழில் தானே எழுதுகிறோம்' என்கிற துல்லிய எண்ணத்தை வளர்க்காமல்; செய்வனவற்றைத் திருந்தச் செய்து, நாம் முன்னேறி, நம் மொழியையும் முன்னேற்றுவோமாக. தமிழிலேயே அறிவியல் கருத்துக்களைக் கற்று, அறிந்து ஆராய்ச்சிகளையும் வெளியிடுவோமாக. அப்போது உலகம் தமிழின் பெருமையை அறியும்.

இரா. இராமலிங்கம்
அரசினர் கலைக்கல்லூரி
விருத்தாசலம்

# குறுநாவல்

''குறுநாவல்'' என்பது ''இருபதாம் நூற்றாண்டு இலக்கிய'' வகையில் ஒரு புதிய முயற்சியாகும். இது, தமிழ் மொழியில் இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியது. முற்றிலும் பத்திரிக்கை உலகால் இது குறிப்பிடத்தக்க வளர்ச்சியைப் பெற்றிருக்கிறது.

**குறுநாவல் என்றால் என்ன?**

குறுநாவல் இலக்கிய வகை, சிறு கதைக்கும் நாவலுக்கும் இடையே வைத்து எண்ணப்படுகிறது. ''குறுகிய வடிவம் உள்ள நாவல்'' என்பது இதன் விளக்கமாகத் தரப்பட்டாலும், நீண்ட சிறு கதைகளும் குறுநாவல் பிரிவுடன் சேர்க்கப்படுகின்றன. இலக்கிய உலகில் பெரும்பான்மையாகக் குறுநாவல் என்ற பெயர் வழங்கப்பட்டாலும், 'நெடுங்கதை'[1] என்றும் 'முழுநாவல்'[2] என்றும் சில பத்திரிக்கைகளால் இது வழங்கப்படுவதும் நோக்கத்தக்கது. ''நெடுங்கதை'' என அழைக்கும் கல்கி இதழ், இவ்வகை இலக்கியம் சிறு கதையின் ஒரு பிரிவாக இதை எண்ணுகிறது, எனலாம். ''முழுநாவல்'' என்ற பெயர் ஆனந்த விகடனில் காணப்படுகிறது. முழுக்கதையும் ஒரே - இதழில் தரப்பட்டுள்ளது. தற்பொழுது (1968-69) 'மாதத்தொடர் கதை'[3] என்ற ஒரு பிரிவை ஆனந்தவிகடன் அறிமுகப்படுத்தியுள்ளது. குறைந்தது நான்கு இதழ்களில் இப்பிரிவு தொடர்ந்து வெளியிடப்படுகிறது. இதுவும் குறுநாவல் பிரிவுடன் சேர்க்கப் பட வேண்டிய ஒன்று எனக் கருதுகிறேன்.

**தோற்றமும் வளர்ச்சியும்**

சிறுகதை, நாவல் உலகில் ஏற்பட்ட ஒரு ''இலக்கணமீறலே'' குறுநாவல் தோற்றத்திற்குரிய அடிப்படைக் காரணம். வார - மாத இதழ்கள் - வெளியிட்ட சிறப்பு இதழ்களால் இக்குறுநாவல் வகை

வளர்ந்தது. இது தொடக்க காலத்தில் வார - மாத இதழ்களின் சிறப்பு இதழ்களில் மட்டுமே வெளியாயிற்று. ஆனால், தற்பொழுது சாதாரண இதழ்கள் கூடக் குறுநாவல் வெளியிடுவது நோக்க, இதன் வளர்ச்சி தெளிவாகிறது.[4]

''குமுதம்'' குறுநாவலைச் சிறப்பு இதழில் வெளியிடும் வழக்கத்தை முதன் முதலில் தோற்றுவித்தது. பின்னர், பொதுவாக எல்லாத் தமிழ் வார - மாத இதழ்களும் தங்களுடைய சிறப்பு இதழ்களிலும், சாதாரண இதழ்களிலும் வெளியிடத் துவங்கின.

ஆரம்ப காலத்தில் வெளியான குறுநாவல்களை நோக்க, அவற்றில் மிகுதியாகக் கலை நுணுக்கம் காணப்படவில்லை என்றே கூறல் வேண்டும். அவற்றில் மிகுதியான பக்கங்களை நிரப்ப வேண்டும் என்ற நோக்கமே காணப்படுகிறது. பின்னர் வெளியானவற்றில் புதிய உத்திகளும் கலை - நுணுக்கமும் காணப்படுகின்றன. இதுவும் குறுநாவல் வளர்ச்சியைத் தெளிவாக்குகிறது எனலாம்.

**சிறுகதை - நாவல் - குறுநாவல்**

உரைநடையின் ஒரு பிரிவே சிறுகதையும் நாவலும்; இவ்வாறு இவைகள் ஒரு பிரிவைச் சார்ந்திருந்தாலும் இவ் விரண்டிடத்தும் சில தனித் தன்மைகள் காணப்படுகின்றன. நாவலிலிருந்து சிறு கதை, கதையில் காணப்படும் ஒருமைப்பாடு, சமநிலை, பாத்திரங்கள், கதையின் அளவு ஆகிய இவற்றால் வேறுபடுகிறது.

சிறுகதையின் அளவைப் பற்றி இருவிதக் கருத்துக்கள் சிறுகதைத் திறனாய்வு உலகில் காணப்படுகின்றன.

1) ஒரு சிலர் சிறுகதைக்குச் சிற்றெல்லை பேரெல்லை குறித்துள்ளனர். சிறுகதை என்பது எட்கர் ஆலன் போவின் கருத்துப்படி அரை மணி நேரம் முதல் ஒன்று அல்லது இரண்டு மணி நேரத்தில் படித்து முடிக்கக்கூடியதாக இருத்தல் வேண்டும். பிரான்சின் கனோவி என்பவர் தம்முடைய இலக்கிய வகை என்ற நூலில் பன்னிரண்டாயிரம் சொற்களுக்கு மேற்படாமல் சிறுகதை எழுதப்படல் வேண்டும் என்று கூறியுள்ளார்.

2) இவ்வாறு சிறுகதைக்குக் காலவரையறையோ, சொல்வரையறையோ குறித்தல் கூடாது. ஒருமைப்பாட்டு உணர்வு சிறுகதையில் காக்கப்படுமாயின், அது எத்தனைப் பக்கங்கள் உடையதாக இருந்தாலும் பொருட்படுத்தக் கூடாது.

சிறுகதை ஆசிரியன் தான் எடுத்துக்கொண்ட ''கதைக் கருவை''க் கலை நுணுக்கத்தோடு தெளிவாய்க் கூறுவதில்தான் நாட்டம் செலுத்த வேண்டுமே தவிர, பக்க வரையறைக்குள் அடங்க வேண்டும் என்று அஞ்சிக் கொண்டே எழுதுவது தவறு.

இரண்டாம் வகை எண்ணமும் சிறுகதையின் ஆரம்ப காலத்திலேயே இருந்திருக்கிறது எனலாம். மாபசான், அன்டன் செக்காவ், ஜேம்ஸ்ஜாய்ஸ், எமிங்வே போன்ற குறிக்கத்தக்க தொடக்ககாலச் சிறுகதை எழுத்தாளர்கள் நீண்ட சிறுகதை களையும் எழுதியுள்ளனர். ஆயினும் அத்தொடக்ககாலச் சிறுகதை எழுத்தாளர்கள் தங்களுடைய நீண்ட சிறுகதைகளைச் சிறு கதைகள் என்றே அழைத்தனர். தாங்கள் எழுதிய சிறிய கதைகளில் (பக்க அளவால் சிறிய கதைகள்) இருந்து இவற்றினை வேறு படுத்திக் காண முனையவில்லை. 'ஜீவா' என்ற தமிழ் எழுத்தாளர் ''உயிரோவியம்'' என்ற தம் கதையைச் சிறுகதை என்றே குறிப்பிட்டார்[5] என்பதே இங்கு நினைவுறுத்த விரும்புகிறேன்.

சில நேரங்களில் சிறுகதை எழுத்தாளர் தேர்ந்தெடுக்கும் கதைக்கரு வலுவுடையதாக இருக்கும். தேர்ந்தெடுத்த கதைக் கருவில் உள்ள நிகழ்ச்சிகளை விளக்கிட, உணர்ச்சிகளைப் பிரதி பலித்திட, வருணனைகளைப் படம் பிடித்துக் காட்டிடச் சிறுகதை ஆசிரியர் முனைகின்றபோது, சிறுகதை சிறிய கதையாக இல்லாது நீண்ட கதையாக மாறிவிடுகிறது. இக்காரணத்தினால் தான் மேலே கூறிய நீண்ட சிறுகதைகள் எழுந்தன எனலாம். இவ்வாறு எழுதப் பட்ட நீண்ட சிறுகதைகளைத் தற்பொழுது "Novella" என அழைக் கின்றனர். "Novella" என்பதற்கு ''நீண்ட சிறுகதைகள்'' என்று பொருள் கொள்ளப்படுகிறது.[6]

இவ்வாறு சிறுகதையில் ஒரு புதிய வடிவம் கிளைத்தது போல நாவலிலும் தோன்றியது. நாவலுக்கும் சிறு கதைக்கும் இடைப்பட்ட நிலையில் பாத்திரங்களும் நிகழ்ச்சி அமைப்பும் உடைய இவ்வகைப் பிரிவு, குறுநாவல்கள் என அழைக்கப் பட்டன. நீண்ட சிறுகதையும், குறுகிய வடிவம் பெற்ற குறு நாவலும் ஒருதுறைதான்; அவை ''குறுநாவல்'' என்றே - அழைக்கப்படலாம் எனக்கருதுகிறார், ச. செந்தில்நாதன்.[7]

*இரு பிரிவுகள்*

நான் பல்வேறு எழுத்தாளர்கள் பல்வேறு காலங்களில் எழுதிய நாற்பதற்கும் மேற்பட்ட குறுநாவல்களை

எடுத்துக்கொண்டு ஆய்ந்தபோது அவைகளில் இரண்டு பிரிவுகள் இருப்பதும் தெளிவாகத் தெரிகிறது.

ஒரு பிரிவு நீண்ட சிறுகதைகள்;[8] மற்றொரு பிரிவு குறுகிய வடிவம் பெற்ற நாவல்கள்.[9] நீண்ட சிறுகதைகளைக் குறுநாவல் எனப்பெயரிட்டு வழங்கும் வழக்கம் அண்மைக்காலத்ததாக இருக்கிறது. தீபம் இதழின் ஆசிரியர் - நா. பார்த்தசாரதி எழுதிய குறுநாவல்களும், அவர் தன்னுடைய இதழில் வெளியிட்ட குறுநாவல்களும் ''நீண்ட சிறுகதை'' என்ற பிரிவில் சேர்க்கப்பட வேண்டியவைகள். ஜெயகாந்தன் குறுநாவல்கள் குறுகிய வடிவம் பெற்ற நாவல்கள் எனலாம்.

நீண்ட சிறுகதைகளையும் குறுநாவலுடன் சேர்த்து எண்ணும் எண்ணம் தொடர்ந்து பின்பற்றப்படுமா? தொடக்க காலத்தி லேயே இரண்டு பிரிவுகளுக்கும் மிக ஆழமாய்ப் பிரிந்து காணப் படுவதால், குறைந்த ஆண்டுகளுக்கு உள்ளாகவே இலக்கியத் திறனாய்வாளர்கள் இவ்விரண்டையும் தனித்தனியே எண்ண முற்படலாம் என்பது என் கருத்து.

*முடிவுரை*

''இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்'' என்பது பழந்தமிழ் ஆசிரியர்களின் கருத்து. இக்கருத்து குறுநாவல் துறையில் நன்கு பொருந்திக் காணப்படுகிறது. பல முயற்சிகள் எழுந்த பிறகு, குறுநாவலுக்குரிய இலக்கணத்தை வரையறுக்கும் முயற்சியை நாம் காண்கின்றோம். எதிர்காலத்தில் குறுநாவல்துறை நன்கு வளர்ச்சி பெறுவதோடு, குறுநாவல் என்ற வகை எழுவதற்கு முன்னர் எழுதப்பட்ட சில சிறுகதைகள், நாவல்கள் பற்றி மாறுபட்ட கருத்துக்கள் எழக்கூடும். புதுமைப்பித்தன் எழுதிய ''துன்பக்கேணி'' போன்ற சிறு கதைகள் அறிஞர் அண்ணாவின் ''கபோதிபுரத்துக் காதல்'' போன்ற நாவல்கள், சிறுகதைகள் நாவல் என வழக்கப்படாது, 'குறுநாவல்' என வழங்கப்படலாம் என்றே கருதுகிறேன்.

*குறிப்புகள்*

1. கொம்புத்தேன் (அகிலன்)
   புரட்சி (கி. இராசேந்திரன்)
   வெனிஸ் ஓவியன் (சோமு)
2. கார்த்தியாயினி (எம்.பி. சுப்பிரமணியன்)
   பிரயாணம் (எஸ். வெங்கடராமன்)

3. மகாத்மாவைத் தேடி (நா. பார்த்தசாரதி)
   வாழ்க்கை ஒரு ரயில்வே ஸ்டேசன் (க. பஞ்சாபகேசன்)

4. கண்ணதாசன், தீபம் ஆகிய மாத இதழ்களில் பெரும்பான்மையாக ஒவ்வொரு மாதமும் குறுநாவல் வெளியாகிறது.

5. உயிரோவியம் முன்னுரை காண்க.

6. தமிழ்ச் சிறுகதைகள் - ஒரு மதிப்பீடு (ச. செந்தில்நாதன்), பக்கம் 23.

7. தமிழ்ச் சிறுகதைகள் - ஒரு மதிப்பீடு, பக்கம் 22.

8. ஊற்றுக்கள் (பக்கம் 16), டிப்ளமேட் (பக்கம் 12), தொனி (பக்கம் 13) நாற்பது கோடி ஏழைகள் (பக்கம் 14)

9. உன்னைப்போல் ஒருவன் (பக்கம் 54), ஆலமண்டபம் (பக்கம் 51)

மா.ரா. இளங்கோவன்
சென்னை

# இருபதாம் நூற்றாண்டு ஆற்றுப்படை இலக்கியங்கள்

வறுமையில் உழன்று வருந்துவோர் என்றும் உண்டு. வறியவர்களை ஆதரித்துப் புகழ்பெற விரும்பும் செல்வரும் என்றும் உண்டு. இவ்விரு திறத்தார் தம் வாழ்வமைப்பே ஆற்றுப்படை இலக்கியங்களின் தோற்றத்துக்குக் காரணமாகும். பசித்த ஒருவன் தன் பசியைப் போக்கிக் கொள்ளத் துடிக்கின்றான். அவனுக்குத் துணையாகி நின்றிடச் 'செல்வ மணம்' துடிக்கின்றது. அதனால் பசித்தவன் மகிழ்கிறான். பொன்னும் பிறவும் கொண்டு மீளும் அவன் தன்னைப் போலவே வழியில் பசித்திருப்போரைக் காணின் இரக்கம் கொள்கிறான். முன்பு அவனிடம் இல்லாத இயல்பு அது; இருக்க வாய்ப்பும் இல்லை. இப்போது அவன் வறியவனல்லன். எனவேதான், தன் முன்னர் இருப்பவனை நோக்கித் தன் முன்னைய நிலையைக் கூறி, அதுபோகத் துணையாகி நின்ற வள்ளலைப்பற்றியும் சொல்லி அவரிடம் சென்று பரிசில் பெற்று நலம் பெறுமாறு கூறுகின்றான். அவ்வாறு கூறும்போது தம் பயணம்பற்றி மிகத் தெளிவாகக் கூறுகிறான். இவ்வாறு தொடங்கிய நிலையே ஆற்றுப்படை இலக்கியங் களைப் படைத்தது.

சங்க இலக்கியங்களில் புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் ஆற்றுப்படைச் செய்யுட்களைக் காண்கிறோம். புறநானூற்றில் பாணாற்றுப்படை என்னும் வகையில் 7 பாடல்களும் (புறம் 68, 69, 70, 138, 141, 155, 180) விறலியாற்றுப்படை என்னும் வகையில் 4 பாடல்களும் (புறம் 64, 103, 105, 133) புலவராற்றுப்படையாக 1 பாடலும் (புறம் 48) உள்ளன. பதிற்றுப்பத்திலும் பாணாற்றுப்படை, விறலியாற்றுப் படையாகச் சில பாடற்பகுதிகள் உள்ளன. பத்துப்பாட்டில்தான் ஐந்து ஆற்றுப்படைகள் உள்ளன. அவை ஒவ்வொன்றும் ஒன்றுக்கு மேற்பட்ட வரிகளைக் கொண்டு நீண்டவையாகும்.

இருபதாம் நூற்றாண்டிலும் ஆற்றுப்படை இலக்கியங்கள் தோன்றியுள்ளன. சங்க காலத்திற்குப் பின்னர் இப்போதுதான் அத்தகைய நூல்கள் தோன்றி உள்ளன என்பதும் பொருந்தும். இந்நூற்றாண்டில் வெளிவந்துள்ள பதினைந்து ஆற்றுப்படை நூல்களுள் சில சங்ககால ஆற்றுப்படை நூல்களைப் போலப் பசித்தவனை ஆற்றுப்படுத்துவனவாக உள்ளன. சில கல்வியில் ஆர்வம் கொண்டவரைத் தக்காரிடம் ஆற்றுப்படுத்துகின்றன. சில திருமாலிடமும், முருகனிடமும் பக்தி கொள்ளுமாறு ஆற்றுப் படுத்துகின்றன. சில தமிழ் மொழியிடமும், இயற்கை அன்னையிடம் ஆற்றுப்படுத்துகின்றன. அவையாவும் ஆழ்ந்த சுவையும் தெளிந்த பொருளும் உடையவை. இனி அவைபற்றி அறிவோம்!

மாணாக்கர் ஆற்றுப்படை என்பது தான் இந்நூற்றாண்டில் தோன்றிய முதல் ஆற்றுப்படை நூலாகும். இது, கும்பகோணம் நகர உயர்பள்ளித் தமிழாசிரியரான பின்னத்தூர் ஏ. நாராயணசாமி ஐயர் என்பவரால் இயற்றப்பட்டது. திரு. ஐயர் அவர்கள் இப் பள்ளியில் பணியாற்றிய போது, அதாவது கி.பி. 1900ஆம் ஆண்டில் இதனை இயற்றினார். இது 335 வரிகளைக் கொண்டது. கல்வியில் மிகுந்த ஆர்வம் கொண்டு வசதிகளற்றுத் துன்புறும் மாணவன் ஒருவனை நோக்கி, கும்பகோணம் நகர உயர்பள்ளியில் படித்துப் பட்டம் பெற்று உயர் பதவியில் உள்ள அதிகாரி ஒருவர், அவனை அப்பள்ளிக்குச் சென்று அங்குள்ள ஆசிரியர்கள் துணை பெற்றுக் கல்வி கற்றுச் சிறக்குமாறு கூறுகின்றார் என்பதே இந்த ஆற்றுப்படையின் கருத்தாகும்.

தனித்த ஒரு மனிதரைப் பற்றிச் சுட்டிக் கூறாமல் பொதுவாக ஒரு கல்வி நிலையத்தையே கூறி ஆற்றுப்படுத்திய பெருமை இதற்கு உரியதாகும்.

புலவராற்றுப்படை என்பது மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரான குலாம் காதர் நாவலர் என்பவரால் எழுதப்பட்டு 1903-ஆம் ஆண்டு வெளிஆயிற்று. இதில் 220 வரிகள் உள்ளன. நாவலர் அவர்கள் இவ்வாற்றுப்படையைத் தமிழ்ச் சங்கத்திலேயே அரங்கேற்றினார். இதில் இன்றுள்ள மதுரைத் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தவரான பாண்டித் துரைத் தேவரின் மொழிப்பற்று, கொடைத் தன்மை, இயல்புகள் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. சில இடங்களில் நாவலர் அவர்கள் விளக்க உரைகளும் தந்துள்ளார். தொல்காப்பியம்,

பட்டினப்பாலை போன்ற இலக்கியங்களிலிருந்தும் அவர் பல மேற்கோள்களைத் தந்துள்ளார்.

மன்பதை ஆற்றுப்படை என்பது வேலூர் ஊரிசு கல்லூரித் தமிழாசிரியரான திரு. பி.கே. சீனிவாசாச்சாரியாரால் 1907-ஆம் ஆண்டில் இயற்றப்பட்டதாகும். மிகுதியான மக்கள் என்பதையே 'மன்பதை' என்பது குறிப்பிடுகின்றது. பாலாற்றின் வடகரையில் உள்ள, இன்று பள்ளி கொண்டான் என்று வழங்கப்படும், வட அரங்கத்தில் கோவில் கொண்டுள்ள திருமாலிடம் மக்களை - மன் பதையே ஆற்றுப்படுத்தும் இந்நூலில் 400 வரிகள் உள்ளன. பெறு தற்கரிய மனித வாழ்க்கையைப் பெற்றவர்கள் அதன் நிலையா மையை உணர்ந்து இறைவன்பால் பற்றுக் கொண்டு பேரின்ப நெறி சேர்தல் வேண்டும் என்பதே இவ்வாற்றுப் படையின் கருத்தாகும். நாலடியார், பகவத்கீதை, கம்ப ராமாயணம், பெரிய திருமொழி முதலிய நூல்களிலிருந்து திரு. சீனிவாசாச்சாரியார் பல மேற்கோள்களைத் தந்துள்ளார்.

ஆசான் ஆற்றுப்படை என்பது, தம் நெஞ்சைத் தஞ்சையில் உள்ள செயின்ட் பீட்டர் உயர்பள்ளித் தமிழ் ஆசிரியரும் தம் ஆசிரியருமான திரு. ஆர். சுப்பிரமணிய ஐயர் என்பவரிடம் கரந்தைக் கவியரசர் திரு. ரா. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள் ஆற்றுப்படுத்துவதாகும். 1910-ஆம் ஆண்டில் எழுதப்பட்ட இந்நூலில் உள்ள வரிகள் 108. இதில் உள்ள அருஞ்சொற்களுக்கு ஆசிரியரே விளக்கம் தந்துள்ளார். மாணாக்கர் - ஆசிரியர் உறவு பல்வேறுபட்ட நிலையில் உள்ள இன்றைய சூழலில் இவ்வாற்றுப்படை மாணவர் உலகுக்கு நல்லதொரு நெறி காட்டியாக விளங்கக் கூடும் என்னலாம். ஆசிரியரால் நலம் பல பெற்ற மாணவர், மேலும் பல மாணவர்கள் அவ்வாசிரியரை அணுகி, நன்மைகள் பெற வேண்டும் என்னும் விழைவு கொள்வது உயர்ந்த நிலையே ஆகும் அல்லவா?

புலவராற்றுப்படை என்பது ஆண்டிப்பட்டி பெருநிலக் கிழார் திரு. பெத்தாச்சி செட்டியார் என்பவரிடம் பரிசில் பெற்று வளம் பெற்ற புலவர் ஒருவர், ஏழ்மை மிக்க புலவர் ஒருவரை அவரிடம் அனுப்புவதாக அமைந்துள்ளது. இதன் ஆசிரியர் திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்த அமிர்தம் சுந்தரநாத பிள்ளை என்பவராவார். 1916-ஆம் ஆண்டில் வெளியான இந்நூல் 934 வரிகளைக் கொண்டுள்ளது. அயல் மொழிகளின் செல்வாக்கால் தாய்மொழியாம் தமிழ் அடைந்துள்ள நிலை இதில் தெளிவாக விளக்கப்படுகின்றது.

தமிழராய்ப் பிறந்தும், தமிழ் மொழியால் வாழ்வு பெற்றும் சிலர் தமிழ்மொழி வளர்ச்சிக்குத் துணை நில்லாமலும், தமிழறிந்த வர்களைப் போற்றாமலும் இருப்பதைத் தாம் மிகுதியாகக் கண்டிப்பதாக இவ்வாசிரியர் மிகுந்த துணிவுடன் கூறியுள்ளார். அத்தகையோரை அவர் புல்லர், கயவர், மூர்க்கர், மடையர், கபடர் என்றெல்லாம் பழித்துச் சுட்டுகின்றார். புலவர்களின் ஏழ்மை நிலையை விளக்கும் இந்நூலில் உள்ள அறுபதுக்கும் மேற்பட்ட வரிகள் மிகுந்த அவலத்தைப் பயக்கின்றன.

வரமுருகாற்றுப்படை என்பது தஞ்சாவூரைச் சேர்ந்த காலஞ்சென்ற பழநிவேல் பிள்ளை என்பவரால் இயற்றப் பட்டதாகும். ''வரமருள் சோலை மலைகிழவோனே'' என்று முடியும் இறுதி வரியைக் கொண்டமையால் இது, வர முருகாற்றுப்படை என்னும் பெயர் பெற்றது. 1918-ஆம் ஆண்டில் வெளியான இந்நூலில் 384 வரிகள் உள்ளன.

முருகப் பெருமானின் அருளைப் பெற வேண்டும் என்று விரும்பிய அடியவனுக்கு, முருகனருள் பெற்று நலம் பெற்ற அடியவன் ஒருவன், முருகன் எழுந்தருளியுள்ள திருப் பரங்குன்றம், திருச்சீரலைவாய், திரு ஆவினன் குடி, திருவேரகம், குன்று தோராடல், திருச்சோலைமலை எனப்படும் பழமுதிர்ச் சோலை ஆகிய திருத்தலங்களின் பெருமையைக் கூறி அங் கெல்லாம் சென்று கண்டு, வணங்கி, அவனருளைப் பெற்று வாழ வாழ்த்துகின்றான் என்னும் அமைப்பு உடையதாகும் இந்த ஆற்றுப்படை.

தமிழ் மகள் ஆற்றுப்படை என்பது மதுரைத் தியாகராசர் கல்லூரியில் பணி புரிந்து ஓய்வு பெற்றுள்ள தமிழ்ப் பேராசிரியர் திரு.அ.கி. பரந்தாமனார் அவர்களால் 1926-ஆம் ஆண்டில் எழுதப்பட்டதாகும். 189 வரிகளைக் கொண்ட இந்நூல், தமிழ் மொழியின் பெருமைகளைக் கூறுவதாகும். அது மட்டுமல்லாமல் தமிழைக் கற்போர் அதற்குரிய சிறப்பினை அளிக்காதிருப்பது பற்றியும் குறிப்பிட்டு ஆசிரியர் வருந்துகின்றார். தமிழ் மகளிடமிருந்து உயர்ந்த பரிசுகளைப் பெற்ற ஒருவன், அவளுடைய பெருமைகளையெல்லாம் கூறி அவளிடம் சென்று பரிசுகள் பெற்றுச் சிறக்குமாறு பிறிதொருவனை ஆற்றுப்படுத்தும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

''உலகின் மேடையில் இலகுற நடிக்க
நலமார் கல்வி நாடும் மாணவ,

கல்விப் பொருளை ஒல்லும் வகையெலாம்
பல்லரும் ஆண்டாய்ப் பரிந்து தேடுந''

என்று தம்முன் நிற்பவனை விளித்து,

''தண்டமிழ் மகள்பால் வண்பொருள் பெற்று
நன்னுமென் வறுமை நலிந்து மாய
உவந்து வருவன் உறுவமவ ணிருந்தே
அவளருந் தன்மை அறைகுவன், கேண்மதி''

என்று தொடங்கிப் பேசுகின்றார்.

''தமிழன்னையைச் சென்று காண். அவள் உனக்கு இன்மை இன்பமும் மறுமை இன்பமும் தருவாள். அவள் உன் உள்ளத்தில் வீர உணர்வையும் பேராற்றலையும் விளைவிப்பாள். யாக்கை நிலையாமையை எடுத்துக்கூறி இறையன்பை நீ பெறுமாறு அவள் செய்வாள். அழியாப் புகழ் பெற்று விளங்கத்தக்க வரம் தருவாள் அவள்''. என்பது ஆற்றுப்படுத்துவோனின் கூற்றாகும்.

ஞானியார் ஆற்றுப்படை என்பது சேலம் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியராய் இருந்த கவிராசப் பண்டிதர் திம்மப்ப அந்தணனார் என்பவரால் இயற்றப்பட்டது. இவர் தெலுங்குப் பிராமணர். தமிழ் இலக்கண இலக்கியங்களில் வல்லவர். இந்நூல் 281 வரிகளைக் கொண்டது. தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் வல்லவரான ஞானியார் அடிகளே இதன் தலைவர். இந்த நூலாசிரியர் ஞானியார் அடிகள் தங்கும் திருமடங்கள் இரண்டும் இடம் பெற்ற திருக்கோவலூர், திருப்பாதிரிப்புலியூர் ஆகிய இடங்களைச் சிறப்புற வருணித்துள் ளார். திருக்கோவலூர் நடுநாட்டைச் சேர்ந்தது. ஆதலின், நடுநாட்டின் இலக்கியச் சிறப்பையும் சமயச் சிறப்பையும் பாராட்டியுள்ளார். ஞானியார் அடிகளின் தோற்றம், புலமை அவர் தம் சொற்பொழிவாற்றல், உயர் பண்புகள் ஆகியவை நன் முறையில் விளக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியம், திருக்குறள், பத்துப்பாட்டு, தேவாரம் முதலான நூல்களின் அடிகளையும், கருத்துக்களையும் ஆங்காங்கு அமைத்துத் தம் திறமையை ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். அச்சிடப்படாத இவ்வாற்றுப் படைக்கு அரியதொரு விளக்கவுரையும் முன்னுரையும் எழுதி இதனை அச்சுவடிவில் கொண்டு வந்த பெருமை என் மதிப்பிற் குரிய தந்தையார் டாக்டர் மா. இராசமாணிக்கார் அவர்களுக்கு உரியதாகும்.

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்யார் ஆற்றுப்படை என்பது 649 வரிகளைக் கொண்டது. தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த 24-ஆவது பட்டமாகிய திருவார் திரு. சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்யாரிடம் பரிசுகள் மிகுதியாகப் பெற்ற ஒரு புலவர், சில புலவர்களைக் குருஞான சம்பந்தரிடம் சென்று பரிசில் பெறுமாறு ஆற்றுப்படுத்துகின்றார். திரு. ஆர் கோவிந்தசாமி பிள்ளை என்பார், திருவையாற்றில் உள்ள அரசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். இந்நூல் 1941- ஆம் ஆண்டு வெளி வந்தது. ஆசிரியரே அருஞ்சொற்களுக்கு விளக்கக் குறிப்பும் எழுதியுள்ளார்.

திருத்தொண்டர் ஆற்றுப்படை என்பது பேராசிரியர் திரு அ.கி. பரந்தாமனார் அவர்களால் இயற்றப்பட்டது. தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்களையே பேராசிரியர் திருத்தொண்டர் என்று குறிப்பிடுகின்றார். திரு.வி.க. அவர்கள் தமிழ் அறிஞர் என்பது மட்டுமல்லாமல், சிறந்த அரசியல்வாதியாகவும், தொழிற் சங்கத் தலைவராகவும் விளங்கினார். அவர் பல்பொருள் குறித்து நூற்றுக்கணக்கான சொற்பொழிவுகளாற்றி எல்லோரை யும் தம்பால் ஈர்த்தவர். திரு.வி.க. அவர்களின் அறுபத்தோராவது பிறந்த நாள் விழா 1943-ஆம் ஆண்டு கொண்டாடப்பட்டது. அப்போது மிகப் பெரியதொரு பொதுக்கூட்டத்தில் இந்த ஆற்றுப்படையைப் பேராசிரியர் அவர்கள் அரங்கேற்று வித்தார்கள். திரு.வி.க. அவர்களிடம் பணிபுரிந்து திறமைபெற்ற ஒருவர், நாட்டுக்கும் மக்களுக்கும் தொண்டு புரிய வேண்டும் என்று விரும்பும் ஒருவரை நோக்கி, ஆற்றுப்படுத்தும் இந்நூலில் 297 வரிகள் உள்ளன.

பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை பெரியபுராண அடியவர்களையே குறிக்கப்பயன்பட்ட திருத்தொண்டர் என்னும் சொல்லைப் பேராசிரியர் அ. கி. பரந்தாமனார் அவர்கள், நம் காலத்தில் வாழ்ந்து மறைந்த தமிழ்த்தென்றல் திரு.வி.க. அவர் களைக் குறிக்கப் பயன்படுத்தியது பேராசிரியர் அவர்களின் துணிவையும், திரு. வி. க. அவர்களின் தகைமையையுமே குறிக்கின்றது என்று கொள்ளலாம்.

''கலியாண சுந்தரன் கருதிய தென்றும்
உண்மைத் தொண்டே, உறுபுகழ் அன்று....
உறங்கிய தமிழரை உறங்கா வகையில்
தட்டி எழுப்பிய தண்ணருட் செல்வன்....

*சைவம் அறிந்து சமணம் அறிந்து*
*பௌத்தம் அறிந்து பௌதிகம் அறிந்து*
*சாதி சமயப் படுகுழி விழாமல்*
*சமரசம் போற்றும் பான்மைத் தமிழன்''*

என்றெல்லாம் பேராசிரியர் அவர்கள் திரு.வி.க. அவர்களைப் போற்றும் பகுதிகள் உள்ளத்தை ஈர்ப்பனவாகும்.

வடஅரங்க ஆற்றுப்படை என்பது பாலாற்றின் தென் கரையில் உள்ள பள்ளிகொண்டான் என்று கூறப்படும் வட அரங்கத்தில் கோயில் கொண்டுள்ள திருமால் பற்றிப் பாடப்பட்டதாகும். வட அரங்கம் நோக்கிப் புலவர் ஒருவர் பக்தனை ஆற்றுப்படுத்துவதால் இது இப்பெயர் பெற்றது. பண்டிதர் வி.எம். வேணு கோபால நாயுடு என்பவர் இதன் ஆசிரியர். 1948-ஆம் ஆண்டில் வெளியான இந்நூலில் 1102 வரிகள் உள்ளன. இருபதாம் நூற்றாண்டு ஆற்றுப்படை இலக்கியங்களில் இதுவே பெரியதாகும்.

நமசிவாய மூர்த்தி ஆற்றுப்படை என்பது கடலூரைச் சேர்ந்த தமிழாசிரியர் திரு.டி.ஏ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்களால் இயற்றப்பட்டதாகும். திருவாவடுதுறை மடத்தைத் தோற்று வித்தவர்தான் திருவார் திரு நமசிவாயமூர்த்தி என்பவர். அத்திருமடம் மக்களிடையே பக்திநெறி பரவுவதற்குத் துணையாக இருந்தது. திருவார் திரு. நமசிவாயமூர்த்தி அவர்களிடம் சமய அறிவு பெற்ற ஒருவரை, அவரிடம் சமய அறிவு பெற வேண்டும் என்று விரும்பும் ஒருவரை ஆற்றுப்படுத்தும்வகையில் அமைந்துள்ளது இது. திருவாவடு துறை ஆதினத் தலைவரான ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசார்ய சுவாமிகளின் முன்னிலையில் 1952-ஆம் ஆண்டில் திரு. நிவாஸாச்சாரியார் இதனை அரங்கேற்றினார். இந்நூலில் 501 வரிகள் உள்ளன. திருவாவடுதுறை ஆதினத்தின் மேற்பார்வையில் உள்ள திருவெண்ணெய் நல்லூர், சுசீந்திரம், திருப்பெருந்துறை, திருவிடை மருதூர், திருவாவடுதுறை ஆகிய இடங்களும், கயிலாயமும் இவ்வாற்றுப் படையில் மிகத்தெளிவாகக் கூறப் பட்டுள்ளன.

அன்னை இயற்கை ஆற்றப்படை என்பது பேராசிரியர் திரு. அ.கி. பரந்தாமனார் அவர்களால் எழுதப்பட்டது. 1958-ஆம் ஆண்டில் வெளியான இந்த ஆற்றுப்படையில் 303 வரிகள் உள்ளன. இயற்கையின் இன்பக் காட்சிகளில் ஈடுபட்டு மகிழ்ந்த புலவர் ஒருவர், மற்றொரு புலவரை விளித்து அவரையும்

அவ்வீடுபாடு கொள்ளுமாறு ஆற்றுப்படுத்துவதே அன்னை இயற்கை ஆற்றுப்படையாகும். இயற்கைக் கவிஞன் எனப் போற்றப்படும் வோர்ட்ஸ் வொர்த் என்பவர்தம் கவிதையைப் பதினோராம் வகுப்புப் படிக்கும்போது படித்ததன் விளைவே இயற்கையிலீடுபட்டு இன்பம் பெறும் பேரநுபவமாயிற்று என்று இவ்வாற்றுப்படை தொடங்கித் தொடர்கிறது.

''ஓர்ட்ஸ்வொர்த் கவிஞனின் ஒரு சில பாட்டைப்
பின்னரும் ஓதினேன், என்ன சொல்லுவன்!
கண்ணும் மலர்ந்தது, கருத்தும் மலர்ந்தது
மண்ணகம் மலர்ந்தது, விண்ணகம் மலர்ந்தது
தேவி இயற்கையைத் திருமிகு செல்வியை
இன்பக் கடலை என்நல் வாழ்வைக்
கண்டு களிக்கும் பேறு கண்டனன்''

என்று ஆசிரியரே தம்நிலைபற்றித் தெளிவாக்குகின்றார்.

மாணாக்கர் ஆற்றுப்படை என்பது பேராசிரியர் புதுக்கோட்டை வள்ளல் திரு. பி.ஏ. சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் பற்றிப் பேராசிரியர் சி. இலக்குவனார் பாடியதாகும். திரு. பி.ஏ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் சாதிவேறுபாடு பாராமல் எண்ணற்றோர்க்கும் கல்வியறிவு புகட்டிய பெருமக னாராவர். அவர் பெருஞ் செல்வரல்லர். ஆயினும் தாம் ஈட்டிய பொருளை ஏழ்மை மிக்க மாணவர்க்குச் செலவிடுவதையே அவர் பெரிதும் விரும்பினார். அவர் நல்லொழுக்கம் நிரம்பியவர். மனித சமுதாயத்திற்கு உண்மையான தொண்டர். ஏழை எளியவர் அவரை அடுத்துச் சென்றால் அவர் அவர்களை முகமலர்ச்சி யோடு வரவேற்று, இனிய உரைகள் கூறித் துணை நிற்பார். திரு. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் இத்தகைய நல்லியல்பு களை அவரோடு நெருங்கிப் பழகி அறிந்தவர் பெருமகனார் பேராசிரியர் திரு. சி. இலக்குவனார் அவர்கள். பேராசிரியர் அவர்கள் இந்த ஆற்றுப்படையைத் திரு. சுப்பிரமணிய பிள்ளை அவர்களுக்கு 1959-ஆம் ஆண்டு நடைபெற்ற 61-வது பிறந்தநாள் விழாவின்போது அவர் முன்னிலையிலேயே படித்துக்காட்டி அரங்கேற்றினர். பிள்ளை அவர்களின் பெருமைக்குரியநிலைகள் யாவும் தெளிவாக இவ்வாற்றுப்படையில் கூறப்பட்டிருப்ப தோடு, அவருடைய தமிழ்ப்பற்றும் தெளிவாக்கப் பட்டுள்ளது. 190 வரிகள் உள்ள இவ்வாற்றுப்படை தனி மனிதர்தம் தொண்டுணர்வையும், அதில் அவர் பெறக்கூடும் பெருவெற்றி யையும் வலியுறுத்துகின்றது.

சென்னிமலை முருகன் புலவராற்றுப்படை என்பது வித்துவான் வே.ரா. தெய்வசிகாமணி என்பவரால் இயற்றப் பட்டதாகும். 1966-ஆம் ஆண்டு சென்னிமலைத் தலபுராண வெளியீட்டுக் குழுவினரால் வெளியிடப்பட்ட இந் நூலில் 945 வரிகள் உள்ளன. ஆசிரியர் ஒவ்வொரு பிரிவிற்கும் தெளிவான விளக்கவுரை தந்து படிப்பார்க்கு ஊக்கமளிக்கின்றார். இது, பூந்துறை நாட்டின்கண்ணுள்ள குன்றுதோறாடல் பதிகளுள் ஒன்றாக விளங்கும் சென்னிமலையில் தண்டபாணியாய் வீற்றிருந்து தமது திருவடி நிழலில் உறையும் உயிர்களுக்கு இம்மை, மறுமை என்னும் இருமை இன்பங்களையும் தந்தருள் புரியும் முருகக் கடவுள்மீது பாடப்பட்டதாகும். சென்னி மலையின் சிறப்பு, தீர்த்தங்கள், தெய்வீகநிலைகள், அருளடிகளின் இயல்பு, முருகனின் திருவுருவக் காட்சி, வழிபாட்டு முறை முதலியன மிகத் தெளிவாக ஆசிரியரால் விளக்கப்பட்டுள்ளன.

தனித்தனியாகக் கண்ட ஆற்றுப்படை இலக்கியம் பற்றிய தொகுப்புப் பட்டியலைக் காண்போம்.

| எண் | நூல்பெயர் | ஆசிரியர் | அளவு | நூல்வெளி வந்த காலம் |
|---|---|---|---|---|
| 1. | மாணாக்கர் ஆற்றுப்படை | பின்னாத்தூர் நாராயணசாமி ஐயர் | 355 | 1900 |
| 2. | புலவர் ஆற்றுப்படை | நாகூர் குலாம் காதர் நாவலர் | 220 | 1903 |
| 3. | மன்பதைஆற்றுப்படை | மேலூர் பி.கே.ஸ்ரீநிவாஸச்சாரியார் | 400 | 1907 |
| 4. | ஆசான் ஆற்றுப்படை | கவியரசு ரா. வேங்கடாசலம்பிள்ளை | 108 | 1910 |
| 5. | புலவர் ஆற்றுப்படை | அமிர்தம் சுந்தரநாதபிள்ளை | 934 | 1916 |
| 6. | வரமுருகாற்றுப்படை | தஞ்சை பழநிவேல் பிள்ளை | 384 | 1918 |
| 7. | தமிழ்மகள் ஆற்றுப்படை | பேராசியர் அ.கி. பரந்தாமனார் | 189 | 1926 |
| 8. | ஞானியார் ஆற்றுப்படை | திம்மப்ப அந்தணனார் | 281 | 1939 |
| 9. | ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரியார் ஆற்றுப்படை | ராம. கோவிந்தசாமிப்பிள்ளை | 649 | 1941 |
| 10. | திருத்தொண்டர் ஆற்றுப்படை | பேராசிரியர் அ.கி. பரந்தாமனார் | 297 | 1943 |
| 11. | வடஅரங்க ஆற்றுப்படை | பி.எம். வேணுகோபால நாயுடு | 1102 | 1948 |

| 12. | நமசிவாயமூர்த்தி ஆற்றுப்படை | டி.எஸ். ஸ்ரீநிவாஸாசாச்சாரியார் | 511 | 1952 |
|---|---|---|---|---|
| 13. | அன்னை இயற்கை ஆற்றுப்படை | பேராசிரியர். அ.கி. பரந்தாமனார் | 303 | 1958 |
| 14. | மாணவர் ஆற்றுப்படை | பேராசிரியர் சி. இலக்குவனார் | 190 | 1959 |
| 15. | சென்னிமலை முருகன் | வித்துவான் வே.ரா. தெய்வ சிகாமணி | 945 | 1966 |

இவற்றை எழுதியவர்கள் அத்தனைபேரும் தமிழில் புலமை கொண்டவர்களே என்பது குறிப்பிடத்தக்கது. சங்க காலத் தமிழ்ப் புலவர்கள் காட்டிய நெறியை இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்புலவர்களும் பின்பற்றியுள்ளனர். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய ஆற்றுப்படை நூலான ''மாணாக்கர் ஆற்றுப்படை'' என்பது இத்தொகுப்பில் உள்ள ஏனைய ஆற்றுப் படைகளைக் காட்டிலும் குறிப்பிடத் தகுந்ததாக உள்ளது. மாணவன் ஒருவனை விளித்து, 'அவனை' இன்ன ஆசிரியரிடம் செல், என்று ஆற்றுப்படுத்தாமல், கல்வி நிலையம் ஒன்றினைப் பற்றிக்கூறி, அது மாணவர்தம் நல்வாழ்வுக்கு வழிவகுக்கும் என்று கூறி ஆற்றுப்படுத்தும் நிலை பொதுமையாகவும் புதுமையாகவும் உள்ளது. தனிப்பெருஞ் சிறப்பால் ஒரு கல்வி நிலையம் பலருடைய நினைவை ஈர்க்கக்கூடும் என்பது இந்த ஆற்றுப்படையால் தெரிகிறது. அறுபத்தொன்பதாண்டுகள் கடந்த பின்பும் இந்த ஆற்றுப்படைக்குத் தேவையும் சிறப்பும் இருப்பதைக் காண்பதே இதன் பெருமைக்குச் சிறந்த சான்றாகும் என்று கருதுகிறேன்.

இந்நூற்றாண்டில் மேலும் பல ஆற்றுப்படைகள் தோன்றுதல் கூடும். பயணக்கலை பெருகியுள்ள இந்நாட்களில் இத்தகைய நூல்கள் தோன்றுவது சிறப்பாகும். சங்க கால ஆற்றுப் படைகளையும், இருபதாம் நூற்றாண்டு ஆற்றுப்படைகளையும் படிக்கும்பொழுது, காலம் மனிதனுக்கு உண்டாக்கும் எண்ண வேறுபாடுகள், தேவை மாற்றங்கள் பற்றியெல்லாம் அறிகின் றோம். இலக்கியப்படைப்பு காலத்திற்கேற்பவே அமைகிறது என்ற உண்மையையும் உணர்ந்து போற்றுகிறோம்.

மு. உலகநாதன்
செந்தமிழ்க்கல்லூரி
மதுரை – 1

# தமிழெழுத்துச் சீர்திருத்தம்

தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தில் தமிழ் எழுத்துக்களை இப்படிப் புதுவிதமாக மாற்றிக் கொண்டோமானால் தமிழ் மொழி மிகச் சிறந்த உயர்தனிச் செம் மொழியாக மாற்றமுறும்.

ஆங்கில மொழியைப் போலத் தட்டெழுத்துப் பொறியிலும் லினோடைப்பிலும் அச்சு வசதியிலும் மிஞ்சி நிற்பதோடு தலையாய மொழியென்றும் தர்க்க ரீதியான வரிவடிவ எழுத்துக்களைக் கொண்ட மொழியென்றும் போற்றப்படும்.

அத்தோடு விரைந்து செல்லும் காலத்தோடு நம்மையும் இழுத்துச் செல்லும் மொழியாகவும் கருதப்படும்.

**கருத்து-1.**

தமிழ் நெட்டெழுத்துக்களை யெல்லாம் குறிப்பதற்கு காலையே (ா) இட வேண்டும்.

**கருத்து-2.**

அதனால் உயிர் நெட்டெழுத்துக்களை அ, அா, இ, இா, உ, உா, எ, எா, ெஎ, ெஎா, அய், அவ் என்று மாற்றிக் கொள்ள வேண்டும்.

**கருத்து-3.**

அதனால் உயிர்மெய்யெழுத்துக்கள் இகரத்திலிருந்து ஈகாரமாக மாறுகின்ற போது ''கி'' ''கீ'' என்பதற்குப் பதிலாக ''கி'' ''கிா'' என்று மாறுகின்றது.

**கருத்து-4.**

ஏற்கனவேயுள்ள ஈகாரக் ''கீ''யின் மேல் விலங்கு இப்போது தமிழ் மொழியில் இருந்தே விலக்கப்பட்டு விடுவதால் அதனை விலக்கி விடாமல் அதனை உகர ஓசைக்குரிய குறியீடாக மாற்றிக் கொள்ள வேண்டும்.

**கருத்து-5.**

அதனால்

க. இது அகர ஓசை

கா. இது ஆகார ஓசை

கி. இது இகர ஓசை

கிா. இது ஈகார ஓசை

கீ(கு) இது உகர ஓசை

கீா(கூ) இது ஊகார ஓசை

என்று மாற்றம் கொள்ளும். தமிழ் மொழியின் அ, இ, உ, ஆகிய மூன்று எழுத்துக்களுமே உயிர்மெய்யெழுத்துக்களாக மாறும் போது ''கா'' ''கி'' ''கீ'' என்ற இரண்டு குறியீட்டிற்குள்ளேயே அடங்கி விடுகிறது.

**கருத்து-6.**

இதனால் தமிழ்மொழியின் பல்வேறு வரிவடிவங்களாக வருகின்ற கு, கூ, சு, சூ, டு, டூ, து, தூ போன்ற உகர ஓசையை யுடைய எல்லா எழுத்துக்களுமே தன்மனம் போன போக்கில் மாறாமல் (''ி'') (கீ) என்ற குறியீட்டிற்குள்ளேயே அடங்கி உகர ஓசையையுடைய எழுத்தாகத் தன்னை அறிவிக்கின்றது.

**கருத்து-7.**

''கெ'' என்ற எழுத்து ''கே'' என்று மாறும்போது நெடு மையை உணர்த்த இருசுழிக்கொம்பைப் பெறாது காலையே (ா) பெறவேண்டுமாதலால் ''எ''கரம் ''ெ'' என்று மாற்றப்பட்டது. அதனால் க் + ெ = கெ என்றும், க் + ொ = கொ(கே) என்றும் புதிய ஒலியும் வடிவும் பெறுகிறது.

**கருத்து-8.**

அதே போன்று க் + ௌா = கௌா (கொ) என்றும் க் + ௌா = கௌா (கோ) என்றும் மாற்றப்பட்டுள்ளது.

**கருத்து-9.**

இனி, கை, கௌ என்பன கய், கவ் என்றே இன்று போலவே வழங்கப்படலாம்.

**கருத்து -10.**

இத்தகைய எனது மாற்றத்தால் உயிரும் மெய்யும் கூடிப்பிறக்கின்ற உயிர் மெய்யிலும் தர்க்க ரீதியாக அவ்விரண்டின் சாயல் தென்படுவதைக் காணலாம்.

**கருத்து -11.**

இதனால் தமிழ் மொழிக்குத் தேவையான எழுத்துக்கள் உயிரில் அ,இ,உ,ள,ளெ, (அய், அவ்) என்ற ஐந்தும் மெய்யில் பதினெட்டும் ஆய்தம் ஒன்றுமாகிய இருபத்து நான்கு எழுத்துக்களே.

**கருத்து -12.**

குறியீடுகளில்

| | | |
|---|---|---|
| மெய்ப்புள்ளி | (.) | 1 |
| இகரவிலங்கு | (ி) | 1 |
| நெடுமைஉணர்த்தும் கால் | (ா) | 1 |
| உகர விலங்கு | (ீ) | 1 |
| எகர விலங்கு | (ெ) | 1 |

ஆகிய ஐந்து மட்டுமே.

**கருத்து -13.**

எனவே தமிழ் எழுத்துக்கள் தன்னை இருபத்து நான்கு எழுத்துக்களுக்குள்ளாகவும் ஐந்து குறியீடுகளுக்குள்ளாகவும் சுருக்கிக் கொள்ள முடியும்.

**கருத்து -14.**

இச்சுருக்கம் ஆங்கில எழுத்துக்களைக் காட்டிலும் சுருங்கியது. சிறந்தது தமிழ்மொழியின் மரபும், பிறவும் வெகு தூரம் விலகிவிடாமல் ஏற்கனவேயே இருந்த குறியீடுகளையும் பிறவற்றையும் வைத்துச் செய்யப்பட்டது.

**கருத்து -15.**

இது க.

இது கா.

இது கி.

இது கிா.

இது கி(கு).

இது கீ(கூ).

இது கெ(கெ).

இது கொ(கே).

இது கொ(கொ).

இது ௌகொ(கோ).

இது கய்

இது கவ்

தமிழ் உலகம் இதனைச் சிந்தித்து முடிவு செய்ய வேண்டுகிறேன்.

**கருத்து-16. இரு குறள்**

ௌகெக் ௌகெக்க கீம்பீம் பரீவத்தீ மற்றதன்

கித் ௌதெக்க சிர்த்த விடத்தி.

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து

கீத்தாட் டவய்க்கீழாத் தற்றொ பெருஞ்செல்வம்

ௌபொக்கீம் அதீவிளிந் தற்றீ.

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அது விளிந்தற்று

**கருத்து-17.**

தமிழ் அறிஞர்கள் சிந்தித்து விடை காண்பார்களாக.

கி. கண்ணபிரான்
பூ.சா.கோ. கலைக்கல்லூரி
கோயம்புத்தூர்

# கலைச்சொற்களும் பயிற்றுமொழி மாற்றமும்

இயற்கையின் நியதிப்படி பயிற்று மொழியாக அமைவது பயிற்றுவிப்போரும், பயில்வோரும் மிக ஈடுபாடு கொண்ட மொழியேயாகும். இது இருசாராரின் தாய்மொழியாயமைவதும் இயல்பே. இது எந்நாட்டுக்கும் பொருந்தும் கருத்து. எனினும் வரலாற்றின் காரணமாக நமது நாட்டில் கல்வித் துறையில் ஆங்கிலம் பயிற்றுமொழியாக அமைந்துவிட்டது. இந்தியா முழுவதிலுமே இம்மொழி பயிற்று மொழியாக அமைந்ததும் வரன்முறையாக நடைபெற வேண்டியதாக ஆயிற்று. மேலும் உலகில் விஞ்ஞானமும் சமூக இயலில் பல துறைகளும் மேலை நாட்டில் ஏற்பட்ட தொழிற்புரட்சியின் காரணமாக வளர்ந்தன. எனவே நமது நாட்டில் மாணவர்கள் ஆங்கிலம் மூலமே இவற்றைக் கற்றனர். நம் நாட்டிலேயே உருவான நம் நாட்டு மொழிகளையும், அவற்றிலுள்ள இலக்கிய நூல்களையும் மட்டும் நம் நாட்டு மொழிகளில் பயின்றோம். மேலை நாட்டினின்றும் வந்த புதிய அறிவியல் துறைகளை நம் நாட்டு மொழிகளின் மூலம் கற்பிப்பதற்குச் சூழலோ, வசதியோ ஏற்படாமலே போய்விட்டது.

இந்தத் துறைகளை இப்பொழுது நமது மொழிகளுள் கற்பிக்க வேண்டிய நிலைவரும் பொழுது நாம் ஏற்றுக் கொள்ள வேண்டிய பொறுப்புக்களைக் கருதுவோர் மனதில் இது பெரும் பொறுப்பாகத் தோன்றுகிறது. அறிவியல் கருத்துக்களைப் புதிய பயிற்றுமொழியில் எடுத்துச் சொல்ல வேண்டியதும், (எனவே இதற்கு நம்மைத் தகுந்தவர்களாக்கிக் கொள்ளுதலும்) இவற்றை விளக்குதற்குரிய நூல்கள் பலவற்றை ஆக்குதலும், இக் கருத்துக்களைக் கல்வித்துறையில் பல நிலைகளிலும் பரவ விடுதலும், இந்தப் பொறுப்புகளிற் சில. இந்தத் துறைகளிலுள்ள

பொறுப்பை ஏற்கச் செல்லும் பொழுது முதன்முதலாக எல்லோர் கருத்திலும் எதிர்ப்படுவது ஒவ்வொரு துறையிலுள்ள கலைச் சொற்களுக்கேற்ற தமிழ்ச் சொற்களைத் தேடி எடுப்பது அல்லது ஆக்குவது எப்படி என்பதே. நெடுங்காலமாகப் பழக்கமான கருத்துக்களை வெளியிடுதற்குரிய சொற்கள் நடைமுறையில் தமிழில் (ஏன் எந்த மொழியிலும்) உண்டு. எனினும் புதிய கருத்துக்கள் தமிழில் இல்லாதபோது அவற்றிற்குரிய சொற்களை நாம் ஆக்கவேண்டும். இது பெரும் பொறுப்புத் தான்.

கலைச் சொற்கள் அனைத்தையும் தமிழில் மொழி பெயர்க்க இயலுமா என்பது பலரின் மலைப்பு. இதுவே பயிற்று மொழி மாற்றத்தை எதிர்ப்பதற்குரிய வாதமாகவும் பயன்படுகிறது சிலர்க்கு. ஆங்கிலத்தில் உள்ள கலைச் சொற்கள் ஏற்கனவே வழக்கில் உள்ளன. இவற்றைத் தமிழில் மொழி பெயர்த்தால் இம்மொழி பெயர்ப்புக்கள் ஒரேமாதிரியாக அமையாது என்ற கருத்தில் கற்போர்க்கு இடர்ப்பாடு ஏற்படலாம், என்பது ஒரு வாதம். கலைச் சொற்களில் பெரும்பாலானவை உலக, முழுவதிலும் உள்ள மொழிகளில் பொதுவாக இருப்பதால் அவற்றை மொழி பெயர்க்காமல் தற்பவமாக எழுதவேண்டும். அப்பொழுதுதான் நம் நாட்டினர் பிற நாட்டிற்குச் சென்றால் அங்குள்ள கலைகளைக் கற்பதற்கு எளிதாக இருக்கும் என்பது ஒரு கருத்து. பிற நாட்டுக்குச் சென்று கற்போர் மிகச் சிலரே இருக்க முடியும்; இவர்களின் வசதிக்காக ஏன் மிகப் பெரும்பாலானோர் ஆங்கிலச் சொற்களைக் கலைச் சொற்களாகக் கொள்ள வேண்டும்? மேலும் பிற நாட்டுக்குச் செல்பவர்கட்குக் கலைச் சொற்களில் மட்டும் ஈடுபாடு இருந்தால் போதாது. எனவே மொழி பெயர்ப்பாகக் கலைச் சொற்களை ஏற்றுக் கொள்வது வசதிதான் என்பது இதற்கு மறுப்பு.

தமிழைப்பயிற்று மொழியாக ஆக்கும்பொழுது தமிழில் கலைச் சொற்கள் இல்லை என்ற தடை எழுப்பப்படுவது எதிர்ப் பார்க்கக் கூடியதே. இதன் காரணமாகவே முதலில் உயர்நிலைப் பள்ளிகளில் தமிழில் பயிற்றுமொழியாகப் புகுத்தப்பட்ட பொழுது அரசினரும், தனியாரும் கலைச் சொற்கள் பட்டியலைத் தயாரித்தனர். 1938ல் திருநெல்வேலி, சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தினர் ஒரு கலைச் சொல்லகராதியை வெளியிட்டனர்.

1940 - ல் சென்னை அரசாங்கம் ஒரு பட்டியலை வெளியிட்டது.

1960ம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தில் பட்ட வகுப்புகளில் தமிழ் பயிற்று மொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்ட பொழுது கல்லூரித் தமிழ்க் குழு (College Tamil Committee) சில துறைகளில் கலைச் சொற்களை வெளியிட்டது.

அண்மையில் பட்ட வகுப்புகளில் தமிழ் பயிற்று மொழியாக ஏற்படும் என்ற அரசின் கொள்கையால் முதன் முறையாக பி.எஸ்ஸி வகுப்புகளில் தமிழ் பயிற்று மொழியாக ஏற்கப்பட்டுள்ளது. தற்பொழுது இதற்குரிய நூல்கள் எழுதப்பட்டு வருகின்றன. (இவை அச்சிடப்பட்டு இக்கல்வியாண்டின் தொடக்கத்தில் வெளி வருவதற்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன) இந்நூல்களில் பயன்படுவதற்குரிய கலைச் சொற்கள் அரசினரால் வெளிப்பட்டிருக்கின்றன.

இவ்வாறு அந்தந்த நேரங்களில் ஏற்படும் சில அவசர நிலைகளுக்கேற்ப வெளியிடப்பட்டவை இக்கலைச் சொல் லகராதிகள். இம்முயற்சிகள் விட்டு விட்டு நடைபெறுகின்றன என்பது வெளிப்படை. இதே நேரத்தில் இலங்கையிலும் தமிழைப் பயிற்றுமொழியாக்கும் முயற்சி நடைபெற்று வெகு காலம் முன்னரே அவர்கள் பட்ட வகுப்பு நிலையில் கலைச் சொற்களை ஆக்கி இருக்கின்றனர்.

இவ்வாறு ஏற்பட்ட கலைச் சொற்களின் பட்டியலை கூர்ந்து கவனித்தால் இவற்றில் ஒரே சொல்லுக்குப் பலப்பல சமயங்களில் வெவ்வேறு சொற்கள் மொழிபெயர்ப்பாக அமைவதை நாம் காணலாம். நாட்கள் செல்லச் செல்ல மொழி பெயர்ப்புக்களின் எண்ணிக்கையும் பெருகிக் கொண்டே போகின்றன. இதனால் ஒரு சொல்லுக்குப் பல மொழி பெயர்ப்புகள் ஏற்படுகின்றன இது இந்நிலையில் தவிர்க்க முடியாததாக இருப்பினும் நாளடைவில் தவிர்க்கப்பட வேண்டும்.

கலைச் சொற்களை ஆக்குவது மொழி பெயர்ப்பு போன்று அவ்வளவு எளிதன்று. மொழி பெயர்ப்பில் ஒரு வாக்கியம் முழுவதையும் எடுத்துக் கொண்டு அதன் கருத்து வெளிப்படுமாறு மொழி பெயர்க்க வேண்டும். கலைச் சொல்லாக்கத்தில் ஒரு சொல்லை மட்டும் மொழி பெயர்க்கின்ற நிலை ஏற்படுவதாலும், அச்சொல் ஒரு குறிப்பிட்ட துறையில் பயன்படுவதாலும், சொல் மிகப் பொருத்தமானதாக அமைதல் வேண்டும். இந்த இடர்ப்பாடுகளை நீக்கக் கலைச் சொற்களை ஆக்குவோர்க்கு வசதியாக இருக்குமாறு சில விதிகளைக் கீழே தருகிறோம்.

1. கலைச் சொற்கள் சுருக்கமாகவும் ஆனால் பொருட் செறிவும் ஆழமும் உடையதாகவும் இருக்க வேண்டும். நாளடை வில் அவை தமிழோடு தமிழாகக் கலக்கும் இயல்புடையதாக இருக்க வேண்டும்.

2. கலைச் சொல் மொழிபெயர்ப்பாக மட்டும் இருக்கக் கூடாது. கலைச் சொல் குறிக்கின்ற பொருளுக்கு விளக்கமாக அமைய வேண்டும், அதில் கருத்துத் தெளிவு இருக்கவேண்டும். உ.ம். U-tube, L-shape, J-tube முதலியவற்றிற்கு U-குழாய், L-வடிவு, J-குழாய் சதுர அமைப்பு, வளைவு அடைப்பு என்பன ஒருவகை, பகரக்குழாய், L -வடிவம், துரட்டிக் குழாய், இருபகர அடைப்பு, இரு பிறை வளைவு என்பன இன்னொரு வகை.

3. ஒரு சொல்லின் மூலத்தை அறிந்து அதற்கேற்பக் கலைச் சொற்களை ஆக்கவேண்டும். எனினும் ஒரு சொல் முதலில் ஒரு பொருளில் வழங்கப்பட்டு நாளடைவில் அச்சொல் குறிக்கின்ற துறைகள் மாறலாம், விரிவடையலாம். தற்பொழுது இப்பொருள்களை யெல்லாம் அடக்குமாறு கலைச் சொற்கள் அமைய வேண்டும்.

| (மே-ள்) | Geometry | -- | வடிவியல் |
|---|---|---|---|
| | Algebra | -- | எண் கணிதம் |
| | Chemistry | -- | (இரசாயணம்)<br>வேதியியல், இயைபியல் |
| | Economics | -- | சிக்கனவியல் |
| | Physics | -- | (பௌதிகம்), பூதநூல்<br>(பொருளியல்) |

4. வழக்கில் அடிபட்டு, தமிழ் அகராதியில் ஏறியும் ஏறாமலும் இருக்கும் திசைச் சொற்களை அப்படியே தமிழ்ச் சொற்களாக மாற்றிக் கொள்ள வேண்டும்.

(மே.ள்) சோப், ரப்பர், ரேடியோ, கமிட்டி, ராக்கெட், மோட்டார், பம்பு செட்டு, ரேடார்.

5. சில ஏட்டுச் சொற்களை - - பகுதி விகுதிகளை ஒரே மாதிரியாகப் பயன்படுத்த வேண்டும்.

| (மே-ள்) | -Scope, Gram<br>-Scopy | Grpah, Meter, Metry<br>Graphy, |
|---|---|---|

எந்த இடங்களில் மொழிபெயர்ப்பு இன்றியமையாதது என்றும், தற்பவமாக எழுதுவது இன்றியமையாதது என்றும் முடிவு கட்டிக் கலைச் சொற்களை ஆக்க வேண்டும். நாளடைவில் தற்பவமாக அமைந்த பல கலைச் சொற்கள் மொழி பெயர்ப்புப் பெறக்கூடும்.

வினைச் சொற்கள் ஒவ்வொரு மொழிக்கும் உரியன எனவே வினைச் சொற்களும், அவற்றின் அடிப்படையில் எழும் வினையாலணையும் பெயர்களும் மொழி பெயர்ப்புக்குள் அடங்கும். நன்கு பழக்கப்பட்ட பொருள்கள், குணங்கள், தொழில்கள் ஆகியனவும் மொழி பெயர்ப்புக்குள் அடங்கும். எனினும் பலருக்கும் பழக்கப்படாத, ஒரு துறையினர் மட்டுமே கற்கும் சொற்களுக்கு மொழிபெயர்ப்பு பயன்படாது. மொழிபெயர்ப்பின் நோக்கமும் நிறைவேறாது. Platinum, Cobalt, Magnesium முதலியனவற்றிற்கு மொழி பெயர்ப்பு வேண்டுவ தில்லை என்பது வெளிப்படை. இதுபோன்றே Acetic (acid), formic (acid), Vitamin முதலியனவும்.

உலக முழுவதும் ஏற்கப்பட்ட அலகுகளின் பெயர்களைத் தற்பவமாகவே எழுதுதல் வேண்டும் Volt, ampere, watt, Debye, Curie, Metre முதலியன சில மேற்கோள்கள்.

கலைச் சொல்லாக்கக் குழுக்கள் அவ்வப்போது அமைக்கப் படுகின்றன. இக்குழுவில் உள்ளோர் தங்களது துறையில் துறைபோகியவர்களாக இருப்பது இன்றியமையாதது. மேலும் இவர்கள் தமிழில் ஈடுபாடு கொண்டவர்களாக இருப்பது நலம்; இத்தகையோர் கிடைப்பது அருமை. எனினும் இத்தகை யோரை உண்டாக்குதல் நம் கடன். தமிழறிஞர் இக்குழுவில் இருப்பதும் வேண்டும். எந்தெந்தப் பொருளில் ஒரு சொல் வழங்கவேண்டும் என்பதை விளக்குவது (அக்கலைஞரால்) விஞ்ஞானியால்தான் முடியும். அச்சொல் பொருந்துமா என்பதற்கு விடையும், விளக்கமும் தருவது தமிழரறிஞராகத் தான் இருக்கமுடியும்.

கலைச் சொல்லாக்கம் ஒருவாறு முடிந்துவிட்டாலும் இக்கலைச் சொற்களை வகுப்பறையில் நிலவ விடும்பொழுது சில இடர்ப்பாடுகள் ஏற்படும். முதன் முதலில் தற்பொழுதுள்ள ஆசிரியர்கள் ஆங்கிலத்தில் விரிவுரையாற்றிப் பழக்க முள்ளவர்கள் உடனே தம் பழக்கத்தை மாற்றும்பொழுது சில இடங்களில் ஆங்கிலக் கலைச்சொற்களை அவர்கள் வெளி

யிடுவது இயற்கையாக இருக்கும். மேலும் கலைச்சொற்களை ஆங்கிலத்தில் சொல்வது இன்றியமையாதது. இன்ன ஆங்கிலச் சொல்லைத்தான் இன்ன தமிழ்ச் சொல் குறிக்கின்றது என்ற தெளிவு இருந்தால் இன்றைய நிலையில் ஆங்கில நூல்களைக் காணும் மாணவர்க்குத் தெளிவு ஏற்படும். இத்துடன் தமிழ் வாக்கிய அமைப்புக்குள் சிற்சில கலைச் சொற்கள் பொருத்த மில்லாமல் இருக்கும். ஏனெனில் பொதுவாகக் கலைச்சொற்கள் வாக்கிய அமைப்பில் பொருத்தி ஆக்கப்படாமல் தனிச்சொற் களாக மொழிபெயர்க்கப்பட்டவை. வகுப்பறையின் சூழலில் தான் இத்தகைய சிக்கல்களும், அவற்றைத் தீர்க்கும் வழிகளும் ஏற்படும். இதுபோன்றே நூல்கள் எழுதுவோர்க்கும் கலைச்சொற் களைப் பெய்து வாக்கியங்கள் எழுதும்போது அவ்வாக்கியங்கள் தமிழ்வழக்கிலிருந்து சிறிது விலகியனவாகத் தோன்றும்.

ஒரு சொல் குறிக்கின்ற பொருளை அகராதிமட்டும் ஏற்படுத்தும் என்ற நியதி இல்லை. வழக்கும் அதை முடிவு கட்டுகின்றது. Velocity என்ற சொல்லுக்கு எடுத்த எடுப்பில் வேகம் என்று மொழிபெயர்க்கலாம். எனினும் Velocity என்ற சொல் விஞ்ஞான வழக்கில் speed என்ற சொல்லினின்றும் வேறு பட்டிருக்கிறது. Velocity என்பதில் திசையும் அடங்கி இருக்கிறது. எனவே இதை நேர்வேகம், கதி என்ற சொற்கள் குறிக்கின்றன. இச்சொற்களுக்கு வழக்கு வலிமை கொடுக்கிறது. விஞ்ஞானத்தில் சாதாரணமாகச் சொல்லையோ அதன் பொருத்தத்தையோ முதன்மையாகக் கருதுவதில்லை. அச்சொல்லின் பின் இருக்கின்ற கருத்துக்களுக்குத்தான் முதன்மை. எனவே விஞ்ஞானச் சொற்கள் வழக்கில் கொண்டுள்ள பொருளை எப்பொழுதும் குறிக்கின்றன. வழக்கின் வலிமையே கலைச் சொற்களுக்கு வலிமையையும்; நிலைமைத்தன்மையையும் ஊட்டுகின்றன. இந்த வழக்கை நாம் ஏற்படுத்த வேண்டும். இது தமிழைப் பயிற்று மொழியாக ஏற்படுத்துவதாலும், மேலும் மேலும் இதைத் தொடர்ந்தும் பரவலாக ஏற்படுத்துவதாலுமே முடியும். இவை நடைபெறாத வரை கலைச் சொல்லாக்கத்தில் வேறுபாடுகளும், வாதங்களும், எதிர்வாதங்களும் நடை பெற்றுக்கொண்டே இருக்கும். பயிற்று மொழியாவதற்கு இந்த வாதாடும் வழக்கறிஞர்கள் வழிவிடும் வரை, தமிழ் காத்துக் கொண்டே இருக்கும். ஒரு வேளை பொறுமையை இழந்தாலும் இழக்கலாம்.

வழக்கில் வந்தால்தான் கலைச்சொற்களும் விஞ்ஞானத் தமிழும் தோன்றும், வளரும், செம்மையுறும் என்பதைக்

கருத்தில் கொண்டு செயலில் ஈடுபடவேண்டும். வழக்கில் வருமுன் இடர்ப்பாடுகள் ஏற்பட்டே தீரும். இவற்றைச் சிலர் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும். இவர்கள் தாங்கித்தான் இந்த இடர்ப்பாடுகளை நீக்கிப் பின்வரும் சந்ததியினர்க்குச் செம்மையான விஞ்ஞானத் தமிழைக் கொடுக்க முடியும்.

தற்பொழுது மொழி பெயர்ப்பு நூலாகப் பலவும், எளியமுறையில் எழுதப்பட்ட விஞ்ஞான நூல்கள் பலவும் வெளிவருகின்றன. இந்த விஞ்ஞான நூல்கள் பல நிலையிலும் உள்ளவர்கட்கும், (உயர்நிலைப்பள்ளி மாணவர், கல்லூரி மாணவர், பொதுமக்கள்) பயன்படுமாறு இருந்தால் வழக்கு ஏற்படும். இந்த மொழி பெயர்ப்பில் விஞ்ஞானிகள் ஈடுபட்டிருந் தாலும், விஞ்ஞானம் கற்காத, ஆனால் மொழிபெயர்ப்பில் திறன் உள்ளவர்கள் சிலர் இருக்கின்றனர் என்பது நூல்களைக் கண்ணுறும் விஞ்ஞானிகளுக்கும் தெரிகிறது. சிற்சில கருத்துக் களை நூல்களைக் கண்ணுறும் விஞ்ஞானிகளுக்கும் தெரிகிறது. இது விஞ்ஞான ஆசிரியர்கள் விஞ்ஞானத் தமிழில் ஈடுபட வேண்டும் என்பதைத்தான் குறிக்கிறது.

கலைச் சொல்லாக்கத்தைப் பயிற்று மொழியுடன் பிணைக்கும்பொழுது நாம் ஆங்கிலம் போன்ற மொழிகளில் ஏற்பட்ட கலைச்சொற்களின் வளர்ச்சிக்கும், தமிழில் நாம் ஏற்படுத்தும் கலைச்சொற்களின் வளர்ச்சிக்கும் உள்ள வேறு பாட்டைக் கவனிக்கவேண்டும். மேலை நாடுகளிலும், பிறநாடு களிலும் விஞ்ஞானம் வளர வளரக் கலைச் சொற்கள் உருவாயின. அவை வழக்குற்றன, நிலைத்துவிட்டன. கலைச் சொல்லகராதி விஞ்ஞான இலக்கியப்படைப்பின் அடிப்படையில் எழுந்தது. நாம் அகராதியை முதலில் ஆக்கிவிட்டு இலக்கியத்தைப் படைக்கிறோம். நம் சூழ்நிலையில் இதுவே முறையாக அமைந்தாலும், இம்முறையில் அடங்கியுள்ள குறைகளைப் போக்க வழி தேடவேண்டும்.

மு. கலியபெருமாள்
அரசினர் கலைக்கல்லூரி
கிருட்டினகிரி

# தமிழில் அறிவியல் வளர்க்கும் முறை

''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழ் என்று சங்கே முழங்கு''

என்று சங்கநாதம் எழுப்பினார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். தமிழ் நாட்டு மக்களின் வாழ்வும் வளமும் அவர்களுடைய மொழியில்தான் இருக்கின்றன என்றுணர்ந்த அவர் உள்ளத்தில் எழும்பிய எழுச்சிக் கனலைத்தான் நாம் மேலே காண்கிறோம். மொழி மங்காமல் இருக்க வேண்டுமானால் அந்தத்தக் காலத்திற் கேற்ப அது மக்களுக்குப் பயன்பட வேண்டும். மக்கள் மொழியை வளப்படுத்தித் தங்கள் வாழ்வையும் வளமாக்க வேண்டும். காலத்திற் கேற்ற பல கலைகளை வளர்த்து வாழ்வில் வளமையும் இனிமையும் பொங்க வாழ்ந்தவர்கள் தமிழர்கள். இக்காலத்தில் ஒரு நாட்டின் வளமும் வாழ்வும் அந்த நாட்டின் அறிவியல் வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் பொருத்தது. எனவே, அறிவியல் பல்துறைகளும் வான்போல் வளர்ந்துள்ள இக்காலத்தில் அந்த அறிவெல்லாம் தமிழ் மொழியிலும் சொல்லும் திறன் பெறவேண்டும் என்று நினைத்த கவிஞர் பெருமகன்

''எளிய நடையில் தமிழ்நூல் எழுதிடவும் வேண்டும்
இலக்கண நூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்
வெளியுலகில் சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெல்லாம் கண்டு
தெளிவுறுத்தும் படங்களோடு சுவடியெல்லாம் கண்டு
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதும் வேண்டும்
. . . . . . . . . . . . . . . .
''உலகியலின் அடங்களுக்கும் துறைதோறும் நூல்கள்
ஒருத்தர் தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
சலசலென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்''.

எனக் கட்டளையிட்டார். இக்கருத்தையெல்லாம் தொகுத்து கூறுவார் போல்,

''பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்''
''இறவாத புகழுடைய புது நூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்''

என்று ஆணை பிறப்பித்தார். பாட்டுக்கொரு புலவர் பாரதியார் கவி மன்னர்களின் கட்டளையைத் தலைமேற் கொண்டு அத்தகைய ஓர் அரும்பெரும் ஆக்கப்பணியில் தூய நற்பணியில் இன்று நமது சிந்தனையைத் திருப்பியிருக்கிறோம்; நம்மை நாமே ஈடுபடுத்தியிருக்கிறோம். நாட்டு மக்களின் நலம் பேணும் அத்தகைய நற்பணியில் நம்மையெல்லாம் ஈடுபட்டு நமது கடமையைச் செய்ய நல்லதொரு வாய்ப்பினை அளித்த இன்றைய தமிழக அரசுக்கு நாம் பெரிதும் நன்றிகடப்பாடுடையோம்.

அறிவியலிலும் தொழிலியலிலும் சமமான அறிவு பெற்று முன்னேற்றமடைய சிறந்த கல்வி முறை இன்றியமையாதது. சிறந்த கல்வி கிடைக்க வேண்டுமானால் அக்கல்வியைப் பெறும் மாணவர்கள் தங்கள் தாழ்மொழியின் வாயிலாகப் பெறுவது மிகமிக வேண்டற்பாலதாகும் என்பது காந்தியார் போன்ற உலகப் பேரறிஞர்களின் கருத்தாகும். அப்படித் தாய்மொழி வழியாகக் கல்வி பெறும் நாடுகள் மிக விரைவில் முன்னேற்றம் அடைந்து வருவது கண்கூடு. எடுத்துக்காட்டாக, அமெரிக்கா, ஜப்பான், ருசியா, இங்கிலாந்து, ஜெர்மனி, சீனா, பிரான்சு போன்ற நாடுகளில் தாய்மொழியே பயிற்சிமொழியாகவும், இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளில் தாய்மொழி அல்லாத ஆங்கிலம் பயிற்சி மொழியாகவும் இருந்து வருகிறது. நமது நாட்டைப் பொறுத்த வரை இன்று நாம் இந்த நிலையில்தான் வந்து நிற்கிறோம். எனவே, இன்றைய நிலையில் தாய் மொழிக்கும் அதன் வழியாகக் கல்வி வளர்ச்சிக்கும் உரிய வழி வகைகளைக் காய்தல் உவத்தல் இன்றி ஆராய்வது நமது கடமையாகும்.

தமிழில் அறிவியல் வளர்க்கும் முறை பற்றிக் காணுமுன், பொதுவாகத் தாய்மொழியைப் பயிற்றுமொழியாக்குவதில் உண்டாகும் சிக்கல்கள் என மற்றவர்கள் கூறும் கூற்றினைக் காண்போம்.

பலமொழிகளில் பேசும் மக்களைக் கொண்ட இந்தியாவில் தாய் மொழியைப் பயிற்சி மொழியாக்குவதால் முக்கியமாக இரு

சிக்கல்கள் கூறப்படுகின்றன. ஒன்று, அறிவியல், பொறியியல், `தொழிலியல், மருத்துவம் போன்ற துறைகளுக்குரிய நூல்களில் காணும் கலைச் சொற்களுக்கு (Technical Terms) ஏற்ற சொற்களை இந்த மொழிகளில் ஆக்க முடியுமா? என்பது, இரண்டாவது அப்படியே தாய்மொழியில் பயிற்சி பெற்றாலும் பின்னர் வேலை வாய்ப்புக்காக வெளி மாநிலங்களுக்கும், மேல் படிப்புக்காக வெளிநாடுகளுக்கும் செல்ல முடியுமா? என்பது.

முதலில் இரண்டாவது வினாவுக்கு விடை காண்போம். கல்வி கற்பது என்பது அதன் வழிக் கிடைக்கும் அறிவின் பயன் கருதியேயாம். அந்த அறிவைப் பயன்படுத்திப் பின்னர் வேலை களைத் தேடிக் கொள்கிறோம். உணர்வோடு ஒன்றிய, உயிரோடு கலந்த அறிவைப் பெறுதற்குத் தாய் மொழி வழி கல்வி இன்றியமையாதது என்பது கற்றறிந்த பெரியோர் முடிவு. மேலும், தாய் மொழி அன்னியில் மற்ற மொழியின் வழியாகக் கல்வி பெறும்போது தேர்விலே வெற்றி அடைவது கூடக் கடினமாகி விடுகிறது. அதோடு, பெறுகின்ற அறிவும் காற்றிலே கற்பூரம் கரைவதுபோல் நாளடைவில் கரைந்து போகிறது. தேர்விலே வெற்றி பெற்று வேலை வாய்ப்புத் தேடி வெளி மாநிலங்களுக்குச் செல்வோர் 100க்கு 10 பேருக்கும் குறைவாகவே இருப்பர். மேல் படிப்புக்காக வெளிநாடு செல்வோர் 100க்கு ஒருவர் இருப்பர். இந்த மிகக் குறைந்த எண்ணிக்கை உடையவர்களுக்காகப் பெரும்பான்மையோரின் நலம் பாதிக்கப்படுவதா? தமிழ் நாட்டைப் பொறுத்தவரை அந்த இடர்ப்பாடு இருக்காது. ஏனெனில் அறிவியல் நூல்களில் வரும் எல்லாக் கலைச் சொற்களுக்கும் ஆங்கிலக் கலைச் சொற்களையும் தெரிந்து கொள்ளும்படி மாணவர்கள் கற்பிக்கப்படுகின்றனர். அதோடு தமிழுக்கு எவ்வளவு முதன்மை கொடுக்கிறோமோ அதே அளவு ஆங்கிலத்திற்கும் கொடுக்கத் தமிழக அரசு முடிவு செய்திருக் கிறது. எனவே, வெளி மாநிலங்களுக்கு வேலை தேடிச் செல்வோர் இடர்ப்பட வேண்டியிருக்காது. மேலும், மேல் படிப்புக்காக வெளிநாடு செல்லும் தமிழ்நாட்டவர் எவரும் தேவையான ஆங்கில அறிவு பெற்றிருப்பர். இஃதன்னியில் ஜெர்மனி, பிரான்சு, ருசியா, ஜப்பான் போன்ற நாடுகளுக்குச் செல்வோர் தேவையானால் இப்போதுபோல் அப்போதும் அந்தந்த நாட்டு மொழியினைக் கற்றுக் கொள்ளலாம். மேலும் எத்தனை நாட்களுக்குத்தான் நாம் ஆராய்ச்சிக்காக வெளி நாட்டை நோக்கிப் படை எடுக்க முடியும்? அங்கெல்லாம் அறிவியல் வளர்வதற்குக் காரணம் ஒன்று அவர்கள் தாய்

மொழியிலேயே உணர்வோடு கலந்த கல்வியைப் பெறுவது, மற்றொன்று அறிவியல் வளர்ச்சிக்கான ஆக்கத்தையும் ஊக்கத்தையும் அரசினரும் தனியாரும் தருவது. அறிவியல் ஆராய்ச்சிக்கு வேண்டிய ஆராய்ச்சி கூடம் கருவிகள் கண்டுபிடித்தல், அல்லது அமைத்தல் இவை போன்றவற்றிற்கு வசதி ஏற்படுத்திக் கொடுக்கிறார்கள். இத்தகைய வசதிகள் எல்லாம் நம்நாட்டிலேயே ஏற்படுத்திக் கொடுத்தால் அங்கெல்லாம் சென்று செய்யும் ஆராய்ச்சியை நம்மவர் இங்கும் செய்வார்கள். காட்டாக, பம்பாய்க்கு அருகில் உள்ள ட்ராம்பேயில் அணு உலை அமைத்து அணு ஆற்றலை எத்தனையோ நல்ல காரியங்களுக்குப் பயன்படுத்துகிறோமே! மேலும், அணு ஆற்றலிலிருந்து மின்னாற்றலைப் பெறுவதற் காகத் தாராப்பூர் என்னுமிடத்தில் அணுமின்நிலையத்தை நாமே வெற்றி கரமாகக் கட்டி முடித்திருக்கிறோமே! இன்னும் இரு உலைகள் கட்ட இருக்கின்றனவே! இவையெல்லாம், நம்நாட்டு அறிவியல் பொறியியல் வல்லுநர்களின் ஆற்றலை, அறிவின் திறனைக் காட்டவில்லையா? எனவே, ஆராய்ச்சி மனப்பாங்கும், அறிவின் திறனும் கொண்ட நம் இளைஞர்களுக்கும், பெரியோர் களுக்கும் போதிய வாய்ப்பும் வசதியும் செய்து தர வேண்டும்.

அடுத்தாகக் கலைச் சொற்கள் பற்றிய கருத்தினைக் காண்போம். ஒரு மொழியில் இருக்கும் சொற்கள் அதன் சூழ்நிலைக்கு ஏற்ப ஏற்பட்ட சொற்களேயாம். சூழ்நிலைக்கும் தேவைக்கும் ஏற்ப ஒரு மொழியில் சொற்கள் ஏற்படுகின்றன; ஆக்கப்படுகின்றன. ஒரு மொழியில் வேறொரு மொழியிலுள்ள சில சொற்கள் இல்லை என்றால் அந்த மொழி வளர்ந்த சூழ்நிலைக்கும் அந்த மொழி மக்களுக்கும் தேவையிருந் திருக்காது. எனவே, ஒரு மொழியில் காணும் சில சொற்கள் வேறொரு மொழியில் இல்லாமல் இருப்பது மொழியின் குற்றமோ அல்லது அந்த மக்களின் தவறோ அன்று. சூழ் நிலைக்கும் தேவைகளுக்கும் ஏற்ற சொற்களை ஆக்கி மொழியை வளப்படுத்த வேண்டியது அம்மொழி மக்களின் தலையாய கடமையாகும்.

ஆங்கிலத்தில் கலைச் சொற்கள் மிகுந்திருப்பதற்கு காரணம் பல. ஒன்று, ஆங்கிலத்தைத் தாய் மொழியாகக் கொண்ட ஆங்கிலேயர்களுக்கு உலகின் பல பாகங்களில் குடியேற்ற நாடுகள் இருந்தன. அதனால் ஆங்கிலம் உலகின் பல பகுதிகளிலும் பரவி இருந்தது. ஆட்சிக்காகவும், கல்விக்காகவும்

அவர்கள் ஆங்கிலத்தைக் கட்டாயமாகப் பயன்படுத்தினர். எனவே ஆங்கிலம் உலகின் பல பாகங்களிலும் கல்வி மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் ஆக்கப்பட்டது. இந்தியாவிற்கும் அதே கதி ஏற்பட்டது. பல மொழிகள் அடங்கி, ஆங்கிலமே பல்கலைக்கழகம் வரை பயிற்சி மொழியாகவும், பாராளுமன்றம் வரை ஆட்சி மொழியாகவும் மாறியது. பல்துறை ஆராய்ச்சிகள் பற்றிய செய்திகள் யாவும் ஆங்கிலத்தில் வெளி வந்தன. இத்தகைய வாய்ப்பும் வசதியும் பெற்று இருந்ததால் தான் ஆங்கிலத்தில் கலைச் சொற்கள் ஏற்படவும் அந்தக் கலைச்சொற்கள் உலகம் முழுவதும் பரவவும் முடிந்தது.

நம் தாய்மொழியாகிய தமிழுக்கு அத்தகைய வாய்ப்போ வசதியோ இல்லை. ஆனால் ஆங்கிலத்திற்கு இல்லாத ஒரே தனிச்சிறப்பு தமிழுக்கு உண்டு. கிரேக்கம், இலத்தீன் வடமொழி போன்ற உயர் தனிச் செம்மொழிகளில் (Classical Languages) தமிழும் ஒன்று. இந்த மொழிகள் யாவும் பல்லாயிரம் ஆண்டு களாக வளர்ந்து வளமாக்கப்பட்டவை. இந்த மொழிகள் யாவும் வேர்ச்சொற்கள் செறிந்தவை. இந்த வேர்ச் சொற்களைப் பயன்படுத்தி தேவைக்கேற்பப் பல சொற்களை ஆக்கும்படி செம்மைப் படுத்தப்பட்டவை. அவை தனித்தியங்கும் சிறப்பு பெற்றவை. இதற்கும் மேலாகத் தமிழுக்கு ஒப்புநோக்க ஒண்ணா இன்னொரு சிறப்பும் உண்டு. ''மாந்தனால் கழி பல வூழிகளாகிக் கணக்கற்ற தலைமுறையாளரால் சிறிது சிறிதாய் ஆக்கப் பெற்றுத் திரிபு, சுருக்கம், பெருக்கம், கூட்டு, கலப்பு என்னும் ஐம் முறைகளால் உலகம் எங்கும் பரவி இருக்கின்ற மூவாயிரம் மூல மொழிகளுள் முதன்மையானது தமிழே என்பதும், அது தோன்றிய இடம் மாந்தன் பிறந்தகமாகிய குமரிநாடே'' என்பதும் மொழி நூல் புலவர் ஞா.தேவ நேயப் பாவாணர் போன்ற அறிஞர்களின் கருத்தாகும். எனவே, மூல மொழிகளுள் முதல் மொழி என்ற தனிப்பெரும் சிறப்பும் தமிழுக்கு இருக்கிறது. தமிழ் எந்த ஒரு மொழியின் சார்பின்று தானே தோன்றி வளர்ந்துள்ளது என்பது பேரறிஞர்களின் கருத்து. எனவே, அத்தகைய செம்மை மொழி யாகிய செந்தமிழில் கலைச் சொற்கள் ஆக்குவது கடினமன்று.

மேலும், தமிழ் நாட்டில் தமிழை உயர் கல்விக்குப் பயிற்சி மொழி ஆக்கவேண்டும், அப்போதுதான் நாட்டில் பயனுள்ள கல்வி நிலவும் என்று கூறுகின்றபோது ஆங்கிலத்திலுள்ள கலைச் சொற்களுக்கெல்லாம் தமிழில் கலைச் சொற்கள் இருக் கின்றனவா? அப்படி இல்லையென்றால் ஆக்கத்தான் முடியுமா?

என்ற கூக்குரல்கள்தாம் எங்கும் கேட்கின்றன. அப்படியானால் கலைச் சொற்கள் என்பன இந்த உலகத்தில் கிடைத்தற்கரிய பொருளா? அல்லது ஆங்கிலம் பிறக்கும் போதே இப்போது இருக்கும் கலைச்சொற்கள் என்று சொல்லப்படுகின்ற சொற்களை யெல்லாம் தன்னகத்தே கொண்டு பிறந்ததா? என்று சிந்திக்க வேண்டும். ஆங்கிலத்தில் காணும் கலைச் சொற்கள் யாவும் எப்படித் தோன்றின என்று சிறிது எண்ணிப்பார்க்க வேண்டும். ஆங்கிலத்தில் கலைச் சொற்கள் என்று நாம் சொல்லுகின்ற சொற்களின் 90 விழுக்காடுக்கு மேல் ஆங்கிலச் சொற்கள் அல்ல. அவை யாவும் கிரேக்க, லத்தீன் சொற்கள் ஆகும். சொற்கள் கிரேக்க லத்தீன் மொழிகளாயினும் அவை ஆங்கில எழுத்துக்களில் எழுதப்படுகின்றன. ஆங்கில மொழிக்கேற்ப கிரேக்க, இலத்தீன் சொற்களைக் கூட்டியோ, குறைத்தோ இணைத்தோ ஆங்கிலத்தில் கலைச் சொற்கள் ஆக்கப்படுகின்றன. கிரேக்க, இலத்தீன் மொழிகளைப்போல் தமிழும் வேர்ச் சொற்களை உடைய ஒரு மொழி. எனவே, அந்த அடிப்படையில் ஆயிரக்கணக்கான கலைச் சொற்களை நாம் ஆக்க முடியும். மேலும் இன்னொரு கருத்தையும் ஈண்டு நாம் நினைவில் கொள்ளவேண்டும். அதாவது, பள்ளிப் படிப்பு வரைக்கும் அறிவியலையும், பொறியியலையும் சொல்லிக் கொடுக்கும் நூல்கள் முன்னமேயே வெளிவந்துள்ளன. பள்ளிப்படிப்பின் அடிப்படையிலேயே கல்லூரிப் படிப்பும் தொடரப்படுகிறது. எனவே, பள்ளி நூல்களுக்கு எவ்வாறு கலைச் சொற்கள் அமைத்துப் பாடங்கள் எழுதினார்களோ அதே அடிப்படை யிலும் தொடர்ந்து கல்லூரிப் பாட நூல்களுக்கு வேண்டிய கலைச் சொற்களை ஆக்கலாம். இவ்வாறு நம்மை எதிர் நோக்கியுள்ள சிக்கலுக்கு நாம் வழிகாண வேண்டும்.

அறிவியற்கலை தமிழில் வளர்வதற்கு முதலில் அதற்குரிய பல கலைச் சொற்கள் வேண்டும். அவற்றை எவ்வாறு ஆக்குவது என்று காண்போம். கலைச் சொற்கள் ஆக்கும்போது முக்கியமாக மூன்று கருத்துக்களை உள்ளத்தில் கொண்டு செய்யலாம்.

முதலாவதாக, கிரேக்கம், இலத்தீன் போன்ற மொழிச் சொற்களை, வேர்ச் சொற்களாகக் கொண்டு வரும் கலைச் சொற்களை அவற்றின் பொருளை ஆங்கிலத்தின் மூலம் அறிந்து அதற்கேற்ற தமிழ் சொற்களை ஆக்கலாம். ஆங்கிலச் சொல்லாக வருகிற கலைச் சொற்களை அப்படியே மொழி பெயர்த்து ஏற்ற சொற்களைத் தமிழில் படைக்கலாம். எடுத்துக் காட்டாக Atom

என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இது Atemno என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து பிறந்தது ஆகும். a+temno என்ற a = not = இல்லை: temno = cut = வெட்டு. அதாவது, வெட்ட முடியாதது. மேலும் பிரிக்க முடியாதது என்பது. எனவே, மேலும் பகுக்க முடியாத ஒரு பொருளின் கடைசி பகுதியை (Atom) என்று சொல்லுகிறோம். அதை தமிழில் அணு என்று குறிப்பிடுகிறோம். அடுத்ததாக, Atom bomb என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். Atom என்றால் அணு. Bomb என்பது Bombos என்ற கிரேக்கச் சொல்லின் சுருக்கம். Bombos என்ற சொல்லுக்கு deep and hollow sound அதாவது ஆழமான அகலமான ஒலி என்று பொருள். அதையே an explosive ஒரு வெடி பொருள்-வெடி என்று சொல்லு கிறார்கள். எனவே கேட்பதற்கு அஞ்சத்தக்க ஒலியைக் கொடுக்கக் கூடிய ஒரு பொருளை bomb என்று சொல்லுகிறோம். அதாவது, Atom Bomb என்பதை அணு வெடி என்று சொல்லலாம். ஆனால் Atom bomb என்பதற்கு அணுகுண்டு என்ற சொல் வழக்கி லிருக்கிறது. எனவே, Atom bomb என்பதை அணு வெடி என்றோ அணு குண்டு என்றோ எழுதலாம். அடுத்ததாக Photo synthesis என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இது நமக்கு மிகவும் அறிமுகமான ஒரு சொல். இதில் photo+synthesis இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. photo என்றே கிரேக்கச் சொல்லுக்கு ஆங்கிலத்தில் light என்றும் தமிழில் ஒளி என்றும் பொருள். Synthesis என்ற சொல்லுக்கு combining என்று ஆங்கிலத்திலும், சேர்த்தல், சேர்க்கை என்று தமிழிலும் பொருள். எனவே, photo synthesis என்பதை ஒளிச்சேர்க்கை என்று சொல்லாம். photo + synthesis +சேர்க்கை + ஒளிச்சேர்க்கை.

அடுத்ததாக,

Telephone - என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் Tele+phone என்ற இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. Tele என்பதற்கு far off தொலைவிலிருந்து என்று பொருள். phone என்பதற்கு a sound ஒலி; voice பேச்சு என்பது பொருள். எனவே Telephone என்ற கருவியை Telephone = Tele+phone = தொலை + பேசி = தொலை பேசி என்று சொல்லுகிறோம். இது முன்பே வழக்கில் உள்ள ஒரு சொல்லாகும்.

மேலும் tele என்ற சொல்லை முதல் சொல்லாக வைத்து வேறு துணைச் சொற்களைச் சேர்த்துப் பல புதுச் சொற்களை ஆக்கலாம். அப்படி ஆக்கும்போது tele என்ற சொல் வருகிற

இடத்தில் எல்லாம் தொலைவு என்ற பொருளில் தொலை என்ற சொல்லைப் பயன்படுத்தலாம். எடுத்துக்காட்டாக

Telescope - என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் Tele+scope என்ற இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. இது Tel-escopes என்ற சொல்லின் திரிபாகும். Scope என்பது skopein என்ற கிரேக்கச் சொல்லின் திரிபாகும். Skopein என்றால் to view = பார் - நோக்கம் என்று பொருள். Telescopes என்றால் seeing from at a distance = தொலைவிலிருந்து பார்த்தல், நோக்குதல் எனப்படும். இங்கு ஒரு கருவியைக் குறிப்பதால் Telescope = தொலைநோக்கி என்று சொல்லலாம்.

அடுத்ததாக

Telegram - என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் Tele+gram என்ற இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. Gram என்பது Gramma என்ற சொல்லின் சுருக்கமாகும்.

Gramma என்றால் ஆங்கிலத்தில் something written or drawn அதாவது எழுதியது வரைந்தது என்று பொருள். Telegram என்பதற்கு a message transmitted by Telegraph தொலை செய்தி முறைப்படி அனுப்பிய செய்தி என்று பொருள். எனவே Telegram தொலைச் செய்தி என்று சொல்லாம்.

அதே அடிப்படையில்

Telegraph = Tele + graph = தொலை + செய்திமுறை: தொலைச் செய்திமுறை Television = Tele+vision தொலை + காட்சி = தொலைக்காட்சி. Teleprinter = Tele + printer = தொலை+அச்சுப் பொறி-தொலை அச்சுப்பொறி. Telemeter = Tele + meter தொலை+அளவி தொலை அளவி என்று எத்தனையோ சொற்களை ஆக்கலாம். அடுத்ததாக

Biology - என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் Bio+logy என்ற இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. Bio என்பது Bios என்ற சொல்லின் சுருக்கமாகும். Bios என்றால் life or living things அதாவது உயிர் அல்லது உயிர்ப்பொருள் எனப்படும். Logy என்பது Logia - logos என்ற சொல்லின் திரிபாகும். Logos என்ற சொல் a word ஒரு சொல்; Speech பேச்சு; thought சிந்தனை; Science அறிவியல் என்ற பொருளில் வருகின்றது. எனவே, Biology = Bio+logy = உயிர் + அறிவியல் = உயிர் அறிவியல் - உயிரியல் என்று சொல்லாம். இதுபோல் Logy என்று வருகிற

இடத்தில் இயல் என்ற சொல்லைப் பயன்படுத்தலாம். Zoology என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் Zoo+logy என்ற இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. Zoo என்பது Zoion என்ற சொல்லின் திரிபாகும் zoion என்றால் an animal விலங்கு என்பது பொருள். எனவே Zoology = Zoo + logy = விலங்கு - இயல் விலங்கியல் என்று சொல்லாம். இதுபோல்

Petrology = Petra (rock) + logy = பாறையியல்

Entomology = Entomo (insect) + logy = பூச்சியியல்

Dermatology = Dermato (skin) + logy = தோலியல்

Photomology = Photamo (river) + logy = ஆற்றியல்

Myology = Myo (muscle) + logy = தசையியல்

Myrmecology = Myrmeca (ant) + logy = எறும்பியல்

என்று சொற்களைப் படைக்கலாம். அடுத்ததாக Therometer - என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் Thermo + meter என்ற இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. Thermo என்பது Thermos என்ற சொல்லின் திரிபாகும். Therme என்றால் heat - வெப்பம் என்பது பொருள், meter என்பது metron என்ற சொல்லின் திரிபாகும். metron என்பதற்கு to measure அள என்பது பொருள். அள என்ற சொல் இங்கு ஒரு கருவியைக் குறித்து வருவதால் அதனை அளவி என்று சொல்லலாம். மேலும் Thermometer என்பதை விளக்கும் போது an instrument for measuring temperature of a body அதாவது ஒரு பொருளின் வெப்ப (temperature - degree of hotness) நிலையை அளக்கும் கருவி என்று கூறப்படுகிறது எனவே Therometer = Thermo+meter வெப்பநிலை - அளவி - வெப்பநிலை அளவி என்று சொல்லாம். இனி meter என்ற வருகின்ற இடங்களிலெல்லாம் 'அளவி' என்ற சொல்லைப் பயன்படுத்தலாம். இந்தச் சொல்லை இந்தப் பொருளில் குறிப்பிடலாம் என்று டாக்டர் ஆ. சிதம்பரநாதன் அவர்களும் ஒரு கட்டுரையில் குறிப்பிட்டு இருக்கிறார். எனவே, இதுபோல்

Photometer = Photo + meter = ஒளி + அளவி = ஒளி அளவி

Calorimeter = calori + meter = வெப்பம் + அளவி = வெப்பஅளவி

Magnetometer = Magneto + meter = காந்தம் + அளவி = காந்தஅளவி

Lactometer = Lacto (milk) + meter = பால் அளவி

Altimeter = Alti (high) + meter = உயர அளவி

என்று எண்ணற்ற கலைச் சொற்களைத் தமிழ் மொழியில் நாம் ஆக்கலாம். அடுத்தாக Seismoscope - என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் Seismo + scope என்ற இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. Seismo என்றால் earth quake நில நடுக்கம் என்று பொருள். scope என்றால் to view பார் என்று பொருள். அதாவது இந்தக் கருவி நில நடுக்கத்தைக் காட்டும் கருவி எனவே Seismoscope என்பதை நிலநடுக்கங்காட்டி என்று சொல்லாம்.

இனிமேல் scope என்றால் காட்டி எனக் கொள்ளலாம். Spectro-scope = Spectro + scope = நிறமாலைகாட்டி

Thermoscope = Thermo + scope = வெப்பநிலை காட்டி. என்று எழுதலாம். அடுத்தாக, Thermograph - என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதில் Thermo + graph என்ற இரு கிரேக்கச் சொற்கள் இருக்கின்றன. Thermo என்றால் வெப்பநிலை Graph என்றால் to write or draw அதாவது, எழுது, வரை என்று பொருள். எனவே thermo graph என்பதனை வெப்பநிலை வரைவி என்று சொல்லலாம். அடுத்ததாக Scismograph - Scismo + graph - நில நடுக்க வரைவி என்றும் சொல்லலாம். இது போன்று எத்தனையோ கணக்கான கலைச் சொற்களை நாம் தமிழில் படைக்க முடியும்.

இரண்டாவதாக, மொழி பெயர்க்கத் தேவையில்லாத சொற்களை அப்படியே தமிழில் எழுதிக் கொள்ளலாம். உலகத்திலுள்ள 92 தனிமங்களை (elements)த் தவிர மேலும் 11-புதிய தனிமங்கள் செயற்கை முறையில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. 92 தனிமங்களில் கடைசித் தனிமமாகிய யுரேனியத்திற்கு அப்பால் இத்தனிமங்கள் இடம் பெறுவதால் இவை யுரேனியத்தைக் கடந்த தனிமங்கள் (Transurainc elements) என்று அழைக்கப்படுகின்றன. புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட இந்தத் தனிமங்களுக்குப் பெயர்கள் கிடையா. ஆனால் இவற்றிற்குக் கண்டுபிடிக்கப்பட்ட நாடு, இடம், அல்லது யாராவது ஒரு தலை சிறந்த அறிவியல் புலவரின் பெயர் இவற்றின் அடிப்படையில் பெயர்கள் சூட்டப்படுகின்றன. எனவே, அந்தச் சொற்களை மொழி பெயர்க்க வேண்டிய தில்லை. அந்தச் சொற்களை அப்படியே தமிழில் அமெரிசியம்

(Americium) பெர்க்ளியம் (Berkelium) கலிபோர்னியம் (Californium) கியூரியம் (Curium) ஐன்ஸ்டினியம் (Einsteinium) பெர்மியம் (Fermium) மெண்டலிவியம் (mendelebium) என்று தமிழில் எழுதிக் கொள்ளலாம். திசைச் சொற்களைத் தமிழில் சேர்த்துக் கொள்ளலாம் என்ற தொல்காப்பிய விதிக்கு இது புறம்பானதாகாது. மேலும், மற்ற துறைகளைவிட, மருத்துவத் துறையிலுள்ள மருந்துச் சொற்களுக்கு மொழி பெயர்ப்புத் தேவை இல்லை. அந்த மருந்துச் சொற்களை அப்படியே தமிழில் எழுதிக் கொள்ளலாம். வேண்டுமானால் நோய்களின் பெயர்களைத் தமிழில் ஆக்கிக் கொள்ளலாம்.

மூன்றாவதாக, இடத்திற்கேற்ப நமது வழக்குச் சொற்கள் இலக்கியச் சொற்களைப் பயன்படுத்துதல் வேண்டும். எடுத்துக் காட்டாக, Lightning conductor என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். இதைத் தமிழில் மொழி பெயர்த்தால், மின்னல் கடத்தி என்று வரும். ஆனால் முன்னமேயே இடிதாங்கி என்ற ஒரு சொல் வழக்கில் இருக்கிறது. எனவே, Lightning conductor என்பதை இடிதாங்கி என்று சொல்லலாம். இதுபோல் கப்பல் ஓட்டுகிற வர்களை மீகாமன் என்றும், வானூர்தி ஓட்டுகிறவர் களை வலவன் (pilot) என்றும், பத்திரம் பதிவு செய்யப்படும் அலுவலகத்தை ஆணவக்களரி (Registration office) என்றும் சொல்லலாம். இதுபோல் Medicine என்பதை மருந்து, மருத்துவம் என்று சொல்லாம்.

நாம் மேலே கண்ட தொலை நோக்கி Telescope தொலை பேசி Telephone, வெப்ப அளவி (calorimeter) வெப்ப நிலைக்காட்டி (Thermoscope) நல நடுக்க வரைவி (Seismograph) போன்ற சொற்கள் நமது தமிழ் இலக்கணத்தில் வரம்பிற்கு உட்பட்ட சொற்களேயாம். மேலே உள்ள சொற்களின் இறுதியிலுள்ள நோக்கி, பேசி, அளவி, காட்டி, வரைவி போன்ற சொற்கள், அதற்கு முன்பே தமிழிலக்கியத்தில் காணப்படும் மீன்கொத்தி, தொட்டாற்சுருங்கி, சேர்ந்தாரைக் கொல்லி, திண்ணைத் தூங்கி என்பன போன்ற சொற்களிலுள்ள கொத்தி, சுருங்கி, கொல்லி, தூங்கி போன்றவையே. தமிழ் இலக்கணத்தில் இவற்றை வினை முதற்பெயர்கள் (Nouns of agency) என்று சொல்கிறார்கள்.

**வினைமுதற் பெயர்கள் (Nouns of Agency)**

தமிழில் உள்ள வினையாலணையும் பெயர்கள் வினை முதலை உணர்த்தும், இவையே யன்றித் தமிழில் மிகுதியாக

வழங்கும் வேறு வினைமுதற் பெயர்களும் (கொள்ளி, உண்ணி) உண்டு. அவற்றில் காணப்படும் விகுதி இகர விகுதி. அவ்விகுதி வடமொழி இகர விகுதியினின்று வேறானது. காரணம்:-

(1) வடமொழி இகர விகுதி பாலுணர்த்துவது, இது பாலுணர்த்தாதது.

(2) வடமொழி கலந்த தமிழ் இலக்கியப் பகுதியிலே அன்றிக் குடியானவர் பேச்சில் இது மிக்கு வழங்குகிறது. பல செடிகொடி களின் பெயர்களும் இகர விகுதி பெற்று அமைந்திருத்தலால் வடமொழி விகுதி என்று கொள்ளப்படாது. நகைக் குறிப்பு மொழிகளிலும் பழமொழிகளிலும் தொடர்மொழிகளிலும் உயர் வழக்காயினும் இழி வழக்காயினும் வரையறையின்றி பயில்கின்றது.

கொள்ளி, உண்ணி
சேர்ந்தாரைக் கொல்லி
மீன்கொத்தி, தொட்டாற்சுருங்கி
திண்ணைத் தூங்கி, ஆள்காட்டி

ஆகவே, இவற்றில் உள்ள இகர விகுதி தமிழுக்கே உரியது என்றும் அதனால்தான் பொதுமக்களின் பேச்சு முதல், புலவரின் செய்யுள் வரையில் எங்கும் வழங்குகிறது என்று கூறலாம் (டாக்டர். மு.வரதராசனார், மொழி நூல் ப. 254)

இவ்வாறு மேலே எடுத்துக்கொண்ட எடுத்துக்காட்டுக் களைப் போலவே, நாம் புதிதாக ஆக்கிய கலைச் சொற்களும் இருக்கின்றன. எனவே, இவற்றை மொழிக்குப் புதுமைச் சொற்கள் என்றோ, தமிழிலக்கண வரம்பிற்குக் கட்டுப் படாதவை புறம்பானவை என்றோ ஒதுக்கவேண்டியதில்லை. இதுபோல் இலக்கண வரம்பிற்கு உட்பட்ட பல்லாயிரக் கணக்கான கலைச் சொற்களை நாம் ஆக்க முடியும்.

இவ்வாறு கலைச் சொற்கள் ஆக்குவதோடு நமது பணி முடிந்து விடுவதில்லை. ஏனெனில் சில நேரங்களில் ஒரே கலைச் சொல்லுக்குப் பலர் பல சொற்களை ஆக்குகிறோம். அவற்றில் எந்தச் சொல் சிறந்தது என்று தேர்ந்தெடுக்கவேண்டும். அதோடு பல துறைகளுக்கும் வேண்டிய நூல்கள் எழுதப்படவேண்டும். இவற்றையும் இவை போன்ற இன்னும் பல காரியங்களையும் செம்மையாகச் செய்வதற்கு ஓர் அமைப்பு வேண்டும். இதற்காக.

(1) தமிழக அறிவியல் வளர்ச்சிக் கழகம் Tamil Nad Association for the Advancement of Science என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தலாம். (இதுபோன்று அமெரிக்காவில், ''அமெரிக்க அறிவியல் வளர்ச்சிக் கழகம் American Association for the Advancement of Science என்றும், இங்கிலாந்தில் ''பிரிட்டன் அறிவியல் வளர்ச்சிக் கழகம் British Association for the Advancement of Science ....... என்றும், பல அமைப்புகள் உலகின் பல நாடுகளில் நல்ல பணிகள் ஆற்றி வருகின்றன).

(2) இந்தக் கழகத்தில் கணக்கு, பௌதிகம், இரசாயனம், செடியியல், விலங்கியல், பொறியியல், மருத்துவம், உழவியல் போன்ற பல்வேறு அறிவியல் துறைகளின் ஆசிரியர்கள், அறிவியற் புலவர்கள் உறுப்பினர்களாக இருக்கவேண்டும்.

(3) ஒவ்வொரு துறைக்கும் அந்தத்துறை உறுப்பினர்கள் கொண்ட ஒரு பொதுக்குழு இருக்க வேண்டும்.

(4) பொதுக்குழு உறுப்பினர்களில் அறிவும் அனுபவமும் நிறைந்தவர்களைக் கொண்டு செயற்குழு ஒன்று அமைக்கப்படல் வேண்டும்.

(5) இந்தக் குழு நூல்களை எழுதுதல், கலைச்சொற்களைத் தொகுத்து அவற்றைத் தரப்படுத்துதல் போன்ற அந்தந்தத் துறைகளுக்கு வேண்டிய பணிகளை அதனுடைய பல உறுப்பினர்களுக்கும் பகிர்ந்தளித்துத் தொகுத்துச் சேர்க்கவேண்டும்.

(6) பொதுக்குழு எடுத்த முடிவுகளைச் செயற்குழு ஆராய்ந்து இறுதி முடிவு செய்யவேண்டும். ஒவ்வொரு துறைக்கும் ஆர்வமிக்க ஓரிரு தமிழறிந்த பெரியார்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

(7) ஒவ்வொரு செயற்குழுவும் ஆண்டிற்கு மூன்று முறையோ தேவையானால் அதற்கு மேலும் கூடவேண்டும்.

(8) ஒவ்வொரு பொதுக்குழுவும் ஆண்டிற்கு இரு முறையாவது கூடி ஆலோசனை நடத்த வேண்டும்.

(9) இதுபோன்று பல்வேறு துறைகளின் பொதுக்குழுக்களும் ஆண்டிற்கு ஒருமுறை ஒரேயிடத்தில் கூடி ஆலோசனை நடத்த வேண்டும். மேற் சொன்ன பணிகளைத் தவிர;

(10) கழகத்தின் நிகழ்ச்சிகள், ஆராய்ச்சிக் கட்டுரைகள் அடங்கிய திங்கள் இதழ் ஒன்று கழகத்திலிருந்து வெளியிட வேண்டும்.

(11) திரைப்படங்கள் மூலம் கல்வி அறிவுப் பெறுவதற்கான ஏற்பாடுகள் செய்தல் வேண்டும். திரைப்படங்கள் மூலம் பொது மக்களுக்குக் கல்வியறிவைப் பரப்புதல் வேண்டும்.

(12) பாடத்திட்டங்களைப் பற்றி ஆராய்ந்து கருத்துரை கூற ஒரு நிலையான குழு அமைத்தல் வேண்டும்.

(13) வெளி நாடுகளிலிருந்து வரும் அறிவியல் நூல் களையும், இதழ்களில் வரும் கட்டுரைகளையும், கருத்துரை களையும் மொழி பெயர்க்க நிலையான ஒரு குழு அமைத்தல் வேண்டும்.

(14) ஆண்டுதோறும் விடுமுறையில் ஆசிரியர்களுக்குப் புதிய ஆராய்ச்சிகள், கண்டுபிடிப்புகள் பற்றியும் அறிவியல் பாடங்களைக் குறுகிய காலத்தில் சிறந்த முறையில் பயிற்றுவிக்க பயிற்சியும் நடத்தலாம்.

(15) தேவைக் கேற்பக் கழகத்தின் செயல்முறைத் திட்டங் களை அவ்வப்போது மாற்றி அமைத்துக்கொள்ளலாம்.

இவ்வாறு ஒரு குறிப்பிட்ட திட்டத்தின் கீழ் நாம் செயல்பட வேண்டுமே தவிர, பாரதியார் கூறுவதுபோல்,

''மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர்
மகிமையில்லை, திறமான புலமைஎனில் வெளிநாட்டார்
அதை வணக்கம் செய்தல் வேண்டும்!'

கவிஞர் பாரதிதாசனும்

''எங்கள் தமிழ் உயர்வென்று நாம் சொல்லிச் சொல்லித்
தலைமுறைகள் பல கழித்தோம், குறைகளைந் தோமில்லை.''

என்று கூறி

''தகத்தகாயத் தமிழைத் தாபிப்போம் வாரீர்''

என்று அன்பழைப்பு விடுகிறார். அந்த அழைப்பை ஏற்று நமது பணிகளைப் பகுத்துக் கொண்டு பாடுபடுவோம். அப்படிப் பாடுபட்டால் இன்னும் சில பல ஆண்டுகளில் நாம் மிகப்பெரிய முன்னேற்றத்தைக் காணமுடியும்.

*சி. கனகசபாபதி*

## பாரதி பராசக்தியைப் பாடியது ஏன்?

பாரதி பராசக்தியை ஏன் பாடினார்? மனவியல் அலசல் ஆய்வில் இதைப் பார்ப்பதுதான் இந்தக் கட்டுரையின் நோக்கம்.

வாழ்க்கையில் பொருளாதாரம் அடிப்படையானது தான். ஆனால் நம்மை நாமே அறிந்து கொள்ள வேண்டியதும் வாழ்க்கையின் அவசியம். இதுதான் இங்கே எடுத்துக் கொண்ட மனவியல் அலசல் பார்வையின் அடிச்சரம். அதாவது பொருளாதார அடிப்படையைப் புரிந்துகொண்டுள்ள மனவியல் அலசல் முறை.

சக்திமீது பாரதி ஆரம்பத்திலிருந்தே பாடியிருப்பதாக இல்லை. எப்போது பாரதி சக்தியைப் பாடத்தொடங்கினார் என்று நாம் அறிந்துகொள்ளவேண்டும்.

1897 முதல் 1904 வரை எட்டயபுரத்தில் பாரதி சிருங்கார ரசப் பாடல்களில் ஆழ்ந்திருந்தார். 1904 முதல் 1908 வரை சென்னையில் பாரதி அரசியல் பாடல்கள் எழுதினார் (சுதேச கீதங்கள்).

பிறகு 1908 முதல் 1910 வரை பாரதி புதுச்சேரியில் 'சுயசரிதை' உள்பட ஒருசில சக்திப்பாடல்களை ஒன்றிரண்டு அரசியல் பாடல்களுடன் எழுதினார் (மாதர்வாசகம்).

இதை அடுத்து, 1910 முதல் 1914 வரை பாரதி சக்திப்பாடல்கள் பல பாடியிருக்கிறார் (மாதாமணி வாசகம்).

பாரதியின் ரொம்ப வளமான படைப்புக்காலம் 1912 முதல் 1917 வரை என்று ஏறக்குறைய ஐந்து ஆண்டுகளை நாம் குறிப்பிட வேண்டும் (பாஞ்சாலிசபதம், கண்ணன் பாட்டு, குயில்) இதே ஆண்டுகளில் சில தனிக்கவிதைகளும் படைத்தார் பாரதி.

அதன் பிறகு 1917ல் இருந்து 1919 வரையிலும் பாரதியின் கவிதைப் படைப்புத்திறன் சரிந்து விழத் தொடங்கியது. சில சீட்டுக்கவிகளும், வாழ்த்துக் கவிகளும் எழுத நேர்ந்தது பாரதிக்கு.

இதிலிருந்து 1908 - 1909 வாக்கில் சக்தி மீது பாரதி பாடத் தொடங்கினார் என்பது புலனாகிறது.

இதைவைத்து, பாரத அன்னையை நினைத்துப் பார்த்தால் தான் பாரதிக்குப் பராசக்தியைப் பாடும் மனவேகம் தோன்றியது என்று ஒருசிலர் கூற முன்வரலாம். இதுபோலவே வங்காளத்தில் அன்று நிலவியிருந்த சாக்த மதத்தைக் கண்டதால் தான் பாரதி பராசக்தியைப்பாடினார் என்று வேறு சிலர் விளக்கம் கொடுக்க முன்வரலாம்.

ஆனால் பாரதியின் சக்திக் காதலுக்கு இந்த விளக்கங்கள் போதுமானவை அல்ல. பாரதியின் குழந்தைப் பருவ இளமைப் பருவ மனவியலில் தான் பாரதியின் சக்திக் காதலுக்கும் சக்திப் பாட்டுக்கும் உண்மையான மூல காரணம் இருக்கிறது.

பாரதியின் குழந்தைப்பருவ, இளமைப்பருவ உலகத்தை இனிக்காண்போம்.

'கடுவாய்' சுப்பையர் பாரதியின் பாட்டனார். அவருக்கு ஏராளமான நெல்வயல்கள் இருந்தன. அவர் ரொம்பவும் தாட்டிய மானவர். அவர் மகன் சின்னச்சாமி அய்யர் ஆங்கிலம், தமிழ், தர்க்கம், கணிதம் ஆகியவை கற்றுத் தேர்ந்த அறிஞர். அவருக்கு முன்கோபம் மட்டும் அதிகம். 'குரபத்மன் அரசு புரிந்ததுபோல' என்று பாரதி குடும்பத்தாரைக் குறிக்கின்றனர்.

பாரதி மேல் தந்தை புலிபோலச்சீறி விழுவார். ஐந்து வயதில் தன்தாய் லட்சுமியை இழந்தான் பாரதி. தன்போக்கில் வளர முடியாமல் தந்தையால் தடுக்கப்பட்டான் பாரதி. சிற்றன்னையும் பாட்டியும் அத்தையும் பாரதிமேல் அன்பு காட்டினர்.

பாரதி ஷெல்லி போல நாத்திகம் பேசியதும், 'ஷெல்லி தாசன்'' என்று புனைப்பெயர் வைத்துக்கொண்டதும் குறிப்பிடத் தக்கவை, புதுச்சேரியில் தான் 'சக்திதாசன்' என்று புனைபெயர் தனக்குச் சூட்டிக் கொண்டதாகத் தெரிகிறது.

'சுயசரிதையில் பாரதி குறித்த ஒன்பது வயதுச் சிறுமியைப் பற்றி நாம் தெரிந்துக்கொள்ளவேண்டும்.

பாரதி குடும்பத்தார் அந்தச் சிறுமி கலைவாணி என்று கருதுகின்றனர். வேறுசிலர் பாலியல் தூண்டுகையால் உருவான கற்பனைப் பெண் என்று கூறுகின்றனர்.

தனது இளம்பருவத்தில் பாரதி சந்தித்த இளங்கன்னிப் பெண்ணே அவள் என்று பெ. தூரன் நினைக்கிறார்.

இம்மூன்று விளக்கங்களும் சரியல்ல, எது உண்மையென்று சொல்லும்முன் மனவியல் ஆய்வில் ஆங்கிலக்கவிஞர் ஷெல்லியைப் பற்றி எப். எல். லூகாஸ் சொல்லியிருப்பதை இங்குப் பார்த்துக் கொள்ளலாம்.

ஷெல்லியின் தந்தை சர்டிமோ ஷெல்லி மகனை ரொம்பக் கடுமையாக நடத்தினார். அதனால் ஷெல்லிக்கு மனம் பிறழ்ந்து போனது; ஷேக்ஸ்பியரின் வில்லன்களையே நல்லவர்கள் என்று எண்ணிவிட்டான் ஷெல்லி. கடவுளாகிய தந்தையை மறுக்கும் நாத்திகம் பேசினான் அவன்.

ஷெல்லியின் இளமனம் தந்தையிடமிருந்து பிரிந்து தாயிடம் அன்பு வைத்தது. பிறகு தங்கையின் திருமணப்பேச்சில் தாயிடமிருந்தும் அவன் அன்பு மாறியது.

ஷெல்லியின் இளமனம் தந்தைக்குப் பதிலியாகத் தாயை நாடி, அதில் ஏமாற்றம் அடைந்து, தாய்க்குப் பதிலியை நாடி ஏங்கிற்று. அது நடக்காது போகவே, ஷெல்லி தன் உள்ளத்தில் ஒரு இலட்சியப் பெண் உருவைக் கற்பனை செய்து கொண்டான். அதன்பிறகு அவன் சிலவகைகளில் மனக்கோளாறு பிடித்தவனாகி, ஒரு இலட்சியப் பெண்மைக்கு ஏங்கிய தவிப்பில் பல பெண்ணுறவுகள் கொள்ள நேர்ந்தது.

இதனால் உடனே ஷெல்லியின் கவிதையை நாம் குறைந்த மதிப்பீட்டில் பார்க்கக்கூடாது. ஒரு மரத்தின் வேர்களைத் தோண்டிப்பார்க்கலாம். அந்த வேர்களில் ஒரு சில பழுது பட்டனவாக இருக்கக்கூடும். இதனால் அந்த மரமே பயனற்றது என்று முடிவு கட்டிவிடமுடியாது. மரத்தின் பழங்களே சுவைக்க வேண்டியவை; வேர்கள் அல்ல. இப்படி எப்.எல். லூகாஸ் ஷெல்லியையும் ஷெல்லியின் கவிதையையும் பற்றி மனவியல் அலசல் ஆய்வில் இரக்கம் கலந்து கூறியிருக்கிறார்.

ஷெல்லிக்குச் சொல்லியிருப்பன முழுவதும் பாரதிக்குப் பொருந்தாது. ஆனால் ஷெல்லிக்கும் பாரதிக்கும் ஒப்பிட்டுக் காண ஒருசில மனவியல் நிலைகளும் உண்டு.

ஐந்துவயதில் தாயை இழந்ததால் பாரதியின் குழந்தைமனம் அன்புக்காகத் தவித்து, அன்பைத் தந்தையிடம் பெற முடியாததால் ஏமாற்றம் அடைந்தது. தன்தாய்க்குப் பதிலியாக

யாரையுமே பாரதியால் ஏற்றுக்கொள்ளமுடியவில்லை. ஆகையால் தாய்க்குப் பதிலியாக ஒரு இளஞ்சிறுமியைத் தானாகவே தன் மனசுக்குள் கற்பனை செய்து கொண்டான். அந்தச் சிறுமிதான் பாரதியின் 'சுயசரிதை' யில் வருகிறவள்.

அந்த கற்பனைக் கன்னியின் சித்திரத்தில் தாய்க்குப் பதிலி வேண்டும் என்ற தாய்ப்பாச ஏக்க உணர்ச்சி கலந்திருக்கிறது. மேலும் இலேசான பாலியல் உணர்ச்சியும் இயற்கையாக உள்ளார்ந்து இருக்கிறது. அத்துடன் தெய்வீக உணர்ச்சியும் இணைந்திருக்கிறது. பாரதியின் 'மூன்று காதல்', 'சுயசரிதை' ஆகிய பாட்டுக்கள் இலட்சியப் பெண்மையை அவாவிய மன நிலையைக் காட்டுகின்றன.

இம்மூன்று உணர்ச்சிகளும் உள்கலந்த இலட்சியப் பெண்மையின் உருத்தோற்றம் பாரதியின் குழந்தைப்பருவம் முதல் இளமைப்பருவம் வரைக்கும் இருந்து வளர்ந்து, 1905-ல் நிவேதிதா தேவியைத் தரிசித்த போது புதிய தோற்றம் அடைந்தது.

அதன் பிறகு வங்காளத்திலும் வடஇந்தியாவின் வேறு பகுதிகளிலும் சக்தி வழிபாடு பற்றிப் பாரதிக்குத் தெரியவந்த வேளையில், இலட்சியப் பெண்மையை அவாவிய பாரதியின் மனம் பண்பட்ட நிலையில் பராசக்தியே இலட்சியப் பெண்மை நிரம்பியவள் என்று நினைக்கும் வகையில் புதிய திருப்பம் அடைந்தது. அதனால் அதையும் அடுத்து, பாரத அன்னையும் பரா சக்தியும் ஒரு வடிவமே என்று ஒப்பு உருத் தோற்றம் காணத் துடித்தது பாரதியின் மனம். இதுவே பாரதி கண்ட திருக்காட்சி. தேசியப்பாடல்களில் உள்ள 'எங்கள் தாய்' என்னும் கவிதை பராசக்தியைப் பாடி வந்துகொண்டே பாரத அன்னையைப் பாடும் வகையில் திருப்பம் அடைகிறது.

தாய்க்குப் பதிலியை நாடி இலட்சியப் பெண்மைக்கு அவாவி நின்ற கவிஞர்கள் பாரதியும் ஷெல்லியும். இவர்களில் ஷெல்லி அந்த அவாவினால் முறைகெட்ட நெறியற்ற வழியில் லாத வழிகளில் போக நேர்ந்தது. ஆனால் பாரதி சக்தியை அன்பு கொள்ளவும் அதன் மேல் பாரதத் தாயையே சக்திவடிவமாகப் பாடவும் நேர்ந்தது.

பாரதியின் தந்தை சின்னச்சாமி மகனிடம் கண்டிப்பாக நடந்து கொள்ள அடிப்படையான புறக்காரணத்தை அடுத்துப் பார்க்கலாம்.

சின்னச்சாமி அய்யர் வைதிகமானவர். இயந்திரயுகத்தை வரவேற்ற புதுமைப்பற்றாளர். எட்டயபுரம் சமஸ்தானத்தில் முகத்துதி பாடும் ஒரு அரசவை உண்டு. அதிலே நிலப் பிரபுத்துவம் கோலோச்சியது. சுற்றிலும் பல நிலப்பிரபுக்கள் அதுக்கு உடந்தை. அங்கேதான் அரசவையில் சின்னச்சாமி அய்யருக்கு முதலிடம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாணிக அடிப்படையிலிருந்து பொருளாதாரச் சுரண்டலுக்கு மாறிய ஆங்கில ஏகாதிபத்தியத்தின் காலம். அப்போது சின்னச் சாமி அய்யர் ஜமீன் முறையின் நிலப்பிரபுத்துவத்துக்கும் புதிய முதலாளித்துவப் பட்டத்துக்கும் ஆசைப்பட்டவராக இருந்தார். எனவே பாரதி தந்தையின் வழியை நல்லது என்று ஒப்புக் கொள்ள முடியாமல் அது பேராசைத்தனமானது என்று 'சுயசரிதை'யில் கூறியிருக்கிறார்.

தேசிய உணர்ச்சியோடு இயந்திரத்தொழில் தொடங்கும் திட்டம் சின்னச் சாமி அய்யருக்கு இருந்ததாகத் தெரியவில்லை. அப்படி இருந்திருந்தால் பாரதி தந்தையின் தொழில் திட்டத்தை வரவேற்றிருப்பார். கப்பல் ஓட்டும் தொழிலை வ.உ. சிதம்பரம் பிள்ளை தேசிய உணர்ச்சியோடு தொடங்கியதால் பாரதி அதை வரவேற்றார்.

பாரதியைக் கணக்கு படிக்க வைத்து மேல் நாட்டுக்கு இயந்திரத்தொழில் கல்வி கற்க அனுப்பவேண்டும் என்று தந்தை திட்டமிட்டிருந்தார். ஆனால் பாரதியோ 'கணக்கு', மிணக்கு, வணக்கு, மணக்கு என்று எதுகைமொழியில் அதைக் கேலி செய்தான். மேலும் தந்தை படிக்கச் சொன்ன அக்கால ஆங்கிலக் கல்வியையும் பாரதி படித்து, தந்தை விரும்பிய வழியில் போக விரும்ப வில்லை.

பாரதிக்கு இளமைப்பருவத்திலேயே தந்தையின் பேராசை வழி பிடிக்கவில்லை. தந்தை காட்டிய கோபமும் அடக்கு முறை யும் பாரதியின் அடிமனத்தையே பாதித்து விட்டன. தாயின் மரணம் அவனை அடிமனம் வரைக்கும் உலுக்கியிருந்தது. எனவே தாய்க்குப் பதிலியை நாடி, அதில் ஏமாற்றம் அடைந்து, ஒரு இலட்சியப் பெண்மைக்கு ஏங்கித் தவித்தான் பாரதி.

பாரதி எட்டயபுரத்தில் இருந்தபோதே எழுதத்தொடங்கிப் பிறகு சென்னையில் முடித்த ஞானரதத்தில் வருகிற பர்வத குமாரி என்னும் இளம் பெண்ணும் தாய்க்குப் பதிலியாக இலட்சியப் பெண்ணை அவாவிய பாரதியின் அடிமனநிலையின்

விளைவுதான். 'சுயசரிதை' யில் பாரதி வர்ணிக்கும் சிறுமிக்கும் பர்வதகுமாரிக்கும் ஒப்புமைகள் இருக்கின்றன. கந்தர்வச் சாயலை இருவருக்குமே பாரதி கொடுத்துள்ளார். பர்வதகுமாரி யின் சித்திரத்தில் காதற்கிளர்ச்சியும் தாய்மையுணர்ச்சியும் தெய்வீக அன்பும் இணைந்துள்ளன. மன்மதன் அம்புகள் பற்றிய குறிப்புக்கள் இரண்டு சித்திரங்களிலும் வருகின்றன. பாரதி தன்னையும் இலட்சியப் பெண் உருவையும் பறவைகளாகச் செய்துள்ள உருவகம் இரண்டிலும் காணப்படுகிறது.

பாரதியின் சக்திப்பாடல்களையும், பாரதத் தாயைப் பரா சக்தியாகப் பாடியுள்ள அரசியல் பாடல்களையும் பொருளாழத் துடன் உணர்ந்துகொள்ள மேலே கண்ட மனவியல் அலசல் ஆய்வு அடிப்படையானது. பாரதியின் பாஞ்சாலியும், தந்தை திரித ராட்டிரனும், 'சுயசரிதை'யில் வரும் கன்னிப் பெண்ணும், ஞானரதத்தில் வரும் பர்வத குமாரியும், குயிலும், கதைகளில் வரும் பெண் பாத்திரங்களும், கண்ணம்மாவும், கண்ணன் ஆகிய தந்தையும் இந்த ஆய்வில் பார்க்கப்பட வேண்டியவர்கள்.

சி. கனகசபாபதி

# புதுக்கவிதையின் உருவ அமைப்பு

தமிழில் புதுக்கவிதையை வால்ட் விட்மனைப் பின்பற்றி ந. பிச்சமூர்த்தி எழுத ஆரம்பித்த காலம் 1938-க்கு முன்பே என்றும், சிறுகதைப் பத்திரிகை என்னும் புகழுக்குரிய 'மணிக்கொடி' தான் அதை வெளியிட்டது என்றும் தெரிகிறது. 1938 தொடங்கி 1944 வரைக்கும் புதுக்கவிதையின் முதல் சோதனைக்காலம் என்று குறிப்பிடலாம். அந்தக் காலகட்டத்தின் முதல் சோதனைக்காரர்கள் ந. பிச்சமூர்த்தியுடன் கு.ப. ராஜகோபாலன், புதுமைப் பித்தன், வல்லிக் கண்ணன் ஆகிய நால்வர்.

முதலில் இந்த நால்வரும் வசன கவிதை முயற்சியில் பாதியும் இலகு செய்யுள் பா முயற்சியில் பாதியுமாக எழுதியே புதுக் கவிதைச் சோதனைகளை நடத்தி யிருக்கிறார்கள். 'மணிக்கொடி'யில் சிறுகதை உருவத்தில் சோதனை நடந்து கொண்டிருந்தது போலவே புதுக்கவிதை உருவத்திலும் சோதனை நடந்தது. இவர்கள் மரபுவழிக் கவிதையில் எழுத முயன்று அது முடியாமல் தோல்வி கண்டு, யாப்புக் கட்டற்ற புது கவிதை முயற்சியில் இறங்கினார்கள் என்று மதிப்பிட முடியாது. இவர்களின் புதுக்கவிதைச் சோதனையில் 1945-1959 வரையில் தடை ஏற்பட்டு ஒன்றும் படைப்பாகவில்லை. ஆனால் ரகுநாதன் 'திருச்சிற்றம்பலக் கவிராயர்' என்னும் புனை பெயரில் புதுமைப்பித்தனைப் பின்பற்றி ஒரு சில சோதனைகள் செய்து பார்த்தார். 1959 முதல் 'எழுத்து' என்னும் பத்திரிகையின் துணையில் தமிழில் புதுக்கவிதை ஆதரவுடன் வளர்க்கப்பட்டு வருகிறது. 'காட்டு வாத்து', 'வழித்துணை', 'புதுக் குரல்கள்', 'கோடைவயல்' ஆகிய புதுக்கவிதைத் தொகுப்புகள் 'எழுத்து'வின் பெரிய முயற்சியில் வெளிவந்திருக் கின்றன. 'எழுத்து' வின் ஆசிரியர் சி.சு. செல்லப்பா தாமே ஒரு புதுக்கவிதைப் படைப்பாளியாகவும் இருக்கிறார் என்பது குறிப்பிடத் தக்கது. 'மணிக்கொடி', 'எழுத்து' ஆகிய பத்திரிகை

களோடு 'கலாமோகினி', 'கிராம ஊழியன்', 'தேனீ' ஆகிய பத்திரிகைகளும் தமிழில் புதுக்கவிதையை வெளியிட்டுள்ளன.

இன்று இந்திய மொழிகளில் எல்லாம் புதுக்கவிதைப் படைப்பு நடந்து கொண்டிருக்கிறது. இதுக்கு உந்துதல் கொடுத்திருப்பது இன்றைய ஐரோப்பிய நாடுகளில் கவிதைக்கு ஏற்பட்டுள்ள புதிய திருப்பம்தான். தமிழில் புதுக்கவிதை உருவத்தில் மூன்று வகைகள் தோன்றியுள்ளன. முதல் வகை வசனகவிதை (Prose Poetry) இதை அடுத்த இரண்டாம் வகை ஓலிநயமான இலகு செய்யுள் பாவில் (Rhythmic Free Verse) எழுதுவது. இதுக்கும் அடுத்த மூன்றாம் வகைதான் இலகு செய்யுள் பாமுறை (Free Verse) இம்மூன்றில் வசன கவிதை முயற்சியில் கட்டுக்கோப்பும் அங்கக்கட்டான தொடர்ச்சியும் ஓலிநயமும் அமையாத் தன்மையால் வரவர அம்முயற்சி புதுக்கவிதைக்காரர்களால் மேற்கொள்ளப்படாமல் போயிற்று. மற்றவை இரண்டும் இவர்களால் பின்பற்றப்படுகின்றன.

இனி இந்த இலகு செய்யுள் பாமுறையில் படைப்பாகும் புதுக்கவிதையின் உருவம் எப்படிப்பட்டது என்று பார்ப்போம்.

வேறு எந்தக் காலத்தை விடவும் இன்றுதான் கவிதை உரைநடையின் போக்கை அனுசரித்துப் போக வேண்டிய சூழ்நிலை தோன்றியிருக்கிறது. பெட்டிக் கடை வைத்திருக்கிற நாரணன் இன்றைக்கு எப்படிப் பேசுவான்? ந. பிச்சமூர்த்தியின் 'பெட்டிக் கடை நாரணன்' என்னும் புதுக்கவிதையில் அவன் பேசட்டும்; நாம் கேட்போம்.

''தம்பிடி மிச்சத்தைக்
கேட்பவரில்லை,
சில்லரைப் போருக்கு
வருவோரும் இல்லை,
அங்கயற் கண்ணியின்
அலையோடும் அருளால்,
எண்ணைக்குப் பின்னர்
அரிசிக்கும் பங்கீடு
தானாகத் தங்கம்
தடத்தில் கிடைத்தால்
ஓடென வொதுக்க நான்
பட்டினத் தாரா?''

இப்படி நாரணன் யதார்த்தமாகப் பேசுகிறான். இந்தப் பேச்சில் தம்பிடி, சில்லரை, எண்ணை ஆகிய அன்றாடச் சொற்கள் கலந்து வருகின்றன. வரியமைப்பும் சீர் அமைப்பும் இதில் இருக்கிறது என்றாலும் யாப்புமரபில் வர வேண்டிய அமைப்பு வரவில்லை. பேச்சிலுள்ள உரைநடைக்குத் தக்கபடி, கருத்துக்கும் உணர்ச்சிக்கும் இயங்க, பேசும் பொழுது நிறுத்திப் பேசுகிறோமே அதுக்கெல்லாம் இணங்கவே சீர்களும் ஒரு வரியும் அமைகின்றது. இப்படி வருவது மனவியலான தொடர்ச்சியில் வரும் அமைப்பு; மேலும் உரைநடையை அனுசரித்த அமைப்பு, பா ஓசையின் வழியோ தளை அமைப்போ இப்படிப்பட்ட புதுக்கவிதையில் கிடையாது. ஆனால் ஒலிநயமும் பத்தி அமைப்பும் உருவக்கட்டுக் கோப்பும் புதுக்கவிதைக்கு உண்டுதான்.

பேச்சின் அமைதி - ஒரு சிந்தனைப் போக்கு - இயற்கையான ஒலிநயம் - பேச்சின் உரைநடையை அனுசரிக்கும் போக்கு - மனவியலுக்குத் தக்கபடி ஓட்டமும் நிறுத்தமும் - குரல் இறக்க ஏற்றம் (Cadence) உரைநடையின் போக்கை அனுசரித்தாலும் செய்யுள்பாடும் முறையில் வெளியீடு - இதெல்லாம் பொருந்தி வர அமைத்தால் ஒரு புதிய உருவம் கிடைக்கிறது. இந்தப் புதிய உருவம் தான் புதுக்கவிதைக்கு.

தமிழ் மரபில் நான்கு வகைப் பாக்களும் பல பாவினங்களும் இருக்கிற போது இம்மாதிரியான புதுக்கவிதை முயற்சி எதுக்காக? இந்தக் கேள்விக்கு விடைகாண இப்போது வருவோம்.

நமது கண்களுக்கு முன் நிகழும் நாகரிகத்தை நேர்முகமாகச் சொல்லிக் காட்டவும், தனிமனித மன அசைவுகளை வெளிப்படுத்தவும், கருத்துக்கும் உணர்ச்சிக்கும் வலுக்கொடுக்க இயற்கையான பேசும் முறையை அமைக்கவும், நவீன ஓவியக்கலையைப் போலவே கண்வழியே படிமங்களைக் காண வைக்கவும், தூலமான சொல்லும் நயத்துக்கும் அப்பாற்பட்ட சூக்குமமான பொருளும் அமைதியும் காணவைக்கவும் இலகு செய்யுள் பாமுறையிலான புதுக்கவிதை ஏற்றதாக இருக்கிறது. இதில் சாதனை செய்து காட்டியுள்ளார். டி.எஸ். இலியெட்டும், எஸ்ரா பவுண்டும். டி.எஸ். இலியெட்டின் 'பாழ்நிலம்' போலவே தமிழில் ந. பிச்சமூர்த்தி படைத்துள்ள 'காட்டு வாத்து' வும், 'வழித்துணை'யும், சி.மணி படைத்துள்ள 'நரகம்'மும்

நமது புதிய நாகரிகத்தை நேர்முகத் தன்மையுடன் வெளிப் படுத்திக் காட்டுகின்றன.

ந. பிச்சமூர்த்தியின் 'காட்டுவாத்து'வில் சில வரிகளை இங்கே பார்ப்போம்.

"பாடம் கேட்காமல்
பாதை காட்டாமல்
குஞ்சுகளும் தாமாய்
சைபீரியா செல்லும்
இயல்புணர்வைக் கண்டபின்னும்
ஒளியைக் காணாயோ?
பூட்டை மறந்துவிடு."

இவ்வரிகள் மனவியல் தொடர்ச்சியில் இலகு செய்யுள் பா முறையில் வருகின்றன.

நாடுகளின் எல்லைகளுக்கு அப்பால் சர்வதேசியமாக வாழவேண்டும் என்ற கருத்துக்குத்தான் காட்டு வாத்து ஒரு குறியீடு. இதை மரபு வழி யாப்பில் இவ்வளவு வலுவாகவும் நேர்முகமாகவும் சூக்குமமாகவும் படிமச்செழுமையாகவும் வெளிப்படுத்த இயலாது என்பது மெய்தான். கூட்டுக்கலப்பான (Complex) நாகரிகப் போக்கு எங்கும் சூழ்ந்துள்ள தற்காலத்தில் இப்படிப்பட்ட கூட்டுக் கலப்பான இலகு செய்யுள் பாமுறைதான் ஏற்றதாக இருக்கிறது. மேலும் மௌனவாசிப்பும் படிமவியலும் பெருகிவிட்ட தற்காலத்தில் ஓசைக்கவிதையிலிருந்து மாறுபட்ட புதுக்கவிதைதான் பொருத்தமாக இருக்கிறது.

இன்று அருணகிரிநாதர் போலச் சந்தவிருத்தங்களில் பாடும் தேவை இருக்கிறதா என்றால் இல்லை. ஆங்கிலநாட்டில் எலிசபெத் ராணி காலத்தில் ஆங்கிலக்கவிதை இசைக்கலைக்கு ஆட்பட்டதும், அதனால் ஜார்ஜியின் கவிதை முறை மேலோட்டமான பொருள்களையே தொட்டு ஓசைக்கவிதை வழியில் திரும்பியதும், அடுத்து நவீன ஓவியப் பாங்கின் தாக்கத்தால் புதிய படிமவியல் கவிதை ஏற்பட்டது என்று நாம் அறிகிறோம். அதே முறையில்தான் தற்காலத் தமிழ்க்கவிதை படிமவியலில் திரும்பும்படி இன்று ஏற்பட்டிருக்கிறது. மேலும் விருத்தங்களைக் கம்பனுக்கு மேலும். வெண்பாவைப் புகழேந்திக்கும் மேலும், பண்ணமைந்த பாடல்களை நாயன்மார் களுக்கும் ஆழ்வார்களுக்கும் மேலும், அகவல்பாவைச் சங்கக் கவிஞர்களுக்கு மேலும், சிந்துவைப் பாரதிக்கு மேலும் பாடிக்

காட்ட முடியுமா என்னும் பெரியதொரு மலைப்பு பூதாகரமாக எழுந்திருக்கிறது. தமிழ்க் கவிதையில் பாரதிக்குப் பிறகு ஒரு இடைவெளி (Rift) ஏற்பட்டிருப்பதும் இலகு செய்யுள் பாமுறை யிலான புதுக்கவிதை தோன்றக் காரணமாகும்.

கடைசியாக இந்தப் புதுக்கவிதை மரபுத் தொடர்ச்சி உடையதுதான் என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

சிலப்பதிகாரத்தில் உரைப்பாட்டு என்னும் உருவமும் காணப்படுகிறது.

''குன்றவரும் கண்டு நிற்பக் கொழுநனொடுகொண்டு
போயினார்
இவள் போலும் நம் குலக்கோர் இருந்தெய்வம்
இல்லையாதலின்
சிறுகுடி யீரே! சிறுகுடியீரே!
தெய்வம் கொள்ளுமின் சிறுகுடி யீரே!''

இரு குன்றக் குறவருடைய பேச்சு. இதே உரைப்பாட்டு உருவத்தின் மரபுத் தொடர்ச்சியையே நாம் இன்றைய புதுக்கவிதையில் காண்கிறோம். பாரதி பாஞ்சாலி சபதத்தில் ''பார், சுடர்ப்பரிதியை'' என்று அர்ச்சுனன் பாஞ்சாலிக்குக் கூறிய தாகப் பாடியிருப்பது அகவல் வரிகள் போலத் தோன்றினாலும் உரைப்பாட்டாகவே இருக்கிறது.

தொல்காப்பியர் எடுத்துக்காட்டாத முறையில் சங்க காலத்தில் அகவல் பாவின் மரபை மீறிய உருவத்தில் ஔவை பாடியிருக்கிறார்.

''சிறிய கட் பெறினே எமக்கீயும் மன்னே .
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான் மகிழ்ந் துண்ணும் மன்னே''

இது அதியமானின் மரணத்தால் வேதனையுற்ற ஔவையால் பாடப்பட்டிருப்பது. தமது சிந்தனைப் போக்கை இயல்பான பேசும் முறையில் வெளியிட ஔவை எண்ணியபோது, தடைப்பட்ட அவரால் முடியவில்லை. எனவே அவர் மரபை மீறிய ஒரு புதிய உருவத்தில் தமது சிந்தனைப்போக்கை வெளியிட்டார்.

ஔவையின் பாட்டில் சீர் அமைப்பு மரபை மீறி வந்துள்ளது. அந்தக் காலத்தில் அந்த மீறலை உடனே ஒப்புக் கொண்டிருக்க

மாட்டார்கள். ஆனால் பிற்காலத்தில் ஔவை பாடியது மரபுத் தொடர்ச்சியாக ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது.

இன்று புதுக்கவிதை என்பது பழைய உரைப்பாட்டு, இணைக்குறள் ஆசிரியப்பா ஆகிய முயற்சிகளின் வழியே மரபுத் தொடர்ச்சியில்தான் தோன்றியிருக்கிறது. இதை இப்படிப் பார்க்கிறதை விட்டுவிட்டு, இப்படி ஒரு உருவமே அமையாது என்று விமரிசிப்பது சரியல்ல.

*திருமதி கிருஷ்ணாசஞ்சீவி*

# பேராசிரியை இராஜேசுவரியின் 'சூரியன்'

'பேராசிரியை இராஜேசுவரிக்குப் 'பேசும்' பொருள் கொடுக்கப்படும்போதெல்லாம் விஞ்ஞான விளக்கம் பெறத்தக்க பொருளையே கொடுப்பதை ஒரு மரபாகக் கொண்டேன்.... விஞ்ஞானம் அம்மையாரிடம் தமிழில் எளிமையாய்ப் பணியாகியதை யான் உணர்ந்தேன்' - திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள். (பக்கம் 198-199).

அறிவியல் நுட்பக் கருத்துக்களை எளிய தமிழில் பேசியும், எழுதியும் வந்த முதல் அறிவியல் பேராசிரியை செல்வி ஈ.த. இராஜேசுவரி அம்மையார் அவர்கள் எனலாம். இவர்கள் 1906-ஆம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தை வழக்கறிஞர் தணிகாசல முதலியார். இவரது தமக்கை வழக்கறிஞை; தங்கை கணிதப் பேராசிரியை. இவர் தம் தந்தையாரிடமிருந்து தமிழ்க் கலையையும் சைவக் கலையையும் கற்றுணர்ந்தார்.

தந்தை வாழ்ந்த சூழல் இவரைத் தமிழில் வல்லவராக் கியது; கல்விப் பயிற்சி இவரை அறிவியல் பேரறிஞராக்கியது; பேராசிரியத் தொழில் அறிவியல் நுட்பப் பொருளை விளக்கும் பேச்சாற்றலைப் பெருக்கியது. இவற்றின் பயனாக விளைந்தவை 'வானக் கப்பல்' (Airship) கூண்டு (Balloon)சூரியன் (Sun), 'அயின்ஸ்டீன் காட்சி' முதலிய அறிவியல் இலக்கியங்கள்; அறிவியல் கொள்கை விளக்கம் பெற்ற இலக்கண, இலக்கிய, தத்துவ நூல்கள் தொல்காப்பியம், தேவார திருவாசகம், சிலப்பதிகாரம், இராமாயணம், பெரிய புராணம், திருமந்திரம், சைவசித்தாந்தங்கள் முதலியன.

இவரது நூல்களுள் சிறந்த ஒன்று 'சூரியன்'. அந்நூலுக்கு ஆசிரியை எழுதிய முகவுரையில்,

'...சூரிய தத்துவத்தை விஞ்ஞான சாத்திர முறையில்இதுகாறும் தமிழில் யாரும் வெளியாக்கவில்லை... ... சர்வகலா

சாலை மாணவர்களும், மற்றய தமிழ் மாணவர்களும் எளிதில் சூரியத் தத்துவத்தைத் தற்கால விஞ்ஞான சாத்திர முறையில் உணர எளிய நடையில் எழுதலானேன்.'

(சூரியன் - முகவுரை.)

என்று குறிப்பிடுகின்றார். இம்முயற்சி தமிழுக்கு - தமிழ் மாணவர்க்குக் காலத்தாற் செய்த உதவி; தொண்டு; அறிவியல் தமிழ்த் தொண்டு.

'சூரியன்' என்ற நூலில் 'கதிரவன் ஒளி' என்பது முதற் பகுதி. அது,

'ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்

காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு

மேரு வலந்திரித லான்'.... (ப.1)

என்ற சிலப்பதிகார மங்கல வாழ்த்தோடு,

'கதிரவன் குணதிசை சிகரம்வந் தணைந்தான்

கனையிரு ளகன்றது காலையம் பொழுதாய்

மதுவிரிந் தொழுகின மாமலர் எல்லாம்' (ப.3)

என்ற தொண்டரடிப் பொடியாழ்வார் காட்டும் உதயக் காட்சியுடன் தொடங்குகின்றது.

பகலவன் உருவம் (வடிவமும் அமைப்பும்), நக்ஷத்திர சாலை (அமைப்பும் நடைமுறையும்), ஆராய்ச்சிக் கருவிகள்; சூரியக் குடும்பம் (உள்நிலைக்கோணங்கள்), சூரியக் குடும்பம் (முடிவு-இடைநிலைக் கோள்களும் வெளிநிலைக் கோள்களும்), கிரகணங்கள், பகல் நக்ஷத்திரம் ஆகிய 7 பகுதிகள் சூரியனைப் பற்றிய பல அறிவியல் விளக்கங்களைக் கூறுகின்றன. 'கோளஆராய்ச்சியும் தத்துவ நுணுக்கமும்' என்ற இறுதிப்பகுதி அயின்ஸ்டீனின் அவாய் நிலைக்கொள்கை (Theory of Relativity) யையும், அறிவியலுக்கப்பாலுள்ள பேராற்றலையும் விளக்கு கிறது.

'...அண்டங்கள், வேகம் மிக்கு மோதிக் கொண்டு கெடாதபடி, கடவுள் காக்கின்றார் என்பதனை,

'வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க'

எனப்பாடுகின்றார் மணிவாசகனார். கடவுள் என்ற பொருளை,

விஞ்ஞான சாத்திரம் குறிப்பிடாவிடினும், எல்லா நக்ஷத்திரங் களுக்கும், நமது சூரிய குடும்பத்திற்கும், ஏதோ ஒரு மூல காரணம் உண்டென்று கூறுவது, விஞ்ஞான சாத்திரத்திற்கு முரணாகாது. அதனைக் கண்டறியப் போதுமான வசதிகள் இல்லை எனினும் இவ்வகைத் தத்துவம் எங்கும் பரந்தொளிர்கின்றது' *(ப.171-172).*

என்ற வாசகங்களுடன் நூலை முடிக்கின்றார் பேராசிரியை. இலக்கியமும் தத்துவமும் அறிவியல் விளக்கத்திற்கு முதலும் முடிவுமாயமைந்துள்ளன.

மண்ணியல் கண்ட தமிழர் விண்ணியலையும் கண்டிருந் தனர். அவர்கள் ஊனக் கண்கொண்டு கண்ட உண்மைகளைக் கற்பனை வழிநின்று காவியங்களாக்கி மகிழ்ந்தனர். ஊனக்கண் காட்சிகள் உயர்ந்து நின்றபோது ஞானக் காட்சியாக-மெய்ஞ்ஞானக் காட்சியாக அவை உருப்பெற்றன. பேராசிரியை அவர்கள் தரும் அறிவியல் விளக்கங்களை அறியும்போது நம்முன்னோர் - சான்றோர் - நுண்ணறிவுணர்வு (Intuition) மிக்கவர் களாக இருந்தனர் என்பதை உணர்கின்றோம். இதோ ஆசிரியை அவர்கள் தரும் சான்றுகள்:-

> '...எல்லா உயிர்களின் உற்பத்திக்கும், வளர்ச்சிக்கும், கதிரவன் அருள் இன்றியமையாததென்றும், இதுபற்றியே எல்லா உயிர்களும் பகலவனிடம் அன்பு செலுத்துகின்றன வென்றும், ஜீவர்களின் அறிவுக்கும், சூரியன் ஒளிக்கும், சம்பந்தம் மிகவும் நெருங்கியதொன்றென்றும் நாம் காண்கிறோம். இவ்வுண்மைகளை உணர்த்த வந்த கம்பர் இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் எழுதியுள்ள சிலப்பதிகாரப் பாடலைப் பின்பற்றிச் சூரியனைத் தசரத சக்கரவர்த்தியின் ஆஞ்ஞா சக்கரத்தோடு ஒப்புமைப்படுத்திப் பின்வருமாறு பாடுகிறார்.

> 'குன்றென உயரிய குவவுத் தோளினான்
> வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென
> ஒன்றென, உலகிடை உலாவி, மீமிசை
> நின்றுநின் றுயிர்தொறும் நெடிது காக்குமே'
>
> *(பாலகாண்டம் - அரசியற்படலம்.11, ப.12)*

'...சில காலங்களில் சூரியோதயம் காலையில் பத்து மணிக்கும் சூரிய அஸ்தமனம் பகல் இரண்டு மணிக்கும் நேர்வது நமக்கு மிகவும் அதிசயமாக இருக்கும். அஃது.... (இமய மலைக்கு

வடக்கிலுள்ள தேசங்களில்) குளிர்காலமாகும். எங்கும் பனி உறைந்து கிடக்கும். பல்லைக் கிட்டும், குளிர்வாடை, தேகத்திலுள்ள நரம்புகளையும் குலையையும் நடுங்கச் செய்திடும். இக்காலத்தில் எழும் கதிரவனும், அத்தேச மாந்தருடன் துன்புறுவன்போல் காணப்படுவான். இத்தன்மையை,

'மொய்ப்பனிகூர் குளிர்வாடை முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளுங் குலைந்தசையக் குளிர்க்கொதுங்கி
வெய்யவனுங் கரம்நிமிர்க்க மாட்டான் போல், விசும்பினிடை
ஐதுவெயில் விரிப்பதுவும் அடங்குவதும் ஆகுமால்,

என்று, சேக்கிழார் கூறுவது போலவே விளங்குகின்ற இத்தகைய பிரதேசங்களைச் சமசீதோஷ்ணப் பிரதேசங்களென்று பூகோள சாஸ்திரிகள் கூறுவர். (ப.5.)

'....முதலில் சிவப்பு உருண்டையாகக் காணப்பட்ட அதிகாலைச் சூரியன், வானத்தில் உயர உயர, மஞ்சள் நிறம் பெற்றுப் பின்னர் உச்சியில் சென்ற காலத்து, அதிக வெண்மையாகவும் தோன்றுகின்றான் அன்றோ? கிழக்கே தோன்றும்போது பெரிதாயும், உச்சியில் சிறுத்தும், மேற்கே மறையும்போது பெரிதாயும் தோன்றுகின்றான். இதனைக் கம்பர்,

'எழுமிடத் தகன்றிடை யொன்றி யெற்படு
பொழுதிடைப் போதலிற் புரிசைப் பொன்மதில்
அழன்மணி திருத்திய அயோத்தி யாருடை
நிழலெனப் பொலியுமால் நேமிவான்சுடர்' -

நகரப்படலம்...41

என்று பாடுகின்றார். ஒரு கண்ணாடி வில்லையைச் சூரியன் எதிரே பிடித்து, அதன் ஒளியை அதன் வழியே பாய்ச்சி, ஒரு முகப்படுத்த முயல்கையில், ஒருமுகப்படும்போது அவ்வொளி சிறுத்தும், ஒருமுகமாகாது பன்முகப்பட்டபோது பரந்தும் தோன்றக் கண்ட கம்பர், எல்லா ஒளிகட்கும் பிறப்பிடமான சூரியனையே, அயோத்தியின் எதிரொளி எனத் தலைகீழாகப் பாடுகிறார். கண்ணாடி வில்லைகளாக அயோத்தி யிலுள்ள அழன்மணிகள் அமைந்தனவாம். அவ்வயோத்தினொளி ஒருமுகப்பட்ட உச்ச நிலையில் சுருங்கியும், ஒருமுகப்படாது

எழுமிடத்தும், ஏற்படு பொழுதிலும், அகன்றும் தோன்று கிறதாம். ஈதே சூரியனாம். இந்தக் கம்பனுடைய வம்பிலும், சூரியனுடைய வடிவமாற்றம் வெளியாகின்றதன்றோ? இவற்றிற்கும் மேலே ஊனக் கண்ணாலே நாம் என்ன காணக்கூடும்? கனாக்கண்டுதான் சொல்லவேண்டும். *(ப.17.)*

பேராசிரியையின் 'சூரியன்' நூலிலுள்ள 'சூரியக் குடும்பம்' *(ப.68-127)* ஒரு நல்ல புதிய அமைப்புடன் விளங்குகிறது.

> '...சூரியனும், அவனைச் சுற்றிவரும் கிரகங்களும் சுழன்று வீற்றிருக்கும், இக்கதிர்வட்டமாஞ் - சூரிய குடும்ப வீட்டின் அமைப்பானது, ஒவ்வொரு சாதியார் ஒவ்வொரு பிரகாரத்திலிருந்து வழிபடுமாறு, பல மதில்களோடும் பல மண்டபங்களோடும் விளங்கச் சாதிக் கட்டுப்பாடுடையார் கட்டிய, கோயில் ஒன்றை, நமக்கு நினைப்பூட்டு கின்றது.....' *(ப.68-69)*

என்று வரும் பகுதி, அதைத் தொடர்ந்து வரும் வருணனை, ஆசிரியை வாழ்ந்த காலத்தின் சாதிக் கொடுமைச் சூழலும் அறிவியல் கருத்தை விளக்கப் பயன்படுகிறது என்பதற்குச் சான்றுகளாகும்.

ஆசிரியை அவர்கள் தரும் தமிழாக்கச் சொற்கள் பல சிறப்பாயமைந்துள்ளன. சில சான்றுகள் வருமாறு:- செவ்வானச் சோதி, அல்லது வடமுனை வளரொலி (Aurora Borealis); தென்முனைத் திகழொலி (Aurora Australis) ஒளி விலக்குகள் (Blinds); நிறப்புரை (Chromosphere); இராசிச் சக்கரத் தொழிலொளி (Zodiacal Light); ஒளியிழைப்பொருள் (Transparent Substance); ஒளிவரிசை (Spectrum); ஊடுருவி ஒளிபரப்பு (Transmission grating); தன்னியக்க மற்றவாயு (Inert-gas).

வடமொழிச் சொற்கள் இடையிடையே பயின்று வருவ தோடன்றி, மொழி பெயர்ப்புச் சொற்களாயும் பண்படுத்தப் பட்டுள்ள வடமொழிச் சொற்கள் பேராசிரியை காலத்து மொழிச் சூழலை நமக்குக் காட்டுகிறது.

அறிவியல் தத்துவங்களை விளக்குவதோடு அந்த விளக்கங் களுக்கேற்ற இலக்கியச் சொற்களை ஆசிரியை அவர்கள் எடுத்துக்காட்டுகின்ற சிறப்பு மகிழ்ச்சியூட்டுகின்றது. அவற்றைப் பேராசிரியையவர்கள் வாய்மொழியாகவே காணலாம்.

'...பனியிலே காலையிலே சிலபோது மூன்று கதிரவர்கள் உதயமாகவும் காண்போம். இதன் உண்மை என்ன? தண்ணீரிலே நமது வீரலிற் பாதியைத் துவைப்போமானால், நமது விரல் நேராய் இருந்தாலும், நீரில் உள்ள பகுதியும், மேலே வெளியில் உள்ள பகுதியும், நேரே தோன்றாமல், வளைந்து தோன்றக் காண்போம். ஒரு பகுதி நீரினூடும், ஒரு பகுதி வெளியே காற்றினூடும், கிடக்கின்ற ஊடுநிலை வேறுபட்டால், இவ்வொளி வளைவு தோன்றுகிறது. அவ்வாறே, அடிவானத்திலே, சூரியன் ஒளி, அவன் தோன்றுவதற்கு முன்னரும், மறந்ததற்குப் பின்னரும், வளைந்து மேலேறித் தோன்றுகிறது. நன்னாகனார் என்ற பழந்தமிழ்ப் புலவர்,

'விசும்பு நீத்தம் இறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் பழுநிய சிவந்து வாங்கு அந்தி' - (புறநானூறு)

என்று பாடுவார். இவ்வொளி வளைவை, 'வாங்கு' என்ற சொல்லால் சுட்டிக் காட்டுகின்றார் போலும். *(ப.16)*

'... நாடி மண்டலமும் சிலவிடங்களில் கறுத்தும் சிலவிடங்களில் வெளுத்தும் தூரதிருஷ்டிக் கண்ணாடி வழியே தோன்றுகிறது. இந்தக் கரும்புள்ளிகளைச் 'சூரியப் புள்ளிகள்' (Sun Spots) என வழங்கிவருகின்றனர்... சூரியனுடைய தரை மட்டத்திலே அடிக்கடி திடீர் என்று தோன்றும் இப்புள்ளி களைப் பெரிய குழிகள் என்றே கூறலாம்... அப்புழையை 'இல்லி' என்றே பெரிய திருமடலில் (திருமங்கை மன்னர்) பாடுகின்றார்.

மன்னுங் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னனடுவுள்
அன்னதோ ரில்லியினூடு போய் வீடென்னும்
தொன்னெறிக்கண் சென்றாரைச் சொல்லுமின்கள்.

என்று பாடும் போது, நாடிமண்டலப் பகுதியிலே, இவ்வில்லியாம் சூரியப் புள்ளியுள்ளதெனக் குறிப்பாராய், 'நன்னனடுவுள்' என்று பாடுகின்றார். *(ப.23)*

'வாங்கு', 'இல்லி', 'நன்னடுவுள்' இவை அறிவியல்கலைச் சொற்களாகின்றன அல்லவா?

'சூரியன் நூலில் பதிமூன்று படங்கள் அமைந்துள்ளன. படத்தைப் பற்றிய விளக்கம் உள்ள பக்கங்களும் அவற்றில் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றால் படிப்போர் பெரும்பயன் பெறுதல் திண்ணம்.

சூரியனைக் காணுவதற்காகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ள சில தொலைநோக்குக் கண்ணாடிகளைப் பற்றி விளக்கி, மின்சாரத்தின் மிகுபயனால் நமக்கு ஏற்பட்டிருக்கும் நன்மை களை வியந்து பாராட்டிய பின்னர்,

> வெல்ஸ் (H.G. Wells) என்ற ஆங்கிலப் புலவர் கனாக் கண்டு எழுதிய கதைகளில் சில மெய்யாகவே நிகழக் காண்கிறோம். பிற கிரகங்களுக்குப் பிரயாணம் செய்வதைப் பற்றியும் அவர் கனாக் கண்டுள்ளார் (ப.48).

என்று எடுத்துக் காட்டுகின்றார் பேராசிரியை. அன்று மட்டுமல்ல, இன்று அறிவியல் அதிவிரைவாய்ப் பாய்ந்து பறந்து பரவிவரும் இந்நாளில் - நுண் உணர்வு பெற்ற அறிஞரது கனவு அறிவியல் துறையில் நனவாதலைக் காண்கின்றோம். இதோ 'இந்து' (27.12.68) நாளிதழில் வந்துள்ள ஒரு செய்தியின் தமிழாக்கக் குறிப்பு :-

> 'நூறு ஆண்டுகட்குமுன், 1865இல் ஆகாய விமானமே கண்டு பிடிக்கப்படாத காலத்தில், 'பூமியிலிருந்து சந்திரனுக்கு' (From the earth to the moon) என்ற அறிவியல் கற்பனைக் கதையை எழுதிய பிரஞ்சு ஆசிரியர் ஜுல்ஸ்வெர்னி (Jules Verne) தம் கதையில் விளக்கும் விண்வெளியில் எறிந்து செலுத்த கூடிய ஓர் வாகனம் அப்போலோ-8-ஐப் போன்று மூன்று பேர் செல்லக்கூடியது. ஆசிரியர் கூறும் கதை அப்போலோ-8-ன் பயணத்தைப் பலவிதங்களில் ஒத்திருக் கிறது.'

ஆம், பிரஞ்சுக்கலைஞன் கற்பனையில் கண்டு எழுதிய கதையில் வரும் நிகழ்ச்சியின் இடம், மாதம், தேதி, விண்வெளி வாகனத்தின் அகப்புற அமைப்பு, செய்யப் பட்ட உலோகம், செல்லும் வேகம், மொத்தத்தில் சென்ற தூரம் ஏன் அதன் எடையும்கூட, சென்ற ஆண்டு டிசம்பர் திங்களில் அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சியாளர் 'கேப் கென்னடி'யிலிருந்து அனுப்பிய அப்போலோ-8-ன் தோற்றத்தை ஏறக்குறைய அப்படியே ஒத்திருக்கிறது, எனின் அது 'கனவு நனவாகிய விந்தையினை மட்டுமா - விந்தைக் கனவுகள் காணும் நுண்ணறிவுணர்வு நிரம்பிய அறிஞரின் ஆற்றலைக் கூடக் காட்டுகிறதன்றோ?

அறிவியல் பேராசிரியை ஈ. த. இராஜேசுவரி அவர்கள் 35 ஆண்டுகட்குமுன் கண்ட கனவு - சொன்ன சோதிடம் - இதோ!

'...இன்னும் ஐம்பது வருஷங்களுக்குப் பின்னர், நமது சகோதரர்களும், சகோதரிகளும் ஏதோ ஒரு நூதன யந்திரத்திலேறி வெள்ளி அல்லது செவ்வாய்க் கிரகத்திற்கு யாத்திரையாகச் சென்றாலும் செல்லலாம். அதற்காகத் தானோ இக்காலத்தில் இக் கோளங்களின் தன்மைகளை மிக நுட்பமாக ஆராய்கின்றனர்? இக்காலத்தில் பலர், உயிருடன் வாழ்ந்து தம் வாழ்நாள் முடிவதற்கு முன்னரே அத்தகைய புஷ்பக விமானத்திலேறிச் சென்று அக்கிரகங்களது அற்புதக் காட்சிகளைக் கண்டு வரலாம் *(ப.48)*.

அறிவியல் முதிர்ச்சி பெற்ற பிரஞ்சு நாட்டில் பிறந்த எழுத்தாளரைப் போல் இல்லாவிட்டாலும் அவர்தம் கற்பனை யின் கருவைப் பேராசிரியை இராஜேசுவரி அவர்களின் எழுத்திலும் காண முடிகிறது. ஜுலை மாதம் புறப்பட இருக்கும் அப்போலோ-11 இவர்தம் கனவினை நனவாக்கி விடுமன்றோ?

செ. குமாரசாமி
விவேகானந்தா கல்லூரி
நாகர்கோவில்

# பாலைத்திணை

''சங்கத் தமிழறிவார் தண்டமிழின் சீரறிவார்'' என்று சான்றோர் சொன்ன சொற்கள் என்றென்றும் நின்று நிலைக்கும். இன்று கிடைத்துள்ள சங்கத் தமிழ் நூற்கள் ஈராயிரம் ஆண்டுகட்கு முன் இயற்கை வளமும் செயற்கைத் திறமும் மிக்கிருந்த தமிழ்ச்சமுதாயத்தில் முகிழ்ந்து மலர்ந்தவை. அவை அன்றைய சமுதாய வாழ்வும், வளமையும், எண்ணமும் காட்டி நிற்கின்றன. தமிழன் வாழ்வியல் இரு கூறுபாடுடைத்த, அவை அகம், புறம் என்பன. அகப்புற வாழ்வில் அகம் பற்றி எழுந்த சங்கப் பாடல்களே அதிகம். 2381 சங்கப் பாடல்களுள், 1862 அகத் திணைநுதலுமவை. அந்த அகவாழ்வை ஏழு திணையனவாக எண்ணிப்பார்த்தது அன்றைய புலவர் உள்ளம். கைக்கிளை ஐந்திணை பெருந்திணை என ஏழு என்றனர். இவற்றுள் நடுவண் நின்ற ஐந்திணை; குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற பாகுபாட்டினைக்கொண்டது. இவற்றுள்ளும் நடுவண் நின்ற பாலையின் தோற்றம், பாலையின் தன்மை, அகவிலக்கியத்து அது பிடித்துக்கொண்ட பேரிடம், அதற்கு ஏன் ஒரு தனிச்சிறப்பு என்பன போன்ற எண்ணங்கள் அறிவில் முனைப்பில் தோன்றுகின்றன.

### பாலைத்திணையின் தோற்றம்

குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்று வகுத்துக்கொண்ட ஐந்திணைப் பாகுபாடு நில அடிப்படையில் அமைத்துக்கொண்டதா அன்றி ஒழுக்க அடிப்படையில் அமைத்துக்கொண்டதா? என்று சிந்தித்தால், இரண்டில் ஒன்றைச் சொல்லி இதனாற்றான் அமைந்த பாகுபாடு என்று திண்ணி தாகக்கூறிவிடலியலாது. எனைத்தானும் ''தமிழ் கூறும் நல்லுலகனைத்தும்'' நானிலம் என்றே பேசப்படும். இந்த நானிலத்தோடு புகுந்துகொண்ட பாலையென்ற திணைக்கு

நிலையானதொரு நிலம் இருந்ததா? என்றால் இல்லை. ஆனால் சிலப்பதிகாரத்துக் 'காடுகாண் காதை'யில் இப்பாலையின் தோற்றமும் தன்மையும் தெளிவாகப் புனையப்படுகின்றன.

''முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்கு துயருறுத்து
பாலை என்பதோர் படிவங் கொள்ளும்'' (சிலம்பு 1597-1599)

இதை நோக்கித்தான் டாக்டர் வ.சுப. மாணிக்கனார் அவர்கள் தம் ஆராய்ச்சி நூல் 'தமிழ்க்காதலில்' கீழ்க்காணுமாறு குறிக்கின்றார். ''ஒரு காலவேற்றுமையால் இரண்டு திங்கள் இயல்புமாறித் தோன்றும் ஒரு நிலச் செயற்கையே பாலைத்திணைக்கு இடமாம். எனினும் நிலையா, நீரில்லா நிலத்தினின்று நீடித்து நிலைக்கும் பன்னூறு பாலைப் பாக்களை விளைவித்துக் கொண்ட இலக்கியச் சொல்லேர் உழவர்களின் இலக்கிய உழவு அறிவின் கொழுமுனைக்கு ஓர் எடுத்துக்காட்டு''. பாலைக் கென்று தனி நிலம் இன்றேனும், பெரும்பொழுது வகுத்துக் கொண்டனர். கொடுங்கோடையாம் வேனிலும், குளிருறுத்தும் பின் பனியும் அதற்குரிய பெரும் பொழுதாகக் கொண்டனர்.

*பாலைத்திணையின் சிறப்பு*

பிரிதலும், பிரிதல் நிமித்தமும் பாலைக்குரிய உரிப்பொருள். - அல்லது ஒழுக்கமாகக் கொண்டனர் திணை வகுத்தோர், அகப் பாக்களுள் பாலை பற்றிப் பாடிய பாக்கள்தாம் எண்ணிக்கையில் அதிகம். இந்த நிலை ஏன்? பாலை ஒழுக்கமே ஏனை எல்லா ஒழுகத்திலும் மேம்பட்டதாகக் கருதப்பட்டதே இதற்குக் காரணம் என்று கூற விழைகின்றேன். ஏன்? எப்படி?

குறிஞ்சிக்குப் புணர்தலும், புணர்தல் நிமித்தமும் என்ற ஒழுக்கம் உண்டு, மணந்தே இருந்தோர் தணித்து நிற்றலும் கொள்ளுகின்றபோதுதான் அங்கு இன்பம் உண்டு. ''ஊடுதல் காமத்திற்கின்பம்'' என்பாரன்றோ வள்ளுவரும்? எனவே புணர்ச்சிக்குப் பின் பிரிவு இருத்தல் வேண்டும். அப்போதுதான் புணர்தல் இன்பத்தின் சிறப்புத்தோன்றும். அடுத்து முல்லைக்கு இருத்தலும் இருத்தல் நிமித்ததும் என்றனர். ஆற்றி இருத்தற்குக் காரணந்தான் என்ன? மணந்தான் தணந்தான் (பிரிந்தான்), அவன் வரும்வரை ஆற்றி இருப்போம் என்பதன்றோ? ஆக முல்லை யின் உரிப்பொருட்கும் உயிரூட்டுவது பாலைத்திணையின் பிரிவே தாம்.

அடுத்து மருதத்தில் ஊடலும் அதன் நிமித்தமும் உரிப்பொருளாம். ஈண்டும் ஊடலுக்குப் பல்வேறு வகைத்தான பிரிவுகளும் காரணமாகி விடுகின்றன. அல்லது ஊடலால் பிரிவு உண்டாகிறது. எப்படியும் பிரிவு என்கின்ற பாலையின் உரிப் பொருளுடன் தொடர்பு கொண்டு விடுகின்றது இந்த மருதத்தின் உரிப்பொருள். இனி நெய்தல் திணையின் இரங்கல் என்ற உரிப்பொருள் கூடாது நின்ற தலைவனை எண்ணி இரங்குதல் தானே. எனவே இதுவும் பாலையின் பிரிவுடன் தொடர்பு கொண்டுவிடுகின்றது. ஆக ஏனை நான்கு ஒழுக்கங்களின் (திணை களின்) உரிப்பொருள் ஏதாவது ஒருவகையில் பாலையொடு தொடர்பு கொள்ளுகின்றது. இவ்வாறு பாலை எல்லா ஒழுக் கங்களுக்கும் துணைநின்று அவற்றினூடாடி நிற்பது பெறப் படுகின்றது. இதுவே பாலைத்திணைக்கேயுரிய தனிச்சிறப்பு.

***பாலைப் பாடல்கள் அதிகரித்ததேன்***

காலம் திரித்த நிலப் பாலையும் எரிக்கின்றது, பிரிவென்ற அகப்பாலையும் அவிக்கின்றது. தலைவன் தலைவியர் உள்ளங் களைப் பல்லாற்றாலும் பாடும் புலவோர்க்குக் கற்பனைக்கும், நெஞ்ச நெகிழ்வு காண்டற்கும், பாலையின் புறத்தெறுதல் கண்டு பாடுதற்கும் சிறந்து நிறைந்த இடங்கொடுத்து நிற்கின்றது பிரிவெனும் உரிப்பொருள்கொள் பாலைத்திணை. எனவேதான் பாடிய புலவர்க்கெல்லாம் கைகொடுத்து நின்ற பாலைத் திணையின்கண் பன்னூறு பாக்கள் செறிந்து குவிந்துள்ளன.

***பாலை பாடியோரின் கண்ணும் கருத்தும்***

'பாலை என்பதோர் படிவம்' வந்துற்ற காலை வளமற்ற வெம்மையும் இன்மையும் வாழ்விழந்த மக்களை எவ்வளவு கொடுமையராய் மாற்றி மாக்களாக்கி விட்டுச் சென்று விடுகின்றது என்பதைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ மிகக் கொடுமையுடன் கூறுகின்றார்.

''கொள்ளும் பொருளிலர் ஆயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலின்
புள்ளும் வழங்காப் புலம்புகொள் ஆரிடை'' (கலி-3)

உள்ளதை உள்ளபடியே கூறுகின்ற இந்த அடிகள் படித்துப் பார்க்கவும் அச்சம் தருகின்றன. புள்ளும் பறவாப் புலம்பின் நின்ற காட்டின் வெங்கொடுமை புலவர் உள்ளத்தைத் தாக்கிற்று ஒருகால். இந்தப் புலவரின் உணர்வு பிரிவில் துயருறும் தலைவி யின் எண்ணத்தில் அச்சமாய்ப் பிரதிபலிக்கின்றது. தான்கண்ட

வெம்மையை, வாழ்வழிக்கும் புன் கொடுமையைத் தலைவியின் உள்ளக் கிடைக்கையாய் ஏற்றிக் காட்டுகின்றது புலவரின் புலமை.

கலித்தொகையில், பிரிவில் வாடுகின்ற தலைவிக்குத் தோழி சொல்லும் சொல்லாகச் சில வாழ்வியல் நிகழ்ச்சிகளைச் சுட்டிச் சொல்கின்றார் பாலை பாடிய பெருங்கடுங்கோ. அவை அஃறிணையின்பால் நிகழ்கின்றன. அவ்வகை அன்புப் பிணைப்பு உன் வாழ்விலும் வந்துறும், ஆகவே வருந்தற்க என்பதுபோற் சொல்கின்றார்.

''இன்பத்தின் இகந்தோரீஇ இலைதீய்ந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே காடென்றார் - அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிற கராலாற்றும் புறவெனவும் உரைத்தனரே'' *(கலி-10)*

தலைவன் சொன்ன பாலை நிலக் காட்சிகளுள் ஒன்றே மேற்கண்டது. இன்னிழல் இன்மையால் வருந்தி வெய்துயிர்க்கும் மடப்பெடையைத் தன் சிறகால் அணைத்துக் காக்கும் அந்த அஃறிணைப் புறா. இவைபோன்ற பல காட்சிகள் கானகத்துக் கண்டேகிய தலைவன் நின்நிலை உணரானோ? அவன் வாரானோ? நீ ஆற்றி இருத்தல் நின்கடன் என்று தெரிவிக்கின்றாள் தோழி. இயற்கையில் தான்கண்ட கோலத்தைத்தான் பாடும் பாடலில் ஏற்ற இடத்துப் புனைந்து செம்மை செய்துவிடுகின்றார் புலவர். இத்தகு வாழ்வும் இயற்கையும் பிணைந்த இலக்கிய நோக்கிற்குப் பிரிவுத்துயர் பெரிதும் இடங்கொடுக்கின்றது. என்றுமே துன்பக் காட்சியும் துயரமான அனுபவங்களும் உள்ளம் பிணித்து உறவாடுவனவாம். பாலை உள்ளத்திற்பதிந்து விடும் பெருந்திறனைக் கொண்டிருக்கின்றது. எதுவும் நெகிழ்த்தாத அளவுக்குப் பாலைக்காட்சி மனிதன் உள்ளத்தை அசைக்கின்றது. கீழ்வரும் பாடல் அதற்குச் சான்று.

''வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்
சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணும் இகந்துசெய்து இசைகெட்டான் இறுதிபோல்
வேரொடும் மரம்வெம்ப விரகதிர்த் தெறுதலில்...'' *(கலி-9)*

இவ்வடிகள் கவிஞனின் உள்ளம் பாலைக் காட்சியைக் கண்ட கோணத்தைத் தெளிவு படுத்துகின்றது. பாலைபாடிய புலவர் உள்ளத்தில் உள்ளுணர் உள்ள நெகிழ்வெல்லாம் தொட்டுத் தட்டிக் காட்டி விடுகின்றனர். வேறு எத்திணைப் பாடலைக்காட்டிலும்

உள்ளம் தொட்டு ஈர்க்கும் ஆற்றல் பாலைப் பாடலுக்கு அதிகம் உண்டு.

*அகப் பாலையும் புறப்பாலையும்*

ஆள் வழக்கற்ற சுரத்ததிடை கதிர்தெற
நீளெரி படர்ந்த நெடுந்தாள் யாஅத்து
போழ்வளி முழங்கும் புல்லென் உயர்சினை
முடைநசை இருக்கைப் பெடைமுகம் நோக்கி
ஊன்பதித் தன்ன வெருவரு செஞ்செவி
எருவைச் சேவல் கரிபுசிறை தீய
வேனில் நீடிய வேயுயர் நனந்தலை... (அகம்-களி-51)

என்ற பெருந்தேவனாரின் அகநானூற்றுப் பாடல் புறத்தே நிலத்தில் உள்ள வெம்மையை மிகத்தெளிவாகக் காட்டுகின்றது. இத்தகு காட்டிடை ஏகிடும் தலைவன் தன் நெஞ்சை நோக்கித் தலைவியின்பால் திரும்பிவிடக் கூறுகின்றான். இங்கும் பிரிவுதான் அவனை எண்ணத்தூண்டுகிறது. இங்கு அவன் அகத் துணர்வுக்குப் புறத்தே நின்று தூண்டும் நிலத்தின் வெங் கொடுமை துணைநிற்பதாய் அமைகின்றது. ஆனால் இன்னும் காணுகின்ற பலநிலைப் பாலைப் பாக்களில் வெம்மை உள்ளத்தே நிற்கின்றதே அன்றிப் புறத்தோற்றத்தில் காண வியலவில்லை. இத்தகு நிலையினைப் பாலைத் திணையில் அகப்பாலையாகக் கொள்ளலாம். இவ்வகைப் பாலைக்குப் பாலைப்பாக்கள் பல சான்றாகக் கிடைப்பினும் குறுந்தொகை யினுள் ஒன்று காண்போம்.

''கன்றும் உண்ணாது, கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துக் காங்கு
எனக்கும் ஆகாது, என்னைக்கும் உதவாது,
பசலை உணீஇயர் வேண்டும்
திதலை அல்குல் மாமைக்கவினே''. (குறு-27)

என்ற பாடலில் எங்கும் புறவெம்மை காணமுடியவில்லை. ஆனால் பசலை பூத்த தலைவியின் அகப்பாலை காணமுடிகிறது. இங்குக் கருப்பொருள் புனைவிற்கு இடம் இல்லை என்பதால் புறப்பாலை காட்டமுடியவில்லை என்று கூறவியலாது. ஏனெனில் கன்றும் நல்ல கறவையும் கருப்பொருளாய் வந்தபின் புறப்பாலைக்கு இடம் இல்லை. எனவே இதுபோன்ற பாடல் களில் நாம் காண்பதெல்லாம் அகப்பாலையேயன்றிப் புறப் பாலையில்லை. ''தன்கயத்தமன்ற வண்டு படு துணைமலர்

பெருந்தகை இழந்த கண்ணினை''... (அகம்-59) என்ற தொடக்க அடிகளைக் கொண்ட நாகனாரின் பாலைப்பாடலும் சான்று. இப்பாடலிலும் பிரிவுத்துன்பமே - உள்ளப்பாலையே விரித் துரைக்கப்படுகின்றது. மேற்கண்டாங்கு பாலைத்திணையின் பாக்கள் அகப்பாலை யாகவும் புறப்பாலை யாகவும் புனையப் பட்டுள்ளமை காணலாம்.

*பாலைத்திணையின் நிலைபேறு*

காதல் கண்ணியதான வாழ்வு நிலை என்றும் மக்கட் சமூகத்தில் இருந்துகொண்டே இருக்கும். அந்நிலை இருக்கின்ற வரை தன்னூடே பிணைந்து நிற்கும் பிரிவு என்கின்ற தன்மைநிலையும் இருந்துகொண்டே இருக்கும். பிரிவும் அதன் தொடர்புகொண்ட வேதனையுற்ற மனநிலையுந்தாம் பாலைத் திணைப் பாடற்கு உரிப்பொருளாய் அமைந்துள்ளன. இந்த உரிப் பொருள் உண்மை மறையாத காலம்வரை பாலைத்திணைப் பாடல்கள் மறைந்துவிடுவதற்கில்லை. காலங் காலங்களில் வெவ்வேறு வடிவுகொண்டு நிற்கும் இவ்வகைப்பாலை. இப்படி எண்ணற்ற உணர்வுகளினூடே நடமிடும் இந்தப்பாலைப்பிரிவு என்கின்ற துறைவழிப் பட்ட உணர்வு இருக்கின்றவரை, அவை பற்றிக் கவிபாடும் புலவன் உள்ளவரை பாலைத் திணைப் பாடல்கள் பல்வேறு வடிவில் நிலைத்து நின்றுகொண்டிருக்கும் என்பது திண்ணம்.

ம.ரா.போ. குருசாமி
பூ.சா.கோ. கலைக்கல்லூரி
கோயம்புத்தூர்

# துளசிகைப் புராணமும் அகப் பொருளும்

*முன்னுரை*

சங்க காலத்துக்குப் பின் எழுந்த நூல்கள் படிப்படியே ஐந்திணைப் புலனெறிவழக்கினைப் புறக்கணித்து ஒதுக்கின.

சிலப்பதிகாரத்தில் ஐந்திணையின் முதல், கருப்பொருள்கள் காப்பியத்தின் பல்வேறு பகுதிகளில் இடம் பெறுகின்றன.[1] ஐந்திணை உரிப்பொருள் காப்பியப் பாத்திரங்களின் வாழ்விலே இடம் பெறவில்லை; ஆயினும், கானல்வரியில் புலனெறி வழக்கிற்கியைய அகப்பொருள் இடம் பெற்றிருக்கிறது. 'சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்' என்ற விதி காப்பிய ஆசிரியர்கட்கு ஒரு தடையாக இருந்திருக்க வேண்டும்; ஆயினும், தமிழ் மரபுக்கே சிறப்புரிமையான ஐந்திணைநெறியினை இளங்கோவடிகள் புறக்கணித்தொதுக்க விரும்பவில்லை. ஆதலின் காப்பிய அமைப்பினைக் கையாளும் முறையிலே ஒருவாறு ஐந்திணையின் முதல் கரு உரிப்பொருள்கள் இடம் பெறுமாறு செய்தார்.

அடுத்துத் தோன்றிய மணிமேகலையில் இம்மரபு போற்றப் பெறாது ஒழிந்தது. சிந்தாமணியில் தமிழ் அகப்பொருளினைத் 'தென்றமிழ் மெய்ப்பொருள்' என ஓரிடத்தே[2] திருத்தக்கதேவர் சிறப்பித்துச் சொல்லுகிறார்; எனினும், அம்மெய்ப் பொருள் நெறியினைத் தொன்னெறி மரபுவழியில் அவர் கையாண்டுள்ள தாகச் சொல்ல இயலவில்லை.

சுருங்கச் சொன்னால், சிலப்பதிகாரத்தில் ஒருவாறு கையாளப்பட்ட ஐந்திணை நெறி பின்னை இலக்கியங்களில் இடம் பெறாதொழிந்தது. தொல்காப்பியத்தின் பின்னெழுந்த சில இலக்கண நூல்கள் அகப்பொருள் விதிகளை விளக்கி எழுந்த துண்டு; ஆயினும், அவையெல்லாம் சங்க இலக்கியங்களுக்கு

விளக்கம் தரவே பயன்பட்டன. கோவை போன்ற புதுவகை இலக்கிய நூல்களில் கிளவித் தலைவன் தலைவியர் வாழ்விலே ஐந்திணை நெறி சில மாறுதல்களுடன் இடம் பெற்றது. பின்னர்த் தோன்றிய அகப்பொருள் இலக்கணங்கள் அத்தகைய இலக்கிய நூல்களுக்கும் விளக்கப் பணி புரிந்தன.

இவ்வளவே யன்றி, சங்க இலக்கிய மரபினைப் போல ஐந்திணைக் காதலர்களையே தலைவன் தலைவியராகக் கொண்ட அகப்பொருள்நெறி வழக்கொழிந்தது என்றே கொள்ள வேண்டியுள்ளது.

ஐந்திணைப் புறக்கணிப்புக்கு விதிவிலக்காக எழுந்தது தணிகைப் புராணத்தின் களவுப் படலம். தணிகைப் புராணம் இருபது படலங்கள் கொண்டது; இவ்விருபது படலங்களில் அமைந்த 3161 பாடல்களில் பதினேழாம் படலமாகிய களவுப் படலம் மட்டும் 643 பாடல்களைக் கொண்டது. இதுவே இப்புராணத்துள் பெரிய படலமாகும். கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் பின் ஏறத்தாழப் பதினாறு நூற்றாண்டுகள் கழித்துப் பதினெட்டாம் நூற்றாண்டிலே ஐந்திணைப் புலனெறி வழக்கம் தணிகைப் புராணத்திலே உயிர்பெற்று உலவுவதைக் காணுகின்றோம்.[3]

*அகத்திணை வரலாறு - மூவகைப் போக்கு*

''கோவை நூல்களில் ஐந்திணை ஓம்பப்பட்டனவே, தணிகைப் புராணத்துக்கு எவ்வாறு தனிச்சிறப்பு நல்கலாம்'' என ஒரு தடை எழுவது இயற்கை. கோவைப் பிரபந்தத்தில் கிளவித் தலைவன் தலைவியர் கதை பேசப்பெறும்; அதே சமயத்தில் பாட்டுடைத் தலைவன் மற்றொருவனாக இருப்பான். எடுத்துக் காட்டாக - திருச்சிற்றம்பலக் கோவையாரில் பாட்டுடைத் தலைவன் கூத்தப்பெருமான்; அப்பெருமானின் வேறாக வருபவன் கிளவித் தலைவன்....

தணிகைப் புராணத்தின் களவுப் படலத்தில் கிளவித் தலைவனே பாட்டுடைத் தலைவனாகிய முருகப் பெருமான். இந்த வகையில் இடைக்கால 'அகப்' பொருள் நூல்களினின்று தணிகைப் புராணக் களவுப் படலம் வேறுபட்டுத் தனித் தன்மை யுடையதாகின்றது.

முருகனே களவுப் படலத் தலைவன் எனக் குறிப்பிடும் போது 'சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்' என்ற விதியொடு முரணுதலன்றோ என ஒரு தடை எழுவது இயற்கை யாகும்.

இத்தடைக்கு விடை காணுதற்குத் தமிழ் அகப்பொருள் வரலாற்றில் உள்ள மூவகைப் போக்குக்களை நாம் உணர்தல் வேண்டும்.

க. சங்ககாலப்போக்கு : இப்போக்கிலே கிளவித்தலைவன் தலைவியர் பெயர் தெரிவதில்லை; ஐந்திணை நெறி பிறழாமல் பின்பற்றிய புலனெறி வழக்கு வலிமை பெற்றது.

உ. கோவை நூல்களின் போக்கு : புலனெறி வழக்கின் அடிப்படைப் பின்னணியில் முரண்பாடு இடம் பெறவில்லை. கிளவித் தலைவன் தலைவியர் பெயர் சுட்டப்படவில்லை; எனினும், அவரின் வேறாகப் பாட்டுடைத் தலைவன் எனத் தனியொருவன் இயற்பெயர் முதலியவற்றோடு இடம் பெறுவதைக் காணுகின்றோம்.[4] கிளவித் தலைவனைவிடப் பாட்டுடைத் தலைவனே உயர்ந்தவனாவான் என்று பின்னைய அகப்பொருள் இலக்கணம் சுட்டிய விதியும் இங்கு மனங் கொள்ளத் தக்கது.[5]

முற்குறித்த இரு போக்கினையும் சாராத தனிப்போக்கு, கச்சியப்ப முனிவரின் தணிகைப் புராணத்தில் கையாளப்பெறும் முறையாகும்.

சங்க இலக்கியத் தொகையுள் அமைந்த அகநூல்களில் அகப்பொருள் நுவலுதற்கென்றே பாடல்கள் எழுதப்பெற்றன; அவ்வகப்பொருட் பாடல்களின் தலைமை நோக்கு அகப் பொருட் கருத்துக்களே யாகும்.[6]

கோவை நூல்களும் அகப்பொருள் நுதலுதற்கு எழுந்தன வாயினும், பாட்டுடைத் தலைவனின் புகழ் ஓதுதலும் குறித்தன என்பதும் உண்மையேயாகும். பாட்டுடைத் தலைவன் உயர்ந்தோன் என வரையறுத்த விதி இவன் நினைவுகூரத் தக்கது. எனவே, இவ்வகை நூல்களில் இடம்பெறும் புலனெறி வழக் கினைப் புறம் சார்ந்த அகம் என்று கொள்ளின் பிழையாகாது.

தனிகைப் புராணம் ஒரு தலத்தின் தொல்வரலாற்றினை - முருகன் புகழ் பரப்பும் நோக்கமும்உடையது; அகப்பொருள் நுவலுவது அதன் தலையாய நோக்கமன்று. தலபுராணம் பாடப்புகுந்த கச்சியப்பமுனிவர்க்கு ஓர் ஆர்வம் ஏற்பட்டது. பன்னெடுங் காலமாகப் புறக்கணிக்கப்பட்ட அகப்பொருட் புலனெறி வழக்கினைப் புதுப்பிக்க வேண்டுமென்ற ஆர்வம் அவர்தம் உள்ளத்தில் எழுந்தது. தாம் பாடவந்த தலபுராண

நோக்கும் நிறைவேற வேண்டும்; தமிழ்ப் புலனெறி வழக்கைப் புதுப்பிக்கும் ஆர்வமும் நிறைவேற வேண்டும். இவ்விரு வேட்கையின் விளைவாகவே மிக விரிவான 'களவுப் படலம்' உருவாகியுள்ளது.

அகத்திணைப் புலனெறி வழக்கும் கோவைப் பிரபந்த அமைதியும் புராண நூலின் தொடர்நிலைச் செய்யுட் பாங்கும் ஒருங்கியைந்த காட்சியினைத் தணிகைப் புராணத்தின் களவுப் படலத்திலே காணுகின்றோம்.

முதல் கரு உரிப்பொருள் நெறியினை ஓம்புதலில் புலனெறிவழக்கும், அவ் வழக்கொடு கட்டளைக் கலித்துறை யாப்பிலே கிளவிக்கொத்துக்கள் ஆக்குவதிலே கோவைப் பிரபந்த அமைதியும், அவ்வமைதியினைப் புராணக் கதைக்கு இடையே விருத்தப் பாக்களுக்கிடையே பொதிந்து வைத்ததில் தொடர்நிலைச் செய்யுளாகிய தணிகைப் புராணத்தின் இயைபுக் காட்சியும் காணுகின்றோம்.

**கச்சியப்பரைக் கவர்ந்த கைகோள்**

அகப்பொருளின் கைகோள் களவு, கற்பு என இரண்டாம். இவ்விரு கைகோளில் களவெனும் ஒன்றே களவுப்படலத்தில் பாரித்துப் பேசப்படுகின்றனது. கற்பெனும் கைகோள் வள்ளிநாயகி திருமணப்படலத்தில் ஓரளவு இருக்கலாம்; ஆயின், அக்கைகோளினைக் கச்சியப்பர் மனங்கொண்டு பாடவில்லை. தமிழ் நெறியாகிய அகப்பொருட் கைகோள்களில் களவே சிறந்தது 'காதற் காமம் காமத்துச் சிறந்தது' எனப் பரிபாடல் களவையே சிறப்பிக்கும்.[7] கற்பியலையும் இணைத்துச் சொல்வதாயினும் இறையனார் அகப்பொருளினை 'இறையனார் களவியல்' என்று சிறப்பிப்பதும் இது கருதியேயாகும். இம்மரபினை ஒட்டியே கச்சியப்பர் களவெனும் கைகோளினை விரிவாகப் பாடுகின்றார்.

நாரத முனிவர் வாயிலாக வள்ளி பற்றி அறிகின்றான் முருகன். முன்னர்த் தான் கொடுத்த வரத்தின்படி வள்ளியை மணங்கொள்ளக் கருதுகின்றான், வடிவேலன். புறப்பொருள் நெறியில் வெற்றி பெற்றுக் கற்பியல் நெறியில் தேவயானை யினை மணந்த முருகன், களவியல் நெறியும் உலகோர் போற்றுதற்குரியதே என்பதை நிலைநாட்டுதற்கு எண்ணித் தனியே வள்ளிமலை நோக்கிப் புறப்படுகின்றான். இச்செய்தியை விளக்கும் கச்சியப்பர் பாடல் வருமாறு :

கேட்டலும் மகிழ்ந்திங் கிருமென முனியைக்
கிழமையி னிறுத்திமுன் புறத்தின்
ஈட்டிரும் பொருளின் துறைகளும் கற்பின்
இயற்றுமக் கடியுமன் வழங்கக்
காட்டிய குமரன் களவெனும் இன்பக்
கடற்றுறை வழக்கமும் உலகில்
நாட்டிய நுதலும் கருத்தொடும் தமியே
நண்ணினன் வள்ளிமான் விலங்கல்[8]

கற்பு மணத்தை நிலைநாட்டிக் காட்டிய குமரன் களவெனும் இன்பக் கடற்றுறை வழக்கமும் உலகில் நாட்டுதற் கருத்துடை யனாய்ப் புறப்பட்டான் என்ற செய்தி இங்கு உறுதியாக மனங் கொளற்குரியது. 'களவு எனும் வழக்கமும் உலகில் நாட்டுதற்கு நண்ணினன்' என்ற தொடரமைப்பிலிருந்து பண்டைத் தமிழர் நெறியினைப் பின்னைத் தமிழகம் புறக்கணித்து ஒதுக்கிய பாங்கினை உய்த்துணரலாம்.

முருகன் என்ற பெயரும் வள்ளி என்ற பெயரும் நுதலியதால் மேல்வரும் காதற் கதை புறம் சார்ந்த அகம் எனக் கொள்ளப் படலாம். ஆயின், இதனைக் ''களவு'' எனும் கைகோளாகவே கோடல் வேண்டும் என்பது கச்சியப்பரின் ஆவல் என்பதை மேற்குறித்த செய்யுள் புலப்படுத்துகின்றது. மேலும், படலத்தின் பெயரும் இதனை வலியுறுத்தும்.

இவ்விடத்தில் இளங்கோவடிகளின் காப்பிய நெறியுடன் தணிகைப் புராண நெறியினை ஒப்பிட்டுணர்தல் நன்று. ஐந்திணைப் புலனெறி வழக்கினைப் புறக்கணிக்கவும் விரும்பா மல், கண்ணகி-கோவலன்-மாதவி வாழ்விலே அமைத்தோத விதியும் இல்லாமல் துன்புழந்த அடிகளின் புலமை ஒரு புதுவழி வகுத்துப் 'புலனெறி வழக்கினை ஓம்பியது அதனை' இக்கட்டுரைக் குறிப்பின் முதற்பகுதியிலே கண்டோம். அடிகளின் காலத்துக்குப் பின் காப்பிய மரபு பல்வேறு மாறுதல் களை அடைந்தது; புலனெறி வழக்கும் புறக்கணிக்கப்பட்டது. இந்த நிலையில் 18-ஆம் நூற்றாண்டில் காப்பிய மரபினையும் புலனெறி வழக்கினையும் இணைத்துப் புதுநெறி வகுத்துள்ளார், கச்சியப்ப முனிவர்.

பரிபாடலில் வள்ளியம்மை மணத்தைக் களவு நெறியின தாகக் குறிக்கும் பாடல் உண்டு.[9] அவ்விலக்கிய ஆட்சியும் தணிகைப் புராணமுடையாரின் ஆர்வத்துக்கு ஆக்கம் தந்திருக்க வேண்டும்.

பின்றோன் வேண்டும் விகற்பங் கூறும் உரிமை படைத்த கச்சியப்பர், எவ்வாறேனும் அகப்பொருளின் உயிர்நாடியாகிய களவொழுக்கத்தினைப் புதுப்பிக்க விரும்பி - இயற்பெயர் குறித்தாலும் குறை இன்று எனக் கருதிக் களவுப் படலத்தினை உருவாக்கியுள்ளார்.

பாட்டுடைத் தலைவனையே கிளவித் தலைவனாக ஆக்கி - இயற்பெயர் முதலியன சுட்டி - களவொழுக்க நெறியினைப் ஓம்பிய வகையாலும் பன்னூற்றாண்டு முன்பே இதனை அகத்திணை நெறியினைப் புத்துயிரூட்டிப் புதுப்பித்த வகை யாலும் தணிகைப் புராணத்துக் களவுப்படலம் மிகச் சிறப்பான மதிப்பினைப் பெறுகின்றது.

**களவுப் படல அமைப்பு**

களவெனும் கைகோளுக்கு உரிய பிரிவுகள் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியற் கூட்டம், பகற்குறி, இரவுக்கு என்பன முதலாக வரைதல் நிகழும் வரை பலவாகும். அத்துணைப் பிரிவுகளையும் கச்சியப்ப முனிவர் களவுப் படலத்துள் அமைத்துள்ளார்.

அகப்பொருட் பாடல்களெல்லாம் நாடகப் பாங்கமைந்து - பாத்திரங்களின் கூற்றாக (Dramatic monologues) அமைவது பண்டை இலக்கிய நெறி; கோவை நூல்கள் இந்நெறியினைப் போற்றியும் தொடர்புபடுத்தி இணைத்தலால் மாற்றியும் உள்ளன.[10]

தொடர்நிலைச் செய்யுள் பாடிய கச்சியப்ப முனிவரும் பல்வேறு துறைகளின் கிளவிகளாகவே அகப்பொருளிலக்கண அமைதியினை ஓம்பியுள்ளார்.

கதை நிகழ்ச்சிகளின் தொடர்ச்சியை விருத்தப்பாக்களால் இணைத்து - பாத்திரங்களின் கூற்றுக்களைக் கோவைக் கலித்துறை என்னும் கட்டளைக் கலித்துறையில் கிளவிக் கொத்துக்களாக அமைத்துள்ளார்.

இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு முதலான கிளவிக் கொத்துக்களைக் காட்சி, ஐயம் முதலான கூற்றுவகைகளான கிளவிகளாகக் கூறுவது அகப்பொருளின் நாடகப் பாங்கான புலனெறி வழக்காகும். தணிகைப் புராணத்தின் களவுப் படலமும் இவ்வாறே கிளவிக்கொத்துக்களையும் கிளவி களையும் வகுத்தோதுகின்றது.

மாசை வண்கயிற் றிறுக்கிய குஞ்சியும் வார்வில்
தேசு லாமலர்ச் செங்கையும் திருவரைக் கச்சும்
ஓசை யங்கழற் றாளுமற் றுருவுமா டவர்க்கும்
ஆசை மூட்டுமவ் வேட்டுவன் அகத்தொடு கிளப்பான்

என்பது களவுப் படலத்தின் 56 - ஆம் பாடலாகும். 57 முதல் 62 - ஆம் பாடல் முடியவும், மீண்டும் 67 முதல் 83 முடியவும் இயற்கைப் புணர்ச்சிக்குரிய கிளவிகள் நிரலே ஓதப் பெறுகின்றன; கிளவிகளெல்லாம் - முன்னரே குறித்தது போலக் கட்டளைக் கலித்துறைகளாம். இடையே வரும் நான்கு பாடல்களில் (63-66) முதல் மூன்றும் பன்னிரண்டு மெய்ப்பாடு களைக் கூறுகின்றன. புதுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல் முதலாகக் கூறப் பெறும் இப்பன்னிரண்டு மெய்ப்பாடுகளும் தொல்காப்பிய மெய்ப்பாட்டியலில் அகப்பொருள் நெறிக்கென வகுத்தோதப் பெற்றனவாகும்.[11] அறுபத்து நான்காம் பாடல் கதைத் தொடர்ச்சியைச் சொல்லிச் செல்கின்றது. 67 முதல் மீண்டும் தொடர்கின்ற இயற்கைப் புணர்ச்சியின் கிளவிகள் 83 முடிய விரிகின்றன. 84 கதைத் தொடர்ச்சி சுட்டும் விருத்தப்பா. 85 முதல் 104 முடிய இடந்தலைப் பாட்டுக்குரிய கிளவிகள். 105 முதல் இயற்கைப் புணர்ச்சிக் காலத்துக் கொண்ட உருவினை மாற்றிவேறொரு சிலம்பனாயும், வேங்கை மரமாயும், விருத்தனாயும் வந்து முருகன் புரிந்த விளையாடல்கள் விருத்தப் பாவிலே ஓதப் பெறுகின்றன.

வள்ளி திருமணக் கதையில் விநாயகப் பெருமான் வேழ வடிவெடுத்துக் குமரப் பெருமானுக்கு உதவியதாகக் குறிப்பு உண்டு. அக்குறிப்பினைக் கச்சியப்பர் தாம் மேற்கொண்ட களவொழுக்க நெறிக்கு இயையப் பயன்படுத்திக் கொள்கின்றார். விநாயகப் பெருமானே முருகனாகிய கிளவித் தலைவனுக்குப் பாங்கனாக வருகின்றார்.

பாங்கரும் முறைக்கண் நின்று ..... முகத்து
என் அண்ணல் .....மாவேழம் ஆனான்[12]

என்பது கச்சியப்ப முனிவரின் வாக்கு. 188 - ஆம் பாடல் முடியப் பாங்கற் கட்டம் விரிகின்றது. களவுப் படலத்தின் 620 - ஆம் செய்யுள் 'வற்றா விழைவின் நற்றாய் கிளத்தல்' என்னும் துறைப்பட்டு அமைகின்றது. அதுவே களவொழுக்க அமைதி யின் இறுதிக் கலித்துறையாகக் களவுப் படலத்துள் இடம் பெறு கின்றது. அதன்மேல் 621 முதல் 643 - ஆம் செய்யுள் முடியக் கதையைக் கூறிக் களவுப்படலம் முடிகின்றது.

இப்படலத்தின்கண் களவொழுக்கத்திற்குரிய கிளவிகளாக அமைந்த கட்டளைக் கலித்துறைகளின் எண்ணிக்கை 505 ஆகும்.

637 ஆம் பாடலில் குமரப் பெருமானைக்
களவிற் பின்வரும் மன்றலும் காட்டுது மென்றே
களவிற் பல்வகை ஒழுக்கெலாம் காட்டிய கள்வன்

என ஆசிரியர் குறித்திருப்பது படலத்தின் நோக்கத்தைத் தெளிவுறுத்துவதாகும்.

*செய்யுட்கள் சில*

இனி, களவுப் படலத்தின் சில செய்யுட்களில் அமைந்துள்ள செய்திகளைக் காண்போமாக.

தலைவியின் காதல் நோயினைப் பலர் உய்த்துணர்ந்துளர் எனினும், அதனை அவளே வாய்விடுத்துக் கூறுதல் பண்பு நெறிக்கு ஒவ்வாது, தலைமகள் வேறு பட்டமை அறிந்த செவிலித் தாய்க்குத் தலைவியின் பசலை தலைவனின் நெஞ்சு காரணமாக ஏற்பட்டது எனக்கூறுவதா வேண்டாவா? இச்சிக்கலில் தோழி அறத்தொடு நிற்றல் வேண்டும். அப்போது தலைவி கூற்றாக வருவது ஓர் அகநானூற்றுப்பாடல் :

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
சிலையுடை இடத்தர் போதரும் நாடன்
நெஞ்சமர் வியன்மார் புடைத்தென அன்னைக்கு
அறிவிப் பேங்கொல் அறிவியேங் கொல்லென
இருபாற் பட்ட சூழ்ச்சி ஒரு பால்
சேர்ந்தன்று வாழி தோழி யாக்கை
இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோயெனச் செப்பா தீமே

இப்பாடலின்[13] கருத்தமைதி, தணிகைப் புராணக் களவுப் படலத்தினும்[14] காணப்படுகின்றது. 'இட்டிடை மடந்தை விட்டு விட்டுயிர்த் தழுங்கல்' என்னும் துறையில் அமையும் பின்வரும் பாடல் காண்க :

என்னைக் கெனைவியங் கோளி னிளவு மியல் பொருகால்
அன்னைக் குரைப்ப விரைந்தெழு நெஞ்சங் வேபெரிதும்
தன்னைக் கரத்தல் தருமெனும் நீஉயிர் சாய்ந்திறினும்
மின்னைக் கவற்றும் இடையாய் நமர்க்கது விள்ளையே

களவொழுக்கத் தலைவி, தலைவன் இருப்பிடம் சென்றடை தல் இல்லை; அவ்வாறு செல்லுதல் நாணுக் குறைவாம். ஆயின், வேற்றுமனம் பேசுதல் போல்வன நிகழுமெனின் நாணும் கற்பும் காத்தல் பற்றிய சிந்தனை எழும், உயிரைவிட நாணமும் நாணத்தைவிடக் கற்பும் சிறந்தன; இந்நிரல் போற்றுதற்குரியது; ஆதலின், கற்பினை ஒப்புதலுக்காக நாணிகத்தலும் சிரிதே என்பது தொல்காப்பியர் வகுத்த விதி.

*உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்*
*செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந் தன்றெனத்*
*தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு*
*காமக் கிழவன் உள்வழிப் படினும்*
*தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்*
*ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே.*[15]

இந்நூற் பாவின் கருத்தமைதியினைக் கச்சியப்ப முனிவர் கருத்திலிருத்திப் பாடிய பாடல் வருமாறு :

*எந்நாளும் இன்பம் எளிதுறு சூழ்ச்சி யிருப்பனிட்டுப்*
*பன்னாளும் இன்னற் படுவதென் னேனாபய ளோடரிய*
*நன்னான் இகக்கின் னேபுறம் போந்து நலிநெஞ்சமே*
*அந்நாள் அகன்றில மென்றார் பதிசென் றடுத்தும்வம்மே.*[16]

'நலி நெஞ்சமே! எந்த நாளிலும் அவரோடிருந்து எளிதாக இன்பம் அடைய வழி உளதே! அதைவிடுத்துப் பல நாளும் ஏன் இன்னலுறுதல் வேண்டும்? அந்த இன்னலும் நீங்க - நல்ல நாணமும் நீங்க இப்போதே வெளியேறுவோம்; உன்னைப் பிரியேன் என்று அன்று சொல்லிச் சென்றவர் ஊருக்குப் போவாம் வா' என்பது பாடலின் கருத்தமைதி.

''அறிதோ றறியாமை கண்டற்றாற் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு''

எனவும்,

''நவில்தொறு நூல்நயம்''

எனவும் வள்ளுவர் கூறிய கருத்துரைகளை

ஆயுந் தொறுந்தொறும் இன்பந் தருங்கலை யாங்கறிவு
மாயுந் தொறுந்தொறும் இன்பம் தரும்வள்ளல் வார்கழல்கள்
தேயுந் தொறுந்தொறும் இன்பம் தரும்சந்து தேங்குழல்நின்
தோயுங் தொறுந்தொறும் நேராத இன்பம் சுரந்திடுமே[17]

என்னும் பாடல் எதிரொலிக்கக் காணலாம்.

*மறை ஒழுக்கம்*

களவொழுக்கம் என்னும் தொடரிலே ''களவு'' என்னும் சொல்லினைக் கண்டு மருளுவார் பலர் உண்டு. அம்மருட்சியே சங்க காலத்துக்குப்பின் அம்மரபினை இலக்கியத் துறையிலே புறக்கணித்தற்கும் ஒரு காரணமாயிற்று எனலாம்.[18] ஆனால், களவு என்பது திருட்டுத்தனம் அன்று; காதல் துறையிலே கற்பினைப் பேணும் களவு சீரிதே' என்பது தொல்லோர் துணி பாகும். இத்துணிபினை உலகோர்க்கு நிலைநாட்டிக் காட்டவே குமரப்பெருமான் களவொழுக்கத்தை மேற்கொண்டான் எனத் தணிகைப் புராணமுடையார் குறித்ததை முன்னமே சுட்டினோம். களவுப் படலம் பாடத் தொடங்குமுன் 'இராமன் அருள் பெறு படல'த்தின் இறுதியில்

எற்றுபுனல் அயோத்திநகர் இராமனருள் பெற்றபடி
பற்றறுத்த உயர்தவத்தீர் பகர்ந்தனமால் இனிச் செவ்வேள்
கற்றை நறுஞ் சுருட்கூந்தற் கானவர்தம் குலவிளக்கை
முற்றிமறை ஒழுக்கனைத்தும் முடித்துடன் போந்
ததுமொழிவாம்[19]

என்று பாடுகிறார் கச்சியப்ப முனிவர். இப்பாடலில் கள வொழுக்கத்தை ''மறை ஒழுக்கு'' என்று குறித்துள்ளார். ''மறை'' என்னும் சொல்லில் இரு பொருளமைத்து ஆசிரியர் இவண் பாடியுள்ளார். களவொழுக்கம் வேதத்தாற் போற்றத்தக்கதே என்னும் குறிப்பினையும் உட்கொண்டு ''மறை ஒழுக்கு'' எனச் சுட்டிய நயம் பாராட்டற்பாலது. வைதிக நெறியின் ஓங்கிய செல்வாக்கிலே களவொழுக்கம் மேம்பாடு புறக்கணிக்கப் பட்டது நேர்மையன்று என்பதும் இத்தொடரமைப்பால் சுட்டப்படும் குறிப்பாகும். நல்லதாம் களவொழுக்கம் தீயதாம் திருடும் 'களவு' என்னும் ஒரே சொல்லாற் குறிக்கப்படினும் களவொழுக்கமும் நன்னாட்டகத்துக் கொள்ளப்படுவது, திருடு தள்ளப்படுவது[20] இதனைக் கச்சியப்ப முனிவரே விளக்கி யுள்ளார்.

அன்பின் ஐந்திணைக் களவலாற் களவொன்னும் அறியார்
இன்பமாண் பிரிவுகிணைவு அலால் இணைவொன்றும்
எய்தார்[21]

நாட்டுச் சிறப்பினைக் கூறுமிடத்தில் களவொழுக்கமும் காதற்பிரிவும் போற்றப் படுவதை ஆசிரியர் இப்பாடலில் கூறியுள்ளமை கருதற்பாலது.

களவுப் படலத்தில் தமிழ் நெறியதாகிய களவொழுக்கத்தைப் பாடுதற்கு ஏற்பக் கச்சியப்ப முனிவர் புராணத்தின் தொடக்கத்திலேயே தோற்றுவாய் செய்துள்ளார். திருநாட்டுப் படலத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணை நிலைகளை மிக விரிவாகப் பாடியுள்ளார். தனித்தனியே ஐந்து திணைகளும் பாடியபின் திணைமயக்கம் அமைத்தும் ஐந்திணைகளைப் பாடியுள்ளதைக் காணுகின்றோம்.

திருநாட்டுப் படலத்தில் உள்ள நயங்கள் மிகப் பல; அவையெல்லாம் இங்குப் பாரித்து ஓதப்படுவன அல்ல. அகப்பொருள் நலம் குறித்த தொல்காப்பிய நெறி அப்படலத்தின்கண் அமைந்துள்ள ஒரு நுட்பத்தினை ஈண்டுச் சுட்டுவோம் :

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே[22]

எனவும்

நடுவண் ஐந்திணை நடுவ்ணது ஒழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே[23]

எனவும் வரும் நூற்பாக்கள் திணை ஐந்தாயினும் நிலம் நான்கெனவே சுட்டுகின்றன. பாலைக்குத் தனிநிலம் இல்லை என்பது சான்றோர் விளக்கம். தொண்டை நாட்டில் பாலைப் பகுதியினை நீக்கி அந்நாடாகிய நங்கையினைப் பின்வரும் பாடலில் கச்சியப்ப முனிவர் வருணிக்கிறார்.

கருங்குழல் கானில் தோற்றிக் கதிர்முலை மலையில் தோற்றி
இருங்கைபூம் பணையில் தோற்றி எரிமணிக் கலாப அல்குல்
பெருங்கடல் தோற்றி வேத ஒழுக்கெனும் கணவற் பின்னி
ஒருங்குநாற் பயனாம் மக்கள் உயிர்த்தளிப் பஃதந்நாடு[24]

நால்வகை நிலமும் தன் உறுப்புக்களாய்க் கொண்டு, வேத ஒழுக்கம் என்னும் கணவனை அடைந்து, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நன் மக்களைப் பெற்று வளர்க்கிறதாம் தொண்டை நன்னாடு. வேதநெறியினர் பெற்ற செல்வாக்கால் தமிழ்க் காதல் புறக்கணிக்கப்பட்டிருக்க வேண்டியதில்லை

என்று அச்சான்றோரின் உள்ளம் நினைந்ததை இப்பாடல் சுட்டுகின்றது. வைதிக நெறிக்கு முற்றும் இயைந்து செல்வதே அகவொழுக்கம் எனத் தமிழ்நெறிச் சார்பில் வாதாடி வற்புறுத்துவதும் ஆசிரியரின் நோக்கமாக இருத்தல் கூடும்.[25]

நிலத்தால் நான்காய் உரிப்பொருளால் ஐந்தாய்த் திணைகள் பகுக்கப்படும். தொல்காப்பியச் சூத்திரத்துள் இக்கருத்து அமைந்ததை முன்பு காட்டினோம். தணிகைப் புராண ஆசிரியரும் இதனை ஒரு தொடரில் விளக்கியுள்ளார்.

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . நானிலத்து
வழங்கும் ஐந்திணை வளஞ்சிறிது உரைத்திடப் படுமால்[26]

இவ்வாறே தொல்காப்பியமும் சங்க நூல்களும் புலப்படுத்தும் அகந்திணைக் காட்சிகளும் கருத்துக்களும் தணிகைப் புராணத்துள் பொலிகின்ற இடங்கள் மிகப் பலவாம். அளவு வரையறை கருதி, இப்போது இவ்வளவில் அமைவோம்.

## குறிப்புகள்

1. ''காலந்தோறும் தமிழ்'' - இரண்டாவது உலகத் தமிழ்க் கருத்தரங்குக் கட்டுரை - டாக்டர் மு.வ. (ப-10)

2. சிலப்பதிகாரம் : நாவலர் ந.மு.வே. நாட்டார் உரை (நான்காம் பதிப்பு) - முகவுரை (ப-18)

3. சீவக சிந்தாமணி : பதுமையார் இலம்பம் - 163 ''இந்நூலைப் புலவர்கள் பாராட்டுவதற்கு இந்நூலிலே திருக்குறள் கருத்துக்களும், சங்கநூற் கருத்துக்களும், சைவசித்தாந்தத் தத்துவமும் செரிந்திருப்பதே காரண மாகும்... களவுப் படலத்தில் வள்ளியம்மையை முருகன் தினைப் புலத்திலே கண்டு கூடி மகிழ்ந்த களவொழுக்கங் கூறப்பெறுகிறது. இப்பகுதி பிற புராணங்களிலுங் காவியங்களிலுமில்லாத முறையில் அகப் பொருட் கோவையாக அமைந்துள்ளதும் இந்நூலின் சிறப்பியல்புக்குக் காரண மாகும்.'' - கலைக்களஞ்சியம் : தொகுதி5, பக்கம் 452-3

4. பாட்டுடைத் தலைவன் கிளவித் தலைவனெனப்
   பாட்டினுட் பாடப் படுவோர் இருவர்
   நாற்கவிராச நம்பி : அகப்பொருள்விளக்கம் : ஒழிபியல் 36.

5. அவருள், உயர்ந்தோன் பாட்டுடைத் தலைவனாகும் - ஒழிபியல் 37.

6. எட்டுத்தொகையின் அகப்பொருள் நூல்கள் பற்றிக்கூறும் இக்கருத்து, பத்துப் பாட்டுள் அமைந்த பட்டினப்பாலைக்குப் பொருந்தி வருமாறில்லை. அகப்பொருளின் உரிப்பொருளுக்கு அதனுள் தலைமை வழங்கப்பட்டுள்ள தாயினும் கரிகாலன் சிறப்பும் பட்டின மாண்பும் ஒருங்கு சிறப்பிக்கப்பட்டுள்ளன. நெடுநல்வாடைபற்றி இன்றளவும் கருத்து வேறுபாடு உண்டு.

7. பரிபாடல் 9.

8. களவுப்படலம் - 48.

9. பரிபாடல் 9.

10. "The akam verses of the cargkaw age were unconnected monologues.... The illustrative headings of the various akam contexts, which were considered in the cangkaw age as something unconnected, came to be arranged in their historical sequence. This is the difference between the earlier and later poetics" - A History of Tamil Literature : Dt.T.P.M. - p.137 (1965)

11. தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியல் - 13-15.

12. களவுப்படலம் : 174.

13. அகநானூறு 52.

14. தணிகைப் புராணம் : களவுப்படலம் - 435.

15. தொல்காப்பியம் : களவியல் - 23.

16. தணிகைப் புராணம் : களவுப்படலம் - 437.

17. தணிகைப் புராணம் : களவுப்படலம் - 100.

18. தமிழ் இலக்கிய மரபின் தனித்தன்மை குறைப்பதும் தமிழ்ப் பண்பாட்டின் தனித்தன்மை குலைப்பதும் பிற காரணங்கள் எனக் கூறலாம். இவ்வாராய்ச்சி தனிக் கட்டுரைக்குரியது.

19. தணிகைப் புராணம் : இராமனருள்பெறு படலம் - 45.

20. ''களவாவது...தலைவனும் தலைவியும்....ஒருவர்க்கு ஒருவர் உரியராய், உடல் இரண்டும் உயிரொன்றும் ஆருயிர்போல் ஒற்றுமைப்பட்டு, அங்ஙனம் பட்டமையைப் பிறர் அறியாவாறு ஒழுகுதல், தலைவன் தலைவியரது இவ்வொருமைப்பாடு பிறர் அறியாவாறு மறைக்கப்படுதல் பற்றி இது 'களவு' இது என்னும் கருத்தால் அங்ஙனம் கூறப்பட்டன்ன. என்னை? இவ்விருவரும் என்றேனும் ஒரு நாள் எவ்வாற்றாலேனும் ஒருவர்கொருவர் உரியராகற்பாலரே யன்றிப் பிறர்க்கு உரியரல்ல ராகலின்''- பேரா. சி. அருணைவடிவேல் முதலியார் விளக்கம் - எட்டாம் திருமுறை : தருமையாதீனப் பதிப்பு (1968) பக். 6854-87.

21. தணிகைப்புராணம் : திருநாட்டுப் படலம் - 48.

22. தொல். அகத். 5.

23. தொல். அகத். 2.

24. தணிகைப் புராணம் : திருநாட்டுப் படலம் - 11.

25. பத்துப்பாட்டு, கலித்தொகை, தொல்காப்பியம் முதலிய தொன்னூல்களின் உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் பழுத்த வைதிகர். அவர் பண்டைத் தமிழரின் அகவொழுக்கத்தினை முற்றிலும் வேத ஒழுக்கெனவே நம்பிப் போற்றியவர். இந்நிலையில் நச்சினார்க்கினியர் உரை விளக்கந் தாராதிருந்திருப்பின் பழந்தமிழ்க் காதல் நெறி விளக்கும் மரபுகள் மறைந்திருக்கக்கூடும் என டாக்டர் தெ.பொ.மீ. விளக்கியுள்ளார்.

-Mullai -p- pattu (1958) - Dr. T.P. Meenahshisundaram-pp. 4-5.

26. தணிகைப் புராணம் : திருநாட்டுப் படலம் - 31.

இர. குழந்தைவேலு
பூ.சா.கோ. கலைக்கல்லூரி
கோயம்புத்தூர்

# வழி காட்டிய நடுநாள்

மக்கள் வாழ்நாள் வரலாற்றிற்கு மதிப்பைச் சேர்த்துச் சிறப்பது. ஒரு நாளை மதிப்பிடும் உள்ளத்தனையது மாந்தர்தம் வாழ்நாளின் உயர்வு எனத்தகும். மக்கள் தொகுதி வாழ்வின் உயர்வையும், தாழ்வையும் வரலாறு பதிவு செய்து வெளியிடும் திறத்தது. எனவே, வழிவழி மக்கள் வாழ்க்கையின் நிகழ்ச்சிக் குறிப்புக்களைத் தரத்தில் வழுவாது திரட்டி விளக்கி நிற்பது வரலாறு என்பது தெளிவு. வரலாற்றிற்கு வளந்தரும் ஒரு நாள் பகுதியுள் காலை, பகல், மாலை, யாமம், விடியல் முதலிய கூறுகள் அடங்கும். அக்கூறுகளில், தமிழர் கொண்ட நாள் தொடக்கம் பற்றி ஆய்ந்து தெளிதற்கு வழிகாட்டும் காலப்பகுதி யாமமாகும். நம் தொன்மைத் தமிழகம் நண்பகலை நாளின் தொடக்கமாகப் போற்றலாயிற்று எனக்கொள்ளல் பொருந்தும். எனக்கு இக்கருத்துத் தோன்றுமாறு துணைசெய்த சங்கப் பாக்களின் குறிப்புக்கள் விளக்கம் தந்த வழியில் என் ஆராய்ச்சி யின் முடிவை அறிவிக்கின்றேன்.

இங்குத் தமிழ் மக்கள் தம் வாழ்க்கை வழியில் பொழு தறிந்து நடந்த நடப்பினை அறிதல் வேண்டும். கார் காலத்து மழை மண்குளிரப் பொழிந்தது. வானம் இருண்டமையால் இரவென்றும் பகலென்றும் அறிதல் அரிதாயிற்று. அவ்வேளை யில் பித்திகை அரும்பு அவிழ்ந்தது. பகல்பொழுதைக் கடந்தே பித்திகை அரும்பு மலர்வது. அம்மலரின் மணம்கொண்டே மகளிர் மாலைக்காலமென்றறிந்தனர். இச்செய்தியினை,

> ''மடவரல் மகளிர் பிடகைப் பெய்த
> செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து
> அவ்விதழ் அவிழ்பதம் கமழப் பொழுதறிந்து''[1]

என்று நக்கீரனார் உணர்த்தினர்.

பொழுது புலர்ந்ததும் அரசற்கு நாழிகை சொல்லுவார் நாழிகை அறிவித்தல், கோழிச்சேவல் விடியற் காலத்தை அறிந்து கூவுதல் ஆகிய கருத்துக்களை,

''நாழிகை இசைப்ப''[2]

எனவும்,

''பொறிமயிற் வாரணம் வைகறை இயம்ப''[3]

எனவும் மாங்குடி மருதனார் வழங்கினர்.

நடுஇரவில் உறக்கமின்றி நெடிது நினைந்திருக்கும் அரசற்கு நாழிகை அளப்போர் நாழிகை வட்டிலிற் சென்ற நாழிகை இத்துணை என்று கூறிய செய்தியினை,

''குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப''[4]

என்று நப்பூதனார் மொழிந்தனர்.

இங்ஙனம், காலப்பாகுபாடு அறிதல் தமிழர் வழக்கமாயிற்று என்பதனைக் கருதுமிடத்து, அந்நாளைய தமிழகத்தில் நிலவிய நாள் தொடக்கம் குறித்த கருத்துப்பற்றி இந்நாளில் ஆராயத் தலைப்படுதல் தக்கது என்பது என் எண்ணம்.

தமிழர் பொழுதறிந்து வாழ்ந்த திறத்தைத் தெளிதற்கு மேலைக்காட்டுக்களைச் சுருங்கக்காட்டி முடித்தேன். இனி, ஒருநாளின் கூறுகளில் கருத்துச் செலுத்தல் வேண்டும்.

''காரும் மாலையும் முல்லை''[5]

''குறிஞ்சி, கூதிர் யாமம் என்மனார் புலவர்''[6]

''வைகறை விடியல் மருதம்''[7]

''எற்பாடு,
நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்''[8]

''நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே''[9]

என்று வரும் தொல்காப்பிய நூற்பாக்கள் ஒரு நாளை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை, விடியல் எனும் ஆறு கூறுபடுத்திக் கொள்ளுதற்குத் துணை செய்தன. இங்கு,

''நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு;
எற்பாடாவது பகற்பொழுதின் பிற்கூறு;

மாலையாவது இராப்பொழுதின் முற்கூறு;
யாமமாவது இராப்பொழுதின் நடுக்கூறு;
வைகறையாவது இராப்பொழுதின் பிற்கூறு;
விடியலாவது பகற்பொழுதின் முற்கூறு''[10]

என்று இளம்பூரணரும்,

''ஒரு நாளினைப் படுசுரமையந் தொடங்கி மாலையெனவும், அதன் பின் இடையாம்மெனவும், அதன்பின் விடிய லெனவும், அதன்பின் காலையெனவும், அதன்பின் நண்பக லெனவும், அதன்பின் எற்பாடெனவும் ஆறாகப் பகுத்தார். அவை ஒரோவொன்று பத்து நாழிகையாக இம்முறையே சூத்திரங்களுட் சிறுபொழுது வைப்பர்.''[11].

என்று நச்சினார்க்கினியவரும் வரைந்த தொல் காப்பிய உரைகளையொட்டிப் படிப்படியாக நாள் தொடக்கப் பொழுதை விளங்கவைத்தல் கூடும். எனவே, இவ்விளக்கங்களைப் போற்றிக் கொள்ளல் வேண்டும்.

அடுத்து, ''சிறுபொழுதுகள் ஐந்தென்றும் ஆறென்றும் இருவகைக் கொள்கைகள் உண்டு.

'காலையும் பகலுங் கையறு மாலையும்
ஊர்துஞ்சி யாமமும் விடியலு மென்றிப்
பொழுது' (குறுந்.32)

என்னும் பாட்டில் ஐவகைச் சிறுபொழுதுகள் சொல்லப்படு கின்றன. காலை-பொழுது புலர்ந்த பின்னுள்ள காலமென்றும், பகல்-நண்பகலை உள்ளிட்ட காலமென்றும், மாலை-சூரியன் மறைந்தது தொடங்கிய இரவின் முதல் யாமமென்றும், யாமம்-இடையிரவென்றும், விடியல்-இரவின் கடையாமமென்றும் கொள்ளவேண்டும். இவற்றின் இடையே எற்பாடென்னும் பொழுதொன்றையும் கூட்டி ஆறாக உரைப்பர் வேறு சிலர்''[12]

என்று தமிழ்ப் பெரியார் டாக்டர் உ.வே.சா. அவர்கள், சிறுபொழுதைக் குறித்த இருவேறு கொள்கைகளை எடுத் துரைத்ததும் அறியத்தக்கது. இக்கருத்தின் விரிவு ஈண்டு வேண்டா என்று இவ்வளவில் முடிக்கின்றேன்.

நம் உள்ளத்தில் விடியலே நாள் தொடக்கப் பொழுது என்னும் ஓர் எண்ணம் ஊறிவிட்டதெனலாம். இவ்வெண்ணம் உரமாய் வளர்தற்குக் கதிரவன் கதிர்பொழியத் தொடங்கும் விடியலே ஒரு நாளுள் தொடக்கமாயிருத்தல் வேண்டும் என்ற

கருத்தைத் துணையாதல் கூடும். இக்குறிப்பு வழிவழி வளர்தற்குச் சான்றாக அமையும் இலக்கியத் தொடர்களைக் காணலாம்.

''புலர்ந்துவிரி விடியல் எய்த''[13]

''பசலை நிலவின் பனிபடு விடியல்''[14]

''விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்''[15]

''நள்ளிருள் அலரி
விரிந்த விடியல்''[16]

''வான்கண் விரிந்த விடியல் ஏற்றெழுந்து''[17]

''இரவுத்தலைப் பெயரும் ஏம வைகறை''[18]

''தண்புலர்
வைகுறு விடியல்''[19]

இவை விடியல் பற்றிச் சங்கப்பாக்களில் வரும் சில குறிப்புக்கள். இப்பொதுக் குறிப்புக்கள், காலைப்பொழுதை நாள் தொடக்கப் பொழுதாகக் கொள்ளும் எண்ணத்திற்கு உயிர் ஊட்டிய பொருத்தம் ஈண்டு நன்கு விளங்கும். இப்போக்கில்,

''நாள்தொழில் வருத்தம் வீட''[20]

''நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉம்''[21]

''கன்னி விடியல்''[22]

எனவரும் எட்டுத் தொகையடிகளில் பொலியும் 'காலை', 'நாட்காலை', 'வைகறை' என்னும் பொதுப் பொருள்களும் விடியலைத் தொடக்கப் பொழுதாகப் போற்றும் உணர்வு நிலைத்தற்கு அரண்செய்யவல்லன. எனினும், இவை தனித்து நினையத் தக்கவை.

தொகை நூல்களால் விளக்கம்பெற்ற வழியில் எளிதே நாள் தொடக்கத்தைக் குறித்து எழுந்த எண்ணத்தால், வேறுவகைச் சிந்தனை தடையுற்றது என்பதனை உணரல் வேண்டும். மேலைக் குறிப்புக்களில், நாள் தொடக்கப் பொழுது விடியலே என்னும் கருத்தை நிறுவிக் காட்டி நிலை நிறுத்தற்குத் தக்க சான்று அமையவில்லை. அடுத்து 'நடுநாள் யாமம்' என்னும்

சொற்றொடர் ஆளப்பெற்ற பொருள்நுட்பம், நாள்தொடக்கப் பொழுதினை ஆய்ந்து தெளிதற்கு வாய்ப்பளிப்பது. இங்குச் சங்கப் பாக்கள் வழங்கும் ஒளியைக் கொண்டு 'நடுநாள் யாமம்' என்னும் சொற்றொடரின் பொருளைத் தேர்தல் வேண்டும்.

'யாமம்' என்பது நடுஇரவினை உணர்த்தவல்லது. தமிழ் வழக்கோடு கலந்து விரிவான வளர்ச்சி பெற்றுத் தொல்காப்பியத் திலும் சங்கப்பாக்களிலும் இடம் பெற்றிருக்கும் 'யாமம்' என்னும் சொல்லின் தனித்தன்மை நினையத்தக்கது.

இளம்பூரணர், ''யாமமாவது இராப்பொழுதின் நடுக்கூறு'' என்று விளக்கிய பொருளை மேலே சுட்டினேன்.

''பதினைந்தாம் நாழிகையை முடிவாகக் கொண்ட கங்குல்''[23] என்பர் நச்சினார்க்கினியர். ''பதினைந்தாம் நாழிகையை இறுதி யாகவுடைய இடையிரவு''[24] என்று டாக்டர் உ.வே.சா. அவர்கள் யாமத்தின் பொருளை அறிவுறுத்தினர். 'இராப்பொழுதின் நடுக்கூறு' என்னும் ஊறுபடாத ஒரே பொருளில், 'யாமம்' வழங்கியது என்பது தெளிதற்பாலது.

''பானாட் கொண்ட கங்குல்''[25]

''பல்லோர் துஞ்சும் பானாட்கங்குல்''[26]

''நடுநாட் கங்குலும் வருதி''[27]

''உரவுரும் உரறும் அரையிருள் நடுநாள்''[28]

''இரை நசைஇப் பரிக்கும் அரைநாள் கங்குல்''[29]

''அரை நாள் யாமத்து விழுமழை கரந்து''[30]

''மென்பிணி அவிழ்ந்த அரைநாள் இரவு''[31]

''உரைமயக் குற்ற ஊர்துஞ்சு யாமத்து''[32]

''கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமம்''[33]

என்றின்ன சங்கத் தொகை நூல்கள் வழங்கும் தொடர்களால் அறியலாகும். 'பானாள்', 'பானாட் கங்குல்', 'நடுநாட் கங்குல்', 'அரையிருள் நடுநாள்', 'அரைநாள் கங்குல்', 'அரைநாள் யாமம்', 'அரைநாள் இரவு', 'யாமம்', 'நள்ளென்யாமம்' ஆகிய சொற்றொடர்கள், ஒருமொழித் தன்மையின் தெளிவோடு இரவின் நடுப்பொழுதை உணர்த்தி நிற்றல் வெளிப்படை.

இங்குப் பழந்தமிழ் நாடு கொண்டிருந்த நாள் தொடக்கத் தினை அறுதியிடுதற்கு இடங்கொடுக்கும் 'யாமம்' என்னும் காலப்பகுதியே 'நடுநாள்' என்பது,

''நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்''[34]

''யாம நடுநாள் துயில்கொண் டொளித்த''[35]

எனவரும் மேற்கோள்களால் வலியுறுத்தப்படுதல் காணலாம்.

இங்ஙனம் ஆயுங்காலை, இராப்பொழுதின் நடுக்கூறாகிய யாமமே ஒருநாளுள் நடுநாள் என்ற உண்மை வெளிப்படுதலால், பகற்பொழுதின் நடுக்கூறாகிய நண்பகலை நாள் தொடக்கமாகக் தமிழகம் கொண்டது என்ற நன்மதிப்போடு குறிப்பிடுதல் பொருந்திவரும். இங்கு வரையறுத்த கருத்துரைக்கு உறுதி காணுதற்கு

''முன்னாள் நண்பகல் சுரனுழந்து வருந்தி''[36]

என்னும் புறநானூற்றுத் தொடரின் 'நண்பகல்'[37] என்னுஞ் சொல் நடுப்பகலை உணர்த்துதலையும், 'நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு' என்னும் இளம்பூரணருரை வளத்தையும் கருத்துட் கொள்ளுதல் வேண்டும்.

''கடுஞ்சூல் மகளிர் பேணிக் கைதொழுது''[38]

என்னும் மதுரைக்காஞ்சித் தொடரின் 'கடுஞ்சூல்' என்பதன் பொருளையும் கருத்தூன்றி நோக்குதல் வேண்டும். இங்குக் 'கடுஞ்சூல்' என்பது 'முதற்சூல்'[39] என்னும் பொருளில் பெய்யப் பெற்றிருத்தல் தெளிவு. சங்ககாலத்தில் முதற்சூலை உணர்த்தப் பயன்பட்டு நின்ற இக் 'கடுஞ்சூல்' என்னும் சொல்லின் செம் பொருளை

''கடும்பகல்
தேர்வீசு இருக்கை ஆர நோக்கி''[40]

என்னும் புறநானூற்று அடியில் அமைந்து கிடக்கும் 'கடும்பகல்'[41] என்ற சொல்லோடு ஒத்துக் காணவே, 'நாள் தொடக்கமாய் விளங்கிய பகற்பொழுது' என்னும் பொருந்திய பொருள் விளங்கித் தோன்றும்.

இங்ஙனம், நடுநாளை முன்வைத்து எண்ணிய பொருளடிப் படையையும் உரையாசிரியர்கள் வழியில் நண்பகல் வழங்கும் சிறப்புப் பொருளை நிலைக்களமாகக் கொண்ட விளக்கத்தையும்

கருதுங்கால், தொன்மைத் தமிழகம் நண்பகலை நாள் தொடக்கமாக மதித்தது என்பது செவ்விதின் விளங்கும்.

## குறிப்புகள்

1. நெடுநல்வாடை - 39 - 41.
2. மதுரைக் காஞ்சி - 671.
3. மதுரைக் காஞ்சி - 673.
4. முல்லைப்பாட்டு - 58.
5. தொல்பொருள் அகத். 6.
6. தொல்பொருள் அகத். 7.
7. தொல்பொருள் அகத். 9.
8. தொல்பொருள் அகத். 10.
9. தொல்பொருள் அகத். 11.
10. தொல்பொருள் அகத்திணையியல்:இளம்பூரணருரை.
11. தொல்பொருள் அகத்திணையியல்:நச்சினார்க்கினியருரை.
12. குறுந்தொகை மூலமும் உரையும் - இரண்டாம் பதிப்பு - முன்னுரை : ப-28.
13. மதுரைக் காஞ்சி 664.
14. புறநானூறு 392.
15. பொருநராற்றுப்படை, 71-72.
16. மலைபடுகடாம், 195-96.
17. மலைபடுகடாம், 257.
18. மதுரைக் காஞ்சி, 686.
19. அகநானூறு, 100.
20. நற்றிணை, 330.
21. குறுந்தொகை, 364.
22. ஐங்குறுநூறு, 68.
23. மதுரைக் காஞ்சி, 631 - உரை.
24. குறுந்தொகை மூலமும் உரையும் - 6-ஆம் பாடல் விசேடவுரை.
25. மதுரைக் காஞ்சி, 231.
26. குறுந்தொகை, 355.
27. ஐங்குறுநூறு, 296
28. குறுந்தொகை, 190.

29. அகநானூறு, 112.

30. அகநானூறு, 198.

31. அகநானூறு, 298.

32. நற்றிணை, 262.

33. அகநானூறு, 142.

34. புறநானூறு, 189.

35. கலித்தொகை, 122.

36. புறநானூறு, 395.

37. 'நள்-நடுவுமாம்; நண்பகல் என்புழிப்போல' - டாக்டர் உ.வே.சா. அவர்கள் 'குறுந்தொகை மூலமும் உரையும்' -6-ஆம் பாடல் விசேடவுரை.

38. மதுரைக் காஞ்சி, 609.

39. மதுரைக் காஞ்சி, 609; நச்சினார்க்கினியருரை.

40. புறநானூறு, 69.

41. கடும்பகல் - விளங்கிள பகற்பொழுது - புறநானூற்றின் பழைய உரை.

மெ. சுந்தரம்
மதுரைப் பல்கலைக்கழகம்
மதுரை

# தமிழர் பண்பாடும் நாகரீகமும்

இந்திய வரலாற்றில் தமிழருக்குரிய இடத்தைப்பற்றியும் இந்தியப்பண்பாட்டு, நாகரிக வளர்ச்சிக்குத் தமிழர் புரிந்த அரும் பெரும் பணிகள் பற்றியும் அறிஞர்கள் இது வரை அமைவற ஆராயவில்லை. பழைய இந்தியப் பண்பாட்டினது சிறந்த கூறுகளனைத்தும் ஆரியரதே என்று கூறும் வழக்கம், அத்துறை ஆராய்ச்சிப் பெரியார்களிடம் நெடுநாட்களாகக் காணப்பட்டு வந்தது. ஆனால் இன்று அந்நிலைமை மாறுதலடைந்து வருகிறது. இந்தியநாட்டுக் கலை, பண்பாட்டு, நாகரிக வளர்ச்சியில் திராவிடர்களுக்குரியனவும் குறிப்பாகத் தமிழர்களுக்குரியனவு மாகிய பெரும்பங்கு அவ்வாய்வாளர்களால் இப்போது நன்கு உணரப்பட்டு வருகிறது.

தமிழர்களின் தொன்மைமிக்க நாகரிகத்தை ஆராய்வதற்குப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகையாகிய சங்க நூல்கள் துணை புரிகின்றன. வெளிநாட்டார் சிலரது பயணக்குறிப்புகளும், மகா பாரதம், இராமாயணம், அர்த்த சாத்திரம் முதலிய வடமொழி நூல்களிற் காணப்படும் தென்னிந்தியாவைப் பற்றிய குறிப்பு களும் இதற்கு ஓரளவு சான்றாக உதவுகின்றன.

### அரசியல் அமைப்பு

தமிழர்களின் நாகரிகத்தை அவர்களுடைய பண்பட்ட அரசியலமைப்பே உணர்த்தும். தந்தைக்குப் பிறகு மகன் பட்டத் துக்கு வருவதே முறையாகும். அதுவும் ஒருவன் முன்செய்த நல்வினைப்பயனால் ஆட்சிக்கு உரிமையுடையனாகின்றான் என்ற நம்பிக்கை தமிழ் மக்களிடையே இருந்து வந்தது.[1] எனினும் இங்ஙனம் முறையாக வரவேண்டிய ஆட்சி யுரிமைக்குத் தடை களும் எழுந்ததுண்டு.[2] இவ்வாட்சியுரிமை காரணமாகத் தாயாதிகள் அல்லது பங்காளிகளிடையே போர் நிகழ்ந்த வரலாறும் உண்டு.[3]

அரசர்கள் தமது நாட்டை ஆள்வதில் அறநெறி பிறழாதவர் களாக இருந்தனர். அதனால் ஒரு நாட்டிற்கு அரசனே உயிரென்று கருதப்பட்டான்.[4] அரசனுடைய பணிகளில் நீர்வளம் பெருகச் செய்து, நீர்ப்பாசன வசதிகளை உண்டாக்கி, விளைவை அதிகப் படுத்துவதே தலையாய கடமையாகக் கருதப்பட்டது.[5] அரசர்கள் புலவர்களால் பாடப்படுகின்ற புகழுடையராதலை மிகவும் விரும்பினர்.[6] அப்புலவர்களை மிகவும் மதித்துப் போற்றினர். தம்மாலியன்ற பரிசுகளை நல்கிக் காப்பாற்றினர். மிக்க சிறப்புடைய பரிசுகளை நல்கிப் பெருமைப்படுத்தினர். அரசர் புலவர் உறவு அக்கால நாகரிகத்தின் சிறப்புக்களில் ஒன்றாக இலங்கியது எனலாம்.

பழந்தமிழ் மன்னர்களின் ஆட்சித் துணையாக இருந்த அமைச்சர், படைத் தலைவர், தூதுவர் முதலியவர்களைப் பற்றிய செய்திகள் தனித்தனியே விதந்துக் கூறப்படாமை வியப்புத் தருகிறது. எனினும் சங்க கால அரசியலின் பிழிவு என்று கருதக் கூடிய திருக்குறளில் இவ்வமைச்சர், தூதுவர்களைப்பற்றிய இலக்கணங்கள் விரித்துக் கூறப்பட்டுள்ளன.[7] சங்க நூல்களில் இவர்களனைவரையும் சேர்த்துச் 'சுற்றம்' என்ற சொல்லால் அடிக்கடி குறிப்பிடப்படுகிறது. இவர்கள் அரசனுடைய ஆளுங் கடமைகளில் ஆலோசனை கூறுவோராகவும், அரசனுடைய சிந்தனைகளையும், கட்டளைகளையும் செயல்படுத்துவோராக வும் இருப்பவர்கள். இவர்கள் அரசனைச் சூழ்ந்திருப்பதால் சுற்றியிருப்பதால் 'சுற்றம்' எனப்பட்டனர் போலும். இன்று இச் சொல் 'உறவினர்' என்ற பொருளில் வழங்குகிறது. அரசனுடைய 'சுற்றத்தார்', கொடுமை அற்றவர்களாக இருக்க வேண்டு மென்றும்,[8] வேறுபாடின்றி ஒரே தன்மையுடையவராக இருக்க வேண்டுமென்றும்;[9] அரசனுடைய செயல்களில் மன ஒற்றுமை யுடன் ஈடுபட்டுத் துணைபுரிவராக இருக்கவேண்டுமென்றும்[10] கூறப்பட்டுள்ளது.

இச்சுற்றத்தவரிடையே, நடுவண் தலைமை ஏற்றிருக்கும் அரசன், நாளோலக்கத்தில் காணப்படும் காட்சி பாராட்டிற்குரிய தாகும். கடலிடையே தோன்றும் ஞாயிறு போலவும், பல விண்மின்களிடையே விளங்கும் திங்கள் போலவும் அவன் இலங்குகிறான். ''சில சமயங்களில் இச்சுற்றத்தார் மக்களின் இயல் பறிந்து நடவாது, ஆரவாரம் மிக்க தீயவர்களாக இருப்பது முண்டு.[11] மதுரைக் காஞ்சி இத்தகைய சுற்றத்தவருள் முதன்மை வாய்ந்த அமைச்சர்களைக் காவிதிமாக்கள்' என்று அழைக்கிறது.[12]

மேலும் அரசனுக்கு அறநெறி ஆட்சியில் அறவுரை கூறுவல்ல இச்சுற்றத்தார் பல குழுக்களாக இருந்தனர் என்று எண்ணவும் இடமிருக்கிறது. ஏனெனில் மதுரைக்காஞ்சி இவர்கள் ''நாற் பெருங்குழு'' என்றும். ''பொலம்பூண் ஐவர்'' என்றும் சுட்டு கிறது.[13] பிற்காலத்தில் ஐம்பெருங்குழு, எ்ன்பேராயம் என நாம் காணுகிற ஆட்சிக் குழுவினர் சங்ககாலந் தொட்டே, வெவ்வேறு பெயரில், தனித்தனிக் குழுக்களாக அமைத்து வந்துள்ளனர் என்று இதன் வாயிலாக அறியப்படுகிறது.

சிற்றூர் அவையங்களுக்கு உரிய ஆட்சிக்குழுவினரைக் 'குடலோலை' முறையால் தேர்ந்தெடுக்கும் முறை இடைக்காலச் சோழராட்சியில் செல்வாக்குப் பெற்றிருந்தமையை நாம் அக்காலச் சோழர் கல்வெட்டுக்களால் அறிகிறோம்.[14] இம் முறையும் சங்ககாலத் தொட்டே வருவது என மெய்ப்பிப்பதற்கு அகநானூறு சான்று பகர்கிறது. அக்காலத்தில் ஊர் அவையங் களுக்கு உரிய ஆட்சிக்குழுவினரைத் தேர்ந்தெடுத்தனர். வாக்குச் சீட்டுகள் ஓலையால் ஆனவை; பானையே அச்சீட்டுகளைப் போடும் பெட்டியாகும்; அப்பானை கயிறுகளால் பிணிக்கப் பட்டிருக்கும்; மேலே இலச்சினை இடப்பட்டிருக்கும். ஆவணமாக்கள் இவ்விலச்சினையே அழித்து விட்டு உள்ளேயுள்ள ஓலைகளை எடுத்துப் பார்த்து, மக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்றவர்கள் யார் என்று அறிவிப்பார்கள்.[15]

நீதியும் அரசன் கையிலேயே ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஆயினும் அரசனுக்கு அந்நீதியை நினைப்பூட்ட வேண்டிய கடமைகளைப் புலவர்கள் பூண்டு இருந்தனர்.[16] முறை பிழையாத அரசன் அவர்களால் மிகுதியும் பாராட்டப்பட்டான்.[17] மேலும் நீதி வழங்குவதில் பொது மன்றங்களும் பங்கு கொண்டன. நீதி வழங்குப்படும் இடம் ''அறங்கூர் அவையம்'' என்று கூறப் பட்டது. இதற்கு அறம்-நீதி நிலைபெற்று வளருமிடமென்று பெயர். இதனை ''அறங்கூறு அவையம்'' என்றும் சுட்டுவர். அதற்கு அறத்தை ஆராய்ந்து எடுத்துக்கூறும் இடமென்று பெயர்.[18] இத்தகைய அவையத்தில் காலடி எடுத்து வைத்தவுடன் தமது பகைமையும் மாறுபாடும் நீங்கப்பெற்ற முதியவர்களைப் பற்றிப் பொருநராற்றுப்படை கூறுகிறது.[19] இங்குள்ள அறவோர் தராசின் கோல் போல நடுநிலையிலிருந்து நீதி வழங்குபவர் ஆவர். இவ்வவையம் ''அறம் நேரே தோன்ற விளங்கிய சிறப்புடையது'' என்றும்.[20] 'அறிவு நிறைந்தோர் கூடிய' அவையம் என்றும்[21] கூறப்படுகிறது.

இத்தகைய அறங்கூறும் அவையங்களில் உறந்தையிலிருந்த அவையமே சங்க காலத்தில் பெரும்புகழ் பெற்றுத் திகழ்ந்தது.[22] இத்தகைய அறங்கூறும் அவைத் தலைவர்கள் அரசனால் தேர்ந் தெடுக்கப்படுவர்; அவர் நீதியினின்றும் வழுவினால் அதனால் வரும் பழி அரசனையே சாரும்; அதனால் அரசனது செங் கோலாட்சி கொடுங்கோலாக மாறிவிடும்.[23] இந்நீதிபதிகள் அச்சம், வருத்தம், விருப்பம் ஆகியவற்றை நீக்கி, சினமும் மகிழ்வும் கொள்ளாது, நடுவுநிலையினின்று நீதி வழங்குவர்.[24] இத்தகைய பழங்கால நீதி மன்றங்களில் இருந்து நீதி வழங்கியவர்கள் அந்தணர்களாகவே இருக்க வேண்டும் என்று திரு. இராமச்சந்திர தீட்சிதர் தமது Studies in Tamil literature and History என்ற நூலில் குறிப்பிடுவதற்குச்[25] சங்க நூல்களில் சான்று ஏதும் இல்லை. தொல்காப்பியர் வாகைத்திணை பற்றிய உட்டுறை களை விளக்குமிடத்தில் 'எட்டு வகை நுதலிய அவையத் தானும்' என்று இவ்வையத்தையும் அதன் எண் வகைச் சிறப்பியல்பு களையும் சுட்டிக் காட்டியுள்ளார்.[26]

*சமூக அமைப்பு*

பழந்தமிழக மக்களிடையே சாதிப்பிரிவு இல்லை. வாழுமிடத்தாலும், நிலச் சூழலாலும் நான்கு தன்மையுடைய, பழக்க வழக்கங்களால் வேறுபட்ட வாழ்க்கையுடைவர்களா யினர். எனவே நான்கு நிலமக்கள் என்ற நிலப் பிரிவு ஏற்பட்டது. இவர்களுள் குறிஞ்சி நிலத்தவர்கள் தொன்மை மிக்கவர் என்று கருதப்பட்டு வருகிறது. இவர்களைப் பற்றிய செய்திகளில் தொன்மைமிக்க பழக்க வழக்கங்கள் கூறப்பட்டுள்ளன. இன்றும் மலைவாழ் பழங்குடிகள் (Hill Tribes) தொன்மை மிக்கவர்களாக இருக்கக் காண்கிறோம்.

இக் குறிஞ்சி நில மக்கள் 'குறவர்' எனப்பட்டனர். 'தினை' இவர்களின் முன்மையான உணவாகும். அகில், சந்தனம் முதலிய மணம் மிக்க மரங்களும் யானைத் தந்தம் புலி நகம் முதலிய விலை மதிப்புமிக்க பொருள்களும் தேன், வள்ளிக்கிழங்கு, பழவகைகள் போன்ற இயற்கைச் செல்வமும் இங்கு மிகுதி. குறவர்கள் தமது உழைப்பு மிகுதியால் தினைப் பயிரை விளைவுசெய்து காவல்புரிவர். அப்போது உயர்ந்த பரண்மீது ஏறிக் கவணுமிழும் கற்களை வீசி யானைகளை விரட்டுவர்.[27] மணமாகாத மகளிரையும் தினைப்புனம் காக்க அனுப்புவர் என்பதற்குக் குறிஞ்சிப்பாட்டு சான்று பகர்கின்றது. குறிஞ்சிநில மக்களின் நாகரிகம் குடும்பமாகக் குடியாகக் கூடிவாழும்

அளவினதாகவே வளர்ந்தது. குறிஞ்சி நில ஊர்கள் பல ''சிறுகுடி'' என்றே அழைக்கப்பட்டன.[28]

முல்லை நிலமக்கள் என்பார் பரந்து விரிந்த மேட்டு நிலங்களில் வாழ்ந்தனர். இந்நிலம் மழைக்காலத்தில் வளமிக்க தாகவும், கோடை காலத்தில் வறட்சி மிக்கதாகவும் இருந்தது. கால்நடைகளை வளர்ப்பதே இவர்களின் முதன்மையான தொழிலாகும். இவர்கள் ''அறம் குடிகொண்ட நெஞ்சுடைய ஆயர் ஆவர் என்ற புறநானூறு புகல்கிறது.[29] கோலினைக் காலுடன் சேர்த்து ஊன்றித் தனியே நிற்கின்ற இடைமகன் வாயை மடித்துச் சீழ்க்கை ஒலி எழுப்பித் தன் நிரைகளை மேய்ப்பான்.[30] இக் கோவலர்கள் ஆநிரைக்களைக் காக்கும் கருத்துடன் எப் போதும் தம் கைகளில் வளைந்த 'கோல்' வைத்திருப்பர்.[31] இவர் கள் குழல்களின் மூலம் இனிய இசை எழுப்ப வல்லவராவர்.[32]

முல்லைநில மக்கள் எருதுகளை அடக்கியாளும் 'ஏறு தழுவுதல்' என்ற விளையாட்டில் வல்லவர்கள் என்பதை நாம் கலித்தொகை வாயிலாக அறிகிறோம். இது இவர்களின் உடல் வலிமைக்குச் சான்று பகரும், இதனால் இந்நிலத்தில் வாழ்ந்த மக்கள் பற்பல குழுக்களாகக் கூடி ஒரு தலைவனின் கீழ் ஒன்று படும் அரசியலமைப்புக்கு-கோனாட்சி முறைக்கு வித்திட்டனர். முற்கூறியது போலக் குறிஞ்சி நிலத்திலே 'குடும்ப அமைப்பு' - 'குடி வளர்ச்சி' - 'கால்வழிப் பெருக்கம்' ஆகிய வளர்ச்சிப் படிகளைக் கண்ட மக்கள் முல்லை நிலத்தில் பல குடும்பங்க ளாகக் கூடிவாழுதல் - ஒரு தலைவனின் கீழ் ஒன்றுபடுதல் - நல்லாட்சிபுரிதல் - தீமை கடிந்து நலங்காத்தல் ஆகிய வளர்ச்சி படிகளைக் கண்டனர். ஓநாய்கள் போலும் தீய விலங்கு களினின்றும் காப்பாற்றி, கால்நடைகளைக் 'கோல்' கொண்டு அடக்கி, மர நிழலில் துன்பமின்றிக் காப்பாற்றிய கோவலர்களின் உளவியலே, அவர்கள் வாழ்விலும் எதிரொலித்து இடம் பெறுவதாயிற்று எனலாம். இதை நிறுவுவதற்கு, கோல், கோன், கோ, குடைநிழல் முதலிய அரசியல் பற்றிய சொல்லாட்சிகள் சான்றாகும். மேலும் அரசனை எருதுக்கு உவமைகூறும் இலக்கிய வழக்காறும் இதை வலியுறுத்தும்.[33]

எனினும் 'மருதநிலத்திலே' தான் தொன்மைக்காலத் தமிழ் மனிதன் நாகரிகத்தின் முழுவளர்ச்சியைக் கண்டான். மருதநிலம் வயல்வளம் சார்ந்தது. 'நெல்' அதன் முதன்மை விளை பொருளாகும். காலம் செல்லச் செல்ல அரிசியே தலைமையான உணவாயினமையின், ஏனைய நிலப்பகுதிகள் இதனை

எதிர்ப்பார்த்து வாழ வேண்டியவைகள் ஆயின. இங்கு வாழ்ந்தவர்கள் உழவர்கள் ஆவர். இவர்கட்குத்தான் உலகிலேயே தலைமையிடம் உண்டு என்பது திருவள்ளுவர் கருத்தாகும். மருதநில வளம் பற்றியும் அங்கு வாழ்வோரின் வாழ்க்கை முறைபற்றியும் பெரும்பாணாற்றுப்படை மதுரைக் காஞ்சி, மலைபடுகடாம் ஆகிய நூல்களில் விரிவாகக் காணலாம்.[34] செந்நெல்லும் வெண்ணெல்லும் மட்டுமின்றிக் கரும்பும் இந்நிலத்து விளைபொருட்களுள் தலைமையுடையதாகும்.[35] இம் மருதநிலத்து ஆறுகள் சென்று கடலிற்பாயும் பகுதிகளான நெய்தல் நிலப் பகுதிகள்தாம் நாகரிகத்தின் உச்சநிலையை அடைந்தன. இங்கு வெளிநாட்டு வாணிபமும், உள்நாட்டு வாணிபமும் செழிப்புற்றன. இங்குப் பெற்ற 'உப்பு' உணவுக்குச் சுவையூட்டும் முதன்மை பொருளாயிற்று. எனவே தான் இந்த நெல்லும் உப்புமே முதன்மைப் பண்டமாற்றுப் பொருள்களாக அன்று இயங்கின. இரண்டும் சேர்ந்து சம்பளம் எனவும் அழைக்கப்பட்டன. அவை 'ஊதியம்' என்றும் பொருள் தரலாயிற்று. இதிலிருந்து உழைப்பார்க்கு இவை கூலியாகக் கொடுக்கப்பட்டன என அறியலாம். எனவேதான் மருதமும் நெய்தலும் சார்ந்த மூன்று நகரங்கள் - காவிரிப்பூம்பட்டினம்; (பழைய) கூடல் நகரம், வஞ்சி ஆகியவை - மூவேந்தர்களின் தலைநகரங்களாக விளங்கின. சோழனுடைய தலைநகரமாகிய 'புகார்' காவிரியாறு கடலோடு கலக்குமிடத்தே இருந்தது. சேரனுடைய தலை நகராகிய 'வஞ்சி' பேரியாறு மேற்குக் கடலின் கண் சென்று கலக்குமிடத்தே இருந்தது. முதற்சங்கத்திருந்த கூடலும், பஃறுளியாற்றங்கரையில் அது கடலொடு கலக்குமிடத்தே இருந்தது. மூன்றாம் சங்ககாலக் கூடலும் வையையாற்றங் கரையில் விளங்கியது. இங்ஙனம் நம் தமிழனுடைய சமுதாய அமைப்பு நான்கு நில வளர்ச்சியுடையதாய், படிப்படியாக மேன்மையுற்றது.

**கலைகள்**

தமிழர்கள் பல்வேறு கலைகளில் பயின்றிருந்தனர். இசைக் கலையில் மிகவும் வல்லுநராகத் திகழ்ந்தனர். தோற்கருவி துளைக் கருவி, நரம்புக்கருவி, வெண்கலக்கருவி என நால்வகைக் கருவிகள் இருந்தன. பழந்தமிழ் மக்கள் வாழ்க்கையுடன் இசை பின்னிப் பிணைந்திருந்தது எனலாம். வழிப்பறி செய்யும் கூட்டத்தார்கூடப் பாலைப்பண்ணின் இனிமையில் உருகித் தமது படைக்கலங்களாம் கொலைக்கருவிகளைக் கீழே போட்டுவிட்டு, அருளுடையவர் ஆகி நிற்பர்[36] இசைவல்லுநர்களாகிய

பாணர்களும், அவர்களைச் சார்ந்த பிற கலைஞர்களும் அக்கால அரசர்களால் நன்கு ஆதரிக்கப் பட்டனர். பாணர்கட்குப் பொன்னாலாகிய தாமரைப் பூவையும் விறலியர்க்குப் பொன் மாலைகளையும் அணிகலன்களையும் பரிசளித்துப் பாராட்டுவது பண்டைய மன்னர்களின் மரபாகும்.[37] 'யாழ்' என்ற இசைக் கருவியின் சிறப்பை அக்கால இலக்கியங்கள் அனைத்திலும் காண் கிறோம். தோற்கருவிகளில் முழவும்[38] முரசும்,[39] தொண்டகமும்,[40] பதலையும்,[41] தடாரியும்[42] சிறப்பிடம் பெறுகின்றன. குழல் இசையே பெருஞ்சிறப்புடன் பேசப்படுகிறது.

ஓவியம், இலக்கியம் ஆகிய கலைகளிலும், கட்டிடக்கலை போல்வனவற்றிலும் பழந்தமிழர் மிக முன்னேறியிருந்தனர்.

**தொழில்கள்**

நில அடிப்படையிலே வாழ்ந்த குறவர், ஆயர், உழவர், பரதவர் தவிரப் பிற தொழில் வல்லுநர்கள் பலரைப் பற்றியும் சங்க நூல்களில் குறிப்புக்கள் காணப்படுகின்றன. நீண்ட கைகளையுடைய யானைக்குத் தொடியிடும் கொல்லனைப்பற்றிப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது[44] அழகிய கட்டில்களை உருவாக்கிய தச்சர்களைப் பற்றி நெடுநல்வாடை விளக்குகிறது.[45] 'கலம் செய் மாக்கள்'' என்று குயவர்கள் குறிப்பிடப்படுகின்றனர். பசுமையான மண்ணாலான கலங்களைச் சுடும் பொழுது அச் சூளையில் எழும் புகையானது, விளங்கும் மலை மறையுமாறு வெண்மையான மேகம் அதைச் சூழ்ந்து எழுவதற்கு உவமிக்கப் பட்டுள்ளது.[46]

ஆடைகளைச் சலவை செய்யும் வண்ணார் தொழில் அன்று சிறப்புற்றிருந்தது. அதிலும் மகளிரே திறமை சான்றவராய்த் திகழ்ந்தனர். உடைகளைக் கஞ்சிப் பசையிலே தோய்த்து, எடுப்பாக இருக்குமாறு சலவை செய்து அளிக்கும் திறன் அவர்கள்பாற் காணப்பட்டது.[47] மேலும் நூல் நூற்றலும் நெசவுத் தொழிலும் மிக ஓங்கி உயர்ந்து காணப்பட்டன.

**வணிகம்**

உள்நாட்டு வாணிகத்திலும் வெளிநாட்டு வாணிகத்திலும் பழம் தமிழர்கள் தன்னிகரின்றித் திகழ்ந்தனர். ஒரு நாட்டின் நல்வாழ்விற்கு உழவும் வணிகமுமே தலைசிறந்தன என்பர். மதுரைக் காஞ்சியில், 'இருவகையான் இசை சான்ற[48] என்று வருமிடத்தில் நச்சினார்க்கினியர் விளக்கம் எழுதும் பொழுது 'உலகத்துத் தொழில்களில் மேலாகச் சொல்லும் உழவு, வணிகம்

என்கின்ற இரண்டு கூற்றாலே அகலம் பொருந்ததலையுடைய சீரிய செல்வத்தாலே புகழ் நிறைந்த குடிமக்கள் பொருந்தின. நான்கு நிலத்து வாழ்வாருடன்'... என்று குறிப்பிடுகிறார்.

மேலே நாடுகளோடு - சிறப்பாக உரோமாபுரியோடு - தமிழர் செய்த வாணிகத்திற்குப் பல பழைய சான்றுகள் உள. தமிழ்நாட்டிற் சிறந்திருந்த பொன்னும் முத்தும் மிளகும் துணிவகைகளும் பிற நாட்டினரின் மனத்தைக் கவர்ந்தன. யவனர்களின் களங்கள் பொன்னைக் கொண்டுவந்து கொடுத்து விட்டு மிளகுடன் திரும்பிச் செல்லும் என்ற அகநானூற்றுப் பாடல் தமிழர்களின் ஏற்றத்தை எடுத்தியம்புகிறது.[49] நெடிய கொடியானது பாய்மரத்தின் மேலே ஆடும்படியான இயல்பினை உடைய கலன்கள் விலைமிக்க சிறந்த பண்டங்களை நாட்டிலுள் ளார் நன்கு நுகர்தற்கெனக் கொண்டு வந்தன.[50] துறைமுகங்களில் மேலைநாட்டுக் குதிரைகளும் வடநாட்டுப் பொருள்களும் மரக்கலங்களில் வந்து இறங்கின.[51]

காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரை பெரிய ஏற்றுமதி இறக்குமதி வணிக நிலையமாய்த் திகழ்ந்தமையைப் பட்டினப் பாலையால் அறியலாம்.

### தெய்வங்களும் வழிபாட்டு முறைகளும்

நில அடிப்படையிலே எழுந்த தெய்வ வணக்க முறையைத் தொல்காப்பியனார் சுட்டுகிறார்.[52] சங்க காலத்தின் பிற்பகுதி யிலும் பிற்காலத்திலும் இத்தெய்வங்கள் ஆரிய தெய்வங்களோடு தொடர்புபடுத்தப்பட்டுத் தமக்குரிய சிறப்புத்தன்மையை இழக்கத் தொடங்கின. முருகனுடைய வழிபாடு ஒன்றே இன்றளவும் பெருமையுடனும், தமிழர்களுடைய தனித் தன்மை யுடனும் ஓங்கி நிற்கிறது. எனினும் பிற்காலத்தே கந்தனுடன் ஒப்பிட்டு முருக வழிபாட்டு வண்ணமாறுபாடு காக்கப் படுவதாயிற்று.

'நடுகல்' முறைதான் தமிழர்களின் உருவ வழிபாட்டு முறைக்கு அடித்தளம் வகுத்தது எனலாம். கண்ணகியின் திருக்கோயில் உருவானதற்கும், இடைக்காலச் சோழர், பாண்டிய, பல்லவர் காலத்தின் திருக்கோயில்கள் பல தென்னாட்டுக் கலைத் திறனை வானுற ஓங்கச் செய்தற்கும் இந்நடுகல் முறையே காரணம் எனலாம். ஆரியர்களுடைய பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் பல சங்கப் பிற்காலத்தே தமிழர்களிடையே கலப்பனவாயின. எனினும் தமிழகத்தில் இன்று காணப்படும் பல

வழிபாட்டு முறைகள், சமயக் கோட்பாடுகள், சடங்குகள் போல்வன முற்றிலும் தமிழர்களுடையனவே என்பதை உணர்த்துகின்றன. காட்டாகத் 'தீபாவளி' என்ற விழாவை எடுத்துக் கொள்வோம். விளக்கு வரிசையைச் சுட்டும் இத் திருவிழாவைப் பற்றி அகநானூறு குறிப்பிடுகிறது.[53] கார்த்திகை மாதத்தில் இவ்விழா கொண்டாடப்படும். ஆனால் வட இந்தியர் இதே விழாவைச் சிறிது முன்னதாகவே ஐப்பசியிலே கொண்டாடி விடுகின்றனர். மாதக் கணக்கு முறைப்படி இக்கார்த்திகை என்பது அவர்கட்கு முன்பே வந்து விடுகிறது. ஆனால் தமிழர்கள், தாம் கார்த்திகையில் கொண்டாடிய 'தீபாவளி' இருக்கவும், அதைப் பார்த்துக் கொண்டாடிய வடநாட்டவரது விழாவினை - அவர்கள் கற்பித்துக் கூறிய புராண இதிகாசக் கருத்துக்களுடனே கூட - தாமும் கொண்டாடலாயினர். இதனால் தமிழர்கட்கு இரண்டு தீபாவளி (விளக்கு வரிசை - தீப + ஆவளி) ஆயிற்று. முதல் தீபாவளி காலப்போக்கில் விளக்கு வரிசையில்லாத - ஆனால் மத்தாப்பு கொளுத்துகிற விழாவாகி விட்டது. முருகனோடு தொடர்பு படுத்தத் தொடங்கிய விழா, திருமாலோடு தொடர்பு டயதாகி விட்டது. இதனைத் திருவல்லிக்கேணி என்ற தமிழ்ப் பெயரை ஆங்கிலத்தில் (Triplicane) என எழுதிவிட, அதைப் பார்த்துத் தமிழன் 'திருப்ளிகேன்' என்று தமிழிலும் திருப்பி எழுதுகிறானே அதற்கு ஒப்பிடலாம்.

எங்ஙனமாயினும் தமிழர்தம் நாகரிகமும் பண்பாடும் மிக மிக உயர்வு உடையன. அதன் பிழிவாக இன்று இலங்குவது திருக்குறள் ஆகும். வேறு எச்சான்றுகள் இல்லையாயினும், 'திருக்குறள்' நூல் ஒன்றே தமிழர்தம் பெருமையைப் பறைசாற்ற போதிய சான்றாகும். ''நல்ல அறவழி என்று கருதப்படினும் பிறர்பால் யாசித்தல் குற்றமே; மேலுலகமே கிடையாது, (எனவே பிறர்க்கு ஈவதால் பயன் இல்லை என்பார் உளராயினும்) என்றாலும் பிறர்க்குக் கொடுப்பதே சிறப்புடையது'', என்ற திருக்குறளும்; 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற திருக்குறளும் தமிழர்தம் தனி நாகரிகத்தை என்றென்றும் பறைசாற்றுவனவாகும்.

''யாதும் ஊரே யாவரும் கேளிர்''

### குறிப்புகள்

1. 'மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்
   பால்தர வந்த பழவிறல் தாயம்' புறம் - 76.
2. பட்டின, வரி 222-27.

3. புறம்-45.

4. புறம்-5,42,186.

5. புறம்-18.

6. புறம்-72.

7. திருக்குறள். அதி.64,69.

8 & 9. பெரும்பாண்.வரி 447.

10. புறம்-2.

11. பதிற்று.15.

12. மதுரை வரி 768-780, பதிற்.90.

13. மதுரை வரி 499.

14. மதுரை வரி 510, 775.

15. 'கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்.
பொறிகண் டழிக்கும் ஆவண மாக்களின் அகம்.77 .

16. புறம்-35

17. புறம்-35, பெரும்பாண். 443-44

18. மதுரை. வரி 492

19. பொருநர். வரி 188.

20. புறம்-224.

21. புறம்-266.

22. புறம் 39,58.

23. புறம்-71.

24. மதுரை வரி 480-90.

25. மதுரை 218.

26. தொல்.

27. மலைபடு. வரி 203-10.

28. குறு 95,108,355.

29. புறம்-390.

30. அகம்-274.

31. நெடுநல் வரி3.

32. குறிஞ்சி வரி 221-22.

33. புறம்-60.

34. பெரும்பா வரி 206-46, மதுரை வரி 246-70, மலைபடு. வரி 100-185.

35. பெரும்பா வரி 262.

36. பொருநர் 21,22.

37. பொருநர் 159-162 மலைபடு 569-570.

38. மதுரை 327.
39. மதுரை 732-733.
40. குறுந்.375.
41. புறம்-152.
42. புறம்-390.
43. குறிஞ்சி 221-222 நற். 113 ஐங். 215.
44. பெரும்பாண் 436-440
45. நெடுநல்.80-86.
46. அகம். 308.
47. புறம். 311 நற். 90 குறிஞ்.330 அகம்.34.
48. மதுரை 121.
49. அகம். 149.
50. மதுரை. 31-33.
51. மதுரை. 321-323.
52. தொல். பொருள். 5.
53. அகம். 11, 141, 185.

இரா. குளோறியா சுந்தரமதி
கேரளப் பல்கலைக்கழகம்
திருவனந்தபுரம்

# முல்லைத்திணைப் புலவர் மூவர் - ஓர் ஆய்வு

சங்கக் கவிதை ஒன்றைப் பிற்காலக் கவிதைகளினின்று பிரித்து உணர்வது எளிது. ஆயின் சங்கக் கவிதைகள் சிலவற்றை எடுத்து இவை இவை இன்னஇன்ன கவிஞர்களால் பாடப் பட்டிருத்தல் கூடும் என அறுதியிட்டு உரைக்க இயலுமா? நுணுகிக் கற்கும் மாணவன், கவிஞனது கவிதைப் பாங்கினை உய்த்து உணரும் திறன் பெற்றிருக்கலாம். இவ்வாறு உய்த்து உணர்ந்தவற்றைப் பிறர் உணர்ந்து கொள்ளுமாறு விளக்க இயலுமாயின் கவிஞனது கவிதைப் பாங்கினைத் தர இயலும். ஒவ்வொரு கவிஞனது கவிதைப் பாங்கும் மரபுக் கூறுகளையும் சிறப்புக் கூறுகளையும் கொண்டது. கவிஞனுக்குரிய சிறப்புக் கூறுகளைப் பிரித்து உணரும்போது கவிஞனை இனம் கண்டுகொள்ளும் திறன் பெறலாம்.

இத்தகைய ஆய்வு புதிதன்று. திணை (பாலை பாடிய பெருங் கடுங்கோ, மருதம் பாடிய இளங்கடுங்கோ) துறை (மடல்பாடிய மாதங்கீரனார், வெறிபாடிய காமக்கண்ணியார்), பயின்றுவரும் அல்லது தனிச்சிறப்புடைய உவமை (ஊட்டியார், செம்புலப் பெயனீரார்) ஆகியவற்றோடு கவிஞர்களை இணைத்துப் பேசும் மரபு நமக்குண்டு. இம்மரபு, கவிஞனது கவிதைப் பாங்கில் அமைந்த சிறப்புக் கூறுகளை ஆய்ந்துணர்ந்த அறிவின் பயனாக விளைந்தது. சங்க இலக்கியப் பதிப்புக்களிலும்[1] சங்க இலக்கிய ஆய்வுகளிலும்[2] இத்தகு ஆய்வுக்கு இடமளிக்கப் பெற்றுள்ளது.

இந்நிலையில் புலவர்களை ஆயுங்கால் ஒப்பு ஆய்வு பயன் மிக்கது. ஒப்பு ஆய்வுக்காகத் தேர்ந்து கொள்ளும் கவிஞர்கள் ஒரே இலக்கியப் பரம்பரையைச் சார்ந்தவர்களாகவும் ஒத்த இலக்கிய வகையில் ஓரளவு ஒத்த பொருள் பற்றி ஆக்கியவர்களாகவும் அமைவது சாலச் சிறந்தது.[3]

இக்கட்டுரைப் பொருளாகச் சங்க இலக்கியத்தைச் சார்ந்த மூன்று முல்லைத்திணைப் புலவர்கள் கொள்ளப் பெற்றுள்ளனர். சங்க இலக்கியத்தில் முல்லைத்திணைப் பாடல்கள் புனைந்தவர் களில் குறிப்பிடத்தக்கவர்,[4] அறுவர். அவர்கள், ஐங்குறுநூற்றில் முல்லைத்திணை பாடிய பேயனார், முல்லைக்கலி பாடிய நல்லுருத்திரன், முல்லைப்பாட்டை யாத்த நப்பூதனார், மற்றும் இடைக்காடனார், ஒக்கூர் மாசாத்தியார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார். இவர்களில் விரிவஞ்சி பேயனாரும் நல்லுருத்திரனும் விடப்பட்டனர். ஒரே நெடும்பாடல் பாடிய நப்பூதனாரை விடுத்து, இடைக்காடனார், மாசாத்தியார், மள்ளனார், என்ற மூவரையும் ஒப்பு ஆய்வுக்காகத் தேர்ந்துள் ளேன். இவர்களது முல்லைப்பாடல்கள் ஆய்வுக்களனாக அமைகின்றன.

*மூவர் பாடல்களில் திணை அமைதி*

| புலவர் | மொத்தப் பாடல்கள் | முல்லை | அகம் குறி | பாலை | மரு. | புறம் பாடாண் | வாகை |
|---|---|---|---|---|---|---|---|
| இடைக்காடனார் | 10 | 9* | .. | .. | .. | .. | 1 |
| மாசாத்தியார் | 8 | 6 | .. | .. | 1 | .. | 1 |
| மள்ளனார் | 13 | 7 | 2 | 3 | .. | 1 | .. |

*மூவர் முல்லைப் பாடல்களில் கூற்று*

| புலவர் | மொத்த முல்லைப் பாடல்கள் | தலைவன் | தலைவி | தோழி | உழையர் |
|---|---|---|---|---|---|
| இடைக்காடனார் | 9 | 5 | 2 | 2 | .. |
| மாசாத்தியார் | 6 | .. | 3 | 1 | 2 |
| மள்ளனார் | 7 | 5 | 1 | 1 | .. |

பொதுவாகச் சங்கப் பாடல்களில் காலம், நிலம், இவை களனாகத் தலைவி தலைவன், தோழி என்றின்ன அகப் பாத்திரங்கள் வாயிலாக அகவுணர்வு வெளியிடப்படுகிறது. தொல்காப்பியர் அகப்பாடல்களுக்கு முதல், கரு, உரி என முப்பொருட் கூறுகளை அமைத்தார். அவற்றை ஒட்டிக் களன் (1) பாத்திரங்கள் (2) உணர்வு வெளியீடு (3) என்ற முக்கூறுகளை அமைக்கலாம். தொல் காப்பியர் வகுத்த முதற் கருப்பொருட்களே களனாக அமையும். அகப்பாடல் மாந்தர்களையும் 'மக்கள்' எனக்

கருப் பொருளினுட்படுத்திப் பேசுவது தொல்காப்பிய மரபு. இவ் வாய்வுக் கட்டுரையில் அகமாந்தர்கள், 'பாத்திரங்கள்' எனப் பிரித்துக் கொள்ளப் பெறுகின்றனர். 'உணர்வு வெளியீடு' உரிப்பொருளோடு தொடர்புடையது. இம்மூன்று கூறுகளும் திணைக் கேற்ப அமையும். இவற்றை ஆய்வுக் கோள்களாகக் கொண்டு ஒவ்வொருவர் கவிதைகளிலும் இவை அமைக்கப் பெற்ற பாங்கைக் காண்பது சாலும்.

களன் : முல்லைப் பாடல்களில் காரும் மாலையும் முல்லைப் புலமும் அவற்றைச் சார்ந்த பொருட்களும் களனாக அமையும்.

காலம் : கார்காலத்தைப் புலப்படுத்துவது மழை. முல்லைப் பாடல்களில் மழை பற்றிய குறிப்பு இன்றியமையாதது. இது முல்லைப்பாடல்களில் இரு நிலைகளில் தரப் பெறலாம். மழை பொழிதலை விளக்குதல் (Description) ஒருநிலை (1)

'இரு விசும் பிவர்ந்த கருவி மாமழை
நீர் செறி நுங்கின் கண் சிதர்ந்தவை போல்
சூர் பனிப்பன்ன தண் வரல் ஆலியோடு
பரூஉப் பெயல் அழிதுளி தலைஇ வான் நவின்று
குரூஉத்துளி பொழிந்த' அகம் 304:1-5

இவ்வாறு மழைப் பொழிவின் பல்வேறு படிகளை (அ்.து-) இவர்ந்து, இருண்டு, முழங்கி, மின்னிப் பொழிதலை விளக்கும் பாங்கினை இடைக்காடனாரிடம் காண்கிறோம். இவரது இரு பாடல்களைத் தவிர (அகம் 194, 284) ஏனையவற்றில் மழைப் பொழிவு விளக்கப் பெறுகிறது. இப்பாடல்களில் 3-10 அடிகள் வரை இவ்விளக்கம் விரியக் காண்கிறோம். இக்கவிஞரது பாடல் களைக் கற்கும்போது மழை பொழிதலைக் காண்பது போன்றும் துளியில் நனைவது போன்றும் உணர்கிறோம்.

மற்றிரு கவிஞர்களிடமோ இந்நிலை அருகியும் சுருங்கியும் அமைகிறது. ஓரிரு பாடல்களில் மழை விளக்கத்தின் ஒரு பகுதி யாகிய மழை முழுக்கு மட்டும் பேசப்படுகிறது.[5] மாசாத்தியார் உவமைவாயிலாக அருவிப்பரப்பில் விழும் மழைத்துளியையும் மள்ளனார் கரிய மேகத்தையும் காட்டும் இடங்களும்[6] சிறு விளக்கங்களே. ஏனைய இடங்களில் மழையைச் சுட்டுதல் (Statement) ஆகிய இரண்டாம் நிலையே (2) இவர்களுக்குரியது எனலாம். கார் காலக் கவினுக்கு மூன் காரணமாக மழையைக் குறிப்பிடுதல் மூவர் பாடல்களிலும் அமைந்துள்ள பொதுக் கூறு.

மழை விளக்கத்தின் பின்தங்கும் மாசாத்தியாரும் மள்ளனாரும் சிறு பொழுதாகிய மாலை விளக்கத்திற்கு முதன்மை அளித்துள்ளனர். முல்லை மலர்தலும் நிரை பெயர்தலும் இருவ ராலும் மாலை வரவின் அறிகுறியாகக் காட்டப் பெறுகின்றன. மள்ளனார் இவற்றுடன் வாவல் பகலுறையும் மரம் விட்டுப் பெயர்தல் (அகம்.244) கதிரவன் மறைதல் (நற்.321) ஆகிய காட்சி களையும் தருகிறார். மாலைக்காட்சிகளைத் தருவதுடன் அமையாது மாலை என்ற சொல்லைப் பெய்துரைத்தல் மாசாத்தியார் பாங்கு.

ஆயின் கார் மழையைக் காட்டிய இடைக்காடனார் கார்மலையைக் காட்டாதது குறிப்பிடத்தக்கது. மழை பெய்யும் யாமமும் மழை நீங்கிய வைகறையுமே இவரது பாடல்களில் இடம்பெறுகின்றன.

*நிலம்*

மூவராலும் காட்டப்பெறுவது கார் கவின் செய்த முல்லைப் புலமே. நீர் பெற்ற நிலமே மழையின் முதற் பயன். அதனைக் காட்டும் மூவரது நோக்கிற்கும் இடையே வேறுபாடு அமைந் துள்ளது. விலங்குகள் பருகுதற்குரிய நீர் நிறைந்த நிலத்தைக் காட்டுவார் இடைக்காடனார், தேர் வருதற்குரிய ஈர்மணற் பாதையையும் தேர் வருதலால் சேறுதெறிக்கும் நிலப்பரப்பையும் காட்டுவார் மாசாத்தியார். தன்மணற் பரப்பைச் செடிகள் தழைத்துப் படருதற்கேற்ற களனாக மட்டும் சுட்டுவார் மள்ளனார்.

மழையால் தழைத்த செடியினங்கள், மகிழும் விலங்கி னங்கள் ஆகிய கருப்பொருட்களை விளக்குவதில் இடைக் காடனார் முன்னிற்கிறார். விலங்கினங்களை விளக்கும்போது அவற்றின் செயல்களை அடுக்கிக் கூறுவது இவரது பாங்கு. இவர் தம் பாடலில் விளக்கும் காட்சிகள், அடிப்படை வடிவம் (Pattern) ஒன்றை உட்கொண்டு அமைகின்றன. அவ்வடிவம் ஐந்து கூறுகளைக் கொண்டது. விலங்கு (1) நீர் அருந்தி (2) உணவு உண்டு (3) செடி நிழலில் (4) இளைப்பாறுதல் அல்லது மறைதல் (5) நீண்ட விளக்கங்கள் இவ்வைந்து கூறுகளையும் பெற்றிருக்கும். விளக்கம் சுருங்கும்போது 2, 3 என்ற இரு கூறுகளில் ஒன்று இன்றியோ இரண்டும் இன்றியோ அமையும். இவ்வடிவம் பொதுவாகக் காலைக்காட்சிகளில் வரும். யாமக்காட்சியைத்தரும் பாடல் களில்[7] வரும் இடையனின் விளக்கமும் ஒத்த நிலையுடையது.

இத்தகு வடிவங்கள் மற்றிருவர் பாடல்களில் இடம் பெறவில்லை; மாலைக் காட்சியை அளித்த முல்லை மலர்ச்சியே நிலக்காட்சியையும் அளிக்கிறது. பொதுவாக இவர்களது பாடல் களில் கருப்பொருளை விளக்குதல் அருகியும் சுட்டுதல் மிகுந்தும் அமைகின்றன.

இதுகாறும் கூறியவற்றால் இடைக்காடனார் களன் அமைப்பிற்கு ஏனைய இருவரிலும் முதன்மை கொடுத்துள்ளார் என்பதும் களனை அமைப்பதில் அவருக்கெனத் தனிப் பாங்கு அமைந்துள்ளது என்பதும் புலப்படும். களனமைப்பிற்கு முதன்மை அளிக்காத நிலையில் மற்றிருவரும் ஒத்துள்ளனர். ஆயின் கருப்பொருட் தேர்ச்சியில் வேறுபடும் இவர்களில் மள்ளனார் பாசறை விளக்கத்தால் தனித்து நிற்கிறார்.

*பாத்திரங்கள்*

பாத்திரங்களை விளக்குவதில் மள்ளனார் தேர்ச்சி பெற்றவர். தலைவியை விளக்கும் போது மற்றிரு புலவர்களிடமும் அமையாத தனிப்பாங்கு இவரிடம் அமையக் காண்கிறோம். தலைவியின் உறுப்புக்களைப் புனைவதிலும் அவளது பண்பு நலனைத் தருவதிலும் மற்றிரு புலவர்களோடு ஒத்தவராக அமைந்தாலும் தலைவியின் உள உணர்வுகளை, அவளது உறுப்புக்களின் வேறுபாட்டால் நுட்பமாக உணர்த்திவிடும் பாங்கு இவருக்குரியது. மேலும் பல பாடல்களில்[8] பிரிந்த தலைவியின் வாட்டத்தையும் இணைந்த அவளது மகிழ்வையும் முரண்படுத்திக் காட்டும் நயம் சிறப்புடைத்து.

தலைவனைப் பற்றிய இரு செய்திகள் மூவர்பாடல்களுக்கும் பொதுவானவை. (1) அவன் போர் வினை முடித்தமை (2) அவன் வருகை. மள்ளனார் இவற்றைத் தருவதோடு அமையாது போர் வினைமுற்றியமையின் விளைவாகத் தலைவன் பெற்ற சிறப்புக்களையும் குறிப்பிடுகிறார்.

*பிற பாத்திரங்கள்*

தலைவன் பாகனுக்குரைக்கும் துறையில் மள்ளனாரும் இடைக்காடனாரும் இருபாடல்கள் தந்துள்ளனர். மள்ளனார் பாகனுக்கு உரைக்கும் நிலையில் ஆறு அடிகளைச் செலவிட்டுள் ளார். இடைக்காடனார் ஒரே அடியுடன் அமைகிறார். பாகன், பாணன், தோழி என்ற துணைப்பாத்திரங்களுக்கு ஏனையவரிலும் மள்ளனாரே அதிக இடமளித்துள்ளார்.

**உணர்வு வெளியீடு**

களன் அமைப்பிலும் பாத்திர விளக்கத்திலும் கவிஞர்களிடையே வேறுபாடு அமைந்தது போன்று அக உணர்வை வெளியிடுவதிலும் வேறுபட்ட பாங்கு அமையக் காண்கிறோம்.

களன் அமைப்பிற்கு முதன்மை கொடுக்கும் இடைக்காடனாரின் பாடல்களில் 80% அடிகளும் இதற்கெனவே அமைந்து விடுகின்றன. உணர்வு வெளியீட்டிற்குச் செலவிடும் அடிகள் மிகச் சில. மேலோட்டமாகக் கற்கும்போது உணர்வு வெளியிடப்பெறாதது போலவே தோன்றும். ஆயின் உணர்வு வெளியீட்டிற்கு இடைக்காடனாருக்கு உரிய உத்தி ஒன்று உளது. பாடல்களில் வெளிப்படையாகத் தராத உணர்வுகளை உள்ளுறை மூலமாகவும் குறிப்பிலும் அமைத்து விடுகிறார். இவரது பாடல்களின் அடைகளை நீக்கி, அடிப்படைச் சொல்லமைப்பைத் தருவதானால் அவை பெரும்பாலும் 'அரிவை ஊர் புறவினது', 'அவர் வருதும் என்ற கார் மன்' என அமையும். தலை மாந்தர்கள் உணர்வை நேரடியாக வெளியிடும் இடங்கள் அருகியவை. ஆயின் களவருணனையில், பிணையொடு விலங்கினம் உண்டு உறங்கும் காட்சி[9] தலைவன் தலைவியின் உணர்வை உள்ளுறை வழியாகவும், பெயலால் நனையும் தனிநிலை இடையனின் காட்சி[10] தலைவனின் உணர்வைக் குறிப்பாகவும் வெளியிடக் காண்கிறோம்.

ஒக்கூர் மாசாத்தியார் பாடிய முல்லைப்பாடல்கள் ஆறு. இவற்றில் மூன்று பாடல்களில்[11] முல்லை மலரை எயிறாக உருவகப்படுத்துகிறார். கார் எனும் நங்கை இலங்கு எயிறு காட்டித் தலைவியை எள்ளி நகுவதாக ஒரு பாடலில் தான் வெளிப் படையாகப் பேசுகிறார் எனினும் மாசாத்தியாரது உள்ளத்தில் இக்கருத்து படிந்திருந்தமையாலேயே முல்லையை நகைக்கும் எயிறாகக் காணும் பாங்கு அமைகிறது எனக் கொள்ளலாம். தேர் வருகையைப் பாடற் பொருளாக வடிக்கும் பாங்கையும்[12] இவரிடம் காண்கிறோம்.

மள்ளனார் அக உணர்வுகளைப் பாத்திரங்கள் வாயிலாக வெளியிடும் பாங்குடையவர் என்பதை முன்னர்க் கண்டோம். இயற்யோடு உணர்வை ஒட்டிப் பேசும் பங்கும் இவரிடம் அமைந்துள்ளது.

முல்லை மலர்தலாகிய களக்காட்சியை மள்ளனார் மற்றொரு நிலையில் உணர்வு வெளியீட்டிற்குப்

பயன்படுத்துகிறார். இது ஒரு பாடலில் வெளிப்படையாகவும் பிற பாடல்களில் இலை மறை காயாகவும் அமைகிறது.

'தண் கார்க்கின்ற பைங்கொடி முல்லை
வைவாய் வான் முகை அவிழ்ந்தகோதை
பெய்வனப் பிழந்த கதுப்பும் உள்ளார்' அகம்.144:3-5

முல்லை மலரைச் சூடி மகிழுமாறு தலைவன் அருகில் இல்லையே என்பது தலைவியின் ஏக்கம். இந்த உணர்வின் எதிரொலியை மணமகள் கதுப்பென மணக்கும் முல்லையைக் காட்டுதலாலும்[13] முல்லை சூடிய பார்ப்பன மகளைக் காட்டுதலாலும்[14] உணரலாம். தலைவன் வரவால் மகிழும் தலைவியை

'வேலி சுற்றிய வால் வீமுல்லை
பெருந்தார் கமழும் விருந்தொலிகதுப்பு'

வாய்ந்தவளாகக் காட்டுவது இக்கருத்தை மேலும் அரண்செய்யும்.

## முடிவு

களக்காட்சிக்கு முதன்மை கொடுத்து உணர்வுகளைக் குறிப்பாகத் தருதல் இடைக்காடனார் பாங்கு. பாத்திர விளக்கத்திற்கு முதன்மை கொடுத்து உணர்வுகளையும் அதில் ஏற்றிப் பேசுதல் மள்ளனார் பாங்கு. முல்லை மலரால் காலத்தையும் நிலத்தையும் காட்டித் தலைவியின் உள உணர்வையும் அக்கார் மலராலேயே விளக்கி முல்லை மலர்ப் புலவராக அமைகிறார் மாசாத்தியார்.[15]

## குறிப்புகள்

1. பாடியோர் வரலாறு
2. அகத்திணைப் புலவர்கள் - தமிழ்க்காதல் டாக்டர் வ.சுப. மாணிக்கம்
3. (a) Theory of Literature - Rene Wellek and Austin Warren Third Edition Published in Peregine Books 1963, Page 181.
   (b) An Introduction to the Study of Literature - William Henry Hudson, First Indian Edition page 21.
4. ஐந்து பாடல்களுக்குக் குறையாமலும், பாடிய மொத்தப்பாடல்களில் இவை 50%க்கு மேலாகவும் அமைதல் வேண்டும்.
   ★ இடைக்காடனாரின் அகம் 139, நற் 316 என்ற இரு பாடல்களும் பாலைப் பாடல்களாகவே சங்க நூல்களில் தரப்பெறுகின்றன. முல்லைப் பாடல்களாகக் கொள்ள இடன் இருப்பதால் அவை இங்குக் கொள்ளப்பெற்றுள்ளன.
5. குறுந்.186;1; அகம் 144:12; 174:8; 314:2

6. அகம்.324;7; 314:1.
7. அகம் 274; நற்.142.
8. அகம் 144; 174; 314.
9. அகம். 139, 284, 304.
10. அகம் 274; நற்.142.
11. ஒக்கூர் மாசாத்தியார்.
12. அகம் 324, 384; குறுந்.275.
13. அகம் 244.
14. நற். 321.
15. இக்கட்டுரைக்குச் சங்க இலக்கியம் - பாட்டும் தொகையும் - பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை, பாரிநிலையம், சென்னை. இரண்டாம் பதிப்பு 1967 பயன்பட்டுள்ளது.

*எம்.எஸ். கேசவன்*
*என்.ஜி.எம் கல்லூரி*
*பொள்ளாச்சி*

# நாடகத் தொடக்கம்

இலக்கிய உலகம் முழுவதும் நாடகத்தி லிருந்துதான் பிறந்தது என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. நாடகம் என்பது என்ன? வாழ்க்கை நிகழ்ச்சிகளை மாந்தர்களின் குணங்களுக்கு ஏற்ப ஒன்பான் சுவைகளுடன் சித்திரித்துக் காட்டுவது தானே. இஃது எவ்வாறு தொடங்கியது? மனிதனுடைய விளையாட்டுப் பருவத்திலிருந்தே இது தொடங்கியது. விலங்குகள் கூடப் பசிதீர்ந்த பிறகு விளையாடி இன்புறுகின்றன. சிறுவர் சிறுமியரே விளையாட்டில் மூழ்கிப் பசி தாகங்களையே மறந்து போகிறார்கள். இவர்கள் விளையாட்டும் எப்படி அமைகிறது? பெரியவர்கள் செய்யும் காரியங்களையே இவர்களும் செய்து' மகிழ்கிறார்கள். அவர்கள் செய்வது பாவனையே ஆனாலும் அந்த நேரத்திற்கு அவர்களுக்கு அஃது உண்மையாகவே தோன்றுகிறது. மறைமலையடிகளாரும் இதனை வற்புறுத்தியுள்ளார்.[1]

''ஆங்கில நாடக வளர்ச்சி'' என்னும் தனது நாடக வரலாற்று ஆராய்ச்சி நூலில் (British Drama An Historical Survey) அல்லார் தைஸ் நிகோல் (Allardyce Nicoll) என்னும் ஆசிரியர் கீழ்வருமாறு கூறுகிறார்.

''ஒருவரைப்போல் நடிக்கும் இயல் பூக்கம் (Mimetic instinct) எந்த ஒரு தனி நாட்டு மக்களுக்கும் உரியதன்று. உலகம் முழுவதற்குமே அந்த உணர்ச்சி உண்டு. ஆதி மனிதனின் ஆரம்ப உணர்ச்சிகளுள் இதுவும் ஒன்று''[2].

மனிதனுடைய எண்ணம் உணர்ச்சியாக வெளிப்பட்டுச் செயலாக உருவெடுக்கிறது. இவ்வுணர்ச்சிகள் மனிதனுடைய உடலுறுப்புக்களின் அசைவுகள் வாயிலாகவும் மெய்ம்மயிர் பொடித்தல் கண்ணீர் அரும்பல் முதலிய செயல்களின் வாயிலாகவும் வெளிப்படுகின்றன. மெய்யின் கண் நிகழும்

இவ்வுணர்ச்சி வெளிப்பாடுகளையே மெய்ப்பாடுகள் என்பர். உள்ளத்தில் உதிக்கும் எண்ணத்தை அப்படியே மெய்யில் புலப் படுத்தலின் இவற்றைப் பொருட்பாடு என்றும் கூறுவர்.

மெய்ப்பாடுகளாகப் புலப்படும் இவ்வுணர்ச்சிகளையே ஒன்பான் சுவைகள் அல்லது நவரசங்கள் என்கிறோம். நவரசங்கள் புலப்படுத்தப்படும் இடம் நாடக மேடை அன்றோ? இவற்றில் சமநிலை என்னும் சாந்தம் ஒன்றொழித்து எண்வகைச் சுவை களையே இலக்கியத்திற்கு உரியவை என்பர் தொல்காப்பியர்.

இவ்விலக்கியம் எங்கிருந்து தோன்றுகிறது? இதற்கு விடை காண்பதில்தான் தமிழ் இலக்கிய மரபின் சிறப்பே அடங்கி யிருக்கிறது.

தமிழ் இலக்கிய மரபை நம் முன்னோர் புலனெறி வழக்கு என்பர். இவ் வழக்கு எங்கிருந்து தோன்றியது? பண்ணை எனப்படும் இன்ப விளையாட்டிலிருந்து இது தோன்றியது.

> ''பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்
> கண்ணிய புறனே நானான்கு என்ப'' - (தொல் - பொருள்)

என்பது தொல்காப்பியர் வகுக்கும் பொருளதிகார மெய் பாட்டியல் முதற் சூத்திரம். பண்ணை என்னும் சொல்லுக்குத் தொல்காப்பிய உரையாசிரியர் பேராசிரியர் கூறும் விளக்கம் கீழ்வருமாறு:

''முடியுடை வேந்தரும் குறுநில மன்னரும் முதலாயினோர் நாடக மகளிர் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் காமம் நுகரும் இன்ப விளையாட்டு''

பண்ணை என்பது விளையாட்டையே குறிக்கும் என்பதற்குக் ''கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு'' என்னும் தொல்காப்பியச் சூத்திரமே[3] சான்று. பண்ணை என்பது அலங்கரித்தல் பண்படுத்தல் என்னும் பொருளையும் உணர்த்தும், ஐ என்பது செயப்படுபொருள் உணர்த்தும் விகுதி. பண்ணப்படுவது பண்ணை என்பதாம். சிறுவர், சிறப்பாகச் சிறுமியர் விளையாட்டு, பெரியோரால் அறிவுத் திறத்துடன் இசைவு பெறப் பண்படுத்தப் பெறின் பண்ணை ஆகும்.

இவ்வாறு பண்ணையில் தோன்றுவனவே முப்பத்திரண்டும் பதினாறுமாக வகைப்படுத்தப்படும் எண்வகை மெய்ப்பாடு களும் என்க. மெய்ப்பாடுகளைப் புலப்படுத்தும் இடம் நாடகம். அந்நாடகம் தொன்றுமிடம் பண்ணை என்னும் விளையாட்டு.

தமிழ் இலக்கியமோ இப்பண்ணையிலிருந்து தோன்றும். மெய்ப்பாடுகளைப் புலப்படுத்துகிறது. இது தொல் காப்பியம் காட்டும் விளக்கம். இப்படி நாடகத்தையும் இலக்கியத்தையும் இயைத்துப் பேசக் காரணம் என்ன?

நாடகத்திலிருந்தே தமிழ் இலக்கியம் தோன்றி வளம் பெற்றிருப்பதே அதற்குக் காரணம் ஆகும். 'இலக்கியம் என்பது வாழ்க்கையின் விளக்கம்' என்பதை அறிந்தவர் நம் முன்னோர். உலகியலைப் புறக்கணித்து எழும் இலக்கியம் வாழ்க்கை விளக்கமாக அமையாது. ஆதலின் இலக்கிய அமைப்புக்கு உலகியலையும் 'உலக வழக்கு' என்று தழுவிக் கொண்டனர். ஆனால் அதனை வடிவமைப்பது எப்படி.

நாடகக் கலையே தமிழ் இலக்கிய வடிவமைப்புக்குக் காரணம் என்பது குறிப்பிடத்தக்க அரிய உண்மையாகும். அவ்வடிப்படையில் தமிழ் இலக்கியம் மலர்ந்திருப்பதைக் கண்டுதான் தொல்காப்பியர்.

''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலன் நெறி வழக்கம்'

தொல் அகத்திணையியல் - 51 (பொருள்)

என்று இலக்கணம் வகுப்பார் ஆயினார்.

நாடக வழக்கே இலக்கியம் வடிவம் பெறுவதற்கு அடிப்படை என்று மேற்குறிப்பிட்ட அல்லார் தைஸ்நிகோல் கூறுகிறார். அது வருமாறு:

"The fact that the passion for the drama is thus Universal necessitates a further intoductory remark. It makes the theatre one of the most traditional and at the same time most subtle symobolic of all literary media"

-- (Ilid. Page 14)[4]

எல்லா நுண்கலைகளுமே (Fine Arts) அசலுக்கு நகலாகத் தோன்றியவையே. ஆனால் பிளேட்டோ கூறுவது போல் வெற்று நகலாக நின்று விடாமல் ஒப்புமை ஆக்கத்தையும் (Analogy) கடந்து கற்பனையும் குறிக்கோளும் கொண்ட புதிய படைப்புக் களாக அழகு பெறுபவையே கலைகள்.

அறிஞர் எஸ்பர்ஸன் போன்ற மொழி நூல் அறிஞர்களும் உலகில் எல்லா மொழிகளும் ஆடுவதற்கும் பாடுவதற்கும் அமைந்த உணர்ச்சிக் கவிதைகளாகத் தோன்றியவையே என்று கருதுகிறார்கள்.[5]

இனி இக்கருத்துக்கு ஏற்ப இயற்றமிழ் இலக்கியம் நாடக வியற்றமிழாகவே உருவெடுத்திருக்கிறது எவ்வாறு என்று காண்போம்.

சங்க நூல்களான எட்டுத் தொகை பத்துப் பாட்டு என்னும் தொகை நூல்களுள் அகப்பாடல்கள் அனைத்துமே நாடக மாந்தருள் ஒருவர் மற்றொருவருடன் பேசும் கூற்றுக்களாகவே அமைந்துள்ளன. இத்தகைய பாக்கள் நாடகத் தனிநிலைக் கூற்றுக்கள் (Dramatic Monologues) போன்றவை.

சில எடுத்துக்காட்டுக்கள் காண்போம்.

1. ''யாரு இல்லை தானே கள்வன்'' - என்ற குறுந்தொகைப் பாடல் (25) தோழியின் குறுக்கு விசாரணைக்குத் தலைவி இறுக்கும் விடையாகவே அமைந்துள்ளது. வரைவு நீட்டித்த விடத்து ஆற்றாமையும் அச்சமும் மிகுந்த நிலையில் தலைவி தோழியிடம் தன் களவை வெளிப்படுத்த, தோழி தலைவன் அவளை மணந்தமைக்குச் சான்று கேட்கிறாள். அவர்கள் உரையாடல் நாடகப் பாங்கில் அமைந்துள்ளது. பாடல் வருமாறு:

*யாரும் இல்லை தானே கள்வன்*

*தான் அது பொய்ப்பின்? யான் எவன் செய்கோ?*
*திணைத்தாள் அன்ன சிறு பசுங்கால*
*ஒழுகு நீர் ஆரல் பார்க்கும்*
*குருகும் உண்டு தான் மணந்த ஞான்றே*

குருகு! அதுவும் ஆரல் பார்க்கும் குருகு! அது சான்றாகுமா? பாடலை நாடகமாகவே பொருள் விரித்துச் சுவைக்கலாம்.

2. இவ்வாறே ''சுரை ஆழ அம்மி மிதப்ப'' - இலக்கண உரை மேற்கோள் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்கும் கூறுவாளாய்க் குறிப்பாக வரைவு கடாய பான்மை நாடகக் காட்சியையே கண்முன் நிறுத்துகிறது.

*தோழி: 'சுரை ஆழ' ... தலைவி: 'என்ன'*

*தோழி: 'அம்மி மிதப்ப... தலைவி 'பொருளற்ற பேச்சு'*

*தோழி: ''யானைக்கு நீத்து ... '' தலைவி: ''என்ன உளறுகிறாய்?''*

*தோழி: 'என்ப...' தலைவி: 'யார்? எதனால்?'*

தோழி: 'என்ப....' தலைவி: 'யார்? எதனை?'

தோழி: ''கானக நாடன் சுனை!

தலைவியும், சிறைப்புறமாக நின்ற தலைவனும் தலை குனிகிறார்கள்.

3. இனித் தலைவியிடம் குறைநயப்பிக்கும் தோழியின் கூற்றாக அமைந்த குறிஞ்சிக் கலி 25-ஆம் பாடல், வடமொழியில் பாணம் என்றும், ஆங்கியலத்தில் ''மானோ ஆக்டிங்'' (Mono Acting) என்றும் ஒருவரே பலர் பாகம் ஏற்று நடித்துக் காட்டும் காட்சி ஒன்றைப் புலப்படுத்துகிறது.

இப்பாடலில் தரவு சுரிதகம் என்னும் முதற் பகுதியும் ஈற்றுப்பகுதியும் தோழி தலைவியிடம் பேசுவதாக அமைந்திருப்பது தெளிவு. இடையிலுள்ள குறு வெண்பாட்டுக் களும் கொச்சகமும் தலைவனுக்கும் தோழிக்கும் இடையே அமைந்த உரையாடலாக அமைந்துள்ளன. தலைவியிடம் பேசத் தொடங்கிய தோழி இடையே தலைவனிடம் சென்று உரையாடிவிட்டு வந்ததாக நச்சினார்க்கினியர் உரைகூறுவது பொருந்தவில்லை. கால, இட, நிகழ்ச்சி ஒருமைப்பாடுகளுக்கு (Unity of Time, Blace and Action) இது முரண்பட்டதாக உள்ளது. அவர் உரை வருமாறு:-

''தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவனோடு
உறழ்ந்து சொல்லி அவனது நீக்கத்துக்கண் அவன்
குறை மறாமைக்கு ஏற்பன சொல்லித் தலைமகளைக்
குறை நயப்பித்தது''[6]

குறை நேர்ந்த தோழி தலைவனோடு வாழ்த்து சொல்வதில் பாடல் தொடங்க வில்லை. மாறாகத் தலைவியோடு பேசத் தொடங்கி இடையிலேயே தலைவனோடு உறழ்ந்து சொல்வதாக உள்ளது. ஆதலின் நாடகக் கண் கொண்டே இவ்வுரையாடலை நோக்க வேண்டும். அவ்வாறு நோக்கின் தோழி தலைவியிடம் தனக்கும் தலைவனுக்கும் முன்னரே நிகழ்ந்த உரையாடலைத் தான் ஒருத்தியே நகைச் சுவையுடன் பேசி நடித்துக் காட்டும் அருமைப் பாட்டை இவ்வுரையாடலில் உணரலாம்.[7]

இவ்வாறு பல பாடல்கள் கலித்தொகை அகநானூறு முதலிய நூல்களில் உள.

புறப்பொருட்பாடல்களும் ஏறக்குறையப் புலவர் புரவலரை விளித்துக் கூறுவனவாகவே அமைந்திருப்பதும் அகத்திணை

களின் புறமே புறத்திணைகள் என்று இலக்கணம் (தொல்) வகுக்கப்பட்டிருப்பதும் புறத்திணைகளும் நாடக வழக்குக்குப் புறம்பானவை அல்ல என்பதை உணர்த்தும்.

இவ்விலக்கியம் கண்டுதான் தொல்காப்பியர் முதலான இலக்கண ஆசிரியர்கள் இலக்கியம் ஒரு நாடகம் என்ற கருத்தில் அகப்பொருளுக்கு இலக்கணம் வகுத்துள்ளார்கள்.

அகப்பொருளை முதற் பொருள் கருப்பொருள் உரிப் பொருள் என் மூவகைப்படுத்தியிருப்பதே நாடக அமைப்பைத் தான் காட்டுகிறது. முதற் பொருள்கள் காலமும் இடமும் (Time and Space) ஆகும். கருப் பொருள்கள் மரம் முதலாக மனிதர் தேவர் ஈறாகக் காலத்தும் இடத்தும் கருக் கொண்டு தோன்றுவனவாம். உரிப்பொருள் மனித வாழ்வின் அடிப்படை உணர்வாகிய (The fundamental urge) காதலைப் புணர்தல் பிரிதல் இருத்தல் ஊடல் இரங்கல் என்று ஐவகைப்படுத்தி உணர்த்தும். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற திணைப் பெயர்கள் முதல் கரு உரிப்பொருள்கள் மூன்றையும் குறிக்கும். இவ்வாறு வகைப்படுத்துவதன் கருத்து என்ன?

இடமும் காலமும் என்னும் நாடக அரங்கில் கருப் பொருள்களே பின்னணியாக (Background, Setting, Scenery. etc.) அமைய, மனித வாழ்வு என்னும் நாடகத்தைக் கவிஞர்கள் தம் நாவால் இயக்கி வைக்கிறார்கள்.

இந்த அடிப்படையைப் புரிந்து கொண்டால் குறிஞ்சி என்றால் ஏன் மலைச்சாரலில் மாரிக் காலத்து நள்ளிருளில் புலியும் கரடியும் வழங்கும் சூழ்நிலையில் தலைவனும் தலைவியும் சந்தித்து வரும் காட்சிகளைப் போடவேண்டும் என்பது புலப் படும். இவ்வாறு பிற திணைகளுக்கும் வரையறை காணலாம். இன்ன இடத்து இன்ன காலத்து இன்ன சூழ்நிலையில் இன்னாரைக் கொண்டு இன்ன ஒழுக்கத்தைப் புனைதல் சிறப்புடைத்து என்ற கருத்து நாடகம் தவிர வேறு என்ன?

ஆயின் குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட காலத்தில் மட்டுமே குறிப்பிட்ட ஒழுக்கம் நிகழும் என்பது உலக வழக்கு ஆகாது தான். ஆயின் நாடக வழக்கு, எனினும் இவ்வுலக வழக்குக்கு இது மாறுபட்டதன்று, நச்சினார்க்கினியர் இக் கருத்தைக் கீழ்வருமாறு விளக்குவர்.

''இது இல்லது எனப்படாது, உலகியலே யாம்... இச்செய்யுள் வழக்கினை நாடக வழக்கென. மேற்கூறினார் எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல் முதலாகப் புனைந்துரை வகையால் கூறும் நாடக இலக்கணம் போல், யாதானும் ஒரோ வழி ஒரு சாரார் மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமும் காலமும் நியமித்துச் செய்யுள் செய்தல் ஒப்புமை நோக்கி'' - (- தொல் - பொருள் - அகத்திணையில் சூ 3)

இவ்வாறு நாடக வழக்கை அடியொற்றியே இலக்கிய வழக்குத் தோன்றியிருப்பதை நச்சினார்க்கினியர் விளக்கிச் செல்வர்.

முதற் பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளுக்கு எவ்வாறு பின்னணியாக அமைகின்றன என்பதற்கு மேற்காட்டிய பாடல்களே சான்று. 'யாரும் இல்லை' என்ற பாட்டில் திணையும் கானகமும் ''சுரையாழ'' என்ற பாட்டில் யானையும் சுனையும் வந்து குறிஞ்சித் திணையைப் புலப்படுத்தல் காண்க.

''நாடகம் இறுதியாகக் கவித்துவம் என்பர் வடநூல் அறிஞர். கம்பநாடன் கவிதை இக்கலையில் அடைந்திருக்கும் நிகரற்ற சாதனையே இதற்குச் சான்று. இத்தகைய ஒரு முதிர்ச்சி பெறுவதற்குப் பல நூற்றாண்டுகள் படிப்படியே ஒரு கலை வளர்ச்சி பெற வேண்டும். தமிழ்க் கவிதைக் கலையோ நாடகம் தொடங்கிக் கவித்துவம் என்றபடி நாடக வழக்கையே பற்றுக் கோடாகக் கொண்டு வளர்ச்சி பெற்றிருப்பதன் நுட்பம் நோக்கத்தக்கது. வரலாற்றுப் பேராசிரியரான பி.டி. சீனிவாச ஐயங்கார் ''தமிழர் வரலாறு'' (History of the Tamils) என்னும் தனது நூலில் தமிழுக்கு இலக்கணம் தோன்றுமுன் ஆடலும் பாடலுமாகவே பல்லாயிரக்கணக்கில் பாடல்கள் தமிழரிடை வழங்கி வந்தன என்பர்.

இவ்வாறு தமிழ் இலக்கிய நெறி ஒரு நல்ல நாடக மரபைத் தோற்றுவித்திருக்கிறது.

*குறிப்புகள்*

1. சாகுந்தல நாடக ஆராய்ச்சி - மறைமலைஅடிகள்.
   1. கட்டுரை, பக்கம் 12. சைவ சித்தாந்த கழகப் பதிப்பு 1934.
2. The mimetic instinet is confined to no single nation; it is universal in its ap peal and reveals itself as one of the most primitive of human emotions.- Chap. I. Page 13.

3. தொல் - சொல் - உரியியல் - .21.

4. The British Drama - ilid: Page.14 - Allardyce Nicall.

5. "மொழி வரலாறு" - டாக்டர் மு.வ. பக்கம் 241.
   சைவ சித்தாந்த கழகப் பதிப்பு (1959).

6. கலித்தொகை - நச். உரை - கழகப்பதிப்பு IV, பக்கம் 178.

7. உரையாடலைப் பாடலில் காண்க. விரிவஞ்சித் தரப்படவில்லை.

ந. கோபாலன்
பூ.சா.கோ. கலைக்கல்லூரி
கோயம்புத்தூர்

# கம்பனின் அரசியல் தத்துவம்

மக்கள் வாழ்க்கை வளம் பெறுவதற்காகச் சான்றோர்களால் ஆராய்ந்து அறிந்து கூறப்பட்ட கருத்துக்களைத் தத்துவங்கள் என்று கூறுகின்றோம். 'வாழும் முறையைக் கற்பிக்கும் வித்தையே தத்துவ ஞானம் தரும்' என்று ப்ளூடார்க் என்பவர் கூறுகிறார். அரசியலும் சமயமும் பொது நலத்திற்காக எழுந்தவை. அறத்தை அடிப்படையாகக் கொண்டவை. ''தத்துவ ஞானத்தின் லட்சியம் அறம்'' என்று பீட்டர்பெயின் என்னும் மேலைநாட்டறிஞர் கூறுகின்றார். வாழ்க்கையைப் பிரதிபலிப்பது இலக்கியம் என்பதை நாமறிவோம். கம்பராமாயணத்தைப் பக்தி நோக்கில் படிப்பவர்கள் தலைசிறந்த வைணவக் காப்பியம் என்று கூறுகின்றனர். ஆனால் அதன் லட்சியம் அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்பதை நிலைநாட்டுவதுதான். கம்பர் மக்கள் முன்னேற்றத்திற்காகவும், அறவுரை வழங்கும்போதிலும் அரசியல் நீதி உணர்த்தும் போதிலும் தலைசிறந்த அரசியல் தத்துவங்களை உணர்த்துகின்றார். அவற்றில் ஒரு சிலவற்றை இக்கட்டுரையின்கண் காண்போம்.

உலகெங்கும் முதற்கண் தோன்றிய ஆட்சி முறை கோனாட்சி முறையாகும். தமிழகத்திலும் அவ்வாறே நிலவியதென்பதே 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'' என்ற இலக்கிய அடியால் அறியலாம். ஆனால் குடியாட்சி முறையே சிறப்புமிக்கது என்பதை உலகெங்கும் உணரத் தொடங்கினர். ஐரோப்பாவில் ஏதென்ஸ், ரோம் முதலிய நகரங்களிலும், பாரதத்தில் வைசாலி போன்ற சிறிய மாநிலங்களிலும் குடிகள் நேரில் அரசு செலுத்தத் தொடங்கினர். ஆனால் இவர்களில் உணர்ந்த சாதியினர் போர் வீரர் கலைக் கல்வியாளர்கள் ஆகியோர் ஒருசிலர் பெரும்பான்மையானவர்களால் குடியானவர்களையும், தொழிலாளிகளையும் அடக்கியாண்டனர். இதனினும் முழுக்

குடியரசு முறையை நாம் காண இயலாது. சங்க காலத்தில் கிராம ஆட்சி அளவில் மக்களாட்சி நிலவியதைக் 'கயிறு பிணிக்குழிசை ஓலை கொண்மார்' என்ற அகநானூற்றடியில் அறிகிறோம். கம்பர் காலத்திலும் ஊராட்சி முறை மக்களால் தேர்ந்து எடுக்கப்பட்ட சார்பாளர்களிடமே இருந்தது. சோழ அரசர்களும் ஊராட்சியில் தலையிடாமல் இருந்தனர். இதையெல்லாம் நன்கறிந்த கம்பர் ஊரளவில் மட்டுமன்றி நாட்டளவில், உலகளவில் மக்களாட்சி மலர வேண்டும் என்ற இலட்சியத்தைக் காப்பியம் மூலம் பரப்பலானார். புறநானூறு மன்னனை உயிராகக் கருதி மதிப்புக் கொடுத்தது. ஆனால் கம்பர் மக்களை உயிராகவும், மன்னனை உடலாகவும், மாற்றி மக்களுக்கே ஏற்றம் கொடுக்கிறார். இதனை இவர் ''செயிர் இலா உலகினில் சென்று நின்று வாழ், உயிர் எலாம் உறைவதோர் உடம்பும் ஆம் ஆயினான்'' என்று தசரதனைப் பாராட்டு முகத்தான் விளக்குகின்றார். மற்றும் ''வையம் மண்ணுயிராக, அம்மண்ணுயிர் உய்யத் தாங்கும் உடலன்ன மன்னவன்'' என்ற கருத்தை வலியுறுத்துகின்றார்.

பாலகாண்டத்தில் தசரதனுடைய அரசாட்சி முறையை அரசியல் படலத்தால் வர்ணிக்கின்றார். அயோத்தியா காண்டத்தில் தசரதனது அமைச்சரவையைக் காணுகின்றோம். மற்றும் வசிட்டர் அரச நீதியை இராமனுக்கு எடுத்து உரைப்பதை அறியலாம். ஆரணியக் காண்டத்தில் அகத்தியர் இராமனைப் பாராட்டும் பொழுது ''வாழும் மறை; வாழும் மநு நீதி; அறம் வாழும்'' என்று பாராட்டி அரசியல் கருத்தை வெளிப்படுத்து கின்றார். கிட்கிந்தா காண்டத்தில் வாலி இறுதியில் இராமனை நோக்கிக் கூறும்பொழுது

'கோவியல் தருமம் உங்கள்
குலத்(து) உதித் தோர்கட்(கு) எல்லாம்
ஓவியத்(து) எழுத ஒன்னா
உருவத்தாய் உடைமை அன்றோ?'

என்று தொடங்கிப் பல அரச நீதிகளைக் கூறுகின்றார். யாரோடும் கூட்டுச் சேராது தனித்து நிற்கும் ஆற்றல் ஒரு நாட்டிற்கு இருக்க வேண்டுமென்பதையும், கூட்டுச் சேராக் கொள்கையே சாலச் சிறந்ததென்பதையும் 'கூட்(டு) ஒருவரையும் வேண்டாக் கொற்றவ! என்ற அடியில் வற்புறுத்துகின்றார். இதே காண்டத்தில் இராமன் சுக்ரீவனுக்கு அரச நீதியை எடுத்துக் கூறுவதை அறியலாம். பகைவரிடத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைக் கம்பர் மிக அழகாக உரைக்கின்றார். புகையிருந்தால்

நெருப்புண்டு என்பதை உலகம் அறிந்து கொள்ளும், அனுமானப் பிரமாணம் வேண்டும் வஞ்சனையுடையவர்களிடத்தில் வஞ்சனையாகவே நடந்து கொள்ள வேண்டும். பகைவரிடத் திலும் சிரித்த முகத்தோடு இன்சொல் பேசவேண்டும் என்ற கருத்துக்களை

'புகைஉடைத்(து) என்னின் உண்டு
பொங்(கு) அனல் அங்கு என்(று) உண்ணும்
மிகை உடைத்(து) உலகம், நூலோர்
வினையமும் வேண்டல் பாற்றே,
பகை உடைச் சிந்தை யார்க்கும்,
பயன்உறு பண்பின் தீரா
நகை உடை முகத்தை யாகி,
இன் உரை நல்கு நாவால்'.

என்ற பாடலில் கூறுகின்றார். சுந்தர காண்டத்தில் சீதை 'அரசு வீற்றிருந்து ஆளவும் ஆய்மணிப் புரசை யானையில் வீதியில் போதவும்' என அரசியல் கருத்தை வருத்த நிலையிலும் சொல்லி யனுப்புதலைப் பார்க்கிறோம். யுத்த காண்டத்தில் இராவணன் மந்திரப் படலம் என்ற பகுதியில் ஆலோசனை கேட்பதை அரசியல் பகுதியாகக் கொள்ளலாம். இவ்வாறு கம்ப ராமாயணத்தில் எந்தப் பகுதியைப் புரட்டினாலும் அரசியல் கருத்தே பளிச்சிடுவதைக் காணலாம்.

அரசியல் முறைகளைக் கூறுகின்ற கம்பர் அவை எவ்வாறு செயற்படவேண்டும் என்பதையும் எந்த நிலையில் நாடு பயனடைய வேண்டுமென்பதையும் பல இடங்களில் விரித்துக் கூறுகின்றார். பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளனும் சுரந்து நின்றால் அந்நாட்டில் செங்கோலாட்சி நிலவுகின்றது என்று பொருள். இதனைத் திருவள்ளுவரும்.

உறுபசியும் ஓவாப் பிணியும் செறு பகையும்
சேரா தியல்வது நாடு.

என்று கூறுகின்றார். கம்பரும் அவ்வாறே நாடு விளங்க வேண்டு மென்பதை வலியுறுத்திக் கூறுவார். பகைவர்களே இல்லாமை யினால் வலிமையென்று அந்நாட்டில் ஒன்று இல்லை. பசி, வறுமை அந்நாட்டில் இன்மையால் ஈகையென்று ஒன்று இல்லை என்ற கருத்துக்களை

வண்மை இல்லை, ஓர் வறுமை இன்மையில்,
திண்மை இல்லை நேர் செறுநர் இன்மையால்

என்ற அடிகளால் கூறுகின்றார். மற்றும் பகைவர் இல்லாமையை, 'எள்ளன எழுபகை எங்கும் இன்மையால் என்ற அடியில் அறியலாம்.

நோய் ஒக்கும் என்னின்
மருந்(து) ஒக்கும்

என்ற அடியில் நோயின்றி நாட்டைக் காத்தான் தசரதன் என்ற கருத்தைக் கூறும்பொழுது நோயின்றி நாட்டைக் காக்கவேண்டு மென்ற கம்பன் லட்சியத்தை அறிகிறோம்.

சங்க் காலத்தில் ஐம்பெருங்குழு எண்பேராயம் ஆகியவை அரசனுக்குத் துணையாக இருந்தன. தற்காத்திலும், தலைமை அமைச்சருக்கோ, முதன் மந்திரிக்கோ, அமைச்சர்கள் செயற் படுத்தலில் துணையாய் இருத்தலைக் காண்கிறோம். அவ்வாறு அமைச்சர்கள் இருக்க வேண்டுமென்று கம்பர் கூறுவார். இதனை தசரசன் அமைச்சரவை, இராவணன் அமைச்சரவை ஆகிய வற்றால் அறியலாம். இடித்துக் கூறுகின்ற அமைச்சர்கள் இருக்க வேண்டுமென்றும் வகையறிந்து அமைச்சர்கள் செயற்பட வேண்டுமென்றும் திருவள்ளுவர் கூறுவார். இடித்துக் கூறுகின்ற அமைச்சர்கள் இல்லாத மன்னவன் தானாக அழிந்து விடுவான் என்ற கருத்தை 'இடிப்பாரை இல்லாத ஏமராமன்னன் கெடுப்பாரிலானுங் கெடும் என்ற குறளால் விளக்குகின்றார். தங்களுக்குத் துன்பமேற்பட்டாலும் தளராமல் இடித்துக் கூறுவர் என்ற கருத்தைக் கம்பர் 'நலமுதல் நலியினும் நடுவு நோக்குவார்; என்ற அடியில் விளக்குகின்றார். அமைச்சர்கள் எவற்றை யெல்லாம் அறிந்து செயல்புரிய வேண்டுமென்பதை

'கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு

என்று பகுத்துரைப்பார். இதே கருத்தைக் கம்பரும்

காலமும், இடனும், ஏற்ற
கருவியும், தெரியக் கற்ற
நூல் உற நோக்கித், தெய்வம்
நுனித்(து) அறம் குணித்த மேலோர்;

ஒரு நாட்டு அரசு யாரோடும் பகை கொள்ளக்கூடாது. அமைதிக்காகப் பாடுபட வேண்டும். கூட்டுச் சேராமலிருக்க வேண்டும் என்ற கருத்தை 'போர் மங்கும், புகழ் ஒடுங்காது' என்ற வசிட்டர் வாக்கால் அறியலாம். தற்காலத்தில்

அமைச்சர்கள், தங்களுக்கும் மக்களுக்கும் வேறுபாடு தோற்று வித்துக் கொள்கிறார்கள். ஆனால் அரசியல் நீதிக்கு அது பொருந்துவதன்று. சாதாரணக் குடிமகன் எதிரில் வந்தாலும் என்ன தொழில் செய்து கொண்டிருக்கிறீர்கள் நலமாக இருக்கிறீர்களா? மனைவியும் குமரரும் நலமாக இருக்கிறார்களா? என்று விசாரிக்க வேண்டும். அப்பொழுதுதான் மக்களுக்கு முழு நம்பிக்கை ஏற்படும். இந்த அரசியல் தத்துவத்தைக் கம்பர் இராமன் வாயிலாக விளக்குவார்.

எதிர்வரும் அவர்களை, எமையுடை இறைவன்,
முதிர்தருகருணையின் முகமலர் ஒளிர,
'எதுவினை? இடர் இலை? இனிதுநும் மனையும்,
மதிதரு குமரரும், வலியில் கொல்? எனவே

என்று கூறுவார்.

தீவிர சோசலிச வாதிகள், பணக்காரர்களை அழித்து ஏழைகளை வாழ்விக்க வேண்டுமென்று முழங்குகின்றார்கள். பாட்டாளிகள் புரட்சியென்றெல்லாம் பாராட்டிக் கொள்கின்றனர். மேலை நாட்டினர் தனிப் பணக்காரர்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இந்த இரண்டு நிலைகளையும் சீர்படுத்தி எல்லா மக்களையும் வாழ்விக்க ஏற்ற கொள்கை ஜனநாயக சோசலிசமாகும். இதன் வாயிலாக எல்லாரும் எல்லாச் செல்வத்தையும் அடைய வழி பிறக்கும். ஏழை பணக்காரர் என்ற வேறுபாடு இருக்காது. செல்வத்தை இயற்ற, ஈட்ட, காக்க, வகுக்கக் கல்வி தேவை. எல்லோரும் கல்வி கற்றால்தான் ஏற்றத் தாழ்வையும் போக்க முடியும் என்ற கருத்தைக் கம்பர்

கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்வி முற்ற
வல்லாரு இல்லை; அவை வல்லர் அல்லாரும் இல்லை;
எல்லாரும் எல்லாப் பெரும் செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை, மாதோ

என்று விளக்குகிறார்.

பாரத அரசியலமைப்பின் ஆரம்பத்தில் சமூக, பொருளாதார, அரசியல் நியாயமும்; சிந்தனை பேச்சு, கொள்கை, மதம், வழிபாடுகளின் சுதந்திரமும் அந்தஸ்திலும், வாழ்க்கை வளர்ச்சி வசதிகளிலும் சமத்துவமும்; காணப்படுகின்றன. இத்தகைய அரசியலமைப்புக் கருத்துக்கள் வெவ்வேறு முறைகளில் கம்பரும் விளக்குவார். கலைச் சுதந்திரம் இருக்க வேண்டுமென்பதை 'அன்னமென் நடையவர் ஆடும் மண்டபம்', என்ற அடியால்

அறியலாம். சிந்தனை, பேச்சு கொள்கை சுதந்திரத்தைப் 'பன்னரும் கலைதெரி பட்டி மண்டபம்' என்ற அடியால் அறியலாம். மதம் வழிபாடு தீண்டாமை ஒழிப்பு, அந்தஸ்தில் சமத்துவத்தை இராமயணக் கதையாலேயே அறியலாம். இராமாயணக் கதையால் அரக்கச் சாதியும், குரங்குச் சாதியும், மனிதச் சாதியும் இணைகின்றன என்று அறியலாம். சாதி மத பேதம் நீங்கிச் சகோதரத்துவம் விளங்குவதைக் கம்பர் இராமன் வாயிலாக விளக்குவார். ''குகனோடு சேர்ந்து முன்பு ஐந்து சகோதரர்களானோம். பின்பு சுக்ரிவனோடு சேர்ந்து அறுவ ரானோம். என்னிடத்தில் அன்போடு வந்திருக்கின்ற விபீடனனே! உன்னோடு சேர்ந்து எழுவரானோம்'' என்று கூறி சகோதரத்து வத்தை நிலைநாட்டுகிறான் இராமன். இந்த சமத்துவ சகோதரத்து வத்தையும் சிறந்த அரசியல் தத்துவமாகக் கொள்ளலாம். இதனைக் கம்பர்

'குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்; எம் உழை அன்பின் வந்த
அகன் அமர் காதல் ஐயா! நின்னோடும் எழுவர் ஆனேம்;
புகழ் அரும் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை''

என்ற பாடலால் விளக்குவார்.

ஒரு நாட்டினைப் பாதுகாக்கச் சிறந்த படையிருத்தல் வேண்டும். யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை வைத்துத் தமிழரசர்கள் பெருமையுற்றிருந்ததைப் பல்வேறு இலக்கியங்களில் அறியலாம். இவ்வாறே இராவணன் எல்லாப் படையும் வைத்திருந்ததாக அறிகிறோம். அதனால் தான் அவன் துணிவாக 'என்னையே நோக்கியான் இந்நெடும் பகை தேடிக் கொண்டேன்'' என்று கூறுகின்றான். பஞ்ச சேனாபதிகள் வதைப்படலம், மூல பல சேனை Reserved Army வதைப்படலம் போன்றவற்றாலும் இராவணன் பெரும்படை வைத்திருந்தா னென அறிகிறோம். அரச அங்கங்களுள் படை முதன்மையான தென்பதை நாமறிவோமன்றோ?

தூதுவர்களை அனுப்பும் முறை உண்டு என்பதை இராமனுக்காக இராவணனிடம் அனுமன், அங்கதன் ஆகியோர் தூது சென்றதை அறியலாம். ஒரு அரசனுக்குத் துணையாக ஆட்சிபுரியவும், நாட்டைப் பாதுகாக்கவும், மந்திரிகள், நகர மாந்தர், சேனைத் தலைவர் சிற்றரசர், முனிவர், அறிஞர் பெருமக்கள் முதலியோர் இருந்தனரென்பதை

மந்திரக் கிழவரும், நகர மாந்தரும்,
தந்திரத் தலைவரும், தரணி பாலரும்,
அந்தர முனிவரோ(டு) அறிஞர் யாவரும்
சுந்தரக் குரிசிலை மரபின் சுற்றினார்

என்ற கம்பர் பாடலால் அறியலாம்.

ஒரு நாட்டில் ஒழுக்கம் நிலவினால்தான் அரசாட்சி சிறப்பாக நடக்கிறது என்று நம்ப முடியும். கற்புள்ள பெண்கள் வாழ்ந்தால் தான் மாதம் மும்மாரி பொழியும். இவற்றைக் கம்பர் ''குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்''. என்றும், ''கற்பின் நின்றன கால மாரியே'' என்றும் கூறினார். இராமாயணம் எழுந்த தனுடைய நோக்கமே ஒழுக்கத்தை நிலை நிறுத்துவதற்குத் தான். ஒழுக்கத்தோடு வாழ்வது எப்படி என்பதை இராமன் வழி காட்டியாய் (Ideal man) நடந்து காட்டுகிறான். ஆதலால் கம்பன் இராமனை, ''நடையின் நின்றுயர் நாயகன்'' என்று கூறுகின்றார். பரத்தையர் கூடச் சிறந்த அரசாட்சியில் ஒழுக்கத்துடன் திகழ்வர் என்பதை

''வேசையர் உள்ளமும் ஒருவழி ஓட நின்றவன்''

என்று கம்பர் தசரதர் அரசாட்சியைப் பாராட்டுகையில் கூறுகின்றார்.

அடைக்கலம் ஏற்றல் அரச நீதி என்பதைச் சுக்ரீவன் விபீடணன் ஆகியோரை இராமன் அடைக்கலம் ஏற்றதால் அறியலாம். மூத்தவர்க்கே அரசாட்சி சேருவது உரியது முறை என்ற வழக்கை இக்காவியத்தில் அறிகிறோம். கோட்டைக் கொத்தளங்களையும் சிறந்த எடுப்பான மதில்களையும் உடை யவையாய்த் திகழ்ந்தன பண்டை நகரங்கள். செம்பினா லேயே மதில் செய்திருந்தார்களென்பதைக் கம்பர் ''செம்பிட்டுச் செய்த இஞ்சித் திருநகர்'' என்ற அடியால் கூறுகின்றார். செம்பிட்டுச் செய்வது திண்மைக்கும், பாதுகாப்பிற்கும் அல்லவா?

ஒரு சிறந்த அரசாங்கத்தில் நாட்டை எவ்வாறு வளப்படுத்த வேண்டும் என்பதைக் கம்பர் தெளிவாக விளக்குவார். வாணிகம் பெருகவேண்டும், ஏற்றுமதி இறக்குமதி பெருக வேண்டும், கடல் வழியாகவும், நிலம் வழியாகவும் வளம் பெருகவேண்டும். தொழில் பெருக வேண்டும். சுரங்கங்கள் வெட்டிக் கனிகள் வெட்டியெடுக்க வேண்டும். இவ்வகையாக நாட்டு முன்னேற்றத் திற்குரிய அரசியல் தத்துவங்களை

கலம்சு ரக்கும் நிதியம்; கணக்கிலா
நிலம்சு ரக்கும் நிறைவளம்; நன்மணி
பிலம்சு ரக்கும்; பெறுதற்(கு) அரியதம்
குலம்சு ரக்கும்

என்ற அடிகளால் அறியலாம்.

சுற்றம் சாதியைக் காட்டிலும் நீதி பெரியது என்பது அரச நீதி. இவ்வாறு விளங்குபவன் விபீடணன் என்று கும்பகர்ணன் இராமனுக்குக் கூறுகின்றான். இக்கருத்தை

'நீதியால் வந்த(து) ஒரு
நெடும் தருமநெறி அல்லால்
சாதியால் வந்த சிறு
நெறி அறியான்

என்ற அடிகளால் அறியலாம்.

சூதாடுதலோ, வளர்த்தலோ அரசியல் நெறி அன்று. சூது முதல் காமம் உட்பட்ட ஏழும் மாத்துயர் விளைவிப்பனவாம். மூலகாரணமாகவும் அமையும். ஆகவே அதனை விலக்க வேண்டும். இதனை வசிட்டர் இராமனுக்குக் கூறும் முகத்தான் கம்பர்

சூது முந்துறச் சொல்லிய மாத்துயர்
நீதி மைந்த நினக்கிலை யாயினும்
ஏதமென்பன யாவையு மெய்துதற்கு
ஓது மூல மவையென வோர்தியே

என்ற பாடலால் உணர்த்துகிறார்.

அறம், அன்பு, பணி, இனியசொல் ஈகை, காலத்தோடு பொருந்தச் செயல்புரிதல், காமம் இன்மை ஆகிய பண்புகள் அரசனுக்குத் தேவை என மேலும் வசிட்டர் அறிவுறுத்துகின்றார்.

இவ்வாறு இச்சிறிய கட்டுரையின் வாயிலாக அரசியல் வகைகளையும் கொள்கைகளையும், செயற்படுத்தும் முறை களையும், நாடு அடையவேண்டிய நிலைகளையும், கம்பர் எவ் வாறு விளக்குகிறார் என்று பார்த்தோம். எல்லாவற்றிற்கும் மேலாக நாட்டையும் மொழியையும் பாதுகாத்தலே சிறந்த அரசியல் நெறி ஆகும். ஒரு ஏழை விவசாயி சாப்பாட்டிற்குரிய சிறிய வயலை எவ்வாறு கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாப்பானோ அதைப் போலத் தசரதன் பாதுகாத்தன்;

அரசியலாரும் பாதுகாக்கவேண்டும் என்பதைக் கம்பர் ''வறிஞன் ஓம்பும் ஓர்--செய்யனக் காத்தினிது அரசு செய்கின்றான் என்று கூறுகின்றார். ''என்றுமுள தென்றமிழ்'' என்று தமிழைப்பாடி காக்கவேண்டிய பொறுப்பை அனைவர்க்கும் தருகின்றார். கம்பர், கம்பன் வாழ்க. கம்பன் அரசியல் நெறி வாழ்க! தமிழ் வாழ்க.

கோ. சண்முக சுந்தரம்
ஜி.டி.என். கலைக்கல்லூரி
திண்டுக்கல்

# அறிவியல் தமிழ் : ஓர் எதிர்காலக் கண்ணோட்டம்

## அறிமுகம்

'அறிவியல் தமிழ்' இதுவரை அடைந்துள்ள வளர்ச்சியை மனத்தில் கொண்டு, 'அறிவியல் தமிழின்' எதிர்காலத்தை அணுகு வதே இக் கட்டுரையின் குறிக்கோள். கலைச் சொல்லாக்கம் மொழி பெயர்ப்பு/மூல நூல்கள் ஆகியன பற்றி அடிப்படையாக ஆராய்ந்த பின்னர், பாடநூல்கள், பொதுநூல்கள் ஆகிய பரந்த பிரிவுகளில் 'அறிவியல் தமிழின்' எதிர்காலம் பற்றிக் காண்போம்.

## தமிழில் அறிவியல்

கடந்த சில ஆண்டுகளில் தான் பல புதிய அறிவியல் துறைகள் பற்றிய செய்திகள் முறையாக, தமிழ்ச் சிந்தனைகளாக மலர்ந்தன. பல புதிய சொற்கள், புதிய சிந்தனைகளில் சொல் வடிவங்கள் ஆகியன தமிழில் முதன் முறையாக வழக்குக்கு வந்து, 'அறிவியல் தமிழ்' எனத் தனியே கருதப்படும் அளவு வளர்ச்சியும் பெற்றன.

என்றாலும் அறிவுப்பெருக்கம் மேலை நாடுகளில் பல்கி வளர்ந்துவரும் வேகத்துக்கு ஈடு கொடுக்கும் அளவு, 'அறிவியல் தமிழ்' வளர்ச்சி பெறவில்லை என்பது தான் இன்றைய நிலை. மிகவும் ஆரம்பகட்டத்திலேயே காணப்படும் அறிவியல் தமிழ் ஒரளவு புதிய வேகத்தோடு வளர்ந்து எதிர்காலத்தில் மேம்பட்ட நிலையை அடைவதற்கான அறிகுறிகள் ஆங்காங்கே காணப் படுவது மகிழ்ச்சிக்குரிய செய்தி.

இந்த வளர்ச்சிக்குக் கலைச்சொல்லாக்கமும் மொழி பெயர்ப்பு/மூல நூல்களும் எவ்வகையில் எதிர்காலத்தில் கை கொடுக்கும் என்பதனை ஆராய்வோம்.

**கலைச்சொல்லாக்கம்**

அறிவியல் தமிழ் எனும் மாளிகையை நிறுவக் கலைச் சொற்கள் எனும் கற்கள் தேவை. தமிழ் ஆட்சி மொழியாகவும் பயிற்சி மொழியாகவும் மாற்றம் பெறுகின்ற நிலையில் நாள் தோறும் பல புதிய கலைச்சொற்களை உருவாக்கி வழக்கத்துக்குக் கொண்டு வருகிறோம்.

**பொதுப்படைக் கொள்கைகள்**

மணிப் பிரவாளம், ஆங்கிலம், தனித்தமிழ் என்று ஒருசார்பில் வரையறை செய்துகொண்டு கலைச்சொற்களை அமைப்போர், நேரடியாகப் பொருளை மொழிபெயர்ப்போர், பிற ஒலிகளை அப்படியே தமிழில் எழுதுவோர் -- இவ்வாறு வெவ்வேறு மனப்பாங்குடையோர் கலைச் சொற்களை உருவாக்குவதால் கலைச் சொல்லாக்கம் பற்றி இன்று திட்ட வட்டமான பொதுப்படைக் கொள்கை ஏதும் இல்லை. இருப்பினும், அறிவியல் தமிழின் குறிக்கோள் அறிவியல் தெளிவே என்ற கருத்தும், இத்துறையில் உணர்ச்சி வயப்படாது நீண்ட காலப் பயன் கருதிக் கலைச் சொற்களை உருவாக்க வேண்டும் என்ற சிந்தனையும் பரவலாக ஏற்கப்படுகிறது.

கலைச்சொற்கள் குறித்துக் கருத்து வேறுபாடுகள் பல இருந்தாலும் காலப் போக்கில் ஏற்ற சொற்களே நிலைத்து நிற்கும், பொருந்தாச்சொற்கள் மறைந்து விடும். இந்த நிலையில் வரையறை ஏதும் கட்டுவதென்பது இயலாதது எனினும் அறிவியல் தமிழ் திட்டமாக வளர்ச்சி பெற வேண்டும் என்பதனை மனத்தில் கொண்டு மேலும் சில பொதுக் கோட்பாடுகளை வலியுறுத்தலாம்.

(1) ஆங்கிலச் சொற்கள் சிலவற்றுக்குச் சாதாரண பொருள் ஒன்றும் அறிவியல் கலைச்சொல்லாக வேறு பொருளும் உண்டு. இவற்றை மொழி பெயர்த்து அமைக்கும்போது சாதாரண வழக்குக்காக எளிய தமிழ்ச் சொல் ஒன்றையும், கலைச் சொல் வழக்குக்காக அதே பொருளுடைய அரிய கலைச்சொல் ஒன்றையும் வேறுபடுத்தி வழங்குதல் நல்லது. எடுத்துக் காட்டாகப் பொறியியலில் body (machine.) என்பதற்கு 'உடல்' என்ற சொல்லை வழங்காது 'ஆக்கை' என்பது போன்ற சொல்லை வழங்கவேண்டும்.

(2) ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் தமிழில் ஏறக்குறைய ஒரே பொருளில் வரும்போது, பாகுபாடு செய்து அமைத்துக்

கொள்வது நல்லது. எடுத்துக்காட்டாக 'perpendicular' என்பதை 'செங்குத்து' எனவும், "Vertical' என்பதை 'நிலைக்குத்து' எனவும் நாமாகவே ஒரு வரையறை செய்து கொண்டால் எழுதும்போது தெளிவு கிட்டும்.

(3) கணிதம், பௌதீகம், வேதியியல், உயிரியல் ஆகிய பல்வேறு துறையினரும் ஒரே மாதிரியாகப் பொதுவான கலைச்சொற்களைத் தமிழாக்கம் செய்தல் வேண்டும்.

இத்தகைய எச்சரிக்கையான ஒழுங்கு முறைகளால் தான் அறிவியல் தமிழ் எதிர்காலத்தில் நுட்பமுடையதாக வளர்ச்சி காணமுடியும்.

### கலைச் சொல் களஞ்சியம்

அறிவியல், தொழில் நுட்பம் அறிந்தவர்கள் ஆராய்ச்சிக் குழுக்களை நிறுவிக் கலைச் சொற்களை உருவாக்கும் பணியில் முறையாக ஈடுபடவேண்டும். பெங்களூரில் முப்பது பொறியாளர்களைக் கொண்ட அமைப்பு ஒன்று 'அறிவியல் தொழில் நுட்பக்கழகம்' என்ற பெயரில் சில திட்ட வட்டமான கோட்பாடுகளை வரையறை செய்து கொண்டு கலைச் சொற்களை உருவாக்குகிறது. இத்தகைய முயற்சிகள் வருங்காலத்தில் மேலும் பெருகவேண்டும்.

தமிழுக்கு நல்ல சொல்வளமுண்டு என்றாலும் தொழில் நுணுக்கச் சொற்கள் பல இன்னும் வாய்மொழியாகவே உள்ளன. பல மாவட்டங்களில் உள்ள பாமரர் வாக்கிலும், பல தொழில் வினைஞர்கள் தம் தொழிலில் கையாள்கின்ற சொற்களும் இன்னும் முறையாகத் தொகுக்கப்படவில்லை. 'தில்லி தமிழ்ச் சங்கம்' போன்ற ஒருசில அமைப்புகளே இப்பணியில் ஈடுபட்டுள்ளன. இப்பணி முறையாகச் செய்யப்பட்டுக் கலைச் சொற்கள் தொகுக்கப்பட்டால் புதிய கலைச் சொற்களை உருவாக்குவோருக்கு இது ஒரு சொற்களஞ்சியமாகப் பயனாகும்.

### மொழி பெயர்ப்பு/மூலநூல்கள்

நெடுங்காலமாக ஆங்கிலேயருடன் நாம் கொண்டிருந்த தொடர்பால் நம் அறிவியல் நூல்கள் பலவற்றுக்கு ஆங்கிலேயரது நூல்களே முதல் நூல்களாகும். அண்மைக் காலமாகவே அமெரிக்க, உருசிய நாட்டு நூல்களை அடியொற்றிய நூல்கள் தோன்றியுள்ளன. மொழிபெயர்ப்பாகவும் மூல நூல்களாகவும் தோன்றியுள்ள நூல்களைப் பொதுப்படையாக மதிப்பிடும்போது சில கருத்துக்கள் தோன்றுகின்றன.

### நூல்தேர்வு

அறிவியல் அறிவு விரைந்து வளர்கின்ற இன்றைய சூழலில் நாம் தமிழில் உருவாக்கும் நூல்கள் அண்மைக் கால வளர்ச்சி வரை எடுத்துக் காட்டுவதாக இருக்கவேண்டும். ஆனால் நமது நூல்கள் பல குறிப்பாக மொழிபெயர்ப்பு நூல்கள்--காலத்தால் பிந்திய கருத்துக்களை உள்ளடக்கியதாக இருக்கிறது. தமிழாக்கு வதற்கெனத் தேர்ந்து எடுக்கப்படும் நூல் தெளிவும் எளிமையும் உடையதாக இருப்பதோடு அண்மைக்கால வளர்ச்சியையும் காட்டுவதாக இருக்கவேண்டுமே தவிர, ஒரு கால கட்டத்தில் சிறப்பாக விளங்கிய புகழை மட்டும் கொண்டதாக இருப்பது போதாது. விஞ்ஞானிகள் தங்கள் கருத்துக்களை வெளியிடும் வாயிலாக எழுதிய மூலநூல்களையன்றிக் காலத்தால் இயற்கை எய்திய பிற நூல்களை மொழி பெயர்த்தோ அடியொற்றியோ எழுதுவது பயனற்றது.

### மொழி பெயர்ப்பு ஆசிரியர்

மொழி பெயர்ப்பு ஆசிரியருக்கு அடிப்படைத் தேவைகள் மூன்று: அறிவியலறிவு, முதல் மொழியறிவு, தமிழறிவு. மூன்றும் ஒரு சேரப்பெற்றவர் கிடைப்பது அருமை. இன்று தமிழில் உள்ள மொழிபெயர்ப்பாளர்களில் பெரும்பாலோர் மூலநூல் பயிற்சி உள்ள அளவு தமிழ்ப் பயிற்சியும் அறிவியல் பயிற்சியும் கொண்டிராததே பல நூல்களில் தெளிவு குறைவாக இருப்பதற்குக் காரணமாக இருக்கிறது. ஆனால் மூல மொழியறிவு சற்றுக் குறைந்தவராக இருந்தாலும் ஆழமாக அறிவியலறிவும் செம்மையான தமிழறிவும் பெற்றிருந்தால் தாம் பொருளை நன்கு உணர்ந்து வெளிப்படுத்தும் ஆற்றல் பெறமுடியும். 'Semi Conductor' என்ற சொல்லைக் 'குறைக்கடத்தி' என்று சரியாக எழுதுவதை விடுத்து 'அரைக்கடத்தி' என்ற நேரான பிழையுள்ள மொழி பெயர்ப்பை அறிவியலறிவு குறைந்தவர் செய்வார். எனவே தாம் அறிவியலறிவுக்கு முதலிடம், விளக்கம் தருகிற தமிழறிவுக்கு இரண்டாமிடமும், மூலமொழியறிவுக்கு மூன்றாமிடமும் தந்து வலியுறுத்துகிறோம்.

### முதல் நூலுக்கே முதன்மை

மொழி பெயர்ப்பு நூல்கள் ஒருசில செய்திகளில் விளக்கமாக இருந்தாலும் சில செய்திகளில் விளக்கம் குறைவானதாக இருக்கலாம். முதல் நூல் போலவே தோற்றுமாறு மொழி பெயர்ப்பு செய்வதும் அருமை. எனவே எதிர்காலத்தில் மொழி பெயர்ப்புகளுக்கு அதிக முக்கியத்துவம் தராது, பல நூல்களை

ஒப்பு நோக்கித் தமிழில் மூலநூலாகத் தெளிவுடன் வழங்கும் ஆசிரியர்களுக்கு அதிகச் சிறப்பு தருவதே அறிவியல் தமிழின் வளர்ச்சிக்கு உகந்தது.

### பாட நூல்கள்

அறிவியலறிவை அறிமுகம் செய்வதும் அதனைப் பயன் படுத்தும் முறைகளைச் சுட்டிக் காட்டுவதும், புதிய கண்டுபிடிப்பு களுக்கான ஆராய்ச்சி மனப்பான்மையை வளர்ப்பதும் பாட நூல்களின் குறிக்கோள்களாகும்.

முன்னோடியாக அரசு வெளியிடும் பாட நூல்களைத் தொடர்ந்து தனியார் துறையில் பாட நூல்கள் பல தோன்றுவதற்கு ஓரளவு அரசு உதவி செய்தால் தான் உயர் கல்வி, பாட நூல்கள் பலகிடைக்கும்.

பாடத்திட்டத்தை ஒட்டிய செய்திகளின் கோவையாகவும், துணையேடு போன்றும் முழுவடிவம் பெறாத தமிழ் நூல்கள் இன்று தோன்றுகின்றன; கருத்துக்கள் மொழி பெயர்க்கப்பட்டு விட்டாலும் கனமான ஆங்கிலச் சாயல் படிந்த ஒரு தமிழ் நடை கையாளப்படுகிறது. தரமான பாடநூல்களையும், நீரோட்டம் போன்ற தமிழ் நடையையுடைய அறிவியல் நூல்களையும் வருங்காலம் நமக்குத் தரும் என்று நம்புவோம்.

### பொது மக்களுக்கான அறிவியல் இலக்கியம்

அறிவியல் வளர்ச்சியின் போக்குகளை எளிய முறையில் தெரிவித்து, அது பற்றிய ஆவலைத்தூண்டி, அறிவியல் கண்ணோட்டத்தை வளர்ப்பதோடு, அறிவியல் பாதிப்பினால் நமது வாழ்க்கை முறைகளிலும் சிந்தனைகளிலும் எத்தகைய மாற்றங்கள் விளைகின்றன என்று கோடுயிட்டுக் காட்டுவது தான் பொது மக்களுக்கான அறிவியல் இலக்கியத்தின் பணி.

### இன்றைய நிலை

அறிவியலைப் பற்றி அத்துறை வல்லுநர்களே எழுதுவது மிகவும் சிறப்புடைத்து. டிராம்பேயில் உள்ள அணு உலைக் கூடத்தில் பணியாற்றும் தமிழ் விஞ்ஞானிகள் எழுதிய அணுவைப் பற்றிய நூல் அண்மையில் வெளியானது. இத்தகைய முயற்சிகள் தாம் பொதுமக்களுக்கான அறிவியல் இலக்கியம் பயனுள்ள துறையாக உருவாக வகை செய்யும் எண்ணிக்கையைப் பொறுத்த அளவில் இத்துறையில் இன்று நாம் பெற்றுள்ள வளர்ச்சியைத் தரத்திலும் பெறுவதற்கு வழி வகுக்கும்.

தமிழகத்தில் 'கலைக்கதிரும்', ஈழத்தில் 'அறிவொளியும்' இத்துறையில் செய்கின்ற பணியை மேலும் பல ஏடுகள் செய்ய முன்வரும் என்ற ஆவல் நினைவாகும் நாளை எதிர் பார்ப்போம்.

*புறப்பகுதிகள் இரண்டு*

பொது மக்களுக்கான அறிவியல் இலக்கியத்தின் புறப் பகுதியாக நாம் அக்கறை காட்ட வேண்டிய துறைகள் இரண்டு உள்ளன.

ஒன்று குழந்தைகள் இலக்கியம்; நிறையப் படங்களுடன், எளிய சொற்களைத் தொடுத்து, கதைபோன்ற நடையுடன் அறிவியல் செய்திகளைச் சுவையாகப் படைக்கும் நூல்களை எல்லோரும் வாங்கக் கூடிய விலையில் வெளியிடுவதற்குப் பொருள் துணை செய்ய வேண்டியது ஒரு சமுதாயக் கடமை யாகும். வருங்கால விஞ்ஞானிகளை உருவாக்கும் பணியில் அரசும், அறநிலையங்களும் நிதிக் கொடை அளிப்பதன் மூலம் ஈடுபடக் குழந்தைகளுக்கு அறிவியல் செய்திகளைச் சுவைபடக் கூறுவதை எழுத்தாளர்கள் அருங்கலையாகப் பயில வேண்டும்.

*பிறிதோர் துறை*

அறிவியல் தொழிலாளர்க்கு என எழுதப்பட வேண்டிய தொழில்துறை அறிவியல் நூல்கள். ஆலைகளிலும் தொழிற் கூடங்களிலும் அனுபவ வாயிலாகத் தொழிலாளர் பெற்ற அறிவைப் பண்படுத்தி முறையான அறிவியல் அறிவாக வளர்க்கும் வகையில் நூல்கள் எழுதப்படவேண்டும். இத்தகைய நூல்களில் பொதுமக்களுக்கான அறிவியல் நூல்களின் எளிமைக்கும் பாட நூல்களின் கடுமைக்கும் இடைப்பட்ட ஒரு நிலை காணப்படவேண்டும். இத்துறையில் அறிவியல் தமிழ் வளர்ச்சி பெற்றால் தொழில் வளம் பெருகுவதோடு, மதிநுட்ப முடைய தொழிலாளர்கள் புதிய பயனுள்ள கண்டுபிடிப்புகளைச் செய்யத் தூண்டுகோலாக அமையும்.

*புதிய முயற்சிகள்*

அறிவியலை உரைநடையாக எழுதுவோர் ஒரு புறமிருக்க, கவிதைகளாகவும், அறிவியற் புனைகதைகளாகவும் அமைத்து அறிவியல் தமிழுக்கு அணி செய்யும் முயற்சிகள் ஆரம்ப கட்ட நிலையில் உள்ளன. இத்துறையில் ஈழம் தமிழகத்துக்கு வழிகாட்டுகிறது.

### தற்காப்பு

2. எளிமைப் படுத்தும் நோக்கத்தோடு அறிவியல் உண்மைகளை அரைகுறையாகவும் சிலவேளைகளில் திரித்தும், தவறான எடுத்துக்காட்டுகளால் ஒப்பிட்டும் காட்டுகிற ஒரு போக்கு ஆங்கில மொழியிலும் ஆரம்பகால முயற்சிகளில் காணப்பட்டுக் கண்டனத்துக்குள்ளானது. இத்தகைய தவறு நேராது பொதுமக்களுக்கான அறிவியலை வளர்த்து அறிவியல் தமிழைப் பேண வேண்டும்.

### அறிவியலும் தமிழும்

அறிவியல் தமிழையும், தமிழ் அறிவியலையும் எவ் வகையில் பாதிக்கின்றன என்பது நமது கட்டுரையின் கடைப்பகுதி.

தமிழ், அறிவியலுக்கென ஒரு தனி நடையை உருவாக்கி வருகிறது. எளிமையும் தெளிவும் இதன் உயிர்நாடி. சொல்லலங்காரத்துக்கு இங்கு இடமில்லை; சொற்செட்டு போற்றப்படுகிறது. பழைய உரை ஆசிரியர்கள் பயின்றுவந்தது போன்றதோர் காரணகாரியவாயிலாக அமைந்த சுருக்கமானதோர் நடையாக உருவம் பெற்றுவருகிறது. இது வருங்காலத்தில் மாற்றமும் வளர்ச்சியும் பெற்றுத் தெளிவான வடிவமும் தனித்தன்மையும் பெற்ற நடையாக உருவெடுக்கலாம்.

அறிவியல் தமிழின் பாதிப்பு இலக்கியத்திலும் ஓரளவு ஏற்படத்தான் செய்யும். அறிவியல் உவமைகளும் செய்திகளும் சூழ்நிலைகளும் இலக்கியத்தில் இடம் பெறுவதோடு எழுத்தாளரது நடையிலும் மாற்றத்தை விளைவிக்கலாம். மேலைநாடுகளில் அறிவியல் பாதிப்பினால் கூரிய, விறுவிறுப் பான, நேரடியான, நுணுக்கமான இலக்கிய நடைப்போக்கும் வழக்கத்துக் வந்துகொண்டிருக்கிறது. இதன் எதிரொலியை வருங்காலத்தில் தமிழ் இலக்கியப் படைப்பில் மேலும் தெளிவாகக் கேட்கலாம்.

### துணைநூல்கள்

1. டாக்டர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் - தற்கால அறிவியலுக் கேற்பத் தமிழ் வளர்ச்சி - பி.எஸ்.ஜி. நிறுவனங்கள் கோவை-4/1968.

2. Shanmugasundaram - Scientific Literature in Tamil for Laymen - II world Tamil Conference - Seminor/1968.

*ச. சாம்பசிவன்*
*செந்தமிழ்க் கல்லூரி*
*மதுரை – 1*

# தமிழில் வடவெழுத்துகள்

*முன்னுரை*

''வையத்தின் பழநிலவு - வாழ்வுக்கோர் புத்துணர்வு ஐயத்திற் கறிவொளி - ஆடல்தரும் நல்லணங்கு - உடலியக்கும் நல்லுயிர் - உயிரியக்கும் நுண்கலை'' - அதுவே நமதருமைத் 'தமிழ்மொழி' ''பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்; எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி இருப்பதுபோல்'' இன்றுங் குன்றா இளநலம் பெற்று இலங்குவது இன்றமிழ்மொழி! இதன் பெருமை பற்றிப் பேசவந்த பரஞ்சோதியார், ''கண்ணுதற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து, பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த இப்பசுந்தமிழ்''[1] எனப் போற்றுவார். இத்தகு வண்டமிழ் மொழியில் வடவெழுத்துக்கள் வந்து பயின்ற பான்மையினை, ஒருவாறு ஈண்டு ஆராய்வோம்.

*தமிழ் எழுத்துகள்*

இன்று, தமிழ்மொழியிலுள்ள இலக்கணங்களுள், காலத் தாற் பழமையானது, ஒல்காப்பெரும்புகழ்த் தொல்காப்பியர் நூலே! இதன்கண், எழுத்து, சொல், பொருள்-இம்மூன்றிற்குரிய இலக்கணங்கள் எடுத்தோதப் பெறுகின்றன. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழ்மொழியில் எழுத்துக்கள் உண்டு என்பதற்கு, அவர்தம் நூலே சான்றாய் நிற்கின்றது.

''எழுத்தெனப் படுப
அகரமுதல் னகர இறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே''[2]

தமிழில், உயிர் பன்னிரண்டும், மெய் பதினெட்டும் ஆக முப்பதும் முதல் எழுத்துக்கள் எனப்படும். ஏனைய,

சார்பெழுத்துக்கள் ஆம்! தொல்காப்பியர், 'சார்பெழுத்து மூன்று' என்பார்; பிற்காலத்துத் தோன்றிய பவணந்தியார், 'சார்பெழுத்தின் வகைகள் பத்து என்பார்.[3]

இன்று, தமிழிலுள்ள முதல் எழுத்துக்கள் முப்பது ஆயினும், உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு, ஆய்தம் ஒன்று இவற்றைச் சேர்த்தால் இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்களாகின்றன. இவற்றின் எண்ணிக்கையே மிகுதி என்பாருமுண்டு. இங்ஙனமிருக்க, இவ்வெழுத்துக்களோடு, வடமொழி எழுத்துக்களான ஷ, ஸ, ஜ, க்ஷ, ஹ, ஸ்ரீ முதலான எழுத்துக்களையும் சேர்த்துத் தமிழர்கள் எழுதி வருகின்றனர். கல்லாதவரேயன்றிக் கற்றுவல்ல தமிழ்ப்புலவர்களும் இவ்வெழுத்துக்களைத் தமிழிற் கலந்து எழுதி வருகின்றனர். இங்ஙனம் எழுதுதல், தமிழ் இலக்கணமுறைக்கு ஏற்றதா எனச் சிந்தித்து முடிவு காணுதல் நம் கடமையாகும்.

### வடசொல்

பொதுவாக, எந்தவொரு மொழியிலும், வேற்றுமொழிச் சொற்களைக் கலந்து எழுதுதல் கூடாது. இருப்பினும், மக்கள், சேர்ந்து வாழும் இயல்பினராதலின், பிறமொழியினரோடு அன்றாட வாழ்வில், தொடர்பு கொள்ள வேண்டியவராகின்றனர். ஆதலின், விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், ஒரு மொழியில், பிறமொழிச்சொற்கள் கலத்தல் கூடும். ஆனால், அங்ஙனம் கலத்தற்கும் ஒரு வரையறையுண்டு. அவ்வரையறையினை மீறிப் பிறமொழிச் சொற்கள் புகுமானால் மொழிநலம் கெட்டுவிடும். ''பிறமொழிச் சொற்கள் தம் மொழியில் புகுவதை ஒவ்வொரு மொழியினரும் ஒவ்வொரு காலத்தில் எதிர்த்து வந்திருக்கின்றனர். பிரெஞ்சு மொழிச் சொற்கள் செர்மன் மொழியில் மிகுதியாகக் கலந்தபோது, இவ்வாறு அடிக்கடி எதிர்ப்பு இருந்து வந்தது. தமிழில், வட்சொற்கலப்பும் இவ்வாறே தொடர்ந்து எதிர்க்கப்பட்டு வருகின்றது'' என்கிறார் டாக்டர் மு. வரதராசனார்.[4]

தொல்காப்பியர் காலத்திலேயே வடசொற்கள், தமிழில் வந்துபுகத் தொடங்கிவிட்டன. சொற்களைப் பாகுபாடு செய்ய வந்த அவர், 'இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல்'[5] என நால்வகையாகப் பகுத்தார்.

எந்தவொரு மொழியிலும், பிறமொழியிலிருந்து கடன் வாங்காத அளவுக்கு அத்துணைச் சொற்களும் உள்ளன என்று கூற

முடியாது. அது, மொழியியலுக்கு முரணானதுமாகும். ஆனால், கடன் வாங்கப்படும் சொற்கள், எங்ஙனம் மொழியியலுக்கு ஏற்ப அமையவேண்டும் என்பதே கேள்வி.

இன்றியமையா நிலை ஏற்பட்டால், வடசொற்கள் (அல்லது பிறசொற்கள்) தமிழில் வந்து கலக்கலாம். ஆனால், அச்சொற்கள், எந்த வடிவத்தில் கலத்தல் வேண்டும் என்பதற்குத் தொல்காப்பியரே நமக்கு வழிவகுத்துத் தந்துள்ளார்.

''வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே''[6]

என்பது அவர் கூற்று. இதற்கு உரையெழுதவந்த சேனாவரையர், ''வடசொற் கிளவியாவது, வடசொற்கே உரியவெனப்படும் சிறப்பெழுத்தினீங்கி இருசார் மொழிக்கும் பொதுவாகிய எழுத்தான் இயன்ற சொல்லாம்'' என்கிறார். எனவே, வடசொற்கள், தமிழில் வந்து வழங்க நேர்ந்தால், வடமொழிக்கே உரிய எழுத்துக்களான ஷ,ஸ, ஜ, க்ஷ, ஹ, ஸ்ரீ முதலாயின நீங்கப் பெற்றுத் தமிழுக்கேற்ற வடிவங்களைப் பெறவேண்டும் என்று உணர்கின்றோம்.

தொல்காப்பியரைப் பின்பற்றி நன்னூலாரும், 146 முதல் 150 முடியவுள்ள நூற்பாக்களில், வடமொழிச் சொற்கள் தமிழில் வந்து வழங்கும் வகைகளை விளக்குகின்றார். அவர் கூற்றுப்படி, ''வடமொழிக்கும் தமிழுக்கும் பொதுவாகவுள்ள எழுத்தாலாகி, விகாரமின்றித் தமிழில் வந்து வழங்கும் வடமொழி 'தற்சமம்' எனப்படும். (எ.டு: கமலம், காரணம் முதலாயின). வடமொழிக்கே உரிய சிறப்பெழுத்தாலும், பொதுவும் சிறப்பு மாகிய ஈரெழுத்தாலுமாகித் திரிதல் முதலிய விகாரம் பெற்றுத் தமிழில் வந்து வழங்கும் வடமொழி 'தற்பவம்' எனப்படும். (எ.டு)1. சுகி, போகி, சுத்தி, 2. ஹரி; அரி; ஹர; அரன்; ரிஷபம்-இடபம்; விஜயம்-விசயம்; ஸ்தலம்-தலம்; பங்கஜம்-பங்கயம்; பாஷை-பாடை; ஸபை-சபை; மோஹம்-மோகம்; லக்ஷணம்-இலக்கணம்; யக்ஷன்-இயக்கன்)

*தமிழ்ப் புலவர்கள்*

சங்ககால முதற்கொண்டு தற்காலம் வரையுள்ள தமிழ்ச் செய்யுள்களைத் துருவி ஆராய்ந்தால், பெரும்பாலான தமிழ்ப் புலவர்கள், மேற்காட்டிய இலக்கண விதிகளுக்குச் சிறிதும் பிறழாமற் பாடியுள்ள பான்மையினைக் காணலாம். ''சங்க காலத்

தில் நூற்றுக்கு இரண்டு என்னும் அளவில் இருந்த வட சொற்கள், பதினெண்கீழ்க் கணக்கிலும், சிலப்பதிகாரம் மணிமேகலையிலும் நூற்றுக்கு நான்கு, ஐந்தாகப் பெருகியுள்ளன.''[7] வடசொற்கள், தமிழில் மிகுதியாகப் பயின்றமை இடைப்பட்ட காலத்திலும், பிற்காலத்திலுமேயாம்! நாயன்மார்கள், ஆழ்வார்கள், கம்பர், வில்லிபுத்தூரார் போன்ற புலவர்கள் முதலானோர் வடசொற்கள் மிகுதியாகக் கொண்டிருந்தாலும், இவர்களனைவரும் முத்தமிழ்த் துறையில் துறைபோகிய உத்தமக் கவிஞர்களாதலின், தமிழ் நெறிக்குச் சற்றும் புறம் போகாமல், பாடியுள்ளமை போற்றத் தக்கது.

''செழுஞ்சுடர் நற்சோதி!; சாத்திரம் கேட்கிலென்;
சலம் பூவொடு; மால்வரையும் தானம் துளங்கி''[8]

இவற்றுள், ஜோதி, சாஸ்திரம், ஜலம், ஸ்தானம் முதலான சொற்கள் தமிழ்மொழிக்கேற்பச் சோதீ, சாத்திரம், சலம், தானம் எனத் திரிந்து வந்துள்ளன. 'ஸ்ரீசைலமாலை' என்பது சுந்தரர் தேவாரத்தில் 'சீபர்ப்பதமலை' என வந்துள்ளது. அவ்வாறே, விஜயன் என்பது விசயன் என்றும் துஷ்டன் என்பது துட்டன் என்றும் வந்துள்ளன.

''மானிட சாதியில் தோன்றிற்று ஓர் மானிட சாதியை'' எனப் பெரியாழ்வாரும் 'சேமமே வேண்டித் தீவினை பெருக்கி'' எனத் திருமங்கையாழ்வாரும், ''கரிய மேனியன் செய்ய தாமரைக் கண்ணன்'' என் நம்மாழ்வாரும் பாடிய பாடல்களில் ஜாதி, க்ஷேமம், கிருஷ்ணன் முதலான சொற்கள், எங்ஙனம் தமிழ் வடிவம் பெற்றன என்பதை அறியலாம்.

வடமொழிப் பெருங் காவியங்களான இராமாயணம், பாரதம் இவற்றை முறையே தமிழிற் பாடவந்த, கல்வியிற் பெரிய கம்ப நாடரும், வில்லிபுத்தூராரும், மறந்துங்கூட; ஏன், மருந்துக்குக்கூட, வடவெழுத்தை அமைத்தார்களில்லை! அவை, வடமொழிக் காவியங்களாதலின் வட சொற்கள் மிகுதியாக வந்து வழங்கல் இயல்பு. அந்நிலையினும் தமிழின் நீர்மையை மறவாமல் காவியம் பாடினர் எனின் அவர்களின் தாய்மொழிப் பற்றை எவ்வெழுத்தாற் போற்றுவது! ஹரி, லஷ்மணன், ஸீதா, ஜானகி, ராமன் முதலான சொற்களை முறையே அரி, இலக்குவன், சீதை, சானகி, இராமன் என மாற்றிய பெருமை கம்பருக்குரியதன்றோ? இவ்வாறே, வில்லிபுத்தூராரும், அஸ்வத்தாமன், ஹஸ்தீ, விஜயன், இந்திரப்பிரஸ்தம்,

யுதிஷ்ட்ரன், கடோற்கஜன், கர்ணன், பீஷ்மன், வியாஸர் முதலான சொற்களை முறையே அசுவத்தாமன், அத்தி, விசயன், இந்திரப்பிரத்தம், உதிட்டிரன், கடோற்கசன், கன்னன், வீடுமன், வியாதனார் எனத் தமிழ்ப்படுத்தினார் எனின், வில்லியின் நல்லியல்பை நாம் மறக்க முடியுமா?

இடைக் காலத்தில் வாழ்ந்த பிற புலவர்களும், பிற்காலப் புலவர்களும்கூட, இந்நெறியிலிருந்து பிறழாமற் பாடியுள்ளனர் என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கது. தென்னாற்காட்டில் உள்ள வைணவத் திருப்பதி ஸ்ரீமுஷ்ணம் என்பது. இங்குள்ள வராகமூர்த்தியைப் பாடவந்த புலவரொருவர் ''முட்டத்துப் பன்றி முளிரித் திருப்பதத்தை'' என்கின்றார். ஸ்ரீமுஷ்ணம், இவர் பாடலில் முட்டம் ஆயிற்று!

ஔவையார் பாடிய தனிப்பாடல் ஒன்றில், 'அஷ்டமத்துச் சனி' என்பது 'அட்டமத்துச் சனி'யாயிற்று. கி.பி. 14 - ஆம் நூற்றாண்டுப் புலவரான காளமேகம், 'தரித்திர ராசன்' என்கிறார். கி.பி.15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தத்துவப்பிரகாசர், எட்டு இடங்களில் திட்சை போகோம் என்கிறார். கி.பி.16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இராமகவிராயர், 'சாலைமுத்துக் கிட்ணன் அருள்' என்கிறார். படிக்காசுப் புலவர், 'சீர் கறுப்பொன்றில்லாத கத்தூரி மன்னன்' என்றும், குமரகுருபர அடிகளார், 'குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு குமரனை'; அட்ட மூர்த்தமாம்' 'அபிடேகவல்லி' என்றும் பாடியுள்ளனர். (ஸலாம் என்ற முகமதியச் சொல் 'சலாம்' ஆயிற்று). திவ்விய கவிபிள்ளைப் பெருமாளையங்கார், 'சின்முத் திரைதரித்துத் தெக்கணா மூர்த்தி' என்கிறார். துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளார், 'நிட்டையிலேயிருந்து மனத்துறவடைந்த' என்கிறார். இந்நான்கு புலவர்களும், ஏறத்தாழ 300 ஆண்டுகளுக்கு முற்பட்டவர்களாவர். 200 ஆண்டுகளுக்கு முன்வாழ்ந்த பலபட்டைச் சொக்கநாதபிள்ளை என்பார், தமது 'அழகர்கிள்ளைவிடுதூது' நூலில்,

''தெள்ளு தமிழழகர் சீபதிவாழ் வார்மீது''

''செகமுழுது நீஞான''; ''இன்னிய மார்க்கு மிடபகிரி''

''ஆலத்தி எடுத்து''; ''உன்னை உருப்பசியா யென்ன''

''தேயசொளிர்''; ''விட்டுவெனும் சோதி கருணைக்கடல்''

என்றெல்லாம் பாடுகின்றார். இவற்றில் சீபதி என்பது ஸ்ரீபதி யாகிய அழகர் மலை, ஜகம், ரிஷபகிரி, ஹாரத்தி, ஊர்வஸி, தபஸ், துவஜஸ்தம்பம், தேஜஸ், விஷ்ணு, ஜோதி முதலான

வடசொற்கள், வடவெழுத்து நீங்கி எத்தகைய தமிழுருவம் பெற்று நம்மை இன்புறுத்துகின்றன காண்மின்!

**எங்ஙனம் நுழைந்தது**

இவ்வாறு அண்மைக் காலம் வரையிலுங்கூடத் தமிழ்ப் புலவர்கள், வடவெழுத்துக்களைத் தமிழிற் கலவாமல் தமிழிலக்கண விதிகட் கேற்பப் பாடித் தமிழுக்கு அணி செய்திருக்க, வடவெழுத்துக்கள் எக்காலத்தில், தமிழ் நடையில் கால் கொள்ளத் தொடங்கின என்று சிந்தித்தல் வேண்டும்.

வேற்றவர் வருகையாலும், வேற்றுச் சமயங்களாலும், தமிழ் மொழியில் அளவிருந்த வடசொற்கள் மட்டுமன்றி, வடவெழுத்துக்களும் பயின்று வரத் தலைப்பட்டன என்று கூறினால் மிகையாகாது. வடவெழுத்துக்கள் தமிழில் கலக்கத் தொடங்கியதற்கு முதன் முதல் வித்திட்டவர்கள் பல்லவர்களே யாவர்!

''பல்லவர் காலம் ஏறத்தாழக் கி.பி.250 முதல் 900 முடிய எனலாம். அக்காலத்தில், சங்க காலத் தமிழில் இல்லாத அளவு வடமொழிக் கலப்புத் தமிழில் உண்டாகி விட்டது. பல்லவர் வடவர் ஆதலின், அவர் பட்டயங்கள் எல்லாம் வடமொழியிலேயே எழுதப்பட்டுள்ளன என்கிறார் டாக்டர் மா. இராசமாணிக்கனார்.[9]

தமிழில், வடசொற்களைக் கலந்தமை ஒருபுறமிருக்க, வடவெழுத்துக்களை அப்படியே கலந்த கொடுமையை மறத்தற்கில்லை! கல்வெட்டின் தொடக்கத்திலும் முடிவிலும், ஏதாவதொரு வடமொழிச் சுலோகத்தை அமைக்கும் பழக்கத்தை உண்டு பண்ணியவர்களும் இப் பல்லவர்களே யாவர்! பின்னர் வந்த சோழப் பேரரசர்களும், பாண்டிய மன்னர்களுங்கூடச் சிறிதும் சிந்தனை செய்யாமல், இம்முறையைப் பின்பற்றத் தொடங்கிவிட்டனர். அன்று தொடங்கிய இத்தொற்று நோய், விழிப்புணர்ச்சி பெற்ற இக்காலத்துங்கூட, நம்மை விட்டு அகலாதிருப்பது விந்தைக்குரியதே!

இதுகாறும் கிடைத்த தமிழ்க் கல்வெட்டுக்களில், காலத்தாற் பழமையானது (கி.பி. 5 அல்லது 6 - ஆம் நூற்றாண்டு) செஞ்சிக் கடுத்த திருநாதர்குன்றில் ஒரு பாறை மீது வெட்டப்பட்டிருக்கும் கல்வெட்டாகும். இது, நான்கு வரிகளையுடைய மிகச் சிறிய கல்வெட்டாகும். இதில் வடவெழுத்தென்பதே இல்லை.

1. ஐம்பத் தேழன

2. சனந்நோற்ற

3. சந்திரநந்தி ஆ

4. சிரிகர் நிசீதிகை.

இது, சந்திரநந்தி ஆசிரியர் என்னும் சைனத்துறவி, சல்லேகனத்தால் (வடக்கிருத்தல் போன்றது) தன்னுயிரை முடிப்பித்துக் கொண்ட செய்தியைக் குறிக்கிறது என்பார் கோபிநாதராவ்.[10] இதிற் காணப்படும் எழுத்து வடிவத்திற்கும் இன்றுள்ள தமிழ் வடிவத்திற்கும் வேறுபாடுண்டு. எனினும் இவை தமிழ் எழுத்துக்களே. இது, மிகமிகச் சிறிய கல்வெட்டாதலின் இதில் வடவெழுத்து இல்லைபோலும்!

இதனையடுத்து நம் கண்முன் தோன்றுவது, நந்திவர்மனின் கி.பி. 789 - ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும். இது, திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதி கோவிலின் கண் உள்ளது.

''ஸ்வஸ்திஶ்ரீ பல்லவகுல திலத பாரத்வாஜ கோத்ராலங்கார
பதியாகிய ஶ்ரீநந்திவர்ம மஹாராஜற்கு வர்ஷ வர்த்தனம்
யாண்டு.......ஸ்வஸ்தி''

இரண்டு வரிகளில் எத்தனை வடசொற்கள்- வடவெழுத்துக்கள்? அக்காலத் தமிழின் நிலையறிவு இஃதொன்றே சாலும்!

''திருமன்னி வளர விருநில மடந்தையும்
போர்ச்சயப் பாவையும் சீர்த்தனிச் செல்வியும்''

என அழகிய செய்யுள் நடையில் அமைந்த கல்வெட்டிலுங் கூடத் தொடக்கத்தில் 'ஸ்வஸ்திஶ்ரீ' என்றெழுதப்பட்டுள்ளது.[11] தென்காசி விசுவநாதர் கோவிலில் உள்ள அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் கல்வெட்டொன்றில் 16 அழகிய தமிழ்ச் செய்யுட்கள் காணப்படுகின்றன. ஆனால், தொடக்கமோ 'சுபமஸ்து' என்று உள்ளது!

வடவெழுத்துச் செல்வாக்குப் பெற்ற இத்தகு கல்வெட்டுக் களிற் கூட ஆங்காங்கு, வடவெழுத்து நீக்கம்பெற்று, தமிழ் வடிவம் பெற்றுள்ளமை போற்றத் தக்கது.

''எழுதினன் ஊர்க்காணத்தான் அலங்காரன் சிராமன்''[12]

''எழுதினன் ஊர்க்காணத்தான் வடுகன் பாக்கரன்''[13]

இவற்றில் ஸ்ரீராமன்-சிராமன், பாஸ்கரன்-பாக்கரன் என வந்துள்ளமை காணலாம்!

தற்காலத்தில், பிற வடவெழுத்துக்களை நீக்கி நல்ல தமிழில் எழுதுவோரும், 'ஸ்ரீ' என்ற வடவெழுத்தை நீக்கத் துணிவற்றவரா யிருக்கின்றனர். 'ஸ்ரீ' என்னும் எழுத்துக்கு ஈடாகத் 'திரு' என்னும் சொல், வழக்காற்றில் இருந்து வருகின்றது. 'ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை' என்று, முன்பு எழுதி வந்தவர்கள், தற்போது 'திரு. மீனாட்சி சுந்தரம் பிள்ளை' என்று எழுதுகின்றனர். ஆனால் 'ஸ்ரீமுருகன் கோவில்' என்று எழுதுவதை மாற்றித் 'திருமுருகன் கோவில்' என்றெழுதத் தயங்குகின்றனர். ''ஸ்ரீ என்பது தெய்வத் தன்மையுடையது. ஆனால் திரு என்பது தெய்வத்தன்மையற்றது'' என்று கருதும் மனப்பான்மையே இதற்குக் காரணம். ஆண்டவன் திருப்பெயர்களுக்கும், அடியவர் பெயர்களுக்கும், ஊர்ப் பெயர் களுக்கும், நூல்களுக்கும் திரு என்னும் அடைமொழி தந்து போற்றி வந்த, நம் முன்னோர் செயலை நினைந்தால் இத்தகு தவறான எண்ணம் எழ வழியில்லை!

### வடவெழுத்துச் செல்வாக்கு

பல்லவர் காலக் கல்வெட்டுக்களில் தோன்றிய வட வெழுத்துக்கள், பிற் காலத்தே உரைநடை நூல்களில் மிகுதியான செல்வாக்குப் பெற்றுவிட்டன! ''கி.பி.9,10-ஆம் நூற்றாண்டு முதல் 13 - ஆம் நூற்றாண்டு வரையிருந்த சமணர்களே, தமிழில் இன்று காணும் வடசொற்களிற் பெரும்பாலானவற்றை வழக்கிற் கொண்டு வந்தவர்களாவர். ஆனால் இவை, தமிழ் ஒலிப் பியலுக்குத் தக்கபடி மாற்றப்பட்டன'' என்கிறார் கால்டுவெல் பெருமகனார்.[14]

உரைநடையின் தோற்றத்தைச் சிலப்பதிகார நூலிலேயே காண்கின்றோம். பின்பு, இறையனார் களவியலுரை வந்தது. தொல்காப்பியர் நூலுக்கு உரை எழுதிய இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் போன்றோரும், திருக்குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகரும், வடவெழுத்துக் கலப்பல்லாத நல்ல தமிழ் நடையிலேயே எழுதியுள்ளனர். ஆனால் இடையில் தமிழும் வடமொழியும் கலந்த 'மணிப்பிரவாள நடை' என்ற ஒன்று தோன்றித் தமிழன்னையின் நல்லுடலை மாசுபடுத்தி விட்டது!

நாலாயிர திவ்வியப் பிரபந்தம் பாடிய ஆழ்வார்கள், 'இருந்தமிழ் நன்மாலையை எம்பெருமான் இணையடியிற் சூட்டி'

இன்புற்றவர்கள். அவர்கள் பாக்களில், எங்கேனும், ஓரிடத்திலாயினும் வடவெழுத்துக் காண்டற்கில்லை. ஆனால் அத்தகு தெய்வத் தமிழ்ப் பாக்களுக்கு 'ஈடு' என்னும் உரைவகுத்தவர், வடவெழுத்துக்களை அளவிறந்தவாறு கையாண்டுள்ளார். ஒரு சான்று காண்போம்.

'ரக்ஷிப்பது(தான்) அபேக்ஷிப்பாரின்றிக்கேயிருக்கத் தானே ரக்ஷிக்கும் அவன். (பொழிலேழும்) கீழும் மேலும் ஒன்றாக நினைத்துச் சொல்லுகின்றதால், ஸ்வசரீர ரக்ஷணம் பண்ணுவது ஸ்நேகபுரஸ்ஸரமாகையிறே. (நல்கித்தான் இத்யாதி) நாமரூப விபாகாநர்ஹமாய் கிபந்தவன்று யாரிடமிருந்து அபேக்ஷிக்க இத்தை உண்டாக்கிற்று''[15].

தமிழர்களின் மொழிநலம் பேணாத் தன்மைக்கு இதனை விட வேறு சான்று வேண்டுமோ?

நம் தமிழகத்திற்கு வந்த கிறித்துவர்களும், முகமதியர்களும், தமிழின் தனித்தன்மை தெரியாதவர்களாயிருந்தமையால், அவர்கள் எழுதிய நூல்களிலும் இத்தகு நடை காணப்படுகின்றது.

மேலைநாட்டிலிருந்து இங்குவந்த தத்துவபோதகர் என்னுங் கிறித்தவப் பெரியார் (கி.பி.1605) எழுதிய 'தூஷணத்திக்காரம் என்ற நூலில், ''தன் இஷ்டப்பிரசாதத்தை மனுஷனுக்குக் கொடுக்கறதுக்கும் வல்லவராய் இருக்கிறாரொழிய, வேறே பொருளிலே தேவ இஷ்டப்பிரசாதமானது மனுஷனுக்கு....'' என்று எழுதுகின்றார்.[16].

'திரியேகத்துவ நிவாரணம்' என்ற முகமது சமய நூலில் (1876) வரும் உரைநடை : ''அல்லாஹுத்தாலா ஏகமாயும் முகம்மது ரசுலுல்லாவவர்கள் அல்லாஹுத்தாலாவின் தீர்க்கதரிசியென்கிற நபியாயுமிருப்பதைப் பற்றி அரபி-பார்சி-ஹிந்துஸ்தானி பாஷைகளில் அநேக கிதபுகள் செய்யப்பட்டிருக்கின்றன''[17].

பிற்காலத்தே அச்சுக்கூடங்கள் தோன்றியபோது, உரைநடை நூல்களில் மட்டுமன்றிச் செய்யுட்களிலும் வடவெழுத்துப் புகுந்துவிட்டது! நூறு ஆண்டுகட்கு முன்னிருந்த மாயூரம் வேதநாயகம்பிள்ளை எழுதிய 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்ற உரைநடை நூலில் ஆங்கொன்றும் ஈங்கொன்றுமாக ஓரிரு வடவெழுத்துக்களே காணப்படுகின்றன. ஆனால் சுப்பிரமணிய பாரதியாருடைய பாடல்கள் சிலவற்றில் வடவெழுத்துக் காணப் படுகின்றது. ''காக்கை குருவி எங்கள் ஜாதி'' என்பதைக்

குறிப்பிடலாம். அதே வேளையில் 'சாதிகள் இல்லையடி பாப்பா' என்றும் காணப்படுகின்றது. அவரெழுதிய கட்டுரைகளில், வடவெழுத்துக்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. "பல தேவராக... உபாஸனை... வைஷ்ணவன்... ராமன் கக்ஷி, கிருஷ்ணன் கக்ஷி... லக்ஷணம்"[18].

பல தமிழ்நூல்களைப் பதிப்பித்துத் தமிழன்னைக்கு மணி மகுடஞ் சூட்டிய தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாதையரவர்களும், தம் நூலில் வடவெழுத்துக்களைக் கையாண்டுள்ளனர்: "சற்றேறக்குறைய இருநூறு வருஷங்களுக்கு முன்பு தஞ்சாவூர் ஸமஸ்தானத்தை ஆண்டு வந்த அரசர்" என்று எழுதுகின்றனர்.[19]. கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, 'ஆசியசோதி' என்றே தம் நூலுக்குப் பெயரிட்டதோடன்றி, நூலில் 'சுஜாதை' போன்ற பல சொற்களில் வடவெழுத்தைக் கையாள்கின்றார்.

இவர்களனைவரும் தமிழ் இலக்கணங்கற்ற பெரும் புலவர் களாயிருந்தும், வடவெழுத்துக்களை நீக்கி எழுதவேண்டும் என்ற எண்ணம் இல்லாதவர்களாயிருந்தமை வருந்தற் குரியதே! இத்தகு வடவெழுத்துக் கலப்பைக் கண்ணுற்ற புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார்.

"தனித்தியங்கத் தக்கதெனத் தமிழ்பற்றித்
தமிழ்ப்புலவர் சாற்று கின்றார்
இனித்திடுமவ் விருநூலில் வடமொழி ஏன்?
வடவெழுத்துக் கொழுங்குதான் ஏன்?"[20]

என்று தமிழ்ப்புலவர்களைப் பார்த்துக் கேட்கின்றார். "வடவெழுத்துக்கள் தமிழில் இன்ன வடிவிற் கலக்கலாம் என்று இலக்கணம் வகுத்ததே தவறு" என்கிறார் கவிஞர்!

வடமொழியில் மட்டுமின்றி ஆங்கிலத்திலிருந்து வந்த சொற்களும், தமிழ் மொழியியலுக் கேற்பத் திரிந்து வழங்கி வருதல் காண்கின்றோம். Europe ஐரோப்பா; England இங்கிலாந்து; Jesus Christ இயேசு கிறித்து என்பனபோன்ற பல சொற்கள் இன்றும் பயிலக் காண்கின்றோம். சீனமொழியிலும் 'கிறிஸ்து' என்ற சொல்லைக் 'கிலிசெது' என்று எழுதுகின்றனர். சப்பானிய மொழியில் லகரம் அமைந்த பிற மொழிச் சொற்களை ரகரம் எனத் திரித்தும் சிறிது வேறுபடுத்தியும் ஒலிக்கின்றனர் என்று அறிகின்றோம்.[21]

எனவே, தமிழில் எழுதுங்கால், எவ்வகைப் பிறமொழிச் சொற்களாலும் அவற்றைத் தமிழ் இலக்கணத்திற்கேற்பத் திரித்து

வழங்குவதே, தமிழன்னைக்கு நாம் செய்யுந் தொண்டாகும். இல்லையேல், காலப்போக்கில் தமிழின் தனித்தன்மை கெட்டு விடுவதோடு, எல்லாச் சொற்களுமே பிறமொழிகளிலிருந்து வந்தன'' என்று சொல்லும் நிலையுமுண்டாகிவிடும். ஆதலின் இக்குறைபோக்கி, இனியேனும் ஸ, ஷ, ஜ, க்ஷ, ஹ, ஸ்ரீ முதலான வடவெழுத்துக்களைத் தமிழிற் கலந்தெழுதும் நிலையை மாற்றவேண்டும்.

**ஓர் ஐயம்**

இவ்வடவெழுத்துக்களை நீக்கி விடுவோமானால், அவற்றிற்கேற்ற ஒலிக்குறிப்புத் தமிழில் இல்லையே என்ற ஐயம் உண்டாகின்றது. எந்தவொருமொழியிலும், எல்லா ஒலிக் குறிப்புக்குரிய எழுத்துக்களனைத்துமே உண்டு என்று கூறிவிட முடியாது. ஆங்கிலத்தில் 26 எழுத்துக்களே உள்ளன, அவற்றை வைத்துக்கொண்டே ஆங்கிலமொழி, உலகத்திற் பெரும்பகுதி ஆட்சி செலுத்துகின்றது. தமிழில் 247 எழுத்துக்கள் இருந்தும் 'வடவெழுத்துக்களின் உதவி வேண்டும்' என்றால் 'தமிழ் தனித்தியங்கத் தக்கதன்று' என்றாகிவிடும். உலகத்தில் எம்மொழி யினரும், மொழிகளிலிருந்து, தம்மிடம் இல்லாத சொற்களைக் கடன்வாங்குவரேயன்றி எழுத்துக்களை அப்படியே கடன்வாங்கி எழுதுதல் இல்லை. இவ்விழிநிலையைத் தமிழில்தான் காண முடிகின்றது.

ஆங்கிலத்தில் 'ழ' என்ற ஒலிக்குறிப்பு இல்லை. இதற்காக அம்மொழியாளர் 'ழ' என்ற எழுத்தை அப்படியே கடன்வாங்கி Tamiழ் என்று எழுதுவது இல்லை! அதற்கு மாறாக TAMIL அல்லது TAMIZH என்றே எழுதுவர்! எந்த ஒரு பிறமொழிச் சொல்லையும் தங்கள் எழுத்துக்களாலேயே அமைத்துக் கொள் கின்றனரன்றோ? ஆங்கிலத்தில் உள்ள FZ முதலான ஒலிக் குறிப்புக்கள் நந்தமிழில் இல்லை. அதற்காக அவ்வெழுத்துக் களை அப்படியே நாம் பயன்படுத்துவது இல்லை. Coffee என்பதைக் 'காFபி' என்றும், FRANCE என்பதை Fரான்சு என்றும், Zion என்பதை Zயோன் என்றும் எழுதாமல், காபி, பிரான்சு, சீயோன் எனத் தமிழ்முறைக் கேற்பவே எழுதுகின்றோம்! எனவே வடவெழுத்துக்களையும், தமிழில் எழுதும்போது, தமிழ் எழுத்தினாலேயே எழுதி, ஒலிக்கும் போது வடவெழுத்துக்குரிய ஒலிக்குறிப்பைக் கொள்ளவேண்டும். அங்ஙனமில்லையேல், தமிழில் உள்ள ஆய்தவெழுத்தைப் பயன்படுத்திப் பின் கண்டவாறு ஒலிக் குறிப்பை அமைத்துக்கொள்ளலாம்.

ஃச=ஜ ஃஃச=ஸ; ஃஃச=ஷ;

ஃஃக=ஹ; ட்ச=க்ஷ

ஸ்ரீ என்பதற்குத் 'திரு' என்பதையே பயன்படுத்தலாம். இல்லையேல், கல்வெட்டிலும், தமிழ்ப் பாக்களிலும் நம் முன்னோர் கையாண்ட முறைப்படி-'சீ' என்ற எழுத்தைப் பயன்படுத்தலாம்.

### முடிவுரை

தமிழ்ப் பெரும்புலவர்களும், மொழிநூலறிஞர்களும் இது பற்றி நன்காராய்ந்து தமிழ் இலக்கண நெறிக்குச் சிறிதும் ஊறு நேராவண்ணம், தமிழ்மொழியைப் பிற மொழிக் கேட்டினின்று பாதுகாத்துத் தமிழன்னையின் நலத்தினைப் பாதுகாப்பாராக.

### குறிப்புகள்

1. திருவிளையாடற்புராணம்.
2. தொல்காப்பியம்:நூற்பா:1
3. நன்னூல்:நூற்பா:60.
4. மொழி வரலாறு : பக்.100.
5. தொல்காப்பியம்:சொல்:397.
6. தொல்காப்பியம்:சொல்:401.
7. மொழி வரலாறு-மு.வ. (பக்.109).
9. பல்லவர் வரலாறு:பக்.314.
10. செந்தமிழ்-தொகுதி 5.
11. முதலாம் இராசேந்திரசோழன் கல்வெட்டு. (கி.பி. 1031).
12. 2 - ஆம் இராசேந்திரசோழன் கல்வெட்டு. (கி.பி. 1054).
13. முதல் வீரராசேந்திரன் கல்வெட்டு (கி.பி.1068).
14. கால்டுவெல் ஒப்பிலக்கணம்-முன்னுரை பக்.120 (கழகம்).
15. ஆதாரம்:'19 - ஆம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி- அ.மு.பரமசிவானந்தம் (பக்:36)
16. ஆதாரம்! 19 - ஆம் நூற்றாண்டின் தமிழ் உரைநடைவளர்ச்சி - அ.மு. பரமசிவானந்தம் (பக்.77)
17. ஆதாரம்! 19 - ஆம் நூற்றாண்டின் தமிழ் உரைநடைவளர்ச்சி - அ.மு. பரமசிவானந்தம் (பக்.165).
18. பாரதியார் கட்டுரைகள்
19. என் சரிதம்.
20. தமிழியக்கம்.
21. மொழிவரலாறு-மு.வ. (பக்.100-102).

சாலினி இளந்திரையன்
திருவேங்கடவன் கல்லூரி
தில்லி – 1

# சங்க அகத்துறைப் பாடல்களில் பாத்திரப் பண்போவியம்

களவியல் கற்பியல் என்னும் இரண்டு பிரிவுகளாக அமைந்த அகப்பொருள் இலக்கியம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் அய்ந்து திணைகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு திணைக்கும் உரிய ஒழுக்கம், அவ்வத் திணைப் பாடல்களில் இடம்பெறும் நிலத்திணை-இயங்குதிணை உயிர்கள், அந்தந்தத் திணைகளில் நிகழ்ச்சிகள் நடைபெறும் காலங்கள், அவ்வத்திணையில் கூற்று நிகழ்த்துவதற்கு உரியவர்கள் என்பன போன்ற பல கூறுகளும் வரையறுத்துத் திட்டஞ் செய்யப்பட்டுள்ளன. 'இத்தகைய வரையறைக்குள் பாடல் இசைத்தவர்களின் கவிதையில் தனித்தன்மைக்கு இடம் இருக்க முடியுமா?' என்னும் வினா எழுவது இயல்பே.

சங்க அகத்துறைப் பாடல்களை ஆழ்ந்து நோக்கும்போது, இந்த அய்யத்துக்கு இடமில்லாமற் போவதோடு, குறிப்பிட்ட சில பெரும்புலவர்கள் தவிர ஏனையோர் ஒவ்வொருவரும் தனித்தனி இயல்புகள் வாய்ந்த தலைவன் - தலைவியரை மட்டுமே தங்கள் பாடல்களில் சித்திரித்துள்ளார்கள் என்னும் எண்ணமும் உண்டாகிறது.

வாழ்வின் முக்கியமான சிக்கல்களில் ஒருவர் செயற்படும் முறைதான் அவருடைய பண்பு நலனைத் தெளிவாக உணர்த்த வல்லது. எனவே, அக்காலத் தமிழ்ச் சமுதாயத்தில் மிகுதியாக நிலவிய பரத்தைமையைப் பொறுத்த வரையில் தலைவன் தலைவி முதலியோர் நடந்து கொண்ட முறையே அவர்களுடைய வாழ்க்கையின் தனித்தன்மையைக் காட்டும் என்ற கருத்தில், அந்த நிகழ்ச்சியோடு தொடர்புடைய மருதத்திணையில் கனிசமான

அளவு பாடல்கள் இசைத்துள்ள சில புலவர் பெருமக்களைக் கொண்டே இந்த ஆய்வு நிகழ்த்தப்படுகிறது.

அள்ளூர் நன்முல்லையாரின் மருதப் பாடல்களில் சித்திரிக் கப்படும் தலைவனும் பரத்தைமை ஒழுக்கம் உடையவனே. அதைக் காரணமாகக் கொண்டு தலைவி ஊடுதலும் வாயில் மறுத்தலுமாகிய நிகழ்ச்சிகளில் இத்தலைவியின் தனி இயல்பு புலப்படுகின்றது... ''சிறியிலை நெருஞ்சிக் கட்குஇன் புதுமலர் முள் பயந்தாங்கு, இனிய செய்த நம் காதலர் இன்னா செய்தல் நோம் என் நெஞ்சே!'' என்று தலைவனின் பரத்தமை கண்டு[2] வியப்பும் வேதனையும் அடைகிறாள் இவள். தன்னிடம் ஒரு காலத்தில் மிகுந்த அன்பு காட்டியவன் என்பதால்; அவனை வெறுத்துக் கடிந்து கொள்ள முடியாத அவளுடைய மனநிலை இப்பாடலில் நன்கு வெளிப்படுகிறது. பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனை வேதனையோடு ஏற்றுக்கொள்ளும் போது, ''அவர் நமக்கு அன்னையும் அத்தனும் அல்லரோ, தோழி? புலன் அஃது எவனோ; அன்பிலங்கடையே?'' என்று அவள் சொல்லுவதிலும்[3] தன்னைத்தானே நொந்து கொள்வது போன்ற ஓர் உள்முகக் குமுறலே வெளிப்படுகிறது.

தவிர, இவ் இருவரிடையேயும் உள்ள உறவுச்சிதைவைச் சீர்செய்யும் பொருட்டுத் தோழி தலையிடவில்லை என்பதும் இவர்கள் இருவரும் தங்களுக்குள்ளேயே இணங்கிப் போய் விடக்கூடிய அன்பான காதலர்கள் என்பதையே காட்டுகிறது.

வேறு ஒருத்தியோடு வதுவை அயர்ந்த நிலையிலும் இவள்பாலுள்ள அன்பை இவள் தலைவன் விட்டுவிடவில்லை.[4] அவன் தன்னை விட்டுப் பிரிய மாட்டான் என்று உணர்ந்த தலைவி, ''என் ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க; சென்றீ பெரும, நின் தகைக்குநர் யாரே'' என்று கூறுவது ''செல்லாக் காலத்துச் செல்லென விடுத்தல்'' என்னும் இலக்கணத்ததாக[5] அமைந் திருப்பதும் நோக்கத்தக்கது.

ஆலங்குடி வங்கனார் மருதத்திணையில் ஆறு பாடல்கள் பாடியுள்ளார்.[6] இவ் ஆறு பாடல்களும் பரத்தை கூற்று, தோழி (வாயில் மறுத்த) கூற்று என்னும் இரண்டே நிலையில் அடங்குகின்றன.

இப்பாடல்களில் கூற்று நிகழ்த்தும் பரத்தை, தலைவன் தனது தலைவியை விட இவளிடமே ஈடுபாடு கொண்டவன்

என்னும் துணிவோடு பேசுகிறாள்.[7] தலைவன் இவளிடம் மிகுந்த அன்புடையவனாகக் காட்டிக்கொண்டு, தன் மனைவியிடம் போகும்போது அப்படி எதுவும் இல்லாதவன் போல் நடந்து கொள்ளுவதாலேயே தலைவி தன்னை பழிக்கிறாள் என்று அவனை உரிமையோடு கடிகிறாள் இவள். ''ஊரன் எம்மில் பெருமொழிக் கூறித் தம்மில் கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடி(யிற்)ப் பாவை போல மேவன செய்யும் தன் புதல்வன் தாய்க்கே'' என்னும் இச்செய்தி[8] அவன்பால் இவள் கொண்டாடிய உரிமையை விளக்குகிறது. ''மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து அறம்கெட அறியாதாங்கு, சிறந்த மேன்மையோடு அளைஇ, நீயே, கெடு அறியாய் என் நெஞ்சத்தானே'' என்று பரத்தை தலைவனிடம் கூறும் பகுதியில்[9] அவளுக்கு அவனிடமிருந்த ஈடுபாடு புலப்படுகிறது.

இவருடைய மற்ற மூன்று பாடல்களிலும் (தோழி கூற்றாக) வரும் செய்திகள், பரத்தைக்கு இந்த அளவு உரிமை ஏற்படக் காரணமாக இருந்தது, தலைவன் (தலைவியை விடப்) பரத்தையை மிகுதியாக விரும்பியதே என்பதை விளக்குகின்றன. தலைவன் தன் தலைவியிடம் வருவதே இல்லை[10] பரத்தையரை மணந்துகொள்ளத் தலைவன் முயல்கிறான்[11], தன் தலைவனைக் கண்டிக்க முடியாமலும் விடமுடியாமலும் தலைவி ஏங்குகிறாள்[12] என்னும் உண்மைகள் இப்பாடல்களில் வருகின்றன. தலைவியின் இந்நிலைக்கு இரங்கி, ''தெறுவது அம்ம இத்திணைப் பிறத்தல்லே'' என்று தோழி வருந்தும் நிகழ்ச்சியும் இவற்றுள் ஒரு பாடலில்[13] இடம் பெறுகிறது.

இந்த ஆறு பாடல்களையும் ஒருங்கு வைத்துப் பார்க்கையில், அளவு மீறிய பரத்தை ஒழுக்கமுடைய ஒரு தலைவன், அவனைத் தடுத்துத் திருத்த முடியாத ஒரு மனைவி, அவளுடைய நிலைக்காக வருந்தும் ஒரு தோழி ஆகியோரைக் கொண்ட ஒரு குடும்பத்தின் சித்திரமே நமக்குக் கிடைக்கின்றது.

ஓரம்போகியார் சித்திரிக்கும் தலைவன் சற்றே வேறுபட்டவனாக உள்ளான். ''நும்மோர் அன்னோர் மாட்டும் இன்ன பொய்யொடு மிடைந்தவை தோன்றின் மெய் யாண்டு உளதோ, இவ் உலகத்தானே?'' என்று தோழி தலைவனைக் கடிந்து கொள்ளும்போது[14], அவனைத் திருத்தி விடலாம் என்ற நம்பிக்கை அவளுக்கு இருப்பது விளங்குகிறது.

தலைவனுக்கு இவ்விதம் அறிவுரை கூறிய தோழி, ''பரத்தைமை தாங்கலோ இவன் என வறிது, நீ புலத்தல்

ஒன்னுமோ?'' என்று[15] தலைவியையும் அறிவுறுத்துகிறாள். தலைவன் பரத்தைமை ஒழுக்கமுடையவனானாலும், தலைவி அவனை வெறுத்து விடாமல் இருந்தால் அவனை நல்வழிப்படுத்தி விடலாம் என்று தோழி நம்புகிறாள் என்பது இங்கே புலனாகிறது. இந்த அறிவுரையால் தெளிவடைந்த தலைவி, தன் தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்தை அவனிடமே குறிப்பிட்டு நகையாடும் போதும்[16] ''குறுந்தொடி மகளிர் நலனுண்டு துறத்தியாயின் மிக நன்று, அம்ம, மகிழ்ந்த, நின்சூளே'' என்று தலைவனிடம் தோழி நகையாடும் போதும்[17] அவன் திருத்தப்படக்கூடியவன் என்பதில் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை வெளிப்படுகின்றது.

இத்தலைவன் தன் தலைவியின் பாலும் மிகுந்த காதல் உடையவனே என்பது, ''இனையள் என்று அவட் புனையளவு அறியேன்'' என்று அவன் தலைவியின் நலம் பாராட்டுவதிலும்[18] தெளிவாகிறது.

ஓரம்போகியார் பாடிய ஐங்குறுநூற்றிலும், இதே குடும்பநிலை வருவிக்கப்படுகிறது. இதன் முதற்பாடலே, ''புறத்தொழுக்கத்திலே நெடுநாளாய் ஒழுகி, 'இது தகாது' எனத் தெளிந்த மனத்னாய் மீண்டு தலைவியோடு கூடி ஒழுகா நின்ற தலைமகன், தோழியோடு சொல்லாடி, 'யான் அவ்வாறு ஒழுக நீயிர் நினைத்த திறம் யாது?' என்றாற்கு அவள் சொல்லியது'' என்னும் குறிப்புடன்தான் தொடங்குகிறது.

ஔவையாரின் மருதப்பாடல்களில் உருவாகும் தலைவன் மிகுகாமம் உடையவனாகவும் தலைவியை அடியோடு புறக்கணிப்பவனாகவும் காணப்படுகிறான். ''ஊரன் பெண்டினை ஆயின் பலவாகுக நின் நெஞ்சிற் படரே,... சிலவாகுக நீ துஞ்சும் நாளே! என்று தனக்குத் தானே சொல்லிக் கொள்ளுகிறாள்[19] இத்தலைவி. இதற்குக் காரணம், அவன் இல்லாமல் அவளால் வாழ முடியவில்லை. ''வன்கண் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே'' என்று ஒரு தோழி சொன்னது[20] போன்ற திறன் இல்லாதவள் இத்தலைவி. இதுவே தலைவன் தான் நினைத்தபடி செல்ல வசதியாயிற்று.

அவனால் விரும்பப்பட்ட ஒரு பரத்தை, ''நானும் அவனும் புதுப் புனலாடப் போகிறோம்; முடிந்தால் அவன் மனைவி தன் ஆட்களோடு வந்து அவனை (என்னோடு வராமல்) தடுத்து விடட்டும் பார்ப்போம்'' என்று[21] அறைகூவல் விடுகிறாள்!

அவனுடைய இற்பரத்தையும், அவனுக்கு மற்றவர்களை விடத் தன்னிடமே அன்பு மிகுதி என்று உரிமை கொண்டாடுகிறாள்.[22] பரத்தை கூற்றாக வரும் மற்றொரு பாடல், 'அழகிய புதியவள் ஒருத்தியைக் கண்டால் பழைய பரத்தையரை எல்லாம் கைவிட்டு அவளைத் தலைவன் சேர்த்துக் கொள்ளுவான்' என்று[23] வெளிப்படையாகவே பேசுகிறது.

நக்கீரனாரின் மருதப் பாடல்களில் சித்திரிக்கப்படும் தலைவன்-தலைவியர் சற்றேறக்குறைய அள்ளூர் நன்முல்லை யாரின் பாடலில் வருபவர்களைப் போன்றவர்களே. பரத்தை ஒழுக்கமுடைய இவன் தன் தலைவியிடமும் நெகிழ்ந்த அன்புடையவனாகவே இருக்கின்றான்.

இவன் வேறு ஒருத்தியிடம் தொடர்பு கொண்டிருந்த செய்தி ஊரெல்லாம் பரவித் தலைவிக்குத் தெரிந்து விடுகிறது.[24]. ஆனாலும், பரத்தையிற் பிரிந்து வந்த அவனிடம், ''புல்லேன் பெரும, புலத்திலும் இல்லேன்... வாணன் சிறுகுடியன்ன என் கோல்நேர் எல்வளை நெகிழ்த்த நும்மே''[25] என்று கூறுகிறாள். அதாவது, கடவுட் கற்புடையவர்களாகக் கூறப்படும் தலைவியர் போல, அவன் செய்த துன்பத்தை இவள் தன் அகத்தே ஒளித்துக் கொள்ளவில்லை. ஆயினும், (தவறு செய்தவனாயினும்), தன்னிடம் அன்புடையவன் என்பதால்[26] அவனை அவளால் வெறுத்து விடவும் முடியவில்லை.

இத்திணையில் மிக அதிகமான பாடல்களைப் பாடிய பரணரின் பாடல்கள் அனைத்தையும்[25] வரிசைப்படுத்திப் பார்த்தால், அருமையானதொரு குடும்பநாவலே உருவாகிவிடும் போல் தோன்றுகிறது. இத்தலைவன் புதுப்புதிய பரத்தைகளை நாடும் இயல்புடையவன் என்பது தலைவி[27] தோழி[28] பரத்தை[29] முதலிய பலர் கூற்றாலும் உறுதிப்படுகிறது. ஆயினும், தன்னுடைய பரத்தைமை ஒழுக்கம் தன் தலைவிக்குத் தெரிந்து விடக் கூடாது என்றே இவன் எண்ணி வந்துள்ளான் என்பது பரத்தை கூற்றாக அமைந்த ஒரு பாடலின் மூலம் வெளிப் படுகிறது.[30]

இவனுடைய தலைவியும், முதலில் இவனது பரத்தைமை ஒழுக்கம் காரணமாக இவனை அடியோடு வெறுத்தாள்: ''பரத்தையைத் தழுவிய உன் மார்பைத் தீண்ட மாட்டேன்; கிட்ட வராதே!'' என்று[31] அருவருத்தாள்; 'நீ என் மகனின் தாய் அல்லவா? நம் உறவு விட்டுப் போகுமா?' என்று கூறி அவளை

ஆற்றுவிக்க அவன் முயன்றபோதும், ''மாசில் கற்பின் புதல்வன் தாய் எனமாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி எம் முதுணை எள்ளல்!'' என்று[32] சீறினாள். இவளுடைய தோழியும், தலைவி தாயாகி விட்டதாலும் அழகு குன்றி விட்டதாலுமே அவன் அவளை வெறுத்துவிட்டான் என்ற குறிப்பைப் புலப்படுத்திக் கசந்தாள்.[33]

ஆனால், (அவன் தலைவியிடம் அன்புடையவன் என்பதையும் தன் பரத்தைமை ஒழுக்கத்தைக் கைவிடவே விரும்புகிறான் என்பதையும் அறிந்ததனாற் போலும்) பின்னர், தோழியும், தலைவியும் தங்கள் போக்கை மாற்றிக் கொள்ளுகிறார்கள்: ''அவன் நம்மைப் புறக்கணித்தாலும் அவனை நாம் விட்டுவிடக் கூடாது'' என்று[34] தலைவிக்குச் சொல்லும் தோழி, ''தலைவனின் நடத்தையை இடித்துரைக்க எங்கள் தலைவிக்கு உரிமை உண்டு, - அதைக் கேட்க ஊராருக்கு உரிமை இல்லை'' என்று பரத்தையருக்கு எச்சரிக்கை விடுக்கிறாள்.[35] இவற்றால் தெளிவு பெற்ற தலைவி, தலைவன் ஆற்றாமை வாயிலாகத் தன்னிடம் வந்தபோது அவனை ஏற்றுக் கொள்கிறாள். ஏற்றுக் கொண்டதன் மூலம் ஆதிமந்தி போலக் கணவனை இழந்து துன்புறும் வேதனையிலிருந்து தப்பினேன்' என்று மகிழ்கிறாள்.[36]

இந்த இன்ப முடிவு கதையின் இடையே ஓரிடத்தில், 'இனி நான் உன்னை விடவே மாட்டேன்;' ஏனெனில், ''நின் மனையோள் (நின்னை) வவ்வலும் அஞ்சுவல்'' என்று பரத்தை கூறிய செய்தி,[37] அவன் பரத்தைமை ஒழுக்கத்தை விட்டுத் தன் மனைவியிடமே நிலையாக வாழக்கூடும் என்பதை முன்பே குறிப்பாக உணர்த்திற்று. அதன்படியே அவன் தன் தலைவியிடம் சென்று சேர்ந்துவிட்டான்.

தொகை நூல்களில் உள்ள பாடல் (எண்) வரிசையை மாற்றி, இப்படி ஒரு குடும்பநிகழ்ச்சிக் கோவையாகி ஒவ்வொரு புலவரின் பாடலையும் அமைத்துப் பார்ப்பது சுவையாக இருந்தாலும், இப்புலவர்கள் தங்களின் ஒருணர்ச்சித் தனிப் பாடல்களை இத்தகைய வெவ்வேறு இயல்புகள் வாய்ந்த தலைவன் தலைவியரின் குடும்ப வாழ்வுத் தொடர்களாகக் கருதியிருப்பார்களா? என்னும் ஐயம் எழுவதும் இயல்பே. ஆயினும், ''ஒரு சிலர் வாழ்க்கையில் மெய்யாக நிகழ்ந்த காதற்பான்மைகளைப் புலவன் கண்டிருப்பான், கேட்டிருப்பான். அக்காட்சியும் கேள்வியும் சில பாடல்களை இயற்றத்

தூண்டியிருக்கும்'' என்று டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது (தமிழ்க்காதல், பக்கம் 209) புலவர்களும் ஆசிரியர்களும் தமக்குப் பழக்கமான, தம்மை மிகுதியாகக் கவர்ந்த சில இயல்புடையவர்களை நினைவிற் கொண்டே தங்கள் படைப்புக்களைச் செய்வதும் புதுமை அன்று.

'இப்புலவர்களும் தாங்கள் கண்டு கேட்டு அறிந்த வாழ்க்கைச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டே தங்கள் பாடல்களை யாத்திருக்கலாம்' என்னும் எண்ணத்தை எழுப்பி, அதன் மூலம், தமிழ் இலக்கிய ஆய்வில் ஒரு புதிய பார்வையை ஏற்படுத்த முடியுமா என்பதை அறிவதற்காகவே இச்சிறிய ஆய்வு நிகழ்த்தப் பெற்றது.

### குறிப்புகள்

1. டாக்டர் வ.சுப. மாணிக்கம்:தமிழ்க்காதல் (1962), ப.280.
2. குறுந்தொகை:202.
3. குறுந்தொகை:93.
4. அகநானூறு:46.
5. தொல்காப்பியம்:கற்பியல்,6.
6. குறுந்தொகை:8, 45; நற்றிணை:230, 330, 400: அகநானூறு:106.
7. அகநானூறு:106.
8. குறுந்தொகை:8.
9. நற்றிணை:230.
10. நற்றிணை:230.
11. நற்றிணை:330.
12. குறுந்தொகை:45.
13. குறுந்தொகை:45.
14. அகநானூறு:286.
15. அகநானூறு:316.
16. நற்றிணை:20.
17. குறுந்தொகை:370.
18. குறுந்தொகை:70.
19. குறுந்தொகை:91.
20. குறுந்தொகை:73.
21. குறுந்தொகை:80.
22. குறுந்தொகை:364.
23. நற்றிணை:390.

24. அக்நானூறு:36,346.

25. நற்றிணை:340.

26. அகநானூறு:126.

27. அகநானூறு:6,196, 266, 386.

28. அகநானூறு:116, 226, 246, 326; குறுந்தொகை:89, 258; நற்றிணை:310.

29. அகநானூறு:186, 376, 396.

30. நற்றிணை:100.

31. அகநானூறு:196.

32. அகநானூறு:6

33. அகநானூறு:326.

34. அகநானூறு:356.

35. குறுந்தொகை:89.

36. அகநானூறு:236.

37. அகநானூறு:396.

*சாலினி இளந்திரையன்*
*திருவேங்கடவன் கல்லூரி*
*தில்லி – 1*

# தமிழில் வாழ்க்கை வரலாறு - ஒரு கண்ணோட்டம்

மேலைநாட்டு மொழிகளில், குறிப்பாக ஆங்கிலமொழியில் வாழ்க்கை வரலாற்று நூல்கள் மிகுதியாக வெளிவந்துள்ளன. வாழ்க்கை வரலாறு என்பது படைப்பிலக்கியத்தின் ஒரு துறையாக அங்கே வளர்ந்துள்ளது. எனவே, அந்தத் துறை பற்றிய ஆய்வும் அங்கே கணிசமாக நடைபெற்றுள்ளது.[1] தமிழில் வாழ்க்கை வரலாறுகளாகச் சில நூறு புத்தகங்கள் வெளிவந்திருந்தாலும், அவை இலக்கியத்தின் ஒரு கூறாகச் சிறப்புற வளர்ந்திருப்பதாகச் சொல்ல முடியவில்லை. ஆதலால், தமிழில் வாழ்க்கை வரலாற்று இலக்கிய உணர்ச்சி தோன்றி வளர்ந்துள்ள முறையைப் பற்றிய பொதுவான சில கருத்துக்களை மட்டுமே இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

தனி மனிதர்களை அவர்களின் அறிவு, வினைத்திட்பம், ஈகைக்குணம் முதலியவற்றுக்காகப் பாராட்டும் போக்கு, எங்கும் போல, நமது தமிழகத்திலும் பல காலத்துக்கு முன்பே தோன்றி விட்டது. அரசர்களையும், வீரர்களையும் வள்ளல்களையும் புறப்பொருட்பாடல்களில் பாராட்டியதோடு மனநிறைவடையாத நமது பழம்புலவர்கள், அகப்பொருள் இலக்கியங்களிலே கூட, சமயம் வாய்க்கும் போதெல்லாம், அவர்களின் சிறப்புக்களையும் சாதனைகளையும் பாடியுள்ளார்கள்[2] சிறப்புக்குரிய ஒருவனே (பாராட்டப்பட்டவனே) தவறு செய்தால், அதையும் நம் புலவர்கள் பாடி வைத்திருக்கின்றார்கள்.[3] பதிற்றுப்பத்து என்னும் நூலின் ஒவ்வொரு பத்தும் ஒரு சேர அரசனை மட்டும் பாடுகிறது. இவையாவும் தனிப்பட்டவர்களின் வாழ்க்கையின் சில நிகழ்ச்சிகளே என்றாலும், (வாழ்க்கை வரலாற்றில் இடம்பெறத் தக்க நிகழ்ச்சிகளே என்றாலும்) இவை ஒருவருடைய வாழ்வை

முழுமையாகச் சொல்லாததால் இவைகளை வாழ்க்கை வரலாறுகளாகக் கொள்வதற்கில்லை.

பிற்கால அரசர்களின் மெய்க்கீர்த்திகள் அவர்களின் போர் வெற்றிகளையும் மற்றச் செயல்களையும் கூறுகின்றன. இவைகளில் ஒருவருடைய செயல்கள் அவருடைய வழியினரான பிறர் மீதும் ஏற்றிக் கூறப்படுவதுண்டு. மேலும், இவைகள் எந்த ஓர் அரசனின் வாழ்க்கை வரலாற்றையும் தொடர்ச்சியாகச் சொல்லுவதில்லை. உலா, பரணி முதலிய நூல்களில் சொல்லப்படும் ''பாரம்பரியமும்'' இத்தகையதே. அரசனின் குண ஓவியத்தை முழுமையாகச் சித்திரிப்பது இவைகளை எழுதியவர்களின் நோக்கமாக இருந்ததில்லை என்பதையும் கவனிக்க வேண்டும்.

நமது இலக்கிய வரலாற்றின் இடைக்காலத்தில் (செய்யுளிலும் மணிப்பவள உரைநடையிலுமாக) அடியார்களின் வரலாறுகள் எழுதப்பட்டன. இவை, பெரும்பாலும் வரலாற்று நாயகரின் சிறப்புக்களை மட்டுமே விதந்து சொல்லுவதாலும் குறையும் நிறையும் கண்டு ஒரு முழுமையான மனிதச்சித்திரம் வரைய முயலாததாலும்[4] இவைகளை ஒருதலைச்சார்பான வரலாறுகள் என்றே சொல்ல வேண்டும்.

''ஒரு தனிமனிதனின் வாழ்க்கைக் கதையை இனிமையாக விவரிப்பதே வாழ்க்கை வரலாறு. அந்த விவரமே, வரலாற்று நாயகனை மீண்டும் உயிரோடு உலவ விடுவது போன்ற திறமையோடு செய்யப்படுதல் வேண்டும். வாழ்க்கை வரலாறு உண்மையை அடிப்படையாகக் கொண்ட இலக்கியம். எனவே, அது, ஒருவகையில் வரலாறு; மற்றொரு வகையில் கலை. இவை இரண்டில் ஒன்றின் எல்லைக்குள் முழுவதும் சரிந்துவிடாமல் நடைபெறுவதே சிறந்த வாழ்க்கை வரலாற்று நூல்''.[5] இதுவே, வாழ்க்கை வரலாற்று இலக்கியத்துக்குத் தற்கால அறிஞர்கள் தரும் இலக்கணம். இந்த இலக்கணத்துக்குப் பொருத்தமான வாழ்க்கை வரலாற்று நூல்கள், தமிழில், அண்மைக் காலத்தில்தான் வெளிவரத் தொடங்கியுள்ளன.

19-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நம் நாட்டில் புதிய கல்வி முறை ஏற்பட்டது; இதைத் தொடர்ந்து சென்னைக் கல்விச் சங்கம் என்னும் பாடக்குழுவும் (1812ல்) தோன்றியது. இத்தோற்றமும், இந்தியர்கள் சொந்தத்தில் அச்சகம் வைத்துக் கொள்ளலாம் என்ற சட்டத்தின் (1835) பிறப்புமாகத் தமிழ்ப்புத்தக வெளியீட்டில் ஒரு

சுறுசுறுப்பை ஏற்படுத்தின. இதன் விளைவாகத் தமிழில் உரைநடை நூல்களும் மிகுதியாக வெளிவரத் தொடங்கின. கிளைவ் சரித்திரம் (1871), கொலம்பசு சரித்திரம் (1871), சங்கர விஜயம் (1879), கருத்தமுத்துப் பிள்ளை சரித்திரம் (1897), பட்டினத்துப் பிள்ளையார் சரித்திரம் (1898), முதலிய வாழ்க்கை வரலாறுகளும் வெளிவந்தன. கம்பர், காளமேகம், அவ்வையார் முதலிய புலவர்களின் சரித்திரங்கள் உள்ளிட்ட விநோதரச மஞ்சரியும் (1877ல்) வெளிவந்தது.[6] இவற்றுட் பலவும் இப்போது கிடைக்காவிட்டாலும், கிடைக்கின்ற சிலவற்றைக் கொண்டே (19ம் நூற்றாண்டின்) மற்ற நூல்கள் எப்படியிருந்து இருக்கும் என்று ஒருவாறு ஊகிக்க இடம் உள்ளது. இடைக்காலத்தில், மதத் தலைவர்களின் வரலாறுகளை, ஒருவகையான சமயப் பிரச்சார நோக்கோடு எழுதியது போலவே, பாடப்புத்தக நோக்கில் எழுதப்பட்ட இந்தப் புத்தகங்களை நீதி புகட்டல், உயர்ந்த ஒழுக்கம் கற்பித்தல் என்னும் திட்டவட்டமான கருத்துக் களுடனேயே இவர்கள் எழுதியிருப்பது தெரிகிறது. எனவே, நீதிபோதனை முனைப்பே மிகுந்து இந்த நூல்களின் இலக்கியத் தன்மையை அமுக்கி விடுகிறது.

இந்த நூற்றாண்டு பலவகையான எழுச்சிகளைக் கண்டது. அவற்றுள் முக்கியமானவை மூன்று. ஒன்று அரசியல் எழுச்சி; மற்றது சமுதாயச் சீர்திருத்த எழுச்சி; மூன்றாவது, இந்த இரண்டு எழுச்சிகளின் விளைவான தமிழ் எழுச்சி. இந்த மூன்றில் ஏதாவது ஒரு துறையில் சிரோங்கியவர்களின் வாழ்க்கை வரலாறுகளே தமிழில் (நேராகவோ மொழிபெயர்ப்பாகவோ) மிகுதியாக எழுதப்பட்டுள்ளன. இந்தியத் தலைவர்களாகிய காந்தி,[7] நேரு,[8] ஆசாத்,[9] காமராசர்,[10] சத்யமூர்த்தி[11] முதலானவர்களின் வாழ்க்கை வரலாறுகள் அவ்வப்போது எழுதப்பட்டதோடு, உலகின் பல நாடுகளிலும் நாட்டு விடுதலைக்கோ சமுதாயச் சீர்த்திருத்தங் களுக்கோ உழைத்த பலரின் வாழ்க்கை வரலாறும் எழுதப் பட்டுள்ளது.[12] நாட்டு விடுதலைக்குச் சிறிது முன்பும், விடுதலை பெற்றதைத் தொடர்ந்து அண்மைக்காலச் சுதந்திரப் போராட்ட வீரர்களைப் பற்றிய ஆர்வம் நாட்டிலே மிகுந்துள்ளது. அதன் விளைவாகக் கட்டபொம்மு, (வீரபாண்டிய கட்டபொம்மன்) வீரத்தலைவர் புலித்தேவர், மருதிருவர், வீரசிதம்பரனார், திருப்பூர்க்குமரன், தென்னாட்டுச் சிங்கம் (ஊமத்துரை) முதலியோரைப் பற்றிப் (1940 முதல் 1962 வரை) பலர் எழுதியுள்ளார்கள். இவை, பெரும்பாலும் குறிப்பிட்ட ஒரு நோக்கத்துடனேயே எழுதப்படுவதால், அந்த நோக்கைப்

பெரிதுபடுத்தும் முகமாகவே வரலாற்று நாயகரின் வாழ்க்கை சித்திரிக்கப்படுகிறது; அவர் வாழ்வின் மேடுபள்ளங்கள் தெளிவாக விவரிக்கப்படுவதில்லை. வரலாற்று நாயகனின் காலத்திய வெவ்வேறு சூழ்நிலைகளும் விளக்கப்பட வேண்டியது அவசியமே. ஆயினும் வாழ்க்கை வரலாற்று நூல், தனிமனிதன் ஒருவனின் கதையைக் கூறுவது என்பதை இவர்கள் மறந்து விடுகிறார்கள்.

தமிழ்த்தேசியம் என்று சொல்லக்கூடிய அளவில் நாடு, மொழி, பண்பாடு ஆகிய துறைகளை அளாவியதாக உண்டான தமிழ் ஆர்வம் அன்று முதல் இன்றுவரை சிறப்போங்கிய தமிழரசர், தமிழ்ப்புலவர் ஆகியோரின் வரலாறுகளை எழுதத்தூண்டியது.[13] சங்க நூல்கள் பலவும் அச்சிடப்பட்டதால், பழந் தமிழ் அரசர், புலவர் முதலியோரைப் பற்றி எல்லாம் விரிவாக எழுத வாய்ப்பு ஏற்பட்டது. சங்ககாலத்து அரசர், புலவர்களின் மீது ஏற்பட்ட பற்று வளர்ந்து விரிந்து இக்காலத் தமிழ்த் தலைவர்கள், தமிழ் அறிஞர்கள் மீதும் பெரும் ஈடுபாடாக மலர்ந்தது. எனவே அவர்களில் பலரைப் பற்றியும் பலர் எழுதினார்கள்.[14]

அறிஞர் வரலாறு,[15] கலைஞர் வரலாறு,[16] வரலாற்றுத் தொகுப்புக்கள்,[17] எழுத்தாளர் வரலாறு,[18] சுவைஞர் வரலாறு[19] முதலான பலவும் தமிழில் வெளிவந்துள்ளன. இஸ்லாமியர், கிறிஸ்தவர் முதலியோரும் தத்தம் சமயத்தொண்டர்களையும் அறிஞர்களையும் பற்றிய நூல்கள் வெளியிட்டுள்ளார்கள்.[20]

அறிவியல் மேதைகளைப் பற்றியும் விவசாயப் புரட்சியாளர் களைப் பற்றியும்[21] எழுதப்பட்டுள்ள சுருங்கிய வரலாறுகள், பெருமை என்பது பல இன்னல்களுக்கும் தயங்காத முயற்சியின் விளைவே என்பதை நயம்படத் தெரிவிக்கின்றன.

அண்மையில் *(1954-1966)* சிந்தனையாளர் வரிசை என்னும் தொடரில் வெளிவந்துள்ள சிறுசிறு நூல்கள்[22] சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. ஒருவகையில் இவை அறிஞர் வரலாறு என்னும் பகுதியில் அடங்குமாயினும், அதைப் போல் விரிந்து செல்லாமல் இவை மிகச் சுருங்கிய அளவினவாக உள்ளன. இவைகளும், வரலாற்றுநாயகரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை விரித்துச் செல்லாமல், அவர்களின் எழுத்து, பேச்சுக்களைக் கொண்டு அவர்களின் சிந்தனைகளை விரிவாக விளக்குகின்றன.

சுயசரிதை என்று சொல்லப்படும் தன் வரலாறு பற்றி நான் இங்கே பேசவில்லை. காரணம், வைன் சுமேகர் என்பார் கூறுவது போல, ''வாழ்க்கை வரலாறும் தன்வரலாறும் ஒரு தனிப்பட்ட மனிதனின் கதை என்ற அளவில் ஒற்றுமையுடையனவாகத் தோன்றினாலும் அவை வெவ்வேறு வகையினவே. தன் வரலாறு என்பது வரலாற்று நாயகனுடைய நினைவுகளின் மறுபதிப்பு; வாழ்க்கை வரலாறோ, நாயகனின் நடவடிக்கைகள், அவரைப் பற்றிய புள்ளிவிவரங்கள், பிறருடைய கருத்துக்கள், அவருடைய எழுத்துக்கள், பேச்சுக்கள் முதலிய பலவற்றைக் கொண்டு நிருமானிக்கப்படும் சொல்மாளிகை''.[23] எனவே தன் வரலாறு என்பது (வாழ்க்கை வரலாற்றினின்று வேறுபட்ட) தனி ஆய்வுக்கு உரியது.

தமிழில் வாழ்க்கை வரலாறு என்னும் துறை தொடங்கி யுள்ளது. ஆயினும், ஓர் இலக்கிய வகை என்ற அளவில், தமிழில், மிகுதியான வாழ்க்கை வரலாறுகள் இன்னும் வெளிவரவில்லை என்றே சொல்ல வேண்டும்.

இத்துறையின் மெதுவான வளர்ச்சிக்குக் காரணம் காண்பது எளிதன்று. ஆயினும், அண்மைக்காலமாக இத்துறை நூல்கள் வெளிவரும் முறையைக் கவனித்தால் சில உண்மைகள் வெளிப்படுகின்றன. அரசியல் தலைவர்களின் வரலாறுகள் அவ்வவர் தலைமைப் பதவி பெறும்போதே அவசரம் அவசரமாக வெளியிடப்படுகின்றன.[24] இவர்களைப் பற்றிய நூல்கள் வெளிவருவதற்கும் இவர்கள் (கட்சித்தலைவர், முதலமைச்சர், பிரதமர் முதலிய) பதவிகள் பெறும் காலத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது.

சமயத் தலைவர்களின் வரலாறுகளை அந்தந்தச் சமயத்தவர்களே (பெரிதும் தங்கள் சமயம் உயர்ந்தது என்ற கருத்துத் தொனிக்குமாறே) வெளியிடுகிறார்கள். முன்பே குறிப்பிட்டுள்ளது போல், அவர்களைத் தனி முழு மனிதர்களாகச் சித்திரிக்கும் வாய்ப்பு இத்தகைய நூல்களில் இல்லாமல் போகிறது.

''தலைவர் வழிபாடு'' என்னும் குறைபாடு சமுதாயத்தை இறுகலாகப் பற்றியிருப்பதால், நூல் எழுதப் புகுவோர் (பெரும்பாலும்) வரலாற்று நாயகரைக் குற்றங் குறை இல்லாதவர் களாகக் காட்டவே விரும்புகின்றார்கள். ''காலஞ் சென்ற தம் கணவரைப் பற்றி அவர்களின் மனைவியர் எழுதும் நூல்களே

இத்துறையில் கடைசித் தரத்தவை'' என்கிறார் கிரோஸ் என்னும் அறிஞர்.[25] தலைவர் வழிபாட்டுப் போக்குடையவர்கள் எழுதும் நூல்களும் இத்தகையவைகளே. இவர்களின் கண்ணில் குறையே படுவதில்லை. ஆனால், குறையும் நிறையும் கலந்த இயல்பினரான மனிதர்களைப் பற்றிய வரலாற்றில் அதுவே பெருங்குறையாகி விடுகிறது.

தமிழ் எழுச்சியின் விளைவாக வெளிவந்த பண்டைக்கால அரசர்/புலவர் வரலாறுகள் மக்களிடையே பெரும் அளவில் தமிழ் உணர்ச்சியை ஊட்டியுள்ளன என்பது உண்மையே. ஆயினும், இவ்வரலாறுகள், இலக்கியத்திற் காணப்படும் சில செய்திகளை மட்டுமே துணையாகக் கொண்டு எழுதப்படுவதால், இவைகளிலும் ஒரு முழுமை இருப்பதில்லை; பழைய நூல்களில் செய்யுளில் படித்த செய்திகளை இவைகளில் உரைநடையில் படிக்கிறோம் என்னும் எண்ணமே உண்டாகிறது. பழங்காலத்தைப் பற்றிய வரலாற்றுச் செய்திகள் போதிய அளவு கிடைக்காததால், இந்த நூல்களின் நாயகர்கள் உரிய வரலாற்றுப் பின்னணியில் சித்தரிக்கப்படுவதும் இல்லை.

பொதுவாக, தமிழ் வாழ்க்கை வரலாற்று நூல்களில் இத்தனை குறைகள் தென்பட்டாலும், மெதுவாகவாயினும் இத்துறை வளர்ந்து வருகிறது, என்பதைக் குறிப்பிட்டே ஆகவேண்டும். வாழ்க்கை வரலாறு எழுதலாம் என்ற எண்ணமே தோன்றியிராத பண்டைக்காலத்தையும், அடியார்களின் அற்புத வரலாறுகளே வாழ்க்கை வரலாறுகள் என்னும் எண்ணம் நிலவி வந்த இடைக்காலத்தையும் நினைத்துப் பார்க்கும்போது, வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய ஒரு தெளிவான எண்ணம் ஏற்பட்டுள்ள அண்மைக்காலம் (சுமார் 1930-1968 வரை) பெரிதும் நம்பிக்கை ஊட்டுவதாக இருக்கிறது. வாழ்க்கை வரலாறு என்றால் என்ன என்பதைத் தவறாகப் புரிந்து கொண்டிருந்ததை விட, அதைத் தெளிவாகப் புரிந்துகொண்டு அத்துறையில் குறையுடைய முயற்சிகளாவது மேற்கொள்ளும் இந்தக் காலம் சிறப்புடையதே அல்லவா? விடுதலை வீரர்கள், அறிஞர்கள் அரசியல்வாதிகள், கலைஞர்கள், மருத்துவர்கள், எழுத்தாளர்கள் முதலான பலதுறையினரையும் பற்றிய வாழ்க்கை வரலாறுகள் வெளிவருகின்றன. அவ்வவர்களோடு தொடர்புடையவர்களே அவற்றை எழுதுகிறார்கள் என்பது இத்துறை நமது மொழியில் நன்கு கால்கொள்ளத் தொடங்கிவிட்டது என்பதற்கு அடையாளம் அல்லவா?

## குறிப்புகள்

1. (a) John A. Garraty: The nature of Biography, (b) William. R Thayar: The art of Biography; (c) Donald A stuffer: The Art of Biography in 18th Century England (d) Harold Nicolson: The development of English Biography முதலியவற்றைக் குறிப்பிடலாம்.
2. அகம் 76(அஃதை), 125 (கரிகாலன்); 162 (பசும்பூண் பாண்டியன்); 303 (பாரி); குறுந்தொகை 91(அஞ்சி)
3. கோப்பெருஞ்சோழன் மக்கள் மீதே படை எடுத்தது: புறநானூறு, 213. சோழன் கிள்ளிவளவன் உழவர்க்கு மிகுவரி விதித்தது. புறநானூறு, 35.
4. The world book of Encyclopedia:Biography:One-side Biographies.
5. Encyclopedia Britannica:Biography.
6. மயிலைசீனி வேங்கடசாமி:19ம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் (1962) பக்கம். 392, 402.
7. மாந்தருக்குள் ஒரு தெய்வம்.
8. விந்தை மனிதர் நேரு.
9. மௌலானா ஆசாத்.
10. காமாராசர் வரலாறு.
11. சத்தியமூர்த்தி.
12. புக்கர் வாஷிங்கடன்(வ.வே.சு); கமால் பாஷா(நாகராஜன்); ரூசோ(சாமிநாதசர்மா); சன்யாட்சென் (சாமிநாதசர்மா)
13. தமிழ்ப்புலவர் வரிசை; சங்ககால அரசர் வரிசை; சென்னைத் தமிழ்ப் புலவர்கள்; நெல்லைத் தமிழ்ப் புலவர்கள்; தமிழக வீரர்கள்; திருமாவளவன்; வள்ளல்பாரி; சேரன் செங்குட்டுவன்.
14. திரு.வி. கலியாணசுந்தரனார்; மறைமலையடிகள்; விபுலானந்த அடிகள்; எல்.டி. சாமிக்கண்ணுப்பிள்ளை; அரசஞ்சண்முகனார்; கவிமணி; சித்திரபாரதி முதலியன.
15. மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை சரித்திரம், பண்டிதமணி முதலியன.
16. மைசூர் சௌடய்யா, கலைவாணர் என்.எஸ்.கே; கோபாலகிருஷ்ண பாரதியார், சங்கீத நவமணிகள், கலைமணிகள்.
17. வரலாற்று மேதைகள்; யான் கண்ட புலவர்கள், தமிழ்ச் சுடர்மணிகள்; தற்காலத் தமிழ்நாட்டு மேதைகள், தமிழ்நாட்டு வள்ளல்கள்.
18. வ.வே.ச. அய்யர்; புதுமைப்பித்தன் வரலாறு; நான் கண்ட நால்வர், அறிஞர் பெர்னார்டுஷா, தாகூர், சரத்சந்திரர் வரலாறு.
19. டி.கே.சி. வரலாறு.
20. இமாம்கள் சரிதை; மகான் ஷைகு ஷாஅதி; பர்த்தலமேயோ சீகன்பால்கு; வீரமாமுனிவர், சா.வே.அசரியா.
21. அறிவியல் முனைவர் அய்ன்ஸ்டீன், இந்திய விஞ்ஞானிகள், தானியக் கலைஞர்கள், சர்.சி.வி. இராமன் முதலியன.

22. டார்வின், இங்கர்சால், அரிஸ்டாட்டில், பிளேட்டோ, பிராய்டு, வால்டேர், காரல்மார்க்ஸ், மாக்கியவெல்லி, எமர்சன், தொல்காப்பியர், மாண்டெய்ன், நியட்சே, கன்பூசியஸ் முதலியன.

23. John A. Garraty: The nature of Biography (1957) P-26.

24. *காமராஜ் வரலாறு (1963), தியாகவீரர் காமராஜ் (1964), பிரதமர் சாஸ்திரி (1965); இந்திரா காந்தி (1966) பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு (1968).*

25. Quoted in 'The nature of Biography' p.156.

*சாலை இளந்திரையன்*
**தில்லிப் பல்கலைக் கழகம்**
**தில்லி – 7**

# திரு.வி.க.வின் பத்திரிகைப்பணி

''1917-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 7-ம் நாள் 'தேசபக்தன்' (தினப்பதிப்பு) ஆசிரிய பீடத்தில் அமர்ந்தேன்; 1920-ம் ஆண்டு சூலை மாதம் 22-ம் நாள் அதினின்றும் விலகினேன். பின்னே 1920ம் ஆண்டு அக்டோபர் மாதம் 22-ம் நாள் 'நவசக்தி' (வாரப்பதிப்பு) தொடங்கப்பட்டது. 'நவசக்தி' ஆசிரியனாகப் பதின்மூன்று ஆண்டு சேவை செய்தேன்''. நமது பத்திரிகைப் பணியைப் பற்றித் திரு.வி.க. சொல்லியுள்ளது இது.[1] நாளிதழின் ஆசிரியராகவும் கிழமை இதழின் ஆசிரியராகவும் சுமார் பதினைந்தரை ஆண்டுகள் மட்டுமே (தொடர்ந்து) பணியாற்றிய திரு.வி.க.வுக்குத் தமிழ்ப் பத்திரிகை உலகில் தனிச் சிறந்த ஓர் இடம் கிடைத்துள்ளது.

''இந்தியாவின் சுதந்திரச் சரித்திரத்தில் 'தேசபக்த'னுக்கு நிரந்தரமான ஒரு ஸ்தானம் உண்டு. இந்தப் பத்திரிகைத்தான் தமிழ்நாட்டில் தேசீய உணர்ச்சியை நேரிய முறையில் தமிழ்ப் பண்போடு கலந்து ஊட்டி வந்தது என்று சொன்னால், அது, சரித்திர உண்மைக்கு எவ்விதத்திலும் புறம்பானதாகாது'' என்றும்,[2] ''தமிழ்ப் பத்திரிகை உலகத்தில் மக்களின் நெஞ்சில் நிலைத்துவிட்ட இதழ்களை வரிசைப்படுத்தினால் திரு.வி.க. நடத்திய 'நவசக்தி'க்குத்தான் முதலிடம் கிடைக்கும்'' என்றும்[3] பிறவாறும் பல தமிழறிஞர்கள் திரு.வி.க.வின் இதழ்களைப் பாராட்டியுள்ளார்கள்.

பத்திரிகைப் பணி என்பது பல்வேறு அம்சங்களைக் கொண்டது. அத்தனை கூறுகளிலும் தெளிவாகத் திட்டமிட்டுத் திறமாக நடத்தினால்தான் அப்பணியில் வெற்றிபெற முடியும். முதலாவதாக, பத்திரிகைக்குக் காலத்தை ஒட்டிய சில குறிக்கோள்கள் இருக்கவேண்டும்; அவைகளை, அச்சமோ

தயக்கமோ இன்றி நடத்தி வரவும் பத்திரிகை ஆசிரியருக்குத் துணிவு இருக்க வேண்டும்.[4] இந்த இரண்டிலும் தன்னிகரின்றி விளங்கினார் திரு.வி.க. ''அவரது சொல்வன்மையும், தீரமும், நேர்மையும் கலங்காமையும், பாரபட்சமின்மையும், அவசியம் நேர்ந்த போது காட்டிய நிர்தாட்சணியமும் பத்திரிக்கை யாசிரியர் தொழிலுக்கே பூஷணங்களாக விளங்கின.''[5]

அக்காலத்தில் தீவிரமடைந்த தேசிய இயக்கத்துக்கு வலுவூட்டவும் நீதிக்கட்சியின் பேரால் தலைஎடுத்த சாதிக் காழ்ப்புணர்ச்சியைத் தணிக்கவுமே தேசப்பக்தன் தீவிரமாகப் பாடுபட்டது.[6] இந்த நோக்கங்கள் நிறைவேறும் வகையிலேயே தலையங்கங்களும் ஆசிரியக் குறிப்புக்களும் எழுதப்பட்டன. தமிழ் மக்களுக்குத் தேசிய வீறு ஊட்டும் வகையில், இதழின் முதற்பக்கத்தில் சங்க நூல்களிலிருந்து தமிழர்களின் வீரத்தைக் குறிக்கும் செய்யுட்கள் அவ்வப்போது குறிப்புரையுடன் வெளியிடப்பட்டு வந்தன.[7] இந்தியாவின் பழம்பெருமை, பல்வேறு துறைகளில் அது பெற்றிருந்த வளர்ச்சி, இக்காலத் தமிழர்/இந்தியர்களின் தளர்ச்சி, அறியாமை, இவை போக வேண்டியதன் அவசியம், இவற்றைப் போக்குவதற்கான வழி முறைகள் என்னும் இன்னோரன்ன பொருள்களே 'தேசபக்தன்' இதழ்களில் மிகுதியாக அலசப்பட்டிருப்பதைக் காணுகிறோம்.

'நவசக்தி' வார இதழ் என்பதனாலும், நாட்டின் வேறு பல துறைகளிலும் கவனஞ் செலுத்த வேண்டிய தேவை ஏற்பட்டதாலும் அதன் நோக்கங்கள் விரிவடைந்தன. நவசக்தியின் முதல் (22.10.20) இதழிலேயே, இந்த நோக்கங்களை ஒன்பது தலைப்புக்களில் வரையறுத்துத் தந்துள்ளார் திரு.வி.க. குடியாட்சி, தொழிலாளர் இயக்கம், பெண்மக்கள் நலன், தமிழ் வளர்ச்சி முதலியவற்றுக்குப் பாடுபடுவதையும், ''தேசத்துக்குத் தீங்கிழைக்கும் கட்சிகளைக் கண்டித்து, அக்கட்சித் தலைவர்களை நேசித்துத் தேச வளர்ச்சியை நாடும் கட்சியில் அவர்களைத் திருப்ப முயலுதலை''யும் நவசக்தியின் நோக்கங்களாக (இக்குறிப்பில்) அவர் வரிசைப்படுத்தியுள்ளார். ''நீண்ட காலமாக உலகத்தை வதைத்து வந்த அசுரபூத மிருகசக்திகளைச் சிதைத்தழித் தொழிக்கவே 'நவசக்தி' உலகத்தில் தோன்றியிருக்கிறது. அச்சக்தி, மலர்ந்த முகத்தோடு புன்சிரிப்போடும் உதயமாகிறாள்'' என்னும் அவருடைய குறிப்புக்கேற்பவே 'நவசக்தி' நடைபெற்று வந்தது.[8]

மக்களின் சூழ்நிலைகளையும், அவ்வப்போது அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகளையும் அன்றாடம்

அவர்களுக்கு நினைவூட்டிக் கொண்டே இருக்கும் ஒரு நல்ல தோழன் போன்றது பத்திரிகை. இதை நன்கு உணர்ந்து, தேச பக்தனுக்கும் நவசக்திக்கும் இடைப்பட்ட மூன்றாண்டுகளுக் குள்ளேயே, தமது பத்திரிகையின் நோக்கங்களில் உரிய மாறுதல்களைச் செய்து கொண்டவர் திரு.வி.க.

திரு.வி.க. பத்திரிகைத் துறையில் அடியெடுத்து வைத்தபோது தமிழ்ப் பத்திரிகை எதுவும் உண்மையான தமிழ்ப் பத்திரிகையாக நடைபெறவில்லை. இதைக் குறிப்பிட்டு, ''தமிழ் நாட்டிலோ முழுதும் தமிழ்நடையை விட்டு இங்கிலீஸ் நடையில் தமிழை எழுதும் விநோதமான பழக்கம் நமது பத்திராதிபதி களிடம் காணப்படுகிறது'' என்று குமுறினார் பாரதி.[9] குடியாட்சிக் கோட்பாட்டோடு தோன்றிய கருத்துப் பரப்புச் சாதனங்களில் முக்கியமானது பத்திரிகை. அது மக்களுக்குத் தெரியாத மொழியில் அவர்களுக்குப் புரியாத முறையில் நடந்து கொண்டிருப்பதால் யாருக்கும் எப்பயனும் விளையாது.

திரு.வி.க.வின் பத்திரிகைகள் வெளிவரத் தொடங்கிய பிறகு இந்த நிலைமை அடியோடு மாறிவிட்டது. ''அரசியல் விஷயங்களைப் பற்றித் தமிழிலே பேசமுடியாது / எழுதமுடியாது என்று கருதப்பட்டு வந்தது. அந்தக் காலத்தில் சிக்கலான அரசியல் விஷயங்களெல்லாம் தேசபக்தனில் தூய தமிழில் எழுதப்பட்டு வந்தன. உணர்ச்சியோடும் ஆர்வத்தோடும் எழுதப் பட்டு வந்தன''.[10] ''இன்று அரசியல் பாஷையில் வழங்கும் அநேக சொற்கள் திரு.வி.க. வின் சிருஷ்டிகளே. புதிய ஆங்கிலப் பதங்களுக்குப் பொருத்தமான தமிழ்ப் பதங்களை உண்டாக்குவதில் திரு.வி.க.வுக்கு இணை திரு.வி.க.வே''[11]

திரு.வி.க. தமிழாசிரியர் பணியிலிருந்து பத்திரிகையாசிரியர் பணிக்கு வந்தவர். சர் லிண்ட்டன் ஆண்ரூஸ் என்பார் கூறுவது போல, ''தனது பத்திரிகையின் மொழிநடை தரமானதாக இருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டியது ஓர் ஆசிரியனின் கடமைகளுள் முக்கியமானது''[12] என்பதை நன்கு உணர்ந்தவர் திரு.வி.க. ஆனால் ''விவிலிய நூலில் ஆங்கில நடை எனக்கு மிகவும் பிடிக்கும் என்றாலும் எல்லா வாசகர்களுக்கும் அதுவே பிடித்திருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை'' என்று அதே ஆசிரியர் (பக்கம்:87) குறிப்பிட்டிருப்பதையும் (1919லேயே) திரு.வி.க. உணர்ந்து செயலாற்றியுள்ளார் என்பது கவனிக்கத் தக்கது; ''பண்டைத் தமிழ்மக்கள் உரைநடையில் எனக்குப் பெரும் பற்றுண்டு. பிறமொழிக் கலப்பின்றித் தமிழ் பேசல்

வேண்டும், எழுதுதல் வேண்டு மென்னும் ஆர்வமும் எனக்குண்டு...(ஆயினும்) செவ்விய தமிழ்நடை தமிழ்நாட்டில் உள்ள பல்லோர்க்கு இது போழ்து பயன்படாதென்று கருதித் தேசபக்தனுக்கென்று சிறப்பாக ஒருவகை உரைநடையைக் கொண்டுள்ளேன். இதுகாலைத் தமிழ்நாட்டு வழக்கிலுள்ள பிறமொழிக் குறிப்பீடுகளையும் இக்கால வழக்குச் சொற்களையும், ஆன்றோராட்சி பெறாத சில முறைகளையும் பண்டைத் தமிழ்மக்கள் கோலிய வரம்பிற்குப் பெரிதும் முரணாதவாறு ஆண்டு வருகின்றேன்.''[13]

திரு.வி.க.வின் தமிழ் நடையைச் சிலர் 'கொடுந்தமிழ்' என்றனர்; சிலர் 'கலப்புத்தமிழ்' என்றனர்; வேறு சிலர், ''இலக்கண வரம்புக்கு உட்பட்டுக் களிநடம் புரிகின்ற இனியதமிழ்'' என்றனர். அவருடைய தமிழ், காலத்தின் தேவைக்கு ஏற்பச் சில பிறமொழிச் சொற்கள் கலந்ததாக இருந்தாலும், அரிமாநோக்கு, இடியேறு போன்ற நற்றமிழ்த் தொடர்களை (மீட்டு நிலைநாட்டும் வகையில்) தமது பத்திரிகைகளின் ஆசிரியக் குறிப்புப் பகுதிகளுக்கு அவர் சூட்டியிருந்ததே, நல்ல தமிழில் அவர் ஈடுபாடு கொண்டவர் என்பதற்கும் போதிய சான்று.

''தமிழ்த்தென்றலும் சீர்திருத்தம் அல்லது இளமைவிருந்தும் என்னுடைய எழுத்துப் பேச்சைக் கொண்ட நூல்கள்'' என்று தமது வாழ்க்கைக் குறிப்புக்களில் குறிப்பிடுகிறார் திரு.வி.க. பெரும்பாலும் (தேசபக்தன், நவசக்தி) தலையங்கங்களையும் மாநாட்டுத் தலைமை உரைகளையுமே 'எழுத்துப்பேச்சு' என்னும் புதிய பெயரால் குறிப்பிடுகிறார் திரு.வி.க. ''பத்திரிகை ஆசிரியர் மற்றவர்களுடன் நேரில் பேசிக் கொண்டிருப்பது போன்ற ஒரு நடையை மேற்கொண்டால், இதழ்களும் அவை நல்கும் செய்திகளும் எளிதில் மக்களிடையே செல்வாக்குப் பெறும்'' என்று இக்கால ஆராய்ச்சியாளர் கருதுகிறார்கள்; ''படிக்கின்ற வர்களை முன்னிலைப்படுத்தி, கேள்விகள் கேட்பதன் மூலமோ பேசப்படும் கருத்தில் அவர்களையும் உளப்படுத்து வதன் மூலமோ அவர்களின் ஆர்வத்தைத் தூண்டுவது ஒரு சிறந்த முறை'' என்றும் அவர்கள் கூறுகிறார்கள்.[14] பத்திரிகைக்கேற்ற இந்த நெறியைக் கடைப்பிடித்ததனாலேயே, திரு.வி.க.வின் எழுத்துநடை எழுத்துப்பேச்சு நடையாக மாறியது; மக்களிடையே அவர் உண்டாக்க விரும்பிய எழுச்சியை அவருடைய பத்திரிகைகளால் உண்டாக்க முடிந்ததற்கு இதுவும் ஒரு காரணம்.

பத்திரிகை ஆசிரியர்களின் வெற்றிக்கு, அவர்கள், தங்கள் உதவியாளர்களான துணையாசிரியர்கள், அச்சக ஊழியர்கள் முதனானோரிடம் கொள்ளும் உறவும் ஒரு காரணமாக அமைகிறது. இவர்களின் ஒத்துழைப்பு இன்றி எந்த இதழும் சிறப்புப் பெற முடியாது. பத்திரிகை ஆசிரியன் பிரச்சினைகள் என்னும் நூலில் (1962) சர் லிண்ட்டன் ஆண்ட்ரூஸ் (பக்கம் 55) கூறுவது போல, ''ஆசிரியர் தமது துணையாசிரியர்களின் தகுதிகளையும் திறனையும் நன்கு அறிந்திருக்க வேண்டும்; எந்த நிலையிலும் நிதானம் இழக்காத தெளிவு வேண்டும்; துணையாசிரியர்கள் எதையாவது சிறப்பாகச் செய்தால், தயங்காமல் அவர்களைப் பாராட்ட வேண்டும்; அவர்கள் தவறு செய்யும் போது, 'மனிதர்கள் எப்போதும் ஒரே அளவான திறமையை வெளியிட முடிவதில்லை என்னும் உண்மையை உணர்ந்து, நயமாகவே சுட்டிக்காட்ட வேண்டும்'', இத்தனை பண்புகளும் திரு.வி.க.விடம் அமைந்திருந்தன; இவற்றினும் மேம்பட்ட சில பண்புகளும் அவரிடம் இருந்தன.

''முக்கியமான செய்திகள் நிறைய வந்து அவைகளை அன்றே வெளியிட்டாக வேண்டிய நாட்களில், 'இன்றைய தினம் தங்கள் தலையங்கத்தை ஒன்றே கால் பத்திக்குள் குறைத்துக் கொள்ள வேண்டும்' என்று முதலியாரிடம் கூறுவேன். ஏன்; எதற்கு என்றெல்லாம் கேட்கவே மாட்டார். அப்படிக் கேட்க அவருக்கு உரிமையுண்டு; அதிகாரமுண்டு. ஆயினும் கேட்க மாட்டார்.. நான் சொல்லும் வரம்புக்குட்பட்டுத் தலையங்கத்தை முடித்துக் கொண்டுவிடுவார்...பத்திரிகை நல்ல முறையில் வெளிவர வேண்டுமானால், அதற்கு ஆசிரியர் குழாத்தைச் சேர்ந்த அனைவரும் ஒருவித ஒழுங்குக்கு, ஒருவிதக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு நடப்பதில், தாம் மற்றவர்களுக்கு வழிகாட்டியாயிருக்க வேண்டுமென்று அவர் கருதி வந்ததுதான் அதற்குக்காரணம்.'' திரு.வி.க.வின் இரண்டு பத்திரிகைகளில் துணையாசிரியராக இருந்த வெ.சாமிநாத சர்மா குறிப்பிட்டுள்ளது இது.[15]

திரு.வி.க. ஒவ்வொரு நாளும் தமது துணையாசிரியர்களில் முக்கியமானவர்களோடு கலந்து ஆலோசித்தே (பெரும்பாலும்) தலையங்கம் மற்றும் ஆசிரியக் குறிப்புக்கள் எழுதுவது வழக்கம் என்னும் உண்மையையும் இந்த நூலில் (பக்கம் 38) குறிப்பிடப்பட்டுள்ளது.

திரு.வி.க.வின் பத்திரிகைப்பணி, மக்களிடையில் அரசியல் விழிப்பை ஏற்படுத்தும் நோக்கத்தோடு தொடங்கியது; பின்னர்ச்

சமுதாயத்தின் பல்வேறு துறைகளிலும் கவனம் செலுத்துவதாக வளர்ச்சி பெற்றது. இந்தப் பணிகள் திறம்பட நடைபெறுவதற்கு ஏற்ற ஒரு தமிழ்நடையை அவர் ஆக்கிக் கொண்டார். அது பற்றிப் பலர் பலவாறு குறை/நிறை கூறிய போதும் தமது கொள்கையை அவர் தளரவிடவில்லை. காலத்தின் தேவையையும் பெரும் பகுதியினரான மக்களின் கல்விநிலையையும் அடிப்படையாகக் கொண்டே அவர் தமது தமிழ் நடையை அமைத்துக் கொண்டதால், அவர் ஆற்றிய பணியும் சிறப்புற்றது. அவருடைய புதிய தமிழ், தொடர்ந்து வந்த பத்திரிகைகளை எல்லாம் ஓரளவு சீர்திருத்தியும் உள்ளது. தமிழ்ப் பத்திரிகை உலகில் நிகழ்ந்த இந்தப் புரட்சி தமிழகத்தில் மட்டுமின்றி, ஈழம் மலேசியா முதலிய நாடுகளிலும் மிகப் பெரிய மாறுதல்களை உருவாக்கி யுள்ளது. எனவே, திரு.வி.க. அவர்கள் சிறந்த பத்திரிகையாளர் என்பதோடு, தமிழ்ப் பத்திரிகைக்கு ஒரு புதிய நெறியும் நடையும் வகுத்துத் தந்த முன்னோடியுமாவார் என்பதில் ஐயமில்லை.

## குறிப்புகள்

1. திரு.வி.க. தமிழ்ச்சோலை (முதற்பகுதி-1954); முகவுரை.
2. வெ. சாமிநாதசர்மா; நான் கண்ட நால்வர் (1959); பக்கம் 169.
3. முருகு சுப்பிரமணியன்; எழுத்தாளர் கல்கி (1966) பக்கம் 6.
4. F. Fraser Bond; An Introduction to Journalism (1961);P.2
5. புலவர் அரசு. வ.வே.சு. அய்யர்; பக்கம் 72.
6. T.S. Raghavan:Makers of Modern Tamil (1965):p.116.
7. வெ. சாமிநாதசர்மா, நான் கண்ட நால்வர் (1959) பக்.26.
8. Makers of Modern Tamil (1965):p.122
9. பாரதி கட்டுரைகள் (1964):பக்கம், 151.
10. கல்கி:பாரதி பிறந்தார்:பக்கம்,47.
11. கு. அழகிரிசாமி: நான் கண்ட எழுத்தாளர்கள்: பக்கம், 69.
12. Problems of an Editor (1962):p.82.
13. திரு.வி.க.:தேசபக்தாமிர்தம் (1919) முன்னுரை.
14. An Introduction to Journalism (1961) pp.71-72.
15. நான் கண்ட நால்வர் (1959):பக்கம் 37-38.

*சாலை இளந்திரையன்*
*தில்லிப் பல்கலைக்கழகம்*
*தில்லி – 17*

# தமிழ் எம்.ஏ. வகுப்பு ஒரு புதிய பாடத்திட்டம்

எம்.ஏ. போன்ற உயர் பட்டப்படிப்பு பொதுப்படையான கல்வியினின்று வேறுபட்ட தனிநோக்கும் பயனும் உடைய தாகவும் இன்னும் ஆழ்ந்ததாகவும் நடைபெற வேண்டும் என்னும் எண்ணத்திலேயே இந்தத் திட்டம் தரப்படுகிறது.

ஆண்டுதோறும் பல (தமிழ் இலக்கிய) எம்.ஏ. பட்டதாரிகளை உருவாக்குகிறோம். இவர்களில் பலர், ஒரு கல்லூரி அல்லது பல்கலைக் கழகத்தில் ஆசிரியப் பொறுப்பு ஏற்றுத் தம் மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லுவதோடேயே தமது பணி முடித்துவிட்டதாக எண்ணி அமைகின்றார்கள். எம்.ஏ. வகுப்பில் படித்த இலக்கியத்தைப் பற்றி மேலும் சிந்திக்கவோ ஆராயவோ அவர்களில் பெரும்பாலருக்கு எண்ணமுமில்லை; வாய்ப்பும் இருப்பதில்லை.

மாணவர்களுக்குப் பாடல் சொல்லுதலிலும், பெரும்பாலன எம்.ஏ. பட்டதாரிகள், பாட்டுக்குப் பொருள் சொல்லுதல் என்ற அளவோடு தங்கள் கடமையை முடித்துக் கொள்ளுகிறார்கள். ''இலக்கியம் என்பது வாழ்க்கையைப் பற்றிய ஆராய்ச்சி'' என்பதை இவர்களே படித்திருந்தும், தாங்கள் கற்றுக்கொடுக்கும் இலக்கியம் எந்த வாழ்வை எப்படி ஆராய்கிறது என்று இவர்களில் பெரும்பாலோர் சிந்திப்பதே இல்லை. எனவே அந்த இலக்கியம் வழங்கும் சமுதாயச் செய்தி எதையும் அவர்கள் கண்டறிந்து கற்றுக் கொடுப்பதும் இல்லை. இதனாலேயே, ''இலக்கியத்தால் என்ன பயன்? இலக்கியத்தை ஒருவன் ஏன் கற்க வேண்டும்?'' என்னும் கேள்விகள் இன்று பரவலாக எழுகின்றன.

இந்தக் கேள்வியை எழுப்பியுள்ள இன்றைய சூழ்நிலைக்கு யாரோ சில தமிழ் எம்.ஏ. பட்டதாரிகளே காரணம் என்று சொல்ல முடியாது. நாம் வகுத்து நடத்தி வருகிற எம்.ஏ. பாடத்திட்டமே

இதற்குக் காரணம்; தோராயமாகக் கணக்கிட்டாலும், நமது எம்.ஏ. பட்டதாரிகள் சுமார் 3000 ஆண்டுக்காலத் தமிழ் இலக்கியம் அனைத்தையும் படிக்க வேண்டியுள்ளது; அவைகளை இரண்டு ஆண்டுகளிலேயே படிக்க வேண்டியுள்ளது... நமது 3000 ஆண்டு இலக்கிய வரலாறோ சமயச் சார்பற்ற சங்க இலக்கியம், சமய இலக்கியம், காவியம், சிற்றிலக்கியம், உரைநடை இலக்கியம் எனப் பல்வேறு வகைப்பட்டதாக உள்ளது. இலக்கிய வடிவத்திலும் உள்ளடக்கத்திலும் வேறுபட்ட இந்த இலக்கியங்களுக்குப் பின்னணியாக நமது சமுதாய வாழ்வும் பற்பல வரலாற்று மாறுதல்களை ஏற்றுக்கொண்டு வந்திருக்கிறது. சங்ககால வாழ்வும் சமயக்கால வாழ்வும் ஒரே விதமாக இல்லை; சமயக்கால வாழ்வும் தற்கால வாழ்வும் ஒரே விதமாக இல்லை. உள்ளுக்குள்ளேயே ஏற்பட்ட மாறுதல்களாலும், சங்ககாலத்துக்கு முன்பிருந்து இன்றுவரை ஏற்பட்டு வந்துள்ள வெளிநாகரிகத் தொடர்பு/தாக்கம் (Influence) முதலியவைகளாலும் அவ்வப் போதைய தமிழ்வாழ்வு பல்வேறு மாறுதல்களுக்கு உட்பட்டுள்ளது. இந்தப் பல்வேறு சமுதாய மாறுதல்களையும் அவை தோற்றுவித்த இலக்கியங்களோடு பொருத்திப் பார்த்துப் பயில வாய்ப்புப் பெறுகின்றவர்களே முழுமையான இலக்கியப் பயிற்சி பெற்றவர் ஆவார்கள்.

சங்ககாலம் தொடங்கி இன்றுவரை உள்ள 3000 ஆண்டு இலக்கியம் முழுவதையும் பாடமாக வைத்து, அதற்கே நாம் எம்.ஏ. பட்டம் வழங்குவதால் எந்த எம்.ஏ. பட்டதாரியும், தமிழின் எந்த ஒரு காலத்திய இலக்கியத்தையும் முழுமையாகப் பயில முடியவில்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாக நுனிப்புல் மேயவே இந்தப் படிப்பு வாய்ப்பளிக்கிறது. எதிலும் அவர்கள் ஆழ்ந்து செல்ல முடியாததால், தாங்கள் படித்திருப்பது இலக்கியம், அது பல்வேறு நிலையினவாகிய வாழ்க்கை முறைகளின் ஆய்வு என்னும் எண்ணம் இந்த எம்.ஏ. மாணவர்க்கு உண்டாகவே இல்லை.

இந்த நிலையை மாற்றி, எம்.ஏ. மாணவர்களுக்கு இலக்கிய விழிப்பை உண்டாக்க வேண்டுமானால், இப்போது படிப்பது போல அகலத்தில் செல்லாமல் எடுத்துக்கொண்ட ஒன்றை அவர்கள் ஆழ்ந்து கற்க வகை செய்ய வேண்டும். அதாவது, பல காலப்பட்டதும் பல வகைப்பட்டதுமான தமிழ் இலக்கியத்தைக் கால அடிப்படையில் சங்கத்தமிழ், இடைக் காலத் தமிழ், தற்காலத் தமிழ் என்ற வகையில் மூன்றாகப் பிரிக்கவேண்டும்.

ஒவ்வொரு பகுதியிலும் ஒரு எம்.ஏ. படிப்புக்கு ஏற்பாடு செய்யவேண்டும். இதன்படி எம்.ஏ. (தமிழ்மொழி- இலக்கியம்) என்றுள்ள இன்றைய மொத்தநிலை மாறி, எம்.ஏ.(சங்கத்தமிழ்), எம்.ஏ.(இடைக்காலத்தமிழ்), எம்.ஏ. (தற்காலத்தமிழ்) என்னும் மூன்று வேறு எம்.ஏ. வகுப்புக்கள் உண்டாகும். ஒவ்வொரு பிரிவு எம்.ஏ. மாணவரும், தமிழ் இலக்கிய இலக்கண வரலாறுகளைப் பொதுப்படவும், தாங்கள் சிறப்பாகப் பயிலும் காலப்பகுதியின் இலக்கிய இலக்கணங்களை ஆழமாகவும் படிப்பார்கள்.

இவ்வாறு பிரிப்பதற்கு வேறொரு காரணமும் உள்ளது; சங்க காலத்திலும் அதற்கு முன்பும் தமிழர்களுக்கும் கிரேக்கர்களுக்கும் இடையே வணிகத் தொடர்பு இருந்திருக்கிறது; இடைக்காலத்தில் வடமொழி இலக்கியங்களோடும் அவை விளக்கிய பண்பாட்டோடும் தமிழர்களுக்குத் தொடர்பு இருந்திருக்கிறது; தற்காலத்திய வாழ்வும் இலக்கியமும் மேலைநாட்டுத் தொடர்பால் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளன. இந்த மூன்று வேறு காலக் கட்டங்களையும் தனித்தனியே ஆராயும்போது அவ்வக்காலத்திய வெளித் தொடர்புகளை ஆராயலாம்; அவைகளால் நமது வாழ்வும் இலக்கியமும் (அல்லது நம்முடையவற்றால் அந்த வெளியாரின் வாழ்வும் கலைகளும்) எந்த அளவு மாறுதலுக்கு உட்பட்டன என்பதைத் தெளிவாக ஆராயவும் இதிலே நிறைந்த வாய்ப்பு இருக்கிறது.

சான்றாக, நமது பழைய சமுதாயம் புலவர்களை மதித்த சமுதாயம்: புலவர்களால் பாடப்படுதலை நமது மன்னர்கள் பெரும் பேறாகக் கருதினார்கள்.[1] முரசு கட்டிலில் அறியாது ஏறிய மோசிகீரனாருக்கு மன்னனே கவரி வீசினான் என்று படிக்கிறோம்.[2] கிரேக்க மன்னன் ஒருவன் அண்டை நாடாகிய சைராகூசை (கி.மு.415ல்) வென்று அங்கிருந்த எல்லோரையும் சிறைப்படுத்தினான். சிறைப்பட்டவர்களை விடுவிப்பதற்கு அவன் விதித்த நிபந்தனை நமது மன்னர்களையே நினைவூட்டுகிறது. ''சிறைப்பட்ட மக்களின் மொழியில் நாடக மேதையாக விளங்கிய யூரிப்பைட்சின் நாடகம் ஒன்றில் ஏதாவது ஒரு பகுதியின் சில அடிகளை மனப்பாடமாகச் சொல்லக் கூடியவர்களுக்கு விடுதலை'' என்று அறிவித்தானாம் அந்த மன்னன்.[3]

நமது சங்கச் சமுதாயத்தில் காதலைப் பொறுத்தவரை மகளிர்க்கு இருந்து வந்த உரிமைகளைக் கண்டு வியக்கிறோம். ஆனால் ஆடவர்களின் பரத்தைமை ஒழுக்கத்தைக் கட்டுப்படுத்த

முடியாமல் பதைத்துக் குமுறும் குடும்பப் பெண்களைக் கண்டு திகைக்கிறோம்.[4] அதற்குக் காரணமான சமுதாயத் தேவை நமக்குத் தெளிவாக விளங்கவில்லை. கிரேக்கர்கள் இலக்கியம் மட்டுமல்லாமல் வரலாறு, தத்துவம், அரசியல் முதலிய பல துறைகளிலும் நூல்கள் செய்திருக்கிறார்கள். பல்வேறு காலங்களில் பெண்களுக்கு இருந்து வந்த உரிமைகளும் அவற்றின் காரணங்களும் அந்த நூல்களில் தெளிவாகப் பேசப்படுகின்றன. அரசியல் அறிஞன் ஒருவன் அக்காலப் பெண்களின் நிலையைப் பின்வருமாறு விவரிக்கிறான்: ''ஆண்களாகிய நமக்கு இன்பம் தரப் பரத்தையர் இருக்கிறார்கள்; நம் உடம்பைப் பேணப் பின்முறை மனைவியர் இருக்கிறார்கள்; நம் வீட்டுக் காரியங்களைக் கவனிக்கவும் நமக்கு நன்மக்களைப் பெறவுமே மனைவியர் இருக்கிறார்கள்''.[5] நமது சங்க காலத்திலும் சற்றேறக் குறைய இதே நிலைமையே இருந்திருப்ப தாகத் தெரிகிறது. பலவகைப் பரத்தையர், பின்முறை வதுவைப் பெதும்பை முதலியவர்களைப் பற்றிப் படிப்பதோடு, மனைவி ''புதல்வன்தாய்'', ''சிறுவன்தாய்'' என்றெல்லாம் குறிப்பிடப் படுவதையும் பார்க்கிறோம்.[6]

''முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்'' என்று[7] நமது இலக்கியத்தில் படிக்கையில், (கி.மு. 469-399) தயங்காது நஞ்சுண்டு இறந்த சாக்கிரடீசின் நினைவு வருகிறது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று சொன்னவன் தமிழனே என்று மகிழ்வு பொங்குகிறோம்; சற்றேறக் குறைய அதே காலத்தில் ரோமானிய நாட்டு செனேகா (கி.மு.3-கி.பி.65) என்பவர் ''எல்லா மக்களின் நாடுகளும் என் தாய் நாடுகள், என் நாடு எல்லா மக்களுக்கும் தாய்நாடு'' என்று சொல்லியிருப்பதைப் பார்க்கையில் நமக்கு வியப்பு உண்டாகிறது.[8] இந்த இரண்டு பகுதி மக்களுக்கும், பல வகையிலும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்குமோ என்ற அய்யமும் உண்டாகிறது.

''பிளேட்டோவும் அரிஸ்டாட்டிலும் (கிரேக்கரின்) நகர அரசுகளில் வாழ்ந்ததால் குறுகிய மனப்பான்மை உடைய வராயினர். ஸ்டாயிக்வாதிகள் ரோமானியப் பேரரசில் வாழ்ந்ததால் அன்னார் விரிந்த மனப்பான்மையடைந்தனர்'' என்று ஆய்வாளர்கள் (திருவள்ளுவர்:பக்.36) கூறுகிறார்கள். இத்தகைய வரலாற்று ஆராய்ச்சிக்குக் கிரேக்க ரோமானிய இலக்கியங்களில் இடம் உள்ளது. நமக்கு வரலாற்று நூல்கள் இல்லாததால் அத்தகைய ஆராய்ச்சிக்கு வாய்ப்பு இல்லை.

ஆனாலும், ''ஒரு காலத்திய வாழ்க்கைமுறை அக்காலத்திய இலக்கியத்துக்கும் கலைகளுக்கும் பின்னணியாக அமைகிறது'' என்னும் நோக்கில், (கிரேக்க, ரோமானிய இலக்கியப் பின்னணியில்) நமது பழைய இலக்கியங்களை ஆராய்ந்தால் நமது வரலாற்றை ஓரளவு தெளிவாக உணர வழி பிறக்கலாம்.

நமது இலக்கியம் முழுவதிலும் இத்தகைய ஆராய்ச்சிகளுக்கு வாய்ப்பு ஏற்படுத்தும் முகமாக, ஒவ்வொரு கால இலக்கிய எம்.ஏ. மாணவரும் அவ்வக்காலங்களில் நம்மோடு தொடர்புபட்டிருந்த நாட்டவரின் இலக்கியங்களையும் நமது தமிழக வரலாறு, புதைபொருள் ஆய்வு, கல்வெட்டு முதலியவைகளையும் இவ்வகுப்புக்களில் கற்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

(இவ்விதமாக அமைந்த மூன்று தமிழ் எம்.ஏ. வகுப்புக் களுக்கான பாட அமைப்புத் திட்டம் பின் இணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது.)

மனித சமுதாயம் உலக ஒற்றுமை என்னும் இலக்கை நோக்கி இயங்குகிறது. தமிழர்களாகிய நாமும், உலகின் பிறபகுதி நாகரிகங்களைக் கண்டறிந்து, உலக நாகரிகத்தில் நமது பங்கு என்ன என்பதைக் கணித்து உலகுக்கு விளக்க வேண்டும். 'மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமை இல்லை!' இதைச் செய்வதற்கு இப்போது உள்ள எம்.ஏ. படிப்பு உதவவில்லை; அங்கொன்றும் இங்கொன்றுமாக நடைபெறும் ஆய்வுகளும் போதா. உலக இலக்கியங்களோடு அவ்வக் காலத்திய நமது இலக்கியங்களை ஒப்பிட்டு ஆராய்ந்து நமது இலக்கியங்களின் சிறப்பை முழுமையாக அறிந்து அதனை உலகுக்கு உணர்த்தவும், உலகினரிடமிருந்து தேவையானவற்றை நம் தமிழர்க்குக் கொண்டு தரவும் பெருந்தொகையினரான ஆய்வாளர்கள் வேண்டும். தமிழ் எம்.ஏ.(பட்டப்) படிப்பை ஆழமுடையதாக்கினால்தான் இந்த நோக்கம் நிறைவேறும் என்ற நம்பிக்கையிலேயே இந்தத் திட்டம் தரப்படுகிறது.

*பின் இணைப்பு*

புதிய (மூன்று) எம்.ஏ. வகுப்புக்களுக்குரிய பாட அமைப்பு (மாதிரி)த் திட்டம்

1. எம்.ஏ. சங்கத்தமிழ்

   1. இலக்கிய வரலாறு (பொது)

2. சங்க இலக்கியச் சிறப்பு வரலாறு

3. சங்க இலக்கியம்

4. இலக்கியத் திறனாய்வு

5. இலக்கணம்; தொல்காப்பியம்

6. துணைப்பாடங்கள் (1):

(அ) கிரேக்க/ரோமானிய இலக்கிய வரலாறு

(ஆ) கிரீக்கு/இலத்தின் மொழி (விருப்பப்பாடம்)

7. துணைப்பாடங்கள் (2):

(அ) மானுட இயல்

(ஆ) சங்ககாலத் தமிழக வரலாறு

(இ) புதைபொருளாய்வு (விருப்பம்)

(2) எம்.ஏ. இடைக்காலத் தமிழ்

1. இலக்கிய வரலாறு (பொது)

2. இடைக்கால இலக்கியச் சிறப்பு வரலாறு

3. பக்தி இலக்கியம்/காவியங்கள்

4. இலக்கியத் திறனாய்வு

5. இலக்கணம்:தொல்காப்பியம், தண்டி முதலியன

6. துணைப்பாடங்கள் (1) :

(அ) வடமொழி இலக்கிய வரலாறு

(ஆ) வடமொழி/பாலி (விருப்பப்பாடம்)

7. துணைப்பாடங்கள் (2):

(அ) மானுட இயல்

(ஆ) இடைக்காலத் தமிழக வரலாறு

(இ) கல்வெட்டு/புதைபொருளாய்வு (விருப்பம்)

(3) எம்.ஏ. தற்காலத்தமிழ்

1. இலக்கிய வரலாறு (பொது)

2. தற்கால இலக்கியச் சிறப்பு வரலாறு

3. தற்கால இலக்கியம்

4. இலக்கியத் திறனாய்வு

5. இலக்கணம்:நன்னூல் முதலியன

6. துணைப்பாடங்கள் (1):

(அ) ஆங்கில இலக்கிய வரலாறு

(ஆ) ஆங்கிலம் (விருப்பப்பாடம்)

7. துணைப்பாடங்கள் (2):

(அ) மானுட இயல்

(ஆ) சமுதாய இயல்

(இ) தற்கால அரசியல் (விருப்பம்)

**குறிப்பு:**

பி.ஏ. வகுப்பில் தமிழைச் சிறப்புப் பாடமாகப் பயின்றவர்களையே இந்த எம்.ஏ., வகுப்புக்களில் சேர்ப்பது என்று இருந்தால், பொது இலக்கண, இலக்கிய வரலாறுகளைப் பி.ஏ. வகுப்பிலேயே கற்றுக் கொடுத்துவிட வேண்டும்.

**குறிப்புகள்**

1. புறநானூறு:75.
2. புறநானூறு:50.
3. Will Durrant; The Life of Greece (1939), p.419.
4. குறுந்தொகை:45, 309.
5. The Life of Greece (1939), p.304.
6. அய்ங்குறுநூறு:90, 405, 442; குறுந்தொகை:8,45; அகநானூறு:6.
7. நற்றிணை:355
8. தனிநாயகஅடிகள்:திருவள்ளுவர்:மேற்கோள்:பக்.37.

*சித்தலிங்கம்*
*காசி இந்து பல்கலைக்கழகம்*
*வாரணாசி*

# உமாபதியும் உண்மை நெறி விளக்கமும்

சிவநெறி பற்றிக் கூறும் நூல்கள் சாத்திரம், தோத்திரம் என இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவ்வாறான பிரிவு அப்பர் காலத்திலேயே அல்லது அவருக்கு முன்னமே இருந்தது என்பது, ''சாத்திரமும், தோத்திரமும் ஆனார் தாமே''[1] என்னும் அவரது தேவாரப் பகுதியிலிருந்து தெரிய வருகிறது. அப்பர் காலத்திலும் அதற்கு முன்பும் 'சாத்திரம்' என்பது மறைகளின் அங்கங்களையும், ஆகமங்களையும் குறித்திருக்கலாம். பிற் காலத்தில் 'சாத்திரம், என்பது பதின்மூன்றாம் நூற்றாண்டிலும், அதன் பிறகும் தோன்றிய சித்தாந்த நூல்களையே குறிப்பிட்டது. சித்தாந்த நூல்களாகிய பதினான்கினைச் சாத்திரம் என்றும் திருமுறைகள் பன்னிரண்டைத் தோத்திர நூல்கள் என்றும் குறிப்பிடும் வழக்கம் பின்னால் ஏற்பட்டு நிலைத்து விட்டது. சித்தாந்த நூல்களாவன: திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி நெஞ்சு விடுதூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்பநிராகரணம் ஆகியவாம்.[2]

இவற்றுள் சிவஞான போதம் முதனூலாகவும், சிவஞான சித்தியார் வழிநூலாகவும், சிவப்பிரகாசம் சார்பு நூலாகவும் கொள்ளப்பெறும்.[3] திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும், சிவஞான போத ஆசிரியரான மெய்கண்டாருக்கு முற்பட்டவை என்றும், சித்தியாரும் இருபா இருபதும் உண்மை விளக்கமும் அவருடைய மாணவர்கள் இயற்றியன என்றும், இவை யொழிந்த எட்டு நூல்களும் உமாபதி சிவம் இயற்றியவை என்றும் தெரிய வருகின்றன. மெய் கண்டாரின் மாணவர் அருணந்தி சிவாசாரியர்; அவரிடம் பயின்றவர் மறை ஞான சம்பந்தர்; அவர்

மாணாக்கராய்த் திகழ்ந்தவர் கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியர். இவரை உமாபதி சிவம் எனவும் கூறுவர்.

சித்தாந்த சாத்திரம் என வழங்கும் பதினான்கு நூல்களில் எட்டினை இயற்றியவர் உமாபதி சிவம். இவ்வெட்டு நூல்களும் 'சித்தாந்த அஷ்டகம்' எனும் பெயரால் வழங்கி வருகின்றன. அவ்வெட்டனுள் ஒன்று உண்மை நெறி விளக்கம். இஃது உமாபதி சிவம் இயற்றிய தொன்றன்று என்னும் கருத்து இடையில் தோன்றி நிலவி வருகிறது. அதன் உண்மையை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாம்.

உண்மைநெறி விளக்கம் ஆறு பாடல்களைக் கொண்டது முதற்பாடல் தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவ சுத்தி என்பனவற்றை விளக்குகிறது. இரண்டாம் செய்யுள் ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்ம சுத்தி யாகியவற்றை எடுத்துரைக்கிறது. மூன்றாம் பாடல் சிவரூபத்தை இயம்புகிறது. நான்காம் செய்யுள் சிவதரிசன முரைக்கிறது. சிவயோகத்தை ஐந்தாம் பாடலும் சிவபோகத்தை ஆறாம் செய்யுளும் விளக்குகின்றன. தத்துவரூபம் முதல் சிவயோக மீறான பத்தும் 'தசகாரியம்' என்று குறிக்கப்படும்.

உமாபதிசிவம் இயற்றிய சித்தாந்த அஷ்டகத்துள் ஒன்றான இந்நூலை உமாபதி சிவம் அருளிச் செய்யவில்லை யென்றும், இதன் ஆசிரியர் சீகாழித் தத்துவநாதர் என்றும் காலஞ் சென்ற பேராசிரியர் திரு அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் குறித்துள்ளார்.[4] இது குறிக்கப்பட்டுள்ள அதே நூலின் முகவுரை யில் ''பதினான்கு சாத்திரங்களையும் மூலமும் உரையுமாக நமது சமாஜம் 1934 வருஷம் வெளியிட்டது. அவ்வெளியீட்டில் சித்தாந்த அஷ்டகம் என்ற எட்டு நூல்களையும், இருபா இருபஃது, துகளறு போதம் என்ற இரண்டையும் பரிசோதித்து மிகத் திருத்தமாக அவை வெளிவரத்துணை புரிந்த பெரியார், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராயிருந்த சைவத்திருவாளர் எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, எம்.ஏ.,எல்.டி., அவர்களேயாவர்''[5] என்றும் கூறப் பட்டுள்ளது. 'அஷ்டகம்' என்ற சொல்லை, பதிப்பாசிரியர் ஒப்புக் கொண்டுள்ள உண்மையே 'உமாபதி எட்டு நூல்களை இயற்றினார், அவை சித்தாந்த அஷ்டகம் எனப் பெறும்' என்ற மரபை அவர் ஒப்புக் கொள்ளுமாறு அமைந்துள்ளது. திரு.பிள்ளையவர்கள், 'உந்திகளிறு' என்னும் வெண்பா

'உண்மைநெறி' என்று மட்டுமே குறிப்பிடுகிற தென்றும், ஆசிரியர் பெயரைக் கூறவில்லையென்றும், கொன்றை மாநாகர்ச் சண்முக முதலியார் சித்தாந்த அஷ்டகம் என்ற பெயரில் இவற்றைப் பதிப்பித்து, அவை யெல்லாம் உமாபதி சிவாசாரியர் அருளியனவாகக் கொண்டனர் என்றும் கூறியிருக்கிறார்.[6] 'உந்திகளிறு' என்று தொடங்கும் வெண்பா, எந்த நூலின் ஆசிரியரையும் கூறவில்லை. இன்னும் சொல்லப் போனால் எந்த நூற்பெயரையும் அது முழுமையாகக் கூறவில்லை. திரு. பிள்ளை யவர்கள் 'எண்ணும் அருள் நூல்'[7] என்னும் பாயிரச் செய்யுளைக் கூறி, அது நூற் பெயரையும் நூலாசிரியர் பெயரையும் குறிப் பிடுகிறது என்றுரைக்கிறார். இப்பாயிரச் செய்யுளின் அடிப் படையில், உண்மை நெறி விளக்கத்தை இயற்றியவர் சீகாழித் தத்துவநாதர் என்றும் இது சித்தாந்த சாத்திரத்திற் சேர்க்கப்பட்ட தென்றும் கூறி, இந்நூலின் ஆசிரியர் உமாபதி என்ற மரபு வழிச் செய்தியை மறுக்கிறார்.

இந்நூல்களெல்லாம் பனை யோலையில் எழுதப்பட்டன வென்பதையும், பல்வேறு தலைமுறையினர் அவற்றைப் பயன் படுத்தினார்கள் என்பதையும் நாம் நினைவிற் கொள்ள வேண்டும். ஓர் ஓலை மற்றொன்றொடு கலந்து விடுவதற்குரிய வாய்ப்பு இருந்தது. மேலும் அக்காலத்தில் பல்வேறு ஆசிரியர்கள் ஒரே பெயரில் தம் நூல்களை வெளிக் கொணர்ந்தனர் என்பதையும் மறத்தலாகாது. இது போன்ற நிகழ்ச்சி வட மொழியிலும் உண்டு.[8] எனவே, சீகாழித் தத்துவநாதரும் ஓர் 'உண்மை நெறி விளக்கம்' இயற்றியிருக்கலாம், பாயிரச் செய்யுளில் நூற் பெயரும் தம் பெயரும் குறிப்பிட்டிருக்கலாம்.

மற்றொன்றைக் கருத்திலிருத்தி இதனை நோக்கலாம். இதுவரை வெளி வந்த எல்லாப் பதிப்புக்களிலும் நெஞ்சுவிடு தூது, சங்கற்ப நிராகரணம் ஆகிய இரண்டின் இடையிலேயே உண்மை நெறி விளக்கம் இடம் பெற்றிருக்கிறது. இவ்விரண்டுமே உமாபதி சிவம் இயற்றிவை. வேறொருவர் எழுதிய ஒரு நூலை ஒரே ஆசிரியரின் இரு நூல்களுக்கிடையில் வைத்துப் போற்றுவதென்பது இயற்கையாகத் தோன்றவில்லை.

'உந்தி களிறு' என்று தொடங்கும் வெண்பாவின் அடிப்படையில் சித்தாந்த நூல்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. எல்லாப் பதிப்புக்களுமே இவ்வடிப்படையில் வெளி வந்திருக்கின்றன. இந்நூல்கள் காலப்போக்கின்படி அமைக்கப் பட்டிருக்கின்றன. மெய்கண்டாருக்கு முன்னால் வாழ்ந்த உய்ய

வந்த தேவ நாயனார்களின் இரு நூல்களையடுத்துச் சிவஞான போதம் இடம் பெறுகிறது. அருள் நந்தி மெய்கண்டாரின் தலைமாணவர். எனவே அவருடைய சித்தியாரும் இருபா இருபஃதும் சிவஞான போதத்தை ஒட்டி நிற்கின்றன. மெய் கண்டாரின் மற்றொரு மாணவர் திருவதிகை மனவாசகங் கடந்தார். அவருடைய உண்மை விளக்கம் அடுத்துக் காணப் படுகிறது. அருணந்தியின் மாணவர் மறைஞான சம்பந்தர். அவர் நூலேதும் இயற்றவில்லை. அவர் மாணவராகிய உமாபதி சிவத்தின் எட்டு நூல்கள் அடுத்து இடம் பெற்றிருக்கின்றன.

சீகாழிச் சிற்றம்பல நாடிகள் மெய் கண்டாரின் மாணவருள் ஒருவர் என்பதாகப் பேராசிரியர் கா.சு. பிள்ளையவர்கள் குறிப்பிடுகிறார்.[9] இஃது உண்மையெனின், சிற்றம்பல நாடிகளின் நூல், மெய்கண்டாரின் மற்றொரு மாணாக்கராகிய மன வாசகங்கடந்தாரின் உண்மை விளக்கத்தை அடுத்து வைக்கப் பெற்றிருத்தல் வேண்டும். எப்படியும் உமாபதியின் நூல்களுக்குப் பின்னால் அல்ல; அதுவும் உமாபதியின் இரு நூல்களுக்கிடையில் இருத்தல் இயலாது.

சித்தாந்த ஆசிரியர் மரபு பற்றி மற்றொரு கருத்தும் உண்டு. உமாபதியின் ஆசிரியரான மறைஞான சம்பந்தரின் மற்றோரு மாணவர் மச்சுச் செட்டியார். அவரிடம் பயின்றவர் காழிக் கங்கை மெய் கண்டார். அவர் மாணாக்கர் காழிப் பழுதைகட்டிச் சிற்றம்பல நாடிப் பண்டாரம்.[10] இவரே துகளறு போதம் இயற்றிய சீகாழிச் சிற்றம்பல நாடிகள். இக்கூற்று உண்மை யெனின் இவர், உமாபதிக்கு மூன்றாம் தலைமுறையினர். கா.சு. பிள்ளையவர்கள் கருத்துப்படி நான்காம் தலைமுறையினர் எவ்வாறாயினும் பிற் பட்ட தலைமுறையினரின் நூலை இத்தொகுப்பில் சேர்த்திருக்க மாட்டார்களெனக் கூறலாம்.

இனிமரபு வழிச் செய்தியையே சிறிது உற்று நோக்கினும் வேறோர் உண்மை புலனாகும். திருநந்தி தேவர் முதல் பரஞ்சோதி முனிவர் வரையிலான நான்கு ஆசிரியர்களும் 'அகச் சந்தானம்' அல்லது 'தேவபரம்பரை' என்று குறிக்கப் பெறுவர். மெய்கண்டார் முதல் உமாபதி யிறான நால்வரும் 'புறச்சந்தானம்' அல்லது 'பூதபரம்பரை' எனக் குறிக்கப்பெறுவர். உமாபதியின் மாணவர்களால் ஏற்படுத்தப் பெற்ற தருமபுரம், திருவாடுதுறை யாதீனங்களைச் சேர்ந்த துறவிகள் 'அபிடேக பரம்பரை' என்ற பெயரில் வழங்கப் பெறுவர். இவ்வாறு அகச் சந்தானத்துக்கும் புறச் சந்தானத்துக்கும் தொடர்பு ஏற்படுத்துபவர் மெய்கண்டார்.

புறச்சந்தானம் அல்லது பூதபரம்பரையோடு அபிடேக பரம்பரையை இணைப்பவர் உமாபதி. இவ்வாறாக, பூதபரம்பரையினரைச் சேர்ந்த நல்லாசிரியர்களின் நூல்களையே சித்தாந்தமாக ஏற்றுக் கொண்டார்கள் பண்டையோர் என்பது புலனாகும். பின் வந்தவர் - அதாவது அபிடேக பரம்பரையைச் சேர்ந்தவர்கள் - இயற்றிய நூல்கள் 'பண்டார சாத்திரங்கள்' என்ற பெயரில் தனியே வழங்கின.

இவற்றையெல்லாம் கருத்தில் கொள்ளாது திரு. அனவரத விநாயகம் பிள்ளை மேற்கொண்ட கொள்கை பின்வந்த அறிஞர் பலரை மயக்கத்தில் ஆழ்த்தியது.[11] வரலாற்றாசிரியர்களும் இதனைப் பற்றி ஏதும் துணிந்து கூற இயலாத நிலையில் இருக்கிறார்கள். சைவமும் தமிழும் பயின்ற திரு. சதாசிவ பண்டாரத்தார் அவர்களும் ''உண்மை நெறி விளக்க ஏட்டுப் பிரதிகளுள் மிக்க பழமை வாய்ந்த பிரதிகளில் இவ்வெண்பா[12] உளதா என்பதையும் ஆராய்ந்தறிந்த பிறகு தான் இதனை ஒரு தலையாகத் துணிதல் கூடும்''[13] என்று குறிக்கிறார்.

உமாபதி மெய்ப்பொருளியலறிஞர் மட்டுமல்லர்; உயர்ந்த கவிஞர், கலையுள்ளம் படைத்தவர். தமது நூல்களை ஓர் ஒழுங்கில் நிரல்படுத்தியிருக்கிறார். பல கொள்கைகளை (Theories) முதலில் சிவப்பிரகாசத்தில் எடுத்துரைத்தார். அவற்றைப் பின்னால் பல நூல்களில் விளக்கியுரைத்தார். அவர் அருளையும் அதன் செயல்களையும்[14], ஐந்தெழுத்தையும்[15] பற்றிச் சிவப் பிரகாசத்தில் குறித்தார். இவற்றைத் திருவருட்பயனில் விரித்துரைத்தார். குருவின் பெருமை, குருவருளின் சிறப்பைத் தமது முதல் நூலில் குறிப்பிட்டார்.[16]. அவற்றைப் போற்றிப் பஃறொடை, நெஞ்சு விடுதூது ஆகியவற்றில் விளக்கிக் கூறினார். அவ்வாறே தசகாரியம் பற்றிய குறிப்பைச் சிவப்பிரகாசத்தில்[17] காண்கிறோம். இவற்றின் விளக்கத்தையும் விரிவையும் உண்மை நெறி விளக்கத்தில் பெறுகிறோம்.

சீகாழிச் சிற்றம் பல நாடிகள் இவற்றையே 'முப்பது அவதாரங்களாகத் தமது' துகளறு போதத்தில் விரிவு படுத்தினார்.

எனவே தசகாரியத்தை முப்பதாக வகைப்படுத்தி விரித்தோதிய சிற்றம்பல நாடிகளே தசகாரியத்தை விளக்க ஒரு நூல் செய்திருப்பாரென எண்ண இடமில்லை. மேலும் சீகாழித் தத்துவ நாதரே சிற்றம்பல நாடிகள் என்று உறுதியாகக் கூறுவதற்கு இல்லையென அனவரதவிநாயகம் பிள்ளையவர்களே குறிக்கிறார்கள்.

உண்மைநெறி என்பதே அந்நூலின் பெயர். உண்மை நெறி விளக்கம் என்பது அதற்கமைந்த உரையின் பெயர் என்பாரும் உளர். இப்படிப் பார்க்கினும் உண்மைநெறி உமாபதிசிவம் இயற்றியதே என்பதும், 'உந்திகளிறு' என்று தொடங்கும் வெண்பா உண்மை நெறி என்று கூறியதே பொருந்தும் என்பதும் புலனாகும். இவற்றால் உண்மை நெறி விளக்கத்தின் ஆசிரியர் உமாபதி சிவமே என்பது போதரும்.

*பிற்சேர்க்கை*

நெடுநாளாக உண்மை நெறி விளக்கம் உமாபதி சிவாசாரியர் அருளிச் செய்ததாக வழங்கி வந்திருக்கிறது. 'உந்திகளிறு' என்ற செய்யுள் 'உண்மை நெறி' யென இந்நூலை மாத்திரஞ் சுட்டியதே யன்றி இதன் ஆசிரியர் பெயரைக் கூறா தொழிந்தது. சிவப்பிரகாசம் முதற்சங்கற்ப நிராகரணம் இறுதியாக வுள்ள எட்டு நூல்களையும் சித்தாந்தாஷ்டகம் என்னும் பெய ரோடு கொ. ஷண்முக சுந்தர முதலியார் பதிப்பித்து, அவை யெல்லாம் உமாபதி சிவாசாரியர் அருளியனவாகக் கொண்டனர்.

இனி, ஆசிரியர் பெயருரைக்கும் 'எண்ணும் அருள் நூல்' என்னும் பாயிரச் செய்யுள் இங்குக் காணும் சிந்தனையுரையில் மாத்திரமே யன்றி, இராசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்துள்ள சிவஞான போதவுரையிடைத் தசகாரியத்தை விளக்கும் பொருட்டுக் காட்டப்படும் இந்நூல் மூலத்திறுதியிலும், இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை திருவாரூர் - சோமசுந்தர தேசிகரவர்களிடத்துள்ள வேறு உரைப் பிரிதியின் ஈற்றிலும் காணப்படுகிறது. சீகாழித் தத்துவ நாதர்க்குக் குருவாக உரைக்கப் படும் சீகாழித் தத்துவனார் சீகாழிச் சிற்றம்பல நாடிகளே யென்று துணிந்துரைத்தற்குத் தக்க ஆதாரமில்லையாயினும் உரைகாரர் இந் நூலைத் துகளறு போதத்தின் வழி வந்தது என்று குறிக்கின்றமையின் அதன் ஆசிரியர் ஆகிய சீகாழிச் சிற்றம்பல நாடிகளே இவ்வாசிரியர்க்குக் குருவாவர் என்றுரைக்க வேண்டியிருக்கிறது. இச் சீகாழித் தத்துவநாதர் இருபாவிருபதிற்கு ஓர் சிறந்த வுரை யியற்றியுள்ளார். (601-633 பக்கங்கள் பார்க்க) அவ்வுரையிறுதியிற் காணப்படும் வெண்பா சீகாழித் தத்துவநாதர், சிற்றம்பல நாடிகள் சீடரென்று தெளிவாக உரைத்தது.

உண்மைநெறி விளக்கத்துக்கும் பலவுரைகளுண்டு. இங்குப் பதிப்பிக்கும் சிந்தனையுரை என்னிடமுள்ள ஓலைச் சுவடியொன்றில் காணப்படுகிறது.

இவ்வுரை யியற்றியார் பெயர் கிடைத்திலது. வேறு பல்லுரைகள் சென்னை முதலிய பிற விடங்களில் அகப்படினும் இச்சிந்தனை யுரைப் பிரதிகள் வேறு அகப்படவில்லை.

- எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை.

## குறிப்புகள்

1. திருமாற்பேறு; 6:78:5 (தருமபுரம் பதிப்பு) 1963.
2. உந்தி களிறு உயர் போதம் சித்தியார்
"பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்த அருட்
பண்புவிற போற்றி கொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மை நெறி சங்கற்ப முற்று."
3 சிவப்பிரகாசம்.
4. சித்தாந்த சாத்திரம், இரண்டாம் பதிப்பு, சமாஜம், 1940, பக். 1161 இதனைப் பிற்சேர்க்கையில் காண்க.
5. சித்தாந்த சாத்திரம், இரண்டாம் பதிப்பு, சமாஜம், 1940, பக். V-VI இதனைப் பிற்சேர்க்கையில் காண்க.
6. பிற்சேர்க்கை, இப்பதினான்கு நூல்களையும் உரையுடன் வெளியிட்ட காஞ்சி நாகலிங்க முதலியாரும், உண்மை நெறி விளக்கத்தை உமாபதி இயற்றியதாகவே கொண்டனர். முகவுரை பக்.7. பக்.763. திரு. அனவரத விநாயகம் பிள்ளையவர்களே தமது மற்றொரு நூலில் இவ்வெட்டு நூல்களும் உமாபதி இயற்றியவை என்று கூறுகிறார். சைவ சித்தாந்த வரலாறு (1909) பக். 30, 31.
7. எண்ணும் அருள் நூல் எளிதின் அறிவாருக்(கு)
உண்மை நெறிவிளக்கம் ஓதினான் - வண்ணமிலாத்
தண்காழித் தத்துவனார் தானே புனைந்தருளும்
நண்பாய தத்துவ நாதன்.
8. 'பரமார்த்த சாரம்' என்ற பெயரில் இருநூல்கள் உண்டு. ஒன்று அத்துவைத நெறியையும், மற்றது காஷ்மீர்ச் சைவத்தையும் விளக்குவது தமிழில் 'தசகாரியம்' என்ற பெயரில் அம்பலவாண 'தேசிகர், தட்சிணாமூர்த்தி தேசிகர், சுவாமிநாத தேசிகர் இயற்றிய மூன்று நூல்கள் உள்ளன. இம்மூவரும் திருவாடுதுறை மடத்தினர்.
9. சைவ சித்தாந்த சந்தானாசாரியர் சரித்திரமும் அவர்களது அருள் நூல்களும் - பக்.17. ஆனால் அவர் தமது கருத்தைப் பின்னால் மாற்றிக் கொண்டார். சிற்றம்பல நாடிகள், கங்கை மெய்கண்டாரின் மாணவர்; அவர், உமாபதி சிவத்தின் மாணவராகிய மச்சுச் செட்டியாரிடம் உபதேசம் பெற்றவர் என்று குறிக்கிறார் -- இலக்கிய வரலாறு - II, 1949, பக்.394.
10. சைவத்தின் மறுமலர்ச்சி - தருமையாதீனம், 1950, பக். 40-42.
11. டாக்டர் பொன்னையா; டாக்டர் பரஞ்சோதி, டாக்டர் சிவராமன், கி. இராம லிங்கம் முதலியார்.
12. 'எண்ணும் அருள் நூல்' -- என்னும் வெண்பா.

13. *தமிழ் இலக்கிய வரலாறு (13,14,15 ஆம் நூற்றாண்டுகள்)* அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1963, பக்.59.

14. *சிவப்பிரகாசம்*, 18.

15. *சிவப்பிரகாசம்*, 90-92.

16. *சிவப்பிரகாசம்*, 68.

17. *சிவப்பிரகாசம்*, 71-83.

*தே. சீனிவாசவரதன்*
*அலிகார் முசுலீம் பல்கலைக்கழகம்*
*அலிகார்*

# பரிபாடல் உரையாசிரியர் யார்?

*முன்னுரை*

திருக்குறளுக்கு உரை வகுத்தவர் பரிமேலழகர் என்பதனை உலகமறியும். அவரே பரிபாடலுக்கும் உரை வகுத்துள்ளார் என நம் முன்னோர் எண்ணி வந்திருக்கின்றனர் (உ.வே.சா. ஐயர் பதிப்பு - பரிமேலழகர் வரலாறு) அவ்வெண்ணம் எத்துணையள விற்குப் பொருந்தும் என்பதனைக் காட்ட முயல்வதே இச்சிறு கட்டுரையின் நோக்கமாகும்.

இரண்டுரைகளுக்கும் ஆசிரியர் ஒருவரே என்பதற்கு அகப் புறச்சான்றுகள் தெளிவாக இல்லை. மாறாக இரண்டுரைகளுக்கு மிடையே வேறுபாடுகள் சில காணபடுகின்றன. அவற்றை முதலிற் காண்போம்.

இரண்டுரைகளும் ஒருவரால் எழுதப்பட்டனவவல்ல என்பதற்குரிய காரணங்கள்

*[அ] திருக்குறளில் தாம் குறித்த பொருளைப் பரிபாடலில் சுட்டாமை.*

நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் (திருக் 17) என்ற குறட்கண் தடிந்து என்ற சொல்லிற்குக் குறைத்து என்று பொருள் கொண்டு, விசேடவுரையில் ஈண்டுக் குறைத்தல் என்பது முகத்தலை - அது கடல் குறைப்படுத்த நீர் (பரி 20:1) என்பதனாலும் அறிக என்று விளக்குவர். பரிபாடலில் குறைத்தல் என்பது முகத்தல் என்ற பொருளில் வருவதாகக் குறளுரையில் குறிப்பிட்டவர், பரிபாடலுரையிலும் அப்பொருளைக் காட்ட வேண்டாமா? பரிபாடலுரையில் ''கடலைக்குறைப்படுத்த நீரராலே'' என்று அங்குள்ள சொல்லையே கொண்டு பொருள் கூறுதலைக் காண்கிறோம்.

[ஆ] நீண்ட பொழிப்புரைத்தல்

பரிபாடலுரையமைப்பு, திருக்குறளுரையமைப்புடன் ஒத்து வரவில்லை. திருக்குறளில் ஒவ்வொரு பாட்டிற்கும் பொழிப்புரையும், விசேடவுரையும் சிறப்பான முறையில் அமைந்திருப்பதனைக் காண்கிறோம். பரிபாடலில் நீண்ட பொழிப்புரையைத் தவிர இடையிடையே சில சொற்களுக்கே விசேடவுரை தரப்படுகின்றது.

[இ] செய்யுள் நடையின்மை

திருக்குறளுரையில் ''இந்திரன் முதலிய இறையவர் பதங்களும், அந்த மால் இன்பத்து அழிவில் வீடும்'' என்பன போன்ற பல செய்யுள் நடைத் தொடர்களைக் காணலாம். பரிபாடலுரையில் இந்நடையை யாண்டுமே காணமுடியவில்லை.

[ஈ] பதவுரை மட்டுங் காட்டலும் - தொடர்களை விட்டுச் செல்லலும்

பரிமேலழகர் பரிபாடலுரையைப் பொழிப்புரையாக அமைத்தார். திருக்குறளுரையும் அத்தன்மையதே. ஆனாலும் பரிபாடலுரையில் இடையிடையே சொல்பொருள் மட்டுங் கூறுவதனையும், பல சொற்றொடர்களைப் பொருள் கூறாமல் விட்டுச் செல்லுதலையும் காண்கிறோம். திருக்குறளுரையில் அத்தன்மையில்லை.

[உ] உரைக்கு உரை வகுக்கும் முறையின்மை

பரிமேலழகர், திருக்குறளுரையில் முதலில் தாம் உரை கூறியதனையே விசேடவுரையில் பின்னரும் விளக்குவர் (எ-டு) பொறுத்தலிறப்பினை (திருக்.152) என்ற குறளில் இறப்பினை என்ற சொல்லிற்கு மிகையை என்று பொருள் கொண்டு - அப்பொருளையே விசேடவுரையில் ''மிகை என்றது மேற்சொல்லிய இரண்டினையும்'' என்று விளக்குவர். இவ்வாறு பலசான்றுகள் காட்டலாம். பரிபாடலுரையில் ஓரிடத்தேனும் இம்முறை கையாளப்படவில்லை.

காட்டிய காரணங்கள் பொருந்துமா?

(அ) குறைத்தல் என்ற சொல்லிற்கு முகத்தல் என்ற பொருள் பரிபாடலுரையில் கூறப்படவில்லை என்றாலும் முகத்தல் என்ற பொருள் அங்கு மறுக்கவில்லை. ஆதலின் இரண்டிடத்தும் ஒரே பொருளைக்குறிக்கின்றார் என்று துணியலாம். மூலத்தில் உள்ள தொடரையே கொண்டு பொருள்விளக்கந் தருதலைக் குறளுரையிலும் காணலாம் (குறள் 1087 உரை.)

(ஆ) பரிபாடலுரை நீண்ட பொழிப்புரையாக அமைந் துள்ளது. சொல் நயங்களும் இலக்கணக்குறிப்புகளும் அருகிக் காணப்படுகின்றன. இவ்வமைப்புக்குக் காரணம் யாது? இவையனைத்தும் உரை வகுக்கும் நூலின் தன்மையினைப் பொறுத்தது. திருக்குறள் அறநூல்; நயங்களும் - இலக்கணக் குறிப்புக்களும் மிகுதியாக அந்நூலுக்குத் தேவைப்படுகின்றன. பரிபாடல் அத்தன்மையன்றி இனிய-எளிய பொருளுடையது. இந்நூலுரையில் அரிதாக உணரத்தகும் இலக்கணக்குறிப்புக்கள் வேண்டுமென்றே தவிர்க்கப்பட்டிருக்கலாம்.

(இ) திருக்குறளுரையில் அமைந்த செய்யுள் நடை, பரிபாடலுரையில் அமையவில்லை என்பது சிறந்த காரணமாகாது. பரிபாடலுரைக்கு முதலோ முடிவோ கிடைக்க வில்லை. கிடைத்திருக்குமாயின் அச்செய்யுள் நடையை மீண்டும் பெற்றிருக்கலாம். மேலும் நடையில் இரண்டு நூல்கள் உரைகளும் ஒப்புமையுடையன என்பது ஈண்டு உணரத்தக்கது.

(ஈ) அடுத்துச் சில சொற்களுக்குப் பொருள் மட்டுங் கூறுதலையும், சில தொடர்களுக்குப் பொருள் காட்டாமல் செல்வதனையும் காண்கிறோம். உரை வகுப்பவர் நூலை நோக்கி, எம்முறையில் உரைவகுக்க வேண்டுமென முன்னர்த் திட்ட மிட்டுக் கொள்வார். அம்முறையில் பரிமேலழகர் இரண்டு நூல்களுக்கும் வேறு வேறு முறைகொண்டு உரைவகுக்கத் திட்டமிட்டார் எனக் கோடலே பொருத்தும். பரிபாடலில் ஒரே சொல் பன்முறை கூறப்படுகின்றது. (எ-டு)

அவன், மடிமேல் வந்தது பாம்பு

. . . . . . . . . . . . . ....

பாம்பு படிமதம் சாய்த்தோய்ப அம்பூராவை (பரி 4:43-8)

என்ற இப்பகுதியில் பாம்பு என்ற சொற்குப் பொருள் தேவையா? இச்சொல்லே இவ்வடிகளிலும் ஏழுமுறை வந்துளது. இங்குள்ள பகுதிக்கு அப்படியே பொழிப்புரை தரப்படுமானால் பெரியோரால் தள்ளப்படுமேயன்றிக் கொள்ளப்படாது. ஆகவே தான் பரிமேலழகர் பரிபாடலுக்கேற்ற முறையில் இடையிடையே சில சொற்களுக்குப் பதவுரை எழுதியும், சில சொற்றொடர் களுக்குப் பொருள் கூறாமலும் செல்கின்றார்.

(உ) திருக்குறளுரையில் பரிமேலழகர் தாம் முன்னர்க் கூறியதனையே விசேடவுரையில் விளக்குவதனைக் கண்டோம். பரிமேலழகருக்குப் பரிபாடலில் அச்சூழ்நிலை உருவாகவில்லை.

ஏற்கனவே பல சொற்களை விடுத்துப் பொருள் கூறவேண்டிய நிலையுள்ள நூலில், உரை கூறிய சொல்லிற்கு மேலும் விளக்கந் தரும் நிலை ஏற்படுமா? ஆகவே மேற்காட்டிய காரணங்கள் ஏற்புடையனவல்ல என்பது போதரும்.

### இரண்டு உரைகளும் ஒருவரால் எழுதப்பட்டன என்பதற்குரிய காரணங்கள்

#### [அ] பொருளொற்றுமை

'அகர முதல வெழுத்தெல்லாம்' என்ற முதற்குறட்பா விசேடவுரையில் பரிமேலழகர் ''...ஆதி பகவன் முதற்றே என உலகின் மேல் வைத்துக் கூறினார், கூறினாரேனும் உலகிற்கு முதல் ஆதிபகவன் என்பது' கருத்தாகக் கொள்க'' என்று குறிப்பிட்டார். பரிபாடலில் நீயே வரம் பற்றியவுலகம்' என்ற தொடர் ''ஆதி பகவன் முதற்று உலகு'' என்பது போன்ற அமைப்புடையது. இவ்விடத்தும் பரிமேலழகர் இவ்வுலகிற் கெல்லாம் தலைவன் நீயே என்று பொருள் வரைவர். இரண்டும் நூல்களிலும் மூலம் ஒரே வகையாக அமைந்திருக்க, உரையினையும் இரண்டிடத்திலும் ஒரே முறையில் அமைத்து எழுதுவதனைக் காண்கிறோம்.

#### [ஆ] தொடர்பு கூறு முறையொற்றுமை

பரிமேலழகர் திருக்குறளில் பாலுக்குப்பால், இயலுக்கு இயல், அதிகாரத்திற்கு அதிகாரம் ஏன் - குறளுக்குக் குறள் கூடத் தொடர்பு கூறிச் செல்வதனைக் காண்கிறோம். பரிபாடலில் இத்துணைச் செறிவாகத் தொடர்பினைக் காட்டவில்லை என்றாலும் பலபாடல்களில் முன்பின் சொல்லப்படும் கருத்துக் களைச்சுட்டி ஓரளவு தொடர்பு கூறியே சென்றிருக்கிறார்.

#### [இ] இலக்கண விளக்க ஒற்றுமை

இலக்கணத்தை விளக்கும்போது பரிமேலழகருரையில் சில தனிச் சிறப்புக்கள் காணலாம். இரண்டு நூல் உரைகளிலும் இவற்றைக் காணமுடிகின்றது.

##### க. பின் முன்னாகத் தொக்க தொகை

திருக்குறளுரையில் பரிமேலழகர் (1) முற்பகல் - பிற்பகல் (319) (2) நுனிக் கொம்பர் (476) (3) நடுவூர் (1008) என்ற தொடர்களைப் பின் முன்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகை என்று குறிப்பிடுவர். பரிபாடலிலும் ''தாமரைப் பொகுட்டு'' (2:94) என்ற தொடரை ''முன் மொழி பின் மொழியாகத் தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகை'' என்று

குறிப்பிடுவதனைக் காண்கிறோம். மற்றைய உரையாசிரியர் இத்தொடரை இலக்கணப் போலி எனக் கருதுவர். பரிமேலழகர் மட்டும் இவ்வாறு விளக்கந்தருகின்றார் என்பதனைத் திருக்குறள் நுண்பொருள் மாலையால் (219) உணரலாம்.

**ங. ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் வேறுபாடு உணர முடியாமை**

திருக்குறளுரையில் பரிமேலழகர் கணங்குழையை (1081) ஆகுபெயர் என்றும், தொடலைக் குறுந்தடியை அன்மொழித் தொகை என்றும் குறித்தார். இவ்வாறு கூறும் முறை கொண்டு ஆகுபெயர்-அன்மொழித் தொகை பற்றிப் பரிமேலழகர் கருத்து யாது என்று உணர முடியவில்லை. அதே நிலையைப் பரிபாடலிலும் காண்கிறோம். ''கயந்தலை'' (பரி 5:11) என்பது பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; அஃது ஈண்டு ஆகுபெயராய் அண்மை விளி ஏற்று நின்றது என்பர். ஈண்டு அன்மொழித் தொகை ஆகுபெயராயிற்று எனின் அன்மொழித் தொகை ஆகுபெயராகாமலும் அமையும் என்று புலப்படுகின்றதன்றோ? ஆகவே இன்னது ஆகுபெயர் - இன்னது அன்மொழித் தொகை என்று துணிய முடியாத நிலையில் இரண்டு நூலுரைகளும் அமைந்துள்ளன.

பெயர் மாத்திரையாய் நின்றது (குறள் 610 பரி 3:1) அடுக்குப் பன்மை பற்றி வந்தது. (குறள் 341, 423 பரி 2:75) செய்யுளாதலின் சுட்டுப் பெயர் முற்கூறப்பட்டது (குறள் 642 பரி 4:43) என்ற இலக்கணக் குறிப்புக்கள் இரண்டு உரையிலும் ஒப்பக் காணப் படினும் இவை பரிமேலழகருக்குத் தனிச் சிறப்புடையன அல்ல என்று காட்டப்படவில்லை.

**[ஈ] வடமொழிக்குக் கருத்தொப்புமை**

பரிமேலழகர் வடமொழி வல்லுநர். வடமொழிக் கருத்துக்களை இரண்டு நூலுரைகளிலும் ஏற்ற பெற்றியமைத்து எழுதுவதனைக் காண்கிறோம்.

**க. வடமொழிச் சொல் தமிழ்மொழியில் வந்தது எனல்**

அ) பச்சை என்பது பிரத்யும்னன் என்னும் வடமொழித் திரிபு (பரி 3:82)

ஆ) ''கூந்தல் - இப்பெயர் கேசம் என்றும் வடமொழி முதனிலையாக வந்தமையின் அதன் பொருண்மைப் பற்றிக் கூந்தல் என்றார்'' என்னும் பகுதிகளை இ) குடங்கம் என்னும்

வடசொல் திரிந்து நின்றது. (குறள் 890) (ஈ) உழையிருந்தான் எனப் பெயர் கொடுத்தார் அமாத்தியர் என்னும் வடமொழிப் பெருக்கும் பொருண்மை யதுவாகலின் (குறள் 638) இப்பகுதி களுடன் ஒப்பிடுக.

**ங. சாங்கிய நூற்கருத்து விளக்கம்**

பரிபாடலுரையில் (3:77-80) ஒறுன்று முதல் ஒன்பது வரை அமைந்த எண்களுக்கு எல்லாம் பரிமேலழகர் சாங்கிய நூற்கருத்தைக் காட்டி விளக்கந் தந்தார். இங்கு விளக்கியதனைச் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் (குறள் 27) எனற ஐந்தினையும் விளக்கிய திருக்குறட் பகுதியோடு ஒப்பிடலாம்.

**[உ] நடையொற்றுமையும் சொல் ஒற்றுமையும்**

இரண்டு நூலுரைகளிலும் பரிமேலழகர் ஒரே தன்மையாகச் சொல் நயம் கூறுவர். அவற்றைக் கீழ்வருமாறு பிரித்துக் காட்டலாம்.

*(க)* என்பார் கூறினார் *(*பரி 3:10-11 குறள் 638*)*

*(ங)* என்னுங் கருத்தால் கூறினார் *(*பரி 5:10 குறள் 92*)*

*(ச)* என்பது போதரக் கூறினார் *(*பரி 12:2 குறள் 1039*)*

*(ஞ)* என்னும் ஒப்புமை பற்றிக் கூறினார் *(*பரி 5:4 குறள் 642*)*

இவ்வாறு பலவகைகளில் இரண்டு நூல் உரைகளுக்கும் ஒப்புமையுண்டு. சிலவற்றையே இங்குக் காட்டினோம்.

**முடிப்புரை**

திருக்குறளுரையில் சமய வேறுபாடு அற்ற முறையில் எல்லாச் சமயக் கருத்துக்களையும் ஆங்காங்கே பரிமேலழகர் ஏற்று எழுதியிருக்கின்றார். சைவ வைணவக் கருத்துக்கள் மல்கிய பரிபாடலுக்கும் தாமே உரை எழுத வேண்டும் என்று அவர் ஏன் துணிந்திருக்க முடியாது? மேலே காட்டிய ஐந்து காரணங்களை யும் கொண்டு திருக்குறளுக்கு உரை வகுத்த நல்லாரே பரிபாடலுக்கும் உரை கண்டார் என மயக்க மறத் துணியலாம்.

க. சுப்பிரமணியம்
கேரளப் பல்கலைக்கழகம்
திருவனந்தபுரம்

# காரிகை பொத்திய கனையெரி

## முன்னுரை

சிலப்பதிகாரம் தமிழர் எண்ண எழுச்சிகளைக் கலைகளைத் தாங்கி வரும் அரும்பெரும் தேர். அந்தத் தேரின் அச்சாணியாகத் திகழ்வது கண்ணகியின் கற்புக் கடம் பூண்ட பொற்புடை வாழ்க்கை. அந்த அரும்பெரும் காப்பியத்தை மங்கல வாழ்த்துப் பாடலிலே தொடங்கி வரந்தரு காதையில் நிறைவு பெறச் செய்கிறார் இளங்கோ. கண்ணகியின் அறிமுகமும் முடிவும் கூட இந்தப் பகுதிகளில் தான் அமைந்து கிடைக்கின்றன. ஈராறாண்டக வையளாக மானுடமாகத் தொடக்கத்திலே காட்டிய பெண்ணை வரமளிக்கும் பத்தினிக் கடவுளாக நூல் முடிவில் நம்மெதிரே நாட்டுவதுதான் இளங்கோவடிகளின் தலையாய நோக்கம். அதற்குத் தகக் கண்ணகியின் பண்புகளை அவள் கண்டு முட்டும் சூழ்நிலைகளை அமைத்துச் செல்கின்றார். அந்தப் பண்புகளும் சூழ்நிலைகளும் தமிழர் வாழ்வோடு உணர்வொடு பெரிதும் ஒத்துப் போகின்ற முறையிலே அமைந்து விட்ட காரணத்தால் தான் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்றோம். மணியாரம் படைத்த தமிழ்நாடு என்று என்றோ எழுந்த காவியத்திற்கு இன்றளவும் வரவேற்புக் குன்றாது காணப்படுகிறது. இளங் கோவடிகளின் கவித்துவத்தைப் பற்றியோ அவர் கதையமைப்பைத் தேர்ந்து கொண்ட முறையைப் பற்றியோ அங்கே விளக்கப் பெறும் நுண்ணிய பொருள்களைப் பற்றியோ பேசுவது இந்தக் கட்டுரையின் நோக்கமன்று. சிலம்பின் தலைமைப் பாத்திரமாம் கண்ணகியின் பெருமைக்குக் கட்டளைக் கல்லாக அக்கால உலகம் கருதிய தலையாய நிகழ்ச்சி எது? அதை ஏன் இளங்கோ காப்பியச் செயலாக அமைத்துக் கொண்டார் என்பனவற்றைக் காண்பதுவே இந்தக் கட்டுரையின் தலையாய நோக்கம்.

'நிலைகெழுகூடல் நீளெரி ஊட்டிய
பலர் புகழ் பத்தினியாகும் இவள்'

என்று சாத்தனார் கூறியதாகப் பதிகம் பேசுகிறது. சாத்தனார் மணிமேகலையின் மணிமேகலையை

'காவலன் பேரூர் கனை எரி ஊட்டிய
மாபெரும் பத்தினி மகள் மணிமேகலை'

என்று குறிப்பிடுகின்றார். இளங்கோவும் வரந்தரு காதையில் பத்தினிக் கோட்டத்திலே பத்தினிக் கடவுளாகிய கண்ணகிக்குப் படிப்புறம் வகுக்கும்போது

'பாடல்கசால் சிறப்பிற் பாண்டிய நன்னாட்டுக்
கலிகெழு கூடல் கதழெரி மண்ட
முலைமுகந் திருகிய மூவாமேனிப்
பத்தினிக்கோட்டப் படிப்புறம் வகுத்து' சிலம்பு:30:148&51

என்று குறிப்பிடுகின்றார். இந்தக் குறிப்புக்கள் கண்ணகியின் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளுள் மெய்கீர்த்தியாக உரைசால் சிறப்பிற்குக் கட்டளைக் கல்லாகக் கருத்தப்பட்ட நிகழ்ச்சி கனை யெரி மூட்டிய நிகழ்ச்சியேயாகும் என்று நம்மைக் கொள்ளத் தூண்டுகிறது. கண்ணகியின் வாழ்வில் நிகழ்ந்த இந்தச் செயலை மதுரைக் காண்டத்திலே ஆசிரியர் குறிப்பிடுகின்றார். நிகழ்ந்த இடம் மதுரை. நிகழ்ந்த காலம்

'கோடையோடு புகுந்த ------
வேனில் வேந்தன் வேற்றுப்புலம் படர
ஓசனிக்கின்ற உறு வெயிற் கடைநாளில்' சிலம்பு 14:121-125

பேரிருள் பக்கத்து அழல் சேர் குட்டத்து அஷ்டமிஞான்று வெள்ளி வாரத்து ஆடிக் காற்றில் அம்மியும் பறக்கும் என்று பழமொழிக் கேற்ப மேல் காற்றும் அழலின் கொடுமையும் இணைந்து நின்ற ஓர் இயற்கைச் சூழ்நிலையில். இந்த நிகழ்ச்சிக் குப்பின்னர் இயற்கையில் ஏற்பட்ட மாற்றங்களைப் பற்றியும் (Climatic changes) சிலம்பில் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

''அன்று தொட்டு பாண்டிய நாடு மழைவளம் கூர்ந்து வறுமையெய்தி வெப்பு நோயும் குருவும் தொடர நோயும் துன்பமும் பெருகியதாகவும்'' கொற்கையில் இருந்து வெற்றிவேற் செழியன் நங்கைக்குப் பொற்கொல்லர் ஆயிரவரைக் கொன்று களவேள்வியால் விழவொடு சாந்தி செய்ய நாடு மலிய மழை பெய்து நோயும் துன்பமும் நீங்கியதாகவும் உரைபெறு

கட்டுரை வாயிலாக அறிகிறோம். இந்த நிகழ்ச்சிகள் கோமுறை பிழைத்ததன் காரணமாக நாட்டிலே நிகழ்ந்ததாக இளங் கோவடிகள் காப்பியத்தில் குறிப்பிடுகிறார்.

'பட்டாங்கு யானுமோர் பத்தினியே யாமாகில்
ஒட்டேன் அரசொடு ஒழிப்பேன் மதுரையுமென்
பட்டிமையுங் காண் குறுவாய்! சிலம்பு 21:36-39

'யானமர் காதலன் தன்னைத் தவறிழைத்த
கோநகர் சீறினேன் குற்றமிலேன்யான்' சிலம்பு 21:41-42

என்று கோமுறை பிழைத்ததின் காரணமாகத் தனக்கு ஏற்பட்ட கொடுமையைப் பொறுக்கமாட்டாளாய் வஞ்சினம் செய்து கொதியழற் சீற்றம் கொள்கையின் விளைத்த கொற்ற நங்கையாகக் கண்ணகியை இளங்கோ படைத்துப் பலர்புகழ் பத்தினி என்றும் வீரபத்தினி என்றும் அழைப்பதைக் காண்கிறோம். பத்தினி என்ற அரும்பதத்திற்கு அந்தக்காலம் தந்த பொருள் ஆக்கலும் அழித்தலும் வல்லவள் என்பதாகும். அதேபோல் வீரபத்தினியை மறக்கற்புடையவள் என்றும் மறக்கற்பின் தன்மை என்றும் கொண்டனர் அக்காலச் சான்றோர். அக்கொள்கைகளுக்கேற்பச் சீரிய கற்புடையவளாகக் கண்ணகியைப் படைத்து மதுரையே எரியூட்டுகின்ற நிகழ்ச்சியையும் அவள்மேல் ஏற்றிச் செல்கின்றார். கண்ணகி எரியூட்டிய வரலாற்றில் உண்மை வரலாறு என்று நம்பத் தகுந்தவற்றைக் காண்பது போலவே இயற்கையில் நிகழமுடியாத பல விஷயங்களை நிழந்தனவாகக் கூறும் ஓர் பாங்கையும் காண்கிறோம். இவ்விரண்டனுள் முதலில் சீற்றம் கொண்ட கண்ணகி ஆற்றாளாய்த் தனக்குத் தீங்கிழைத்த பகை செய்த நாட்டை எரியூட்டி அழித்த வரலாற்றை இளங்கோ கூறியதன் அடிப்படையைக் காண்போம்.

சிலம்பிற்கு முற்பட்ட பண்டைத் தமிழ் நூற்களில் சீற்றம் கொண்ட ஆற்றல் மிக்க வேந்தர்கள் பகைவர்களுடைய ஏம நன்னாட்டை ஒள்ளெரியூட்டுதலையும் அவ்வாறு செய்யும் செயலைப் புலவர்கள் வாழ்த்தி வரவேற்பதையும் பரக்கக் காண்கிறோம்.

தொல்காப்பியம் பொருளதிகாரம் வஞ்சித்திணைகளின் 13 துறைகளில் ஒன்றாக 'இயங்குபடை அரவம் எரிபரந்தெடுத்தல்' (புறத் 65) என்பதைப் பேசுகிறது. இலக்கணம் பேசிய இந்தத் துறை பழந்தமிழர் வீரப்பாடல்களில் (Heroic Poetry) மூவேந்தர்க்கும் உரியதாக அமைந்து கிடக்கின்றது. சோழன்

இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியைப் பாண்டரங்கண்ணனார் குறிப்பிடும்பொழுது,

'முருகற் சீற்றத்துருகெழு குருசில்
................
பெருந்துன்பன்ன பாழாக
ஏம நன்னா டொள்ளெரி யூட்டினை' புறம் 16:12, 16, 17

என்று காவலையுடைய நல்ல நாட்டை ஒள்ளிய தீயை ஊட்டி அஞ்சத்தக்க நல்லபோரைச் செய்ய வல்லவனாகக் குறிப்பிடுதல் காண்கிறோம். வேண்டியது விளைக்கும் ஆற்றல் உடையவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் அவனை ஆலூர் மூலங்கிழார்

'நீ உடன்று நோக்கும் வாய் எரிதவழ' புறம் 38:5

என்று சிறப்பித்தலையும் அவன் நாட்டைக் காக்கும் ஆற்றலை விளக்குவதற்குக் கோவூர்க்கிழார்

'அடுதீ யல்லது சுடுதீ யறியா
திருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருந' புறம் 70:8-9

என்றும் சிறப்பித்தலைக் காணலாம். சோழன் கரிகால் பெருவளத் தானைக் கருங்குழல் ஆதனார் பாடிய பாடலும் ஊர் சுடுதலைப் பேசுகிறது.

சோழர் விளைத்த போர்களில் இவ்வாறு பகைப்புலத்தை எரிபரப்பி அழித்ததைப் போலவே பாண்டிய வேந்தர்களும் தங்கள் வீரத்தின் பேரெல்லையை உலகறியச் செய்வதற்கு எரி பரப்புதல் என்னும் போர் முறையைக் கையாண்டிருக்கிறார்கள்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் துன்னல் போகிய துணிவினோன் ஆலங்கானத்து அமர் கடந்த அட்ட காலமுன்பன். இத்தகைய பெருவேந்தன் கொண்ட சீற்றத்திற்கு இரையாகி அழிந்த பகுதிகள் பலவற்றைச் சுட்டிக் காட்டும் கல்லாடனார்,

'வினைபுனை நல்லில் வெவ்வெரி நைப்பக்
கனையெரி ஊரறிய மருங்கை' புறம் 23:10-11

காட்டுதலைக் காணலாம். இவனோடு பகைத்தவருடைய வளப்பம் குன்றுதலை ஒரு காலத்தும் அறியாத பெரிய மருத நிலப்பரப்புக்கள்

'குருஉக் கொடிய எரிமேய
{Ǒk GÝ ®÷£º PǑh ǑP' ©xφ µÜ.155-6

நெருப்புண்டு அழிந்ததாக மதுரைக் காஞ்சியும் பேசுகிறது.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனே உரைசால் சிறப்பிற் புகழ்சால் மாறன். இவனைக் காவிரிப் பூம்பட்டினத்துக்காரிக் கண்ணனார்

'நின்னொன்று கூறுவது உடையோர் என்னெனின்
நீயே பிறர் நாடு கொள்ளுங்காலையவர் நாட்டு
.................
நனந்தலைப் பேரூர் எரியும் நைக்க' புறம்.57:4,5,7

என்று அவன் தவறாமல் செய்ய இருக்கும் செயல்களுள் ஒன்றாக எரிபரந்து எடுத்தலையும் பேசக் காண்கிறோம்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிக்கிழார் வாழ்த்துமிடத்து இன்னஇன்ன செய்து சிறக்க வாழ்க என்று கூறும் உலக மரபிற்கேற்பப் போருக்குச் சென்றால் இன்ன இன்ன நிகழ்ச்சிகள் தவறாமல் நிகழட்டும் என்று கூறுவாராய்

'வாடுக இறைவ நின் கண்ணி ஒன்னார்
நாடுசுடு கமழ் புகை எறித்தலானே!' புறம்.6:21-22

என்று பொருண் மொழிக் காஞ்சியாகப் பேசுவதையும் காண்கிறோம்.

பாண்டியர்க்குப் பெருமை தேடித் தந்த இந்தப் போர் முறை சேரர் போர் முறையிலும் வீரத்தின் அறிகுறியாகச் சிறந்து நிற்கின்றது.

கடற்பிறகோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடிய பாடலில்

'வணங்கிய சாயல் வணங்கா ஆண்மை
முனைசுடுகணை எரி எரித்தலிற் பெரிதும்
இதற்கவினழிந்த மாலையொடு சாந்து புலர்
பல்பொறிமார்ப' பதிற்று:5:8,9-12

என்று மாலையின் சிறப்பை மார்பின் சிறப்பை முனை சுடுதலோடு இயைத்துக் கூறுகின்றமையைக் காண்கிறோம்.

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையை அரிசில் கிழார் பாடிய பாட்டும் எரியூட்டுதலைக் குறிக்கிறது.

'ஊரெரி கவர உருத் தெழுந்து உரைஇ
போர் சுடு கமழ் புகை மாதிரம் மறைப்ப...
.................
ஆரெயில் தோட்டி வெளவினை' பதிற்று.8:1,9,10,13

அதிகமான் நெடுமானஞ்சியை ஒளவையார் பாடிய ஆற்றுப் படைப் பாடல் ஒன்றிலும் இந்த எரிபரந்தெடுத்தல் பேசப் படுகிறது.

'செல்வையாயிற் சேணோனல்லன்
முனைசுட எழுந்த மருங்கில் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளிறணியும்
பகைப்புலத்தானே பல் வேல் அஞ்சி' புறம்.103:5-8

இவ்வாறு உரைசால் சிறப்பிற் புகழ்சால் மூவேந்தர்களும் பேரறமாகக் கொண்ட இந்த எரிபரத்தலைத் தன்னுடைய வீர காப்பியத்திலும் உரைசால் பத்தினியின் செயலாக்கிக் கொண்டார் என்று கொள்வதே பொருத்தம். பாடண்திணையிலும் வாகைத் திணையிலும் மழபுலவஞ்சியாக துணை வஞ்சியாக, கொற்ற வள்ளையாக பொருண்மொழிக்காஞ்சி வாழ்த்தியல், விறலி யாற்றுப்படை, இயன்மொழி வாழ்த்து என்று பல இலக்கியத் துறைகளிலே பயன் படுத்தப்பட்டு வந்த இந்தப் பொருள் (theme) ஐம்பெரும் காப்பியங்களுள் தலைசிறந்த காப்பியமாகப் பேசப்படும் சிலம்பில் காப்பியம் பேசும் பெருஞ்செயலாகப் (great action) பரிணமித்திருக்கிறது.

பதிகத்தில் முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது அடிகள் நீரே அருளுக என்று சாத்தன் கூறியதாக ஒரு குறிப்பைக் காண்கிறோம். அந்தக் குறிப்பு இளங்கோ காட்டிய செய்திகள் தனி ஒருவருடையவோ, ஒரு வட்டாரத்தினருடையவோ, வழக்காக அமையவில்லை. தமிழினம் அனைத்தினுடையவும் உணர்வு வெளியீடுகள் வாழ்க்கை அனுபவத்தின் ஊற்றுக்கண் என்று கூறுவதுபோல் தோன்றுகிறது. இளங்கோவடிகள் இந்தக் காப்பி யத்தைத் தமிழ்ப் பாரம்பரியத்தின் சுனைமுனையாக (Fountain head of Tamil Culture) நின்று படைத்த காரணத்தாலேதான் பழந்தமிழ் வேந்தர்களின் எரியூட்டுதலை வீர பத்தினியின் செயலாகப் படைத்திருக்கிறார். மேல்நாட்டுத் திறனாய்வு உலகம் காப்பியப் புலவனுக்குப் பேசிய அமைதியும் இதுதான்.

"Lascelles Abercrombic looks on the Epic poet as accepting and with his genius transfiguring the general circumstances of his times -

symbolising in some appropriate form whatever sense of life he feels acting as the accepted metaphysic of the time" (Quoted from the English Epic and its Background)

இவ்வாறு காப்பியத்தின் தலையாய நிகழ்ச்சியைப் பழந்தமிழ் மரபோடு ஒட்டி அமைத்த இளங்கோ கண்ணகி எரியூட்டிய முறையை அக்கால மக்களின் சமயநம்பிக்கைகளின் அடிப் படையில் முழுக்க முழுக்க அமைத்திருப்பதைக் காண்கிறோம். எதிர்த்து மொழிதல், மெய்ப்புலப்படுத்தல், இறைச்செயல் வியத் தகு நிகழ்ச்சிகள் (Prophecy revelation, divine sanction, marvellous) ஆகியவை இந்தப் பகுதிகளில் மிகுந்த செல்வாக்கைப் பெறுகின்றன.

சிலம்பு தோன்றிய காலத்தில் நீர்மிகில் சிறையும் இல்லை திமிகில் மன்னுயிர் நிழற்றும் நிழலும் இல்லை வளிமிகின் வலியுமில்லை என்று இவ்வாறு இயற்கையின் பேராற்றல்களை மனித சக்தியால் கட்டுப் படுத்துவது அரிது என்ற எண்ணப் போக்கைச் சமய நம்பிக்கைகளும் புராணக் கதைகளும் மக்கள் மனத்தில் நின்றும் மாற்றித் தெய்வமாகவும் காட்டின. வேதகாலக் கடவுளாக விளங்கும் அக்கினியைப் பற்றிய கதைகள் ஆதி காவியங்களாகிய பாரதம் இராமாயணம் என்பனவற்றிலும் காணலாம். சீதையின் தூய்மையை உலகறிய நாட்டியதும் அக்கினிக் கடவுளே. சிலப்பதிகாரமும் அக்கினியை ஏவல் தெய்வமாகவே நம்மெதிரே காட்டுகிறது. பாரதக் கதையும் தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது. அதற்கொரு சான்று காண்டவ வனத் தகனத்தை இளங்கோ ஓர் உவமையிலே பயன்படுத்தியமையாகும்.

'பால்வேறுதெரிந்த நால்வேறு தெருவும்
உரக்குரங்கு உயர்ந்த ஒண்சிலை உரவோன்
காவெரியூட்டிய நாள்போல் கலங்க' சிலம்பு.22:110-2

எரி அங்கி வானவனைப் பார்ப்பனக் கோலத்தில் காட்டுகிறார் இளங்கோ. பாரதத்திலும் அந்தப் போக்கு காணப்படுகிறது.

சமகாலப் புலவரான சாத்தானர் ஆதிரையின் கற்பு விசேடத்தைக் கூறும்பொழுது தீயில் புகுந்த அவளைத் தீ சுடாதொழிந்த நிகழ்ச்சியைக் காட்டுகிறார். (மணி.16)

பிற்காலத்தில் ஞான சம்பந்தப் பெருமானின் பெருமையை உலகறியச் செய்ததும் தீயின் செயலாகவே பெரிய புராணத்தில் காண்கிறோம்.

'சைவர் வாழ்மடத்து ஆமணர்கள் இட்ட தீத்தழல்போய்ப்
பையவே சென்று பாட்டியறக்காக' பெரியபுராணம். 2602

எனப்பணித்தார். அங்கும் எக்கர் பக்கமே நெருப்புச் சேர்ந்தது. ஆதிரையின் கற்புத்திறனை நெருப்பு உலகறியக் காட்டியதுபோல் ஞானசம்பந்தர் பதிகத்தின் சிறப்பையும் உலகறியக் காட்டியது தீயேயாகும்.

'................அறிவிலா அமணர்
வெஞ்சுடர்ப் பெருந்தீயில் விழுத்திய ஏடு
பஞ்சு தீயுடைய பட்டது படக்கண்டனர்'
பெரியபுராணம். 2686

ஆனால்,

'ஞானம் உண்டவர் இட்ட ஏடு இசைத்த நாழிகையில்
ஈனம் இன்மை கண்டு யாவரும் வியப்புற எடுத்தார்
பான்மை முன்னையிற் பசுமையும் புதுமையும் பயப்ப....'
பெரியபுராணம்.2687

எரியைப் பற்றிய நம்பிக்கைகள் பிற்காலத்தவர் உள்ளங்களிலும் வேரூன்றிக் கிடந்தன என்பதற்கு இதனினும் சான்று வேறுண்டோ? சிவனின் ஆற்றலைக் காட்டி நிற்பதும் திரிபுரம் எரித்த நிகழ்ச்சியன்றோ?

நெருப்பை ஏவல் கேட்கும் ஒன்றாகவும் மெய்ம்மையைக் கலக்கத் துணைபுரியும் ஒன்றாகவும் இந்த நாட்டில் வழங்கிய நம்பிக்கைகளைப் பயன் படுத்தியே இளங்கோ எரியூட்டும் முறையை அமைத்துள்ளார்.

'தெய்வந்தொழா அள் கொழுநற்றொழுவாளைத்
தெய்வந்தொழு ந்தகைமை திண்ணிதால்.....'
சிலம்பு. கட்டுரைக்காதை

என்ற நம்பிக்கையை மெய்ப்பிக்க இந்த நிகழ்ச்சியே இளங்கோவுக்குப் பெரிதும் பயன்பட்டது. சீரிய கற்பினாளைக் கொற்ற நங்கையாகக் காட்டுவதற்கும் பத்தினித் தெய்வமாக்கு வதற்கும் இளங்கோவடிகள் இந்த உத்தியைக் கையாண்டார்.

தலைமைப் பாத்திரங்களின் வாழ்வில் சில நாடகீயமான நிகழ்ச்சிகளைப் புகுத்துவது காப்பியச் சுவை பயப்பதோடு வாழ்வின் பல கோணங்களைக் காப்பியத்தில் நுழைக்கவும் துணை நிற்கிறது.

Without dramatic representation of characters epic is merely history of romance. The variety and life of epic are to be found in the drama that springs up at every encounter of the personages. (Epic and Romace by W.P.Ker)

பிற்காலச் சோழர்களின் . மெய் கீர்த்திகளும் புராணக் கதைகளும் எரிபற்றிய செய்திகளைத் தக்க இடங்களில் பயன்படுத்துவதைப் பார்க்கும்போது இளங்கோ அமைத்துக் கொண்ட இந்தக் காப்பியத்தின் தலையாய நிகழ்ச்சி அவர் காலத்திற்கு முன்னும் பின்னும் ஆயிரமாயிரம் ஆண்டுகளாகத் தமிழர் வாழ்வோடும் உணர்வோடும் ஒன்றிய செல்வாக்கைப் பெற்றுவிட்ட ஒன்று என்று எண்ணித் துணியத் தூண்டு கின்றதன்றோ?

*ச.வே. சுப்பிரமணியன்*

*திருவனந்தபுரம்*

# சிலம்பில் கால உணர்வு - ஒரு குறிப்பு

'காலம்' என்ற சொல், கால் என்ற அடியில் தோன்றி யிருக்கலாம். முதலும் முடிவும் அறிய இயலாத காற்றைப் போன்று விரைகின்றது காலம். இக்கால வெள்ளத்தின் ஒரு சிறு துளியைத் தன் வாழ்க்கை நிகழ்வுகளால் அளவிடுகிறான் மனிதன். இவ்வாழ்வின் சில பல நிகழ்ச்சிகளைத் தேர்ந்து புனைகிறது இலக்கியம்.

சிறுகதை, நாவல், காப்பியம் என்றின்ன இலக்கிய வகை களுக்கு வேறுபட்ட கால அளவைகள் உள. ஒரு நிகழ்ச்சியைக் கருவியாகக் கொண்டு அமைப்பின் சிறுகதை சிறக்கும். வாழ்க்கையின் ஒரு பகுதி புதினத்திற்குத் தக்க கரு. காப்பியம் வாழ்க்கையை முழுமையாகத் தரும் அமைப்புடையது.

மூன்று காண்டங்களையும் முப்பது காதைகளையும் கொண்டமைந்த சிலப்பதிகாரம் சுமார் இருபத்தைந்து ஆண்டு களின் நிகழ்வைத் தருவது. பன்னிரண்டாண்டு அகவையளாய் மணமகளாய் அறிமுகப்படுத்தப்பெறும் கண்ணகி; சில்லாண்டு[1] கணவனுடன் வாழ்ந்து, சுமார் பன்னிரண்டு ஆண்டுகள்[2] பிரிந்து, பின்னர் ஏறத்தாழ ஒன்றரைத் திங்கள்[3] உடனுறையப் பெற்று, கணவனை இழந்து பதினான்கு நாட்கள் அலமந்து இறுதியில் வானடைந்து ஐந்தாண்டு[4] முடிவில் குட்டுவனால் கோயில் எடுக்கப் பெற்று இறவாத் தமிழுடன் கற்புச் செல்வியாக நிலைத்து விட்டாள்.

### இளங்கோவடிகளும் கால உணர்வும்

இந்தக் கால ஓட்டத்தை இளங்கோவடிகள் எவ்வாறு அமைத் துள்ளார்? காலத்தைக் கணக்கிட்டு உரைப்பது வரலாற்றாசிரி யனுக்கு மிகத்தேவை. இலக்கியப் புலவன் தனக்குத் தேவையான அளவு தரலாம். இந்நிலையில் இளங்கோவடிகள் வெளிப் படையாகத் தந்துள்ள குறிப்புக்கள் மிக அருகியவை.

அ. யாண்டு சில கழிந்தன இற்பெருங்கிழமையிற்
காண்டகு சிறப்பிற் கண்ணகி தனக்கென் 2:89-90

ஆ. சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென 5:64

இ. ஆடித்திங்கட் பேரிருட் பக்கத்
தழல் சேர் குட்டத் தட்டமி ஞான்று
வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண 23:133-5

ஈ. எண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியது 27:149

உ. காலை முரசம் கனைகுரல் இயம்ப 14-14;17-1-6

ஊ. மாலைமணி விளக்கம் காட்டி இரவிற்கோர்
கோலங் கொடியிடையார் தாங்கொள்ள 9:3-4

எ. வண்டார் இருங்குஞ்சி மாலை தன் வார்குழல்மேல்
கொண்டாள் தழீஇக் கொழுநன் பாற் காலைவாய்ப்
புண்டாழ்குருதி புறஞ்சோர மாலைவாய்க்
கண்டாள் அவன் தன்னைக் கானாக் கடுந்துயரம் 19:35-38

போன்ற பகுதிகள் இளங்கோவடிகள் கால உணர்வையும் கருத்தில் கொண்டிருந்தார் என்பதற்குச் சான்று பகருகின்றன.

**காதைகளும் கால அமைதியும்**

ஒரு வாழ்வின் பெரும் பகுதியைக் கொண்டு அமையும் இக்காப்பியக் கதை சில நாட்கள் நிகழ்ச்சிகளையே மையமாகக் கொண்டுள்ளது. சுமார் பதினெட்டுக் காதைகள் கிட்டத் தட்ட எட்டு நாட்களின் நிகழ்ச்சிகளையே தருகின்றன.[5] இவ்வாறு நாள் நிகழ்ச்சிகளாகப் பல காதைகளை அடிகள் இரு பயன் கருதி அமைத்துள்ளார்.

1. காப்பியத்தின் திருப்பு மையம், உச்ச கட்டம் போன்ற விறுவிறுப்பமைந்த பகுதிகளில் ஒரு நாள் நிகழ்ச்சிகளே பல காதைகளில் பேசப்படுகின்றன. இதன் பயனாக நாடகக் கூறு களாகிய இட, கால, செயல் உணர்வுகளின் ஒருமைகள் பொருந்தி, காப்பியம் நாடகக் காப்பியமாக உருப்பெற்றுவிடுகிறது.

2. காலச் சுழற்சியில் மாறி மாறி வரும் ஒத்த நிகழ்ச்சிகளை ஒரு நிகழ்வினால் தந்து அமைதல்.

காட்டாகக் கோவலன் மாதவியோடு வாழ்ந்த பல்லாண்டுகளில் வந்து சென்ற 'மாலைகள்' பல. அந்தி மாலைச்

சிறப்பு செய்காதை ஒரு மாலைக் காட்சியைத் தந்து அனைத்தையும் சுட்டி விடுகிறது. இவ்வுத்தி இளங்கோவடி களுக்கு உரியது என்பதை

உலவாக் கட்டுரை பல பாராட்டித்
தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்து செல்வுழிநாள் 2:81-83

என்ற பகுதி சுட்டும். ஆண்டுதோறும் புகாரில் இந்திரவிழா நிகழும். ஆயின் அடிகள் மாதவி ஆடிய கடைசி இந்திரவிழாவைக் காட்டுவதுடன் அமைகிறார்.

*காலமாற்றம்*

ஒரே வேளையில் நிகழ்ந்த நிகழ்வுகளை அடுத்தடுத்து அமைக்கும் பாங்கு இளங்கோவடிகளிடம் உண்டு. காட்டாகக் கொலைக்களக்காதை(16), ஆய்ச்சியர் குரவை(17). பல ஆண்டு களுக்கு முன் நிகழ்ந்தவற்றைத் தேவைக் கேற்பத் தரும் நிலையையும் காண்கிறோம். அடைக்கலக் காதையிலும் நீர்ப் படைக் காதையிலும் மாடலன் வாயிலாக இதனை இளங்கோ அமைக்கிறார்.

மணிமேகலை பிறந்து சுமார் பதினொரு ஆண்டுகளுக்குப் பின்னரே மணிமேகலைக்குப் பெயரிட்ட நாள் வைபவத்தை ஒட்டி நிகழ்ந்தவற்றைக் காட்டிக் கோவலன் சிறப்பையும் மணிமேகலை பிறந்த செய்தியையும் தருகிறார் (15:21-94).

கோவலன் கண்ணகிக்கு உற்றதை உணர்ந்த அவரைச் சார்ந்தோர் பட்டதைச் சுமார் மூன்றாண்டுகளுக்குப் பின்னர் மாடலன் குட்டுவனுக்குக் கூறும் முகமாகத் தருகிறார். (27:74-108).

இதுபோன்றே பின்னிகழ்வதனை முன் சுட்டுவதும் ஒருவகைக் காலமாற்றம் எனலாம். கண்ணகி கோவலன் கனவு இத்தகுநிலையில் அமைகிறது.

*காப்பியச் சுவையும் கால உணர்வும்*

மனிதனது இன்ப துன்ப உணர்வுகளைக் காலவுணர்வோடும் ஒட்டிப் பார்க்கலாம். இன்ப நிகழ்ச்சிகள் விரைந்து சென்றுவிடும். இந்த அடிப்படை உண்மையை அடிகளின் காதை அமைப்பு தெளிவாக்கும். கண்ணகியுடன் வாழ்ந்த எட்டாண்டுகளும், மாதவியுடன் வாழ்ந்த பன்னிரெண்டாண்டுகளும் கோவலனுக்கு விரைந்து சென்ற நாட்கள். மாதவி தந்த மகிழ்வு மாலையின் மறைவை ஒத்து விரைந்து மறைந்துவிட்டது. சிறுபொழுதில்

கூட்டம் சுட்டப்படுகிறது. இன்பம் அமைகிறது. பெரும் பொழுதில் பிரிவு நிகழ்கிறது. வேனிற்காதை(8) முதல் அழற்படுகாதை(22) வரை துன்பச் சூழல். இருமாத நிகழ்வுகளுக்காகப் பதினைந்து காதைகள் ஒதுக்கப்படுகின்றன. குலந் தரு வான்பொருட் குன்றம் தொலைத்த மனச்சுமையுடன் செல்லும் கோவலன், கணவனை இழந்த கண்ணகி இவர்களுக்கு இவ்விரு மாதங்கள் எத்துணை நீண்டன என்பது சுட்டப்படுகிறது.

*பாத்திரப் படைப்பும் கால அமைதியும்*

கோவலனை மூன்று கோணங்களில் காண்கிறோம். இல்லாளோடு தருக்கி வாழ்ந்தவன், கலைமடந்தையாம் மாதவியைப் பெற்று விடுதலறியா வேட்கையினன், பொருள் தேடும் வேட்கையுடையவன். ஒருவன் முக்குணங்களையுடையவனாகக் காட்டப் பெறுகின்றான். இவ்வேறுபாடு அமையக் காரணம் யாது? அவனது வயதைக் கருத்தில் நிறுத்தி நோக்கினால் தெளிவு கிடைக்கக்கூடும்.

பதினாறு அகவையினனாம் கோவலன் பெற்றோர் அமைத்த வழி இவ்வாழ்வில் ஒழுகியவன். இருபத்துநான்கு வயதிற் தன்னிடம் பொருந்திய கலை உணர்வுக்குத் தக்க துணையைத் தேடும் உரிமை வேட்கையன். முப்பத்தாறாம் வயதை எட்டிய போது இன்பம், கலை, கேளிக்கை இவற்றை விடத் தனது உடமை செல்வாக்கு இவற்றை நாடும் முதிர்ச்சி அடைந்தவன்.

இவ்வாறு காப்பியத்தின் கால அளவை (Timespan) அறுதியிட்டு நோக்கும்போது, காப்பிய அமைப்பிற்கும் சுவைக்கும் ஏற்ப அடிகள் இதனை அமைத்த நிலையும், இதனோடு பொருத்தி, பாத்திரப் பண்பை உய்த்து உணர வைத்த நுட்பமும் அறியலாகும்.

*குறிப்புகள்*

1. 'யாண்டு சில கழிந்தன' (2.89) என்பதனை விளக்கும் அடியார்க்கு நல்லார் 'கண்ணகிக்குச் சில யாண்டு கழிந்தனவெனவே மாதவிக்குப் பலயாண்டு கழிதலும் கொள்ளப்பட்டது. இன்னும் மேற் கனாத்திறமுரைத்த காதையில், தேவந்தி 'கண்ணகி நல்லாளுக்குற்ற குறையுண்டென்று' (41) என்புழி எச்சவும்மை விரிக்க இவட்கு அவள் இளமைப் பருவந் தொடங்கி நிகழும் பார்ப்பனத் தோழியாய் மாநாய்கன் மனை வளர்தலின் ஒரு காலத்தே குடிபுக்குச் சென்றுழி பிரிவும் ஒரு காலத்திராயிற்றென்பதாகலின், ''நாலீராண்டு நடந்ததற் பின்னர்'' (30:85) என்பதனை இருவர்க்குமாக்கி மாதவிக்கு எட்டினிறந்த பல யாண்டு சேறலிற் கண்ணகிக்குச் சில யாண்டு கழிந்தவெனப் பொருள் கூறலுமொன்று; இதனான் மிக்க பலமின்று; ஏற்குமேற் கொள்க இது போலி' என எழுதுகின்றார். எட்டு ஆண்டுகள்

என்பதை மறுத்து இத்தனை ஆண்டுகள் எனத் தெளிவாகக் கூறுவதற்குரிய சான்றுகள் இன்மையால் இதைக் கொள்வது தகும்.

2. கண்ணகியைப் பிரிந்து உறைந்தது பன்னிரண்டு ஆண்டுகள் என்று கூறின் மாதவியோடு பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்தான் என்பதே பெறப்படும். கோவலன் மாதவியைப் பிரியும்போது மணிமேகலைக்கு வயது 11 இருக்கலாம். அதைக் கீழ்க் கண்ட பகுதிகள் நிலை நாட்டும்.

அ. மாமலர் வாளி வறுநிலத் தெறிந்து
காமக் கடவுள் கையற்று ஏங்க
அணிதிகழ்போதி அறவோன் தன்முன்
மணிமேகலையை மாதவி அளிப்பும் 15:101-104

ஆ. மற்றது கேட்டு மாதவி மடந்தை
நற்றாய் தனக்கு நற்றிறம் படர்கேன்
மணிமேகலையை வான் துயர் உறுக்கும்
கணிகையர் கோலம் காணாதொழிகெனக்
கோதைத் தாமம் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறங்கொள்ளவும் 27:103-107

இ. மணிமேகலை தன் வான்துறவுரைக்கும்
ஐவகை வகுக்கும் பருவங் கொண்டது
செவ்வரி ஒழுகிய செழுங்கடை மழைக்கண்
அவ்விய மறிந்தன அதுதான் அறிந்திலள்
ஒத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த
நித்தில இளநகை நிரம்பா அளவின
புணர்முலை விழுந்தன புல்லகம் அகன்றது
தளரிடை நுணுகலுந்தகையல்குல் பரந்தது
நிறங்கிளர் சீறடி நெய்தோய் தளிரின்
தலைக்கோலாசான் பின்னுளனாக
..................
..................
உருவிலாளன் ஒரு பெருஞ்சிலையோடு
விரைமலர் வாளி வெறுநிலத் தெறியக்
கோதைத் தாமம் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறம் படுத்துனள் 30:9-28

3. கோவலன் கண்ணகி மதுரைக்குப் புறப்பட்ட காலத்தைக் குறிக்கும்போது (10:1&3) நல்லார் என்பது அந்தச் சித்திரைத் திங்கட் பகுதிநாள்-சோதி-திதி-மூன்றாம் பக்கம்-வாரம்-ஞாயிறு. இத்திங்களிருபத்தெட்டிற் சித்திரையும் பூரணியுங் கூடிய சனிவாரத்தில் கொடியேற்றி நாலேழ் நாளினும் (மணி.1:8) என்பதனான் இருபத்தெட்டு நாளும் விழா நடந்து கொடியிறக்கி வைகாசி இருபத்தெட்டினிற் பூருவ பக்கத்தின் பதின் மூன்றாம் பக்கம் சோம வாரமும் பெற்ற அனுடத்தில் நாட்கடலாடி ஊடுதலின் வைகாசி இருபத்தொன்பதிற் செவ்வாய்க்கிழமையும் கேட்டையும் பெற்ற நாசயோகத்து நிறைமதிப் பதினாலாம் பக்கத்து வைகறைப் பொழுதினிடத்து நிலவுபட்ட அந்தரத்திருளிலேயென்றவாறு வைகாசி 28 முதல் ஆடித்திங்கள் பேரிருட் பக்கம் வரை சுமார் ஏறத்தாழ ஒன்றரை மாதங்கள் எனக் கொள்ளலாம்.

4. பிறையோர் வண்ணம் பெருந்தகை நோக்க
இறையோன் செவ்வியிற் கணிஎழுந்துரைப்போன்
எண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியது
மண்ணாள் வேந்தே வாழ்கென் றேத்த 27:147-150

செங்குட்டுவன் பத்தினிப் படிமத்தை நீர்ப்படுக்கும்போது வஞ்சியினின்றும் நீங்கி 32 மாதங்கள் ஆயின என்று கூறுவதிலிருந்து திரும்பும் காலத்தைக் கணக்கிட்டு ஏறத்தாழ ஐந்து ஆண்டுகள் எனக் கணக்கிட்டுள்ளேன்.

5. அட்டவணை

## காதைகளும் காலமும்

| | நாள் | திங்கள் | ஆண்டு | வயது | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | கண்ணகி | கோவலன் | மாதவி |
| புகார்க்காண்டம் | | | | | | |
| 1. மங்கல வாழ்த்துப்பாடல் | 1 | | 8 | 12 | 16 | |
| 2. மனையறம் படுத்த காதை | | | | | | |
| 3. அரங்கேற்று காதை | 1 | | 20 | 24 | 12 | |
| 4. அந்திமாலைச் சிறப்புச் செய் காதை | 1(மாலை) | | 12 | | | |
| 5. இந்திரவிழவூரெடுத்த காதை | | | | | | சித்திரை திங்கள் சித்திரை நாள் |
| 6. கடலாடு காதை | | | | | | |
| 7. கானல் வரி | | | | | | |
| 8. வேனிற் காதை | 1 | | | | | |
| 9. கனாத்திறம் உரைத்த காதை | | | | | | |
| 10. நாடுகாண் காதை | | | | | | |
| மதுரைக் காண்டம் | | | | | | |
| 11. காடுகாண் காதை | | | | | | |
| 12. வேட்டுவவரி | 1 | | | | | |
| 13. புறஞ்சேரி இறுத்த காதை | | | | | | |
| 14. ஊர்க்காண் காதை | 1 | 2 | | 32 | 36 | 64 |
| | | | | | | மணிமேகலை 11 |
| 15. அடைக்கலக் காதை | | | | | | |

| | | | |
|---|---|---|---|
| 16. கொலைக்களக்காதை | | | |
| 17. ஆய்ச்சியர் குரவை | | | |
| 18. துன்ப மாலை | | | |
| 19. ஊர்சூழ்வரி | | | |
| 20. வழக்குரை காதை | 1 | | |
| 21. வஞ்சினமாலை | | | |
| 22. அழற்படுகாதை | | | |
| 23. கட்டுரை காதை | 14 | | ஆடிஅமாவாசை |
| வஞ்சிக் காண்டம் | | | |
| 24. குன்றக் குரவை | 1 | | |
| 25. காட்சிக்காதை | | | |
| 26. கால்கோட்காதை | | 5 | |
| 27. நீர்ப்படைக்காதை | | | |
| 28. நடுகற்காதை | | | |
| 29. வாழ்த்துக்காதை | | | |
| 30. வரந்தரு காதை | | | |

ந. சுப்புரெட்டியார்
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்
திருப்பதி

# கம்பன் கண்ட மெய்ப்பொருள்

## முன்னுரை

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு[1]

என்றார் வள்ளுவப் பெருந்தகை. பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் திரிபுணர்ச்சியால் பெரும்பான்மையான மக்கள் உண்மைப் பொருளை உணர முடிவதில்லை. மெய்ப்பொருள் காணும் அறிவு எல்லார் மாட்டும் அமைவது இல்லை. எப்பொருள் எத்தன்மையதாயினும் அப்பொருளின் உண்மை நிலையைக் காணும் திறன் கம்பன் போன்ற மேதையாரிடம் மட்டிலுந்தான் அமைந்து கிடக்கும். பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து நின்ற உண்மையைக் காண்பது சிறந்த கவிஞனுக்கே இயலும். இதனைக் கம்பநாடனே,

''கவிக ளாகுவர்
காண்குவர் மெய்ப்பொருள்''.[2]

என்று பிரகலாதன் வாய்மொழியாகக் கூறியிருத்தல் ஈண்டுக் கருதத் தக்கது. ''மெய்ப்பொருளறிவு பெறாதிருப்போர் என்றுமே பெறாய் கவிஞனாகத் திகழ்ந்ததில்லை''[3] என்பது கோலரிட்ஜ் என்ற ஆங்கில அறிஞரின் கருத்தும் இத்துடன் வைத்து ஒப்பு நோக்கத் தக்கது.

கம்பன் தான் காவியமாக அமைத்த இராமகாதையில் காணும் மெய்ப்பொருளை ஈண்டு ஆராய்வோம். கம்பராமாயணத்தை நுணுகிக் கற்பவர்கள் காவியத்திற்கு ஏற்புடைக் கடவுளாகிய திருமாலையே தமது வழிபடு கடவுளாகக் கொண்டவர் என்பதை நன்கு அறிவர். ஆகவே அவருள்ளத்தில்

தேங்கிய வைணவ சமயக் கருத்துக்கள் ஆங்காங்கே வெளிப்படுவனவாயின. தமிழ் நாட்டில் தொன்றுதொட்டுக் கடவுள், உயிர், உடம்பு இவற்றைப்பற்றி வழங்கிய சீரிய கருத்துக்களே ஆழ்வார்களின் உள்ளங்களில் அமைந்து அவர்தம் பாசுரங்களில் வெளிப்பட்டன என்பதை நாம் அறிவோம். தமிழ் இலக்கண இலக்கியங்களில் புலமைமிக்கு ஆழ்வார் பாடல்களில் ஆழங்கால்பட்ட கம்பநாடனின் காவியத்திலும் இக்கருத்துக்கள் வெளிப்படுவனவாயின. இராமகாதையில் காண்டங்கள் தோறும் அவன் கூறும் காப்புச் செய்யுட்களிலும், காவிய மாந்தர்களின் கூற்றுக்களைக் கொண்ட செய்யுட்களிலும், சில சமயம் கவிஞனின் தற்கூற்றுக்களிலும் இம்மெய்ப்பொருள் வெளிப் படுவதைக் காணலாம்.

**வைணவசமயத்தின் தத்தவம்**

வைணவ சமயத்தின் தத்துவம் மூன்று ஆகும். அவை சித்து, அசித்து, ஈசுவரன் (உயிர், உடம்பு, கடவுள்) என்பன. சித்து என்பது உயிர், ஆன்மா, அசித்து விரிவுடையது; மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதியை (மூலப்பகுதி) அடக்கி நிற்பது. ஈசுவரன் என்பது இறைவன். இவை மூன்றும் தனித்தனி இயல்புடைய வேறு வேறு பொருள்கள். ஆயினும், எக்காலத்தும் இவை மூன்றும் சேர்ந்தே காணப்பெறும். இவற்றுள் இறைவன் சித்து, அசித்து இவை இரண்டனுள்ளும் அந்தர்யாமியாக உள்ளான். இதுவே இவற்றின் நுண்ணிய (சூக்கும்) நிலை. மூலப்பகுதி விரிவடைந்து மக்கள் விலங்கு முதலியவற்றின் உடம்புகளாகவும், மற்றுமுள்ள பொருள் களாகவும் ஆகின்றது. உயிர், தன்னுடைய புண்ணிய பாவங் கட்கேற்ப ஒவ்வோருடம்பை அடைகின்றது. இதுவே உயிருக்குப் பிறப்பாகும். இறைவன், மூலப்பகுதியின் விகாரமாகிய எல்லாப் பொருள்களுள்ளும் எல்லா உயிர்களுள்ளும் அந்தர்யாமியாக மறைந்துள்ளான். இதுவே இவற்றின் பருநிலை (தூல நிலை). மூலப்பகுதியின் விகாரமாகிய உடம்பிற்கு வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய விகாரங்கள் உண்டு. அவ்வுடலிலுள்ளிருக்கும் உயிருக்கு அத்தகைய விகாரம் ஒன்றும் இல்லை. ஆயினும், உயிர் தான் செய்த கன்மங்கட்கேற்ப உடம்பைப் பெற்றிருத்தலால், அவ்வுடம்பைப் பற்றிய இன்ப துன்ப உணர்ச்சிகள் அவ்வுயிருக்கு உண்டு. இவ்வுடம்பினுள்ளும் உயிரினுள்ளும் அந்தர்யாமி யாகவுள்ள இறைவன் உடம்பினுடைய விகாரங்களையும்,

உயிரினுடைய இன்ப துன்ப உணர்ச்சிகளையும் அடைவதில்லை. இறைவன் வினைகாரணமாக இன்றித் தன் விருப்பின் காரணமாக இவ்விரண்டனுள்ளும் அமைந்திருத்தலால் அவ்விரண்டின் தன்மைகளையும் அவன் அடைவதில்லை. உயிர் மூலப்பகுதியின் விகாரமாகிய உடம்பைத் தனக்கு உடம்பாகக் கொண்டிருத்தல் போல், இறைவன், உடம்பு, உயிர் ஆகிய இரண்டையும் தனக்கு உடம்பாகக் கொண்டுள்ளான். இவ்வாறு இம்மூன்று தத்துவங்களும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் எக்காலத்தும் தத்தம் இயல்பையும் விடாமல் ஒன்று சேர்ந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கையாகும்.

மேலும் வைணவ சமயக் கருத்துப்படி கடவுளுக்கு உருவம் உண்டு. அது திவ்யமங்கள விக்ரகம் எனப்படும். பர,வியூக, விபவ(அவதாரம்) அந்தர்யாமி, அர்ச்சை என ஐந்து வகையாக அது இருக்கும்.[4] இராமகாதை அவதாரமாகிய மூன்றாவது நிலையினைக் கூறுவது. இறைவன் தன்னை அடைந்தவர்களைக் காப்பதற்காகவும், அவர்களது விரோதிகளைப் போக்குவதற் காகவும், வைதீக தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும் தன் இச்சையின் காரணமாக அவதரிக்கின்றான். இராமாவதாரம் அத்தகைய எண்ணற்ற அவதாரங்களுள் ஒன்று. இறைவனுக்கு எண்ணற்ற பெயர்கள் உண்டு. அவனது மங்கள குணங்களை அளவிட்டு உரைக்க முடியாது. இறைவனே இவ்வுலகத்தைப் படைத்தற்கும், அளிப்பதற்கும், அழிப்பதற்கும் முதற்காரண மாவான். இச்செயல்களை அவன் விளையாட்டாகவே நிறைவேற்றுவான்.

*நாராயணனே இராமன்*

பரமபத நாதனாகிய நாராயணனே இராமனாக அவதரித்தான் என்ற செய்தியைக் கம்ப நாடன் காவியத்தில் பல இடங்களில் பெறவைக்கின்றான். இராமனது அவதாரத்தைக் கூறும் கவிஞன்,

''ஒருபகல் உலகெலாம் உதரத துட்பொதிந்(து)
அருமறைக்(கு) உணர்வரும் அவனை அஞ்சனக்
கருமுகில் கொழுந்து எழில் காட்டும் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை''[5]

(உதரம்-வயிறு; மறை-வேதம்; அஞ்சனம்-மை)

என்று கூறுவன். பிரளய காலத்தில் எல்லா உலகங்களையும் தன் திருவயிற்றில் மறைத்து வைப்பவன் நாராயணன்; உலகம் உண்ட பெருவாயன்[6], பாலனாய் ஏழுலகு உண்டு பரிவு இன்றி

ஆல்இலை அன்னவசம் செய்யும் அண்ணல் அவன்,[7] நான் மறைகளாலும் உணரமுடியாத அவனை, அந்த அஞ்சனக் கருமுகிலை, கோசலை மகனாகப் பெற்றாள். இதனையே பிறிதோரிடத்தில்

''எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க்
கவுசலையென் பாள்பயந்தாள்''.

என்று மேலும் வற்புறுத்துவன். இக்குழந்தைக்கு 'இராமன்' எனப் பெயரிடப் பெற்றது என்பதைக் கூறும் கவிஞன் இதனை வலியுறுத்துகின்றான்.

''கராம்மலை யளத்தளர் கைக்கரி எய்த்தே
அராவணை யில்துயில் வோய்என அந்நாள்
விராவி அளித்தருள் மெய்ப்பொருளுக்கே
'இராமன்' எனப்பெயர் ஈந்தனன் அன்றே''[9]

(கராம்-முதலை; கைக்கரி-யானை; அராவணை-பாம்புப் படுக்கை) முதலை வாயில் அகப்பட்ட களிறு 'ஆதிமூலமே' எனக்கூவ, அதனை முன்வந்தளித்த திருமாலே இராமனாகப் பிறந்தான் என்பது ஈண்டு மீண்டும் வலியுறுத்தப் பெறுவது காண்க.

இறைவன் பிறப்பில்லாதவன்; ஆனால் பல பிறப்புக்களை யுடையவன்.

''பிறப்பில் பல்பிறவிப் பெருமானை''[10]

என்பது ஆழ்வார் வாக்கு. பிறப்பில்லாதவன் என்றது ஏனையோரைப் போல் வினைகாரணமாகப் பிறக்கும் தன்மையில்லாதவன் என்றவாறு. பல பிறவிகளையுடையவன் என்றது அடியார்கள் பொருட்டாகப் பல பிறப்புக்களை (அவதாரங்களை) மேற்கொள்வன் என்றபடி. இதுவே அவதார இரகசியம். கம்பநாடன் இதனை நான்முகன் வாக்காக,

''தோற்றம் என்பதொன்று உனக்கில்லை''[11]

என்று கூறுவன். இராமனது பிறப்பினைக் கூறும் பகுதியில் இதனை விளக்கமாகக் காணலாம். பிறிதோர் இடத்தில் இராமனைக் குறிப்பிடுமிடத்து,

''மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்''[12]
என்று இக்கருத்தினை வற்புறுத்துவன்.

*நாராயணனே முதற் கடவுள்:*

நாராயணனே உலகின் முதற் கடவுள் என்பதைக் கம்பநாடன் தன் காவியத்தில் பல இடங்களில் வற்புறுத்துகின்றான். சீதை தூயவள் என்று அங்கியங் கடவுள் மெய்ப்பித்த பிறகு, தேவர்களின் வேண்டுகோளிற்கிணங்க நான்முகன் இராமனது உண்மைச் சொரூபத்தை விளக்குகின்றான்.

*''மறைகளின் தலைகள்*
*மன்பெ ரும்பர மார்த்தமென்(று)*
*உரைக்கின்ற மாற்றம்*
*அன்ப நின்னையல் லால்மற்றிங்(கு)*
*யாரையும் அறையா''*[13]

*(மறைகளின் தலைகள் - உபநிடதங்கள்)*

என்ற பாசுரப் பகுதியில் உபநிடதங்கள் குறிப்பிடும் 'பரம்பொருள்' திருமாலைக் குறிக்குமேயன்றித் தன்னையோ சிவனையோ அல்லது இந்திரனையோ குறிக்கவில்லை என்று உணர்த்துவதை அறிக. அடுத்து, சிவபெருமான்,

*''முன்னை ஆதியாம் மூர்த்தி*
*மூவகை உலகின்*
*அன்னை சீதையாம் மாதுநின்*
*மார்பின்வந் தமைந்தாள்''*[14]

என்பதால் திருமாலே முதற் கடவுள் என்றும், சீதையே உலக அன்னை என்றும் உறுதி செய்வன். இப்பகுதியில் வரும் பாசுரங்கள் யாவும் இக்கருத்தினையே பலபடியாக வலியுறுத்து கின்றன. நீகும்பலையைக் குலைத்தபின் இலக்குவனுக்கும் இந்திரசித்துக்கும் நடந்த போரில் பின்னவன் விட்ட நான்முகன் படையை முன்னவன் அப்படையாலேயே அழித்து அதன் வேகத்தைத் தணித்தனன். அப்போது அதனைக் கண்டு வியந்தவர்களிடம் சிவபெருமான் கூறிய,

''நாராயண நரர் என்று இவர்
உளராய் நமக்கெல்லாம்
வேராய்முழு முதற்காரணம்
பொருளாய்''[15]

என்ற வாக்கிலும் இதனைக் காணலாம். சேதுவை அமைக்க வருணனை வழி வேண்டிய பொழுது, வருணன் வரத்

தாமதித்ததனால் இராமன் சினங்கொள்ளுகின்றான். இதனைக் கவிஞன்,

''உற்றொரு தனியே தானே,
தன்கணே உலகம் எல்லாம்
பெற்றவன் முனியப் புக்கான்''[16]

எனக் குறிப்பிடுமிடத்தில் 'இராமனே பரம்பொருள்' என்று தற்கூற்றாகக் கூறுவதைக் காண்க. அடுத்து வருணன் வாயில் வைத்து,

''நவையறும் உலகிற் கெல்லாம்
நாயக நீயே''[17]

என்றும்,

''என்றலா காத மூலத்(து)
யாதுக்கும் முதலாய் உள்ள
வள்ளலே!''[18]

என்றும் பின்னும் வற்புறுத்துவன்.

மேலும், விராதன் வாய்மொழியாக,

''மெய்யைத்தான் சிறிதுணர்ந்து
நீவிதித்த மன்னுயிர்கள்
உய்யத்தான் ஆகாதோ
உனக்கென்ன குறையுண்டோ
வையத்தார் வானத்தார்
மழுவாளிக்கு அன்றளித்த
ஐயத்தால் சிறிது ஐயம்
தவிர்ந்தாரும் உளர்ஐயா.''[19]

(மெய்-நீயே மரத்துவம் என்னும் உண்மை; மழுவாளி-பரமசிவன்; ஐயம்-பிச்சை; சந்தேகம்)

என்று பின்னும் கூறுவன. இக்கருத்து நம்மாழ்வாரின்,

''பேசநின்ற சிவனுக்கும் பிரமன்
தனக்கும் பிறர்க்கும்
நாயகன் அவனே; கபாலநல்
மோக்கத்துக் கண்டுகொள்மின்''[20]

என்ற பாசுரப்பகுதியின் கருத்துடன் இயைந்திருத்தல் கண்டு மகிழத்தக்கது. மேலும், கம்பநாடன் திருமால் அன்னமாய்

இருந்து அருமறைகள் உரைத்ததைக் குறிப்பிடும் ஆழ்வார்களின் பாசுரங்களை[21] நினைந்து,

''அன்னமாய் அருமறைகள்
அறைந்தாய்நீ அவையுன்னை
முன்னம்ஆர ஓதுவித்தார்
எல்லாரும் முடிந்தாரோ?''[22]

என்று விராதன் வாய்மொழியாகப் பேசுவன். இதில் நாராயணனே ஊழிக்குப் பிறகும் நிலைபெற்று நிற்பவன் என்ற கருத்து வற்புறுத்தப்பெற்றுள்ளமை காண்க. மேகநாதன் ஏவிய நான்முகன் கணையால் இலக்குவன் அறிவொடுங்கி அயர்ந்த பொழுது தம்பி இறந்தான் என்று இராமன் புலம்புகின்றான்; பிறகு அறிவு சோர்ந்து துயில்கின்றான். அப்போது வந்த தேவர்கள் ''முன்பு பின்பு நடு இல்லாய்!''[23] என்று விளித்துப் பேசுவதிலும் இதனைக் காணலாம்.

**உலகத்தோற்றத்திற்கு முதற்காரணன்**

நாராயணனே உலகத் தோற்றத்திற்கு முதற்காரணன்[24] என்ற வைணவ சமயக் கருத்தைக் கவிஞன் கவந்தனின் வாய் மொழியாக,

''நிற்கு நெடுநீத்த நீரின் முளைத்தெழுந்த
மொக்குளே போல முளைத்தெழுந்த அண்டங்கள்
ஒக்கவுயர்ந் துனுளே தோன்றி ஒளிக்கின்ற
பக்கம் அறிதற்கு எளிதோ பரம்பரனே''[25]

(நீர்-ஆர்ணவ நீர்; மொக்குள்-நீர்க்குமிழிகள்; பக்கம்-தன்மை; பரம்பரன்-மிகச் சிறந்தவன்)

என்று கூறுவன். மெய்யறிவு தோன்றப்பெற்ற விராதன் புகழ் மொழியாக,

''ஓயாத மலாயனே முதலாக உளராகி
மாயாத வானவர்க்கும் மற்றொழிந்த மன்னுயிர்க்கும்
நியாகின் முதல்தாதை நெறிமுறையால்''[26]

என்று பின்னும் வற்புறுத்துவன். இக்கருத்துக்கள்

''தான்றார் உருவே தனி வித்தாய்
தன்னின் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
மற்றும் மற்றும் முற்றும் ஆய்''[27]

என்று ஆழ்வார் பாசுரக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு வந்திருப்பது கண்டு மகிழத் தக்கது.

இறைவன் இவ்வுலகத்தைப் படைக்கும் பொழுது யாதொரு விகாரமும் அடைவதில்லை. இக்கருத்தைக் கம்பநாடன்,

''அண்டம் பலவும் அனைத்துயிரும்
அகத்தும் புறத்தும் உளவாக்கி
உண்டும் உமிழ்ந்தும் அளந்திடந்தும்
உள்ளும் புறத்தும் உளையாகிக்
கொண்டு சிலம்பி தன்வாயில்
கூர்நூல் இயையக் கூடுஇயற்றிப்
பண்டும் இன்றும் அமைக்கின்ற
படியை ஒருவாய் பரமேட்டி''[29]

என்று தேவர்களின் வாய்மொழியாகக் கூறுவன், ''ஒரு சிலந்திக்கு உண்டான ஸ்வபாவம் சர்வ சக்திக்குக் கூடா தொழியதாகிதே''[30] என்ற தத்துவத்திரயக்கூற்றினையும் காண்க. இக்கருத்தினையே திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும் அழகாகக்கவி அமைத்துக் காட்டுவர்.[31]

சரீர-சரீரி பாவம்

சித்தும் அசித்தும் ஈசுவரனின் உடலாக அமைந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கை.[32] இஃது உடல்-உயிர்த் தொடர்பு (சரீர-சரீரி பாவம்) என்று வழங்கப்பெறும். இக்கருத்து,

''வானின்று இழிந்து வரம்புஇகந்த
மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும்போல்
உள்ளும் புறமும் உளன் என்ப''[33]

என்ற பாசுரப் பகுதியில் அமைந்திருப்பதைக் காண்க. இங்கு 'வான்' என்பது மூலப் பிரகிருதி (அசித்து) மூலப் பகுதியிலிருந்து தோன்றிய ஐந்து பூதங்களின் விகாரமே இந்த அகிலம்.

'வானும் நிலமும் முதல் ஈறு இல்
வரம்பில் பூதம்''[34]

என்று பூதங்களின் வரம்பின்மையைப் பின்னும் விளக்குவன. இங்கு உணர்வு என்பது தர்ம பூத ஞானம். இறைவன் பிரகிருதியின் உள்ளே இருப்பதற்கு ஊனுக்குள் உயிர் இருப்பது உண்மை; அங்ஙனமே அதன் அதன் வெளியில் இருப்பதற்கு

உயிரில் உணர்வு இருப்பது உவமை; மேற்கூறிய பாசுரத்தில் 'ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறமும் உளன் என்ப' என்னுமிடத்து,

''திட விசும் பெரிவளி நீர்நிலம் இவைமிசைப்
படர்பொருள் முழுவது மாய் அவை அவைதொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்''[35]

என்று ஆழ்வார் பாசுரத்தின் கருத்தினை அடக்கிக் கொண்டிருப்பது கண்டு மகிழத் தக்கது. உயிர் உடம்பினுள் இருந்து அதனைத் தரிக்கச் செய்து அதற்குத் தலைவனாக நின்று அதனை நடத்துவது போலவே, இறைவனும் எல்லாப் பொருள் களுள்ளும் இருந்து அவற்றைத் தரிக்கச்செய்து அவற்றிற்குத் தலைவனாக நின்று அவற்றைத் தன் விருப்பம் போல் நடத்துகின்றன என்பது கருத்து.

அசித்து விகாரத்திற்கு இடமானது. ஐந்து பூதங்களின் விகாரமின்றி அகிலம் என்ற ஒன்று இல்லை.

''நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம்''[36]

என்பர் தொல்காப்பியனாரும் கம்பநாடன் இக்கருத்தினையே,

''அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவெனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
வேறுமா குற்ற வீக்கம்''[37]

(அலங்கல்-மாலை)

எனக் கூறுவன். அலங்கலைக் கண்டு அரவு என மருகுதல் திரிவுணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு. ஐந்து பூதங்களும் தனித்தனியே இருக்கும் தன்மையை விட்டு ஒன்றாகச் சேர்வதனாலும், அங்ஙனம் சேர்ந்த சேர்க்கை அறுவகையாக விகாரப்படுவத னாலும், தேவர், மனிதர், விலங்கு, தாவரம் என்னும் பாகுபாடு கொள்வதனாலுமான இந்த உலகத் தோற்றம் மக்களிடம் திரிபுணர்ச்சியை உண்டாக்குதல் கூடும். இந்தத் திரிபுணர்ச்சி உண்மைப் பரம்பொருளைக் கண்ட மாத்திரத்தில் ஒழிந்துவிடும் என்று கூறுவன் கவிஞன்.

பிறிதோரிடத்தில் இந்த உடல்-உயிர் உறவு பற்றிய கருத்து மிகத் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளது.

''மூன்றுரு எண்குணம் மும்மையாம் முதல்
தோன்றுரு எவையும் அம் முதலைச் சொல்லுதற்(கு)
என்றுரு அமைந்தவும் இடையின் நின்றவும்
சான்றுரு உணர்வினுக்(கு) உவந்த தாயினான்''[38]

(முதல்-மூலப்பிரகிருதி; தோன்றுரு-மூலப்பகுதியில் தோன்றும் எல்லாத் தத்துவங்கள்; என்றுரு-வடிவமைந்த அகிலம்; இடையில் நின்றவும்-சீவர்கள்; சான்ற உரு-சிறந்த சரீரம்).

மூலப் பிரகிருதியும் அதில் தோன்றும் சேதநாசேதநங்களின் வடிவமான எல்லா பிரபஞ்சமும் இறைவனுக்குத் திருமேனி யாகும் என்பது கருத்து. மூலப்பிரகிருதியினின்றும் தோன்றும் தத்துவங்கள்[24] என்பதை,

''பொங்கு ஐம்புலனும் பொறிஐந்தும்
கருமேந்திரியம் ஐம்பூதம்
இங்கு இவ் உயிர்ஏய் பிரகிருதி
மான்ஆங் காரம் மனங்களே''[39]

என்ற ஆழ்வார் பாசுரம் விளக்கும். அவை சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய புலன் ஐந்தும்; மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பொறி ஐந்தும்; வாக்கு, கால், கை, பாயு, உபத்தம் ஆகிய கருமேந்திரியம் ஐந்தும்; மண், நீர், எரி, கால், வான் என்னும் பூதங்கள் ஐந்தும்; இங்குள்ள இந்த ஆன்மாக்கள் பொருந்தியுள்ளமூலப் பிரகிருதி ஒன்றும்; மகத்தத்துவம் ஒன்றும்; அகங்கார தத்துவம் ஒன்றும்; மனம் ஒன்றும் ஆக 24. இவற்றுடன் ஆன்மா(புருடன்), ஈசுவரன்(இறைவன்) ஆகிய இரண்டும் சேர விசிட்டாத் வைத தத்துவங்கள் 26 ஆகின்றன.

படைப்புக் காலத்திற்கு முன்னர் சேதநாசேதநங்களெல்லாம் தன் திருமேனிக்குள் இலயித்து நிற்கப் பரம்பொருள் ஒன்றே தனித்துநிற்கும். அந்தப் பரம்பொருள் பலவாக ஆகக் கடவேன் என்று சங்கற்பங்கொண்டு இவ்வுலகத்தையெல்லாம் தன் திருமேனியினின்றும் விரியச் செய்யும். இங்ஙனம் தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், தாவரங்கள் என்ற நால்வகைப் பிறவியாகத் தோன்றிய பொருள்தோறும் இறைவன் மறைந்து அந்தர்யாமியாகப் பரந்துள்ளான். இதனைக் கம்பநாடன் இந்திரன் வாய்மொழியாக,

''ஒன்றாகி மூலத்(து) உருவம் பலவாகி
உணர்வும் உயிரும் பிறிதாகி ஊழி

சென்றா சறுங்காலத்(து) அந்நிலைய தாகித்
திறத்துலகம் தானாகி செஞ்செவே நின்ற
நன்றாய ஞானத் தனிக்கொழுந்தே''[40]

(ஆசறுதல்-முடிதல்)

என்று கூறுவன். இங்கு 'ஒன்றாகி....ஞானக் கொழுந்தே' என்றது,

''கரந்தசில் இடந்தொறும்
இடத்திகழ் பொருள்தொறும்
கரந்து எங்கும் பரந்துளன்;
இவை உண் ட கரனே''.[41]

என்ற ஆழ்வார் பாசுரப் பகுதியை நினைவிற் கொண்டு என்க. மேலும், இந்திரன் வாய்மொழியாகவே இறைவனின் அந்தர்யாமித்வத்தை,

''தோய்ந்தும் பொருளனைத்தும்
தோயாது நின்றசுடரே''[42]

என்று வற்புறுத்துவன்.

### முத்தொழில்களையுடையவன்

ஈசுவரன் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும் தனது சங்கற்பத்தாலேயே வருத்தமின்றி நிறைவேற்றுவான்.[43] இதனைக் கம்பநாடன்,

''உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர்; அன்னவர்க் கேசரண் நாங்களே''[44]

என்று கூறுவன். இங்கு 'உளவாக்கல்' என்பது சூக்கும வடிவினதாகவுள்ளவற்றைத் தூல வடிவினதாகச் செய்தல்; இல்லாததை உண்டாக்குவது அன்று. இஃது ''உள்ளது போகாது; இல்லது வாராது'' என்னும் சற்காரிய வாதம்;[45] சூனிய வாதத்துக்கு மறுதலை. இத் தொழில்களைச் சிறார் மயில் வீடுகட்டி அழிக்குமாப் போலே கேவல விளையாட்டாகவே நிறை வேற்றுவான் இறைவன்.[46] இதனையே பிறிதோர் இடத்தில் கம்ப நாடன்,

''உலகம் யாவையும் படைத்து அளித்து
உண்டு உமிழொருவன்''[47]

என்றும், மற்றோர் இடத்தில்,

''காட்டுவாய் உலகம் காட்டிக்
காத்தவை கடையிற் செந்தி
ஊட்டுவாய் உண்பாய் நீயே''[48]

என்றும் வற்புறுத்துவன்

**ஆயிரம் பெயருடையவன்**

இறைவன் அநந்த கல்யாண குணங்களையுடையவன்; அவன் பெருமைகள் பேசி முடியா. இவற்றை அடக்கிக் கொண்டு அவன் ஆயிரத்திற்கு மேற்பட்ட (எண்ணற்ற) பெயர்களைத் தாங்கி நிற்கின்றான் கம்பநாடன்,

''நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒத்
தொருநெறி நின்ற
அனகன் அங்கணான் ஆயிரம்
பெயருடை அமலன்''[49]

என்று இராமனைக் குறிப்பிடுவன். மண்ணுலகில் பிறந்து விசேட அறிவைப் பெறாத நம்மைப் போலவே, அறிவு ஆற்றல்களில் மிக்கவரென்று நம்மால் மதிக்கப் பெறும் தேவர்களாலும் அவன் பெருமையை அறியவொண்ணாது என்பது கவிஞனின் குறிப்பு. ஆண்டவன் ஆயிரம் பெயருடைய அமலன் என்பதையே கருடன் வாய்மொழியாக,

''பேரா யிரங்கள் உடையாய்
பிறந்த பொருள்தோறும் நிற்றி''[50]

என்று பேசுவன். ''நாமங்கள் ஆயிரம் உடைய நம் பெருமான்''[51] பேரும் ஓர் ஆயிரம் உடைய எம்பெருமான்''[52] ''பேராயிரம் உடைய பேராளன்''[53] ஆழ்வார்களின் பாசுரங்களை நினைவிற் கொண்டே இங்ஙனம் கவிஞன் பேசுவன்.

மந்திரங்களுள் சிறந்தது திருமந்திரம்; நாராயண நாமம். இராம நாமமும் இதுவேயாகும். இதன் பெருமை சொல்லுந் தரமன்று. இந் நாமம் அருகிலிருந்து தன்னைப் பக்தியுடன் சொன்னவர்களுடைய விருப்பங்களை நிறைவேறச் செய்யும். இதனைச் சொல்லவேண்டும் என்ற எண்ணமேயின்றித் தம் குழந்தைகட்கு இப்பெயரை இட்டு அழைக்கினும், பரிகாச மாகவோ, இழிவாகவோ, பொருளுணர்ச்சியின்றிச் சொல்லினும், அது கொடுக்கும் பலனிலிருந்து தவறாது. இத்தகைய மந்திரத்தின் பெருமையைக் கம்ப நாடன்,

"மும்மைச்சால் உலகுக் கெல்லாம்
மூலமந் திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்தினை, 'இராமன்' என்னும்
செம்மைசேர் நாமந் தன்னை"[54]

என்று சிறப்பித்துப் பேசுவன். மூல மந்திரம் என்பது தலைமையான மந்திரம். உலகிற்கெல்லாம் மூலமந்திரம் இதுவேயாகும். இம்மந்திரத்தைச் செபிப்பார் பரமபதத்தை யடைந்து எம்பெருமானுடைய ஸ்வரூப திரிகரணங்களாலும் அநுபவித்துப் பெரு மகிழ்வு அடைவர்.

"சரணம் ஆகும் தனதாள்
அடைந்தார்க்கு எல்லாம்;
மரணம் ஆனால் வைகுந்தம்
கொடுக்கும் பிரான்"[55]

என்று ஆழ்வார் பணித்தபடி எம்பெருமானுடைய அடியார்கட்கு இப்பிறப்பின் இறுதியிலேயே முத்தி கிடைத்தலால் அந்நாமம், 'இம்மையே எழுமை நோய்க்கும் மருந்து' எனக் குறிப்பிடப் பெற்றது. முத்தி பெற்றவர்கட்கு வினைப்பயனான பிறப்பு இல்லை என்பது வைணவ சமயத்தின் கொள்கை.

**சரணாகதித்வம் கைங்கர்யம்**

இராம காதையைச் சரணாகதி தத்துவத்தை விளக்க வந்த காவியம் என்பர் மெய்ப்பொருளறிஞர்கள்; இதனைச் 'சரணாகதி வேதம்' என்றே கொள்வர்.[56] அபயம் அடைந்த சுக்கிரீவனும் வீடணனும் எங்ஙனம் காக்கப் பெறுகின்றனர் என்பதைக் காவியம் பலவாறாக விளக்குகின்றது. இவர்கள் இருவரும் இராமகைங்கர்யத்தில் மிகவும் ஈடுபட்டுப் பணியாற்றுவதையும் காணலாம். சரணாகதித்வம், கைங்கர்யம் என்ற இரண்டுமே வைணவ சமயத்தின் முக்கியமான கொள்கைகளாகும்.

"அகலகில்லேன் இறையும் என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
...............
புகல் ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"[57]

என்பதனால் சரணாகதித்வமும்,

> ''ஒழிவுஇல் காலம் எல்லாம்
> உடனாய் மன்னி
> வழுவிலா அடிமை
> செய்யவேண் டும்நாம்
> தெழிகுரல் அருவித்
> திருவேங் கடத்து
> எழில்கொள் சோதிஎந்தை
> தந்தை தந்தைக்கே''[59]

என்பதால் கைங்கர்யத்துவமும் விளக்கப் பெறுகின்றன. சரணாகதித்வம் இராமன் வாய்மொழியாகவே,

> ''வெற்றியே பெறுக தோற்க
> வீகவி யாது வாழ்க
> பற்றுத லன்றி யுண்டோ
> அடைக்கலம் பகர்கின்றானை'

என்ற பாசுரப் பகுதியில் விளக்கம் பெறுகின்றது. இந்தக் கட்டத்தில் இராமனே பலவாறு இதற்கு விளக்கந்தருகின்றான். இறைவனுக்கு அடிமை செய்யவேண்டும் என்ற எண்ணமும், அங்ஙனம் மேற்கொள்ளும் செயலும் சுக்கிரிவன், வீடணன், அநுமன், சடாயு முதலிய பலரிடத்தும் காணப் பெறுகின்றன. ''அடியாரின் ஏவல் செய்தி''[60] என்ற அன்னையின் வாக்கின்படி ஏவல்கேட்டு நிற்கும் இலக்குவன் கைங்கர்ய வடிவமாகின்றதைக் காவியம் எங்கும் காணலாம்.

## இறுவாய்

ஒருநூல் சிறப்புற்று விளங்குவதும் அந்நூலையாத்த கவிஞன் பெரும் புகழுடன் திகழ்வதும் அந்நூலையாத்தற்கு அவன் தேர்ந்தெடுக்கும் பொருளைப் பொறுத்துள்ளன. கம்பன் தேர்ந்தெடுத்த கதைப் பொருளோ மிகச் சிறந்தது. அது திருமாலின் அவதாரமான ''காசில் கொற்றத்து இராமன் கதை''[61] ஆகும். இயல்பாகவே இராமனைப் புகழ்தற்குரிய இடங்கள் பல. அவ்விடங்களில் எல்லாம் திருமாலைப் பரம்பொருளாகக் கொள்ளும்படி பலமுறை கூறியுள்ளான் கவிஞன். எனவே, கம்பனுக்கு உயிருக்கு உயிராகவும், உணர்வுக்கு உணர்வாகவும், ஒப்புயர்வற்றதாகவும் கொண்ட கடவுள் பரமபதநாதனே என்பது பெறப்படும். மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்

பிரானாகிய அவனே அவன் கண்ட மெய்ப்பொருள்; பிறவிக்கு முதற்காரணமாகவுள்ள அறியாமை (அவிச்சை) நீங்குவதற்கும் வீடு பேற்றினைப் பெறுவதற்கும் முக்கிய காரணமாகவும், தூயதாகவும், என்றும் ஒரே தன்மையதாயுமுள்ள அதுவே (அவனே) அவன்கண்ட செம்பொருள்; ஈசுவரன்.

'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு' [62]

## குறிப்புகள்

1. குறள்.355
2. யுத்த, இரணியன்வதை 32.
3. "No man was ever a great poet without being at the same time a profound philosopher-Essay on Wordsworth lay Coleridge. (Quoted by W.H. Hudson in his "Introduction to the study of Literature"-p.93.
4. இவை பற்றிய விவரங்களை 'தத்வத்ரயம்' என்ற நூலில் காண்க. (ஈசுவரப்ரகரணம் சூத்திரம் 42-59)
5. பாலகாண்.திருவவதாரம்.103
6. திருவாய்மொழி.6.10:1
7. திருவாய்மொழி 4.2:1
8. பாலகாண்-குலமுறை.20
9. பாலகாண்-திருவவதாரம்.119
10. திருவாய்மொழி 2.9:5
11. யுத்த.மீட்சி.107
12. யுத்த.நாகபாசம்-222
13. யுத்த.மீட்சி.101
14. யுத்த.மீட்சி.113
15. யுத்த.நிகும்பலையாகம்.141
16. யுத்த.வருணனைவழி.63
17. யுத்த.வருணனைவழி.67
18. யுத்த.வருணனைவழி.71
19. ஆரணிய. விராதன் வதை.59
20. திருவாய்மொழி 4.10:4
21. பெரிய திருமொழி 11.4:8
22. ஆரணிய.விராதன் வதை.60
23. யுத்த. பிரமாத்திரம்.227
24. தத்வ திரயம்-ஈசுவர ப்ரகரணம்.12

25. ஆரணிய-கவந்.48

26. ஆரணிய-விராதனவதை.53

27. திருவாய்மொழி.1:5:4

28. தத்வ த்ரயம்-ஈசுவர ப்ரகரணம்-சூத்திரம் 26

29. யுத்த.பிரமாத்திரம்-226

30. தத்வ த்ரயம்-ஈசுவர ப்ரகரணம்-சூத்தரம் 29

31. திருவரங்கத்து மாலை-18

32. தத்வ த்ரயம்-சித். ப்ரகரணம்-சூத்திரம்.41

33. அயோத்தி-காப்பு

34. அயோத்தி-நகர்நீங்கு.120

35. திருவாய்மொழி 1.1:7

36. தொல்-பொருள்-மரபு-89

37. சுந்தர.காப்பு

38. கிட்கிந்தை.காப்பு

39. திருவாய்மொழி 10.7:10

40. ஆரணிய. சரபங்கர் பிறப்புநீங்கு

41. திருவாய்மொழி1.1:10

42. ஆரணிய. சரபங்கர் பிறப்புநீங்கு, 27

43. தத்வ த்ரயம்-ஈசுவர ப்ரகரணம்-சூத்திரம் 21-25.

44. கம்பரா.தற்சிறப்புப் பாயிரம்.1

45. முன்பில்லாதது இடையே தோன்றாது என்றும், காரியம் அழிந்தகாலத்தும் காரிய வடிவம்காரணத்தில் அழியாது சூக்குமமாய் நிலைத்திருக்கம் என்றும் வாதித்து நிலைநாட்டுவது.

46. தத்வ த்ரயம்-ஈசுவர ப்ரகரணம் சூத்திரம் 22,24.

47. பாலகாண்.அகலிரிகம்.7

48. யுத்த.வருணனை வழிவேண்டு.69

49. அயோத்தி.சித்திரகூட.1

50. யுத்த.நாகபாசம்.261

51. திருவாய்மொழி 5.9:11

52. திருவாய்மொழி 1.3:4

53. பெரிய திருவாய்மொழி 8.1:5

54. கிட்கந்தை-வாலிவதை.71

55. திருவாய்மொழி 9.10:5

56. திருவாய்மொழி 6.10:10

57. திருவாய்மொழி 3.3:1

58. யுத்த.வீடணன் அடைக்கலம்-108

59. யுத்த.வீடணன் அடைக்கலம்-109-120

60. அயோத்தி.நகர்நீங்கு.152

61. கம்பரா.தற்சிறப்புப்பாயிரம்-4

62. குறள்-358.

பூ. சொல்விளங்கும் பெருமாள்
வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி
மதுரை

# குமரி மாவட்ட வழக்குச் சொற்கள்

*முன்னுரை*

மொழி இடத்திற்கு இடம் காலத்திற்குக் காலம் மாறக்கூடியது. இம் மாற்றத்தால் அது தனித் தன்மையை இழக்கவும் செய்யலாம். புது மெருகு பெறவும் செய்யலாம். தமிழ் மொழி பல்வேறு மொழிகளின் தாக்குதலுக்கு அவ்வப்போது ஆட்பட்டு வந்தது என்றாலும் தென்கோடி மாவட்டத்தில் வழங்கப் பெறும் சொற்களில் பல தூயனவாகவும் புது மெருகு பெற்றும் அமைந்திருக்கின்றன.

குமரி மாவட்டத்திலுள்ள பேச்சுத் தமிழும் எழுத்துத் தமிழும் பிற மாவட்டத் தமிழினை விடச் சற்று மாற்றமடைந் திருக்கின்றன. இம்மாற்றம் ஆராய்ச்சியாளரின் சிந்தனையைத் தூண்டி உற்சாகப்படுத்துவதாக உள்ளது.

இயற்கையோடு ஒட்டி வாழ்ந்த மக்கள் இயந்திர உலக இயக்கத்தில் சிக்கும்போது அவர்களது பழக்கத்திலிருக்கும் நல்ல சொற்கள் பல நழுவி விடுகின்றன.

குமரி மாவட்டத்திலுள்ள மீன் பிடிப்பவர்கள், பனை ஏறுபவர்கள், உழவர்கள், உப்பளந்தொழிலாளர்கள், வண்டி செய்பவர்கள், தறி நெய்பவர்கள், கொல்லர்கள், தச்சர்கள் போன்றவர்களுடைய தொழில் துறையில் அவர்கள் கையாளும் சொற்கள் - நல்ல தமிழ்ச் சொற்கள் - இன்று கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வருகின்றன. வேறு துறையில் பணி புரிபவர்களுக்கு அச்சொற்கள் புதியனவாகவே இருக்கின்றன. புதுச் சொற்களை உருவாக்கித் தமிழுக்கு ஊக்கம் கொடுத்து, பிற பெரும் மொழிகளைப் போன்று செழிக்கச் செய்ய வேண்டும் என்னும் ஆர்வம் கொண்ட நாம் நம்மிடம் இருக்கும் நல்ல சொற்களைத் தவறவிட்டு விடவும் கூடாது.

### சொல் அழிதல்

சொற்கள் எப்படி அழிந்து விடுகின்றன என்பதனை எல்லோரும் அறிந்த எடுத்துக்காட்டுடன் விளக்கலாம். களிறு, பிடி என்னும் சொற்கள் இலக்கியத்தில் இருக்கின்றனவேயன்றி இன்றையப் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் ஆண், யானை, பெண்யானை என்றே அவற்றை எளிதாக்கிக் குறிக்கின்றோம். கலை, பிணை என்பன Slag-Kind என்பனவாகக் குறிக்கப்படுகின்றன. இந்த சொற்களை விட்டு விட்டு ஆண் மான், பெண் மான் என்றே வழங்குகிறோம். நம் வீட்டிலே ஓருறுப்பாக இருக்கும் மாடு கோழி போன்றவை மட்டும் பால் பிரித்துப் பெயர் சூட்டி மரபுவழி அழைத்து வருகிறோம். இவைகளும் நம்மைவிட்டு நீங்கிவிடுமாயின் பசு, காளை என்பதற்குப் பதிலாக நாம் பெண் மாடு ஆண் மாடு என்றும், சேவல் பெட்டை என்பதை விட்டு விட்டு ஆண் கோழி, பெண் கோழி என்றும் கூறும் காலம் வந்துவிடலாம். இம்மாறுதல்கள் நமது இன்றைய வாழ்க்கையில் தமிழ்ச் சொற்களை எவ்வாறு பாதிக்கின்றன என்பதனைக் குமரி மாவட்டத்தில் பல்வேறு தொழில் செய்யும் மக்களையும் அணுகி ஆராய்ந்ததில் அறிந்து கொண்டேன்.

### தொழிலாளர்கள்

மீன் பிடித் தொழிலாளர் மீன் பிடிப்பதற்கு வைத்திருக்கும் பொருட்களில் உமலு, ஊத்தால், சட்டங்கட்டி என்பவை சில. கட்டை (மாம்பலகை-நெஞ்சினைப் படுக்க வைத்துக் கொண்டு பலகையைச் சாய்வாக அழுத்தி நீந்தப் பயன்படுவது), மரம் (இலவமரம் மூன்று நான்கை வைத்துக் கட்டியிருப்பது), வள்ளம் (இலவமரக் கட்டைகளும் வேறு பலகைகளும் சேர்ந்த உட்குழிந்த அமைப்பு-மீன் பிடிக்க உதவுவது), ஓடம், பாய்மரம், கலம், தோணி கப்பல் போன்றவற்றில் அவர்கள் கடற்பயணம் மேற்கொள்வர். ஒவ்வொவ்வொன்றும் ஒவ்வொரு வகையான கலன்களாகும். அவர்கள் பிடிக்கும் மீன்களை முன்பின் தெரியாத நாம் பெரிய மீன், சின்ன மீன், வெள்ளை மீன், நீள மீன் என்று தான் கூறுகின்றோமேயன்றி அவற்றை குறிக்கும் தனித் தமிழ்ச் சொற்களை அறியாமலே இருக்கிறோம். பால்சுறா, வேல்சுறா, கொம்பன்சுறா, காரை, திமிலா, கிழங்கன், வாளை, கத்தியா வாளை, சாவாளை, ஓர்வாளை, சித்தாவாளை, மிரட்டுவாளை, வாளைக்கடியன், கோலா, கலவர், கொக்கு, மீன், காக்கா மீன்

போன்றவை அவர்கள் அறிந்த எத்தனையோ வகையான மீன்களுள் சில.

கழி(கடலையடுத்து ஆனால் கடலைச் சாராமல் இருக்கும் உப்புநீர்நிலை), காயல்(ஆற்று நீரினை ஏற்றுக் கடலோடு தொடர்பு கொண்டு நிற்கும் பெரும் நீர்நிலை), கானல் (கழியையும் காயலையும் சுற்றியிருக்கும் தோப்புக்கள்), கயம் (கழியிலும் காயலிலும் உள்ள மிகமிக ஆழமான இடங்கள்), பொழில் எனும் சொற்கள் அவர்கள் அன்றாடம் பயன்படுத்தும் சொற்களாகும். பெரு வெள்ளக்காலங்களில் கழியிலிருந்து நீரினைக் கடலில் வெட்டி விடுவர். கடலலையின் ஆரவாரமும் கழிநீரின் வேகமும் அங்ஙனம் வெட்டிவிடும் 'பொழி ஓட்டத்தில்' காணலாம். நாம் கடற்கரை என்று கூறும் இடத்தினை அவர்கள் 'அலைவாய்க்கரை' என்று அழகு தமிழ்ச் சொல்லால் அழைக்கின்றனர்.

மரம் ஏறும் தொழிலாளர்கள் கூறும் சொற்களும் நம்மை வியப்பிலாழ்த்துவனவாம். தென்னையையும், பனையையும் நாம் முழுமையாகத்தான் அறிவோம். ஆனால் அவற்றின் ஒவ்வொரு சிறு பகுதிக்கும் எத்தனையோ நூற்றுக்கணக்கான சொற்களை அவர்கள் கூறுகிறார்கள். கீற்று, ஓலை, ஈர்க்கு, மடல், மட்டை, சில்லடை; குருத்து, குருத்தோலை, கணக்கோலை, கும்பிடு, பாளை, கூம்பாளை, ஆளி; குரும்பல், கருக்கு, இளநீர், விடலை; அவிண்; சிரட்டை, சகரி, தொண்டி போன்றவை தென்னம்பிள்ளையினடியாகப் பிறந்த சொற்களுள் சிலவாம். அலகுப்பனை, பருவப்பனை, அலவிரல், பாளை, கருக்கு (வால்போல் வெட்டும் பனையின் மடற்பகுதி), பத்தை, கடுக்காய், தவிண், பீலி, முருக்குத்தட்டி, கடுப்பு, பன்னையரிவாள், குடுவை, கலக்குமட்டை, சீவல் போன்ற சொற்கள் மிக இயல்பாக அவர்கள் பேசும் பேச்சுக்களில் அடிபடும். ஆனால் பிறதொழிலில் ஈடுபடுபவர்களுக்கு அவை புதிதாகவோ புதுமையாகவோ இருக்கலாம்.

உழவுத் தொழிலில் ஈடுபடுபவரின் வாழ்க்கையிலும் எத்தனையோ நல்ல சொற்கள் பின்னிப் பிணைந்திருக்கின்றன. மேழி, கொழு, குத்தி, ஏய்க்கால், சால், தொளி போன்றவை சில. இவர்கள் சென்ற ஆண்டு, சென்ற அரையாண்டு என்ற காலக் குறிப்புக்களை (Summer-Winter) அவ்வக்காலங்களில் விளையும் நெல்லின் பெயர்களாலேயே குறிப்பிடுகின்றனர். போன சம்பாப்பூவில் பையனைப் பள்ளியில் சேர்த்தேன் என்றும் அதற்கு

முந்திய வால்சிறை மீண்டான் பூவில் நம் பையனுக்குத் திருமணமானது என்றும் அவர்கள் பேசிக்கொள்வர். இயற்கையோடு வளரும் மக்கள் இயற்கையோடு வாழும் தமிழ்ச் சொற்களைக் கட்டிக்.காத்து வருகின்றனர்.

### பேச்சு

பேச்சுத் தமிழ் இச்சிறுமாவட்டத்தில் இடத்திற்கு இடம் இனத்திற்கு இனம் பெரிதும் மாறியிருக்கிறதென்றால் வியப்பாக இருக்கிறது. 'அவர்கள் போகிறார்கள்' எனும் தொடர் அங்கு எத்தனையோ வகைகளில் திரிந்து வழங்குவதைக் காண்கிறோம். இத்தொடரை அப்படியே பேசுபவர்கள் யாரும் தமிழகத்தில் இன்று இல்லை என்பது உண்மை என்றால் கூட நாஞ்சில் நாட்டில், 'அவிய போறாவே' என்றும் 'அவுவொ போறாவொ' என்றும் 'அவுஅ போறாவு' என்றும், 'அவா போறா' என்றும் பலவகையாக வழங்குகின்றனர்.

### சேர்க்கை

கடற்கரையில் வாழ்பவர்களும், .கேரள எல்லைப் பகுதியில் வாழ்பவர்களும் தமிழைத் தனியொலி கூட்டிப் பேசுகின்றனர். அவர்களின் பேச்சிலுள்ள சில சொற்சேர்க்கைகள் எவ்வாறு வந்தன என்று அறிஞர்கள் ஆராய வேண்டும் என்று வேண்டுகிறேன். 'அண்ணனிடம் கேட்டேன்' என்று சொல்வதை 'அண்ணனுக்குக் கிட்ட கேட்டேன்' என்பர் சிலர். இடையில் ஒரு 'கு' எவ்வாறு நுழைந்ததோ தெரியவில்லை. 'அம்மாவும் பிறரும் வந்தார்களா?' என்று கேட்பதை 'அம்மையுங் கண்டம் வந்தாவுளா?' என்று சிலர் பேசுகின்றனர். 'கண்டம்' எனும் சொல் 'முதலியவர்கள்' என்று எவ்வாறு குறிக்க வந்தது என்று தெரியவில்லை. 'தம்பியும் பிறரும் வந்தார்கள்' என்பதனைத் 'தம்பியொக்க வந்தாவே' என்று ஒரு சாரார் கூறுவர். ஒக்கல் எனும் சொல்திரிபாக 'ஒக்க' எனும் சொல் சேர்ந்திருக்கலாம் என்று நினைக்கின்றனர் சிலர். 'அந்தக் காரணத்துக்காக' என்று சொல்வதனை ஒரு சிலர் ''அதுக்காவச் சுட்டி'' என்று கூறுகின்றனர். சுட்டி எனும் சொல் ஏதுகாட்டிச் சுட்டி நிற்கிறது என்று சிலர் கருதுகின்றனர்.

### தனிப்பொருள்

'சாடுதல்' எனும் சொல் தாண்டுதல் (Jump) எனும் பொருளில் மட்டுமே அங்கு வழங்குகிறது. நீளச்சாட்டம், உயரச் சாட்டம் என்று அங்குப் பள்ளிகளில் விளையாட்டுகள்

நடைபெறும். வீதி எனும் சொல் தெரு எனும் பொருளில் அறிந்தவர் நாம். அகலம் எனும் பொருளிலும் அங்கு வழங்குகிறது. உனக்குப் 'பிள்ளைகள் எத்தனை' பையன்கள் எத்தனை பேர் என்று கேட்டால் நாம் விழிப்போம். அங்கு, பிள்ளை என்று பொதுவாகச் சொன்னால் பெண்பிள்ளைகளையே குறிக்கும்.

***நற்சொற்கள் சில***

மறிதல் (மறிதிரை), அலங்குதல் (அசைதல்), இருத்தல் (இருவென இருந்து), சவட்டுதல் (கோரையைச் சவைத்தல்) போன்ற சொற்களை நாம் இலக்கியத்திலும் காணலாம்; நாஞ்சில் நாட்டு மக்களின் பேச்சுவழக்கிலும் காணலாம்.

வளஞ்செறிந்த நாஞ்சில் நாட்டில் பட்டி, பாலை, என்ற முடிவுகள் உள்ள ஊர்ப்பெயர்களே கிடையாது. ஆழாக்கு, உழக்கு, நாழி, மரக்கால், பதக்கு, குறுணி, முக்குறுணி, கோட்டை போன்ற நெல்லளவைகள் இன்றும் அங்கு நடைமுறையில் இருக்கின்றன. புதுமுறை அளவுகளால் இச்சொற்கள் காலப் போக்கில் மறைந்துவிடும் என்பதனை மறுக்க இயலாதன்றோ.

*முடிவுரை*

இவ்வாறு மேலே குறிப்பிட்டனவெல்லாம் தமிழகத்தின் தென் கோடியில் தமிழினை அதன் தொன்மையும் பழமையும் கெடாது காத்துவரும் நாஞ்சில் நாட்டவர்களின் பேச்சு வழக்காற்றின் ஒரு பகுதியேயன்றி முழுமையாகாது. அம் மக்களிடையே பயின்றுவரும் நற்றமிழ்ச் சொற்களை எடுத்துப் பழக்கத்திற்குக் கொண்டு வரவேண்டும். ''வஞ்சி நாடதனில் நன்செய் நாடெனச் செந்தமிழ் வழங்கும் தேயமொன்றுளது. அதன் அந்தமிழ் பெருவளம் அறியார் யாரே'' என்று கூறிய சான்றோரின் நன்மொழிகளை நினைவிற்கொண்டு புத்தாராய்ச்சியில் இறங்க வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தாய்நாட்டிலும் மேலைநாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| லவகுச நாடகம் | 30.00 |
| திருக்குறள் பூரணலிங்கம் பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 100.00 |
| நானும் என் கவிதையும் | 40.00 |
| காசி விசுவநாதர் சதகம் | 40.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் - 2 | 65.00 |
| On Translation | 95.00 |
| ஐங்குறு நூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| Literary Criticism in Tamil and Sanskrit | 45.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத் தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை-1 | 110.00 |
| பிரதிமா ஸ்வப்ன வாசவதத்தம் | 55.00 |
| அறநூல் | 38.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழ்நாட்டில் பைரவர் வழிபாடு | 19.00 |
| மன்னான் சின்னாண்டிக் கதைப்பாடல் | 18.00 |
| தனிநாயகம் அடிகளாரின் ஆய்வுகள் | 22.00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | 10.00 |
| நன்னூல் மூலமும் விருத்தியுரையும் | 225.00 |
| பல்லவர் செப்பேடுகள் முப்பது | 250.00 |
| பாண்டியர் செப்பேடுகள் பத்து | 125.00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45.00 |
| Critical Studies in Kural | 30.00 |
| Tamil India | 40.00 |
| அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத் தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை-2 | 110.00 |
| செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணி | 20.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை (சித்த மருத்துவம்) | 75.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை (இலக்கியம்) | 70.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை (மெய்யியல் & நாட்டுப்புறவியல் | 70.00 |

Pub.No. 363 இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1969-1 Rs. 70.00